# 2

**ரா**கவன் டிக்டேட் செய்ய, புஷ்பா டைப் அடித்துக் கொண்டிருந்தாள்.....

ரோஜா நிறத்தில் நைலக்ஸ் புடவை. குங்குமச் சிவப்பில் கையில்லா ரவிக்கை... அதே வண்ணத்தில் நெற்றித் திலகம், உதட்டில் சாயம்... அழகே அழகு!

ஆனால், ராகவனின் கண்களில், எந்தவிதத் தடுமாற்றமும் இல்லையே! ''குட் மார்னிங், மிஸ் புஷ்பா!'' என்று என்றும் போல் சாதாரணமாகச் சொல்லிவிட்டு, தன் வேலையில் மூழ்கி விட்டானே!

புஷ்பாவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.. சுத்த ஜடம் ராகவன். எத்தகைய அழகி அவள்! அவன் கண்களில் சலனமில்லாததே அந்த அழகுக்குத் தோல்வியல்லவா?

சட்டென்று அவள் நினைத்துக் கொண்டாள். ''ராகவனின் மனைவி, ஒருவேளை, என்னைவிட அழகியோ? இருக்கலாம்.. இல்லை, பணக்காரியோ? சகலகலாவல்லியோ? மனிதன் அலுவலக நேரத்துக்குப் பிறகு கணநேரம் கூடத் தாமதிக்காமல் வீடு நோக்கிப் பறக்கிறார். அங்கு வசந்தம்போல் ஒருத்தி நிச்சயம் காத்திருக்கிறாள்!

''மிஸ் புஷ்பா!''

ராகவனின் குரல் அவள் சிந்தனைகளை வெட்டிற்று. அதில் ஏன் இத்தனை பொறுமையின்மை?

''எஸ்?''

''உங்கள் கவனம் இங்கே இல்லை. இது முக்கியமான டிக்டேஷன். பொறுப்போடு வேலை செய்யுங்கள். இல்லாவிட்டால் வேறு செக்ஷனுக்கு மாற்றி விடுகிறேன்!''

அவள் பதில் பேசவில்லை.... மனத்தில் ஆத்திரம், எரிச்சல்..... அவனைப் பொறுத்தவரை அவள் இயந்திரம், இந்த டைப் ரைட்டரைப் போல்....., இது டைப் அடிக்கிறது, அவள் விரல் படிந்தால்... இதைப்போல், அவள் விரல்களும், அவளுமே இயந்திரம்தான்.....

அன்று முழுவதும் அவளுக்கு எல்லார் மீதும் எரிச்சலாக இருந்தது. முக்கியமாகத் தன் ஏழைமை மீது தாங்க முடியாத கோபம் ... அவளைவிட அழகில் குறைந்த பெண்கள் வெள்ளித்திரை நட்சத்திரங்களாக ஜொலிக்கவில்லையா?

புஷ்பாவுக்கு அழுகை நெஞ்சை அடைத்தது. எப்படியாவது இந்தத் தரித்திர வாழ்க்கையை உதறிவிட வேண்டும். ஏதாவது பணக்காரன் பர்ஸனாலிடி கொண்ட வாலிபன்-தாலி கட்டினால் போதும். சமூகத்தில் வசதியாக, அதே சமயம் கௌரவமாக வாழலாம்...

மாலை மணி ஐந்தடித்துவிட்டது. ராகவன் வீட்டுக்குக் கிளம்புவான். உடனே, அவளும் புறப்படலாம்.

அதோ ராகவன் தன் அறையை விட்டு வெளியே வருகிறான்....

இதென்ன? அவளை நோக்கி!

''மிஸ் புஷ்பா! இந்த ஞாயிற்றுக்கிழமை என் மகனுக்குப் பிறந்த நாள். ஒரு சின்ன விருந்து.... என் மனைவி இந்த அழைப்பைக் கொடுக்கச் சொன்னாள்!'' அதைக் கொடுத்து விட்டு நகர்ந்தான்.

கவரின் மீது ''மிஸ் புஷ்பா!'' என்று எழுதியிருந்தது. உள்ளே, அச்சிடப்பட்ட கார்டில், ''மிஸஸ். மைதிலி ராகவன்'' என்று மணிமணியான கையெழுத்துப் பொறிக்கப்பட்டிருந்தது. புஷ்பாவிடம் உஷ்ணமான ஒரு பெருமூச்சு எழுந்தது.

(தொடரும்)



காலை மணி ஒன்பது.

சுவர் அருகே சீசர் சிலைபோல் நின்றபடி பக்கத்து வீட்டுத் தோட்டத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார் பென்ஷனர் பரமசிவம். விதம் விதமான செடிகள், பூத்துக் குலுங்கும் வண்ணமலர்கள், கொடிகள், காய்கள்...!

வெளிநாட்டுச் செடிகளை விட்டுச் சற்றே ஒதுங்கி, மண்ணிலே நெளிந்து படர்ந்திருந்தது ஒரு பூசணிக்கொடி. அதிலே காய்த்திருந்தது, பிரும்மாண்டமானதொரு பூசணிக்காய், பூவாகிப் பிஞ்சாகிக் காயாகி— இப்போது கறியாக வேண்டிய பருவத்தில் இருந்தது. அதைத்தான் பாசத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார் பரமசிவம்.

'ஆகா! அப்படியே பறித்து, துண்டு, துண்டாக்கி, கூட்டு செய்து சாப்பிட்டால்!' ருசி மறவாத நாக்கு முணுமுணுத்தது.

''என்ன எந்தக் கோட்டையைப் பிடிக்க யோசனை...?'' — பர்வதத்தின் குரல்.

''ஒண்ணுமில்லை!'' என்று மழுப்பினார்.

''இன்னிக்கு ஹோட்டல்லே சாப்பிட்டுடுங்கோ... நான் தாம்பரத்திலே சிவகாமி வீடுவரை போயிட்டு வர்றேன்...''

பரமசிவம் மலைத்தார். பர்வதம் அவர் கையில் இரண்டு ரூபாய் நோட்டைத் திணித்துவிட்டு வெளியே நடந்தாள்.

''பார்த்த ஞாபகம் இல்லையோ?'' வீதியிலே கண்ணிருந்தும் குருடாகித் தவிக்கின்ற பிச்சைக்காரன் பாடிய பாட்டு இன்பத்தேனாய் வந்து பாய்ந்தது பரமசிவத்தின் காதில். மேனன் தோட்டத்துப் பூசணிக்காய் தன்னைக் கூவி அழைப்பதுபோல் இருந்தது அவருக்கு. 'யூல் ப்ரின்னர்' மண்டையைத் தடவிக்கொண்டார். 'இன்று ஆசைதீர ஒருகை பார்த்துவிட வேண்டியதுதான். எத்தனை வருஷமாகிறது, பூசணிக் கூட்டு சாப்பிட்டு?'

மணி பதினொன்று.

தோட்டத்துப் பக்கம் வந்த டாக்டர் மேனன் தலையில் இடி விழுந்ததுபோல் பதறிப் போனார். எட்டு மணிக்குக்கூடப் பளிச்சென்று கம்பீரமாக இருந்தது அதற்குள் எங்கே மாயமாய் மறைந்து போய்விட்டது? ''ஹையோ, ஹையோ!'' என்று அவர் அலறி வர டிரைவர் ராமன்குட்டி, கம்பவுண்டர் கிருஷ்ணன் குட்டி, நர்ஸ் நாணிக்குட்டி, சமையல்காரி அம்முக்குட்டி, எல்லாரும் தோட்டத்துக்கு ஓடிவந்தார்கள்.

''எவிடெ, எவிடெ? காய் எவிடெ?''

''அறிஞ்சுகூடா, ஞங்கள்கு அறிஞ்சுகூடா'' என்று அவர்கள் அனைவரும் ஒரே ட்யூனில் மொழிய ''ஃபூல்ஸ்'' என்று அலறிவிட்டுப் பங்களாவுக்குள் மறைந்தார் அவர்.

மாலை மணி ஐந்து.

வீடு திரும்பிய பர்வதத்தைப் பார்த்து அதிர்ச்சி பயங்கரமாகப் பல்லை இளித்தது. சாப்பாட்டு அறையில், பாதி சாப்பிட்டவராக, இலைமுன் 'ஆ!' என்று வாயைப் பிளந்து கொண்டு மயங்கி விழுந்து கிடந்தார் பரமசிவம்! 'பாவம், தனியே சமையல் பண்ணியிருக்கிறார்! சாப்பிடும்போது என்ன நேர்ந்ததோ?' அவள் மனம் பரிதவித்தது.

கணவனைக் கைகொடுத்துத் தூக்கி நிறுத்தினாள், அவர் 'தொப்'பென்று தரையில் விழுந்தார். ''ஐயோ!'' பர்வதத்தின் ஓலம் திக்கெட்டும் முழங்கியது.

சுவர் அருகே உதயசூரியன் மாதிரி டாக்டர் மேனனின் வழுக்கைத் தலை தென்பட்டது. ''என்னம்மா?''

''மை ஹஸ்பெண்ட் அன்கான்ஷியஸ்...''

நொடிப் பொழுதில் தம் பையைத் தூக்கிக் கொண்டு வந்தார் டாக்டர் மேனன்.

அவர் என்னதான் முயன்றும் பரமசிவத்தின் மயக்கம் தெளிவதாக இல்லை.

அலைபாய்ந்த அவர் கண்கள் சமையலறைப்பக்கம் சென்றன. அதோ...!

மறுகணம் அந்த அறைக்குள் தாவினார். அரைப் பூசணிக் காயை அப்படியே வைத்திருந்தார் பரமசிவம். அதை உற்று நோக்கினார். பிறகு அசோகனைப் போல் ''ஹ ஹா!'' என்று சிரித்தார். நடுங்கிப் போனாள் பர்வதம்.

''இன்னிக்கு உங்க வீட்லே என்ன சமையல்?'' மேனன் நிதானமாக வினவினார்.

''அவரே சமையல் பண்ணி இருக்கார். பூசணிக் கூட்டு போலிருக்கு...''

மீண்டும் அசோகனைச் சிரித்தார் டாக்டர் மேனன். ''நல்ல ஆசாமி உங்க ஹஸ்பெண்ட்.. என் தோட்டத்திலே இருந்த 'ஆப்பிரிக்கானஸ் மயக்காமரின்' செடியின் காயைப் பூசணின்னு நினைச்சு அபேஸ் பண்ணி முழுங்கியிருக்கார்!''

பர்வதம் வெலவலத்துப் போனாள்.

''கவலைப் படாதீங்க... இன்னும் இரண்டு மணி நேரத்திலே அவர் மயக்கம் தெளிஞ்சு எழுந்திருப்பார்!'' என்று சொல்லிவிட்டு, மேனன் பையுடன் நடையைக் கட்டினார்.

# மாற்றான் தோட்டத்து..

எஸ்.கே.மூர்த்தி



## 15

ஒரு புராதனமான வைதீகக் கலாசாரம் நிறைந்த தென்னிந்திய வீடும், அதன் அசௌகரியங்களும் முரண்டுகளும் மிக்க குடும்பத் தலைவியும் பழைய பழகக வழக்கங்களும், கமலியைப் போன்ற ஐரோப்பியப் பெண்ணுக்குப் பெரிய இடையூறுகளாக இருக்கும் என்று சர்மா எதிர்பார்த்ததற்கு நேர்மாருக நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கமலி அந்த வீட்டையும், அதன் கலாசாரப் பிடிப்புக்களையும், காமாட்சியம்மாளின் கட்டுப்பாடுகளையும் நேசித்து மதித்துக் கடைப் பிடிக்கத் தொடங்கிஞளே ஒழிய வெறுக்கவில்லை. அந்த வீட்டின் நடை முறைகளுக்கு ஏற்ப அவள் தன்னை மாற்றிக் கொண்டாளே தவிரத் தன்னுடைய வசதிகளுக்கு ஏற்ப அந்த வீட்டையும் அதன் பழங்காலத்து மனிதர்களையும் ஒரு சிறிதும் மாற்ற முயலவில்லை. கமலியைப் பொறுத்துச் சர்மாவின் மனநிலை நெகிழ்ந்து மெல்ல மெல்ல அவள் மேல் அநுதாபமாக மாறியதற்கு அவளுடைய இந்த நனிநாகரிகப் பண்பே காரணம்.

ரவியும் கமலியும் பாண்டிச்சேரி, காரைக்கால் பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்துவிட்டு ஊர் திரும்பிய தினத்தன்று இரவு தனியாக ரவியிடம் பேசிக் கொண்டிருந்தபோது, ''உங்கள் அம்மா வீணையும் கையுமாக அமர்ந்திருந்த காட்சி சரஸ்வதி தேவியே வாத்தியத்தோடு வந்து உட்கார்ந்து கொண்டிருந்த மாதிரித் தோன்றியது'' என்று கமலி கூறிஞள்.

''இப்போதெல்லாம் மிகவும் நவீனமான புதிய டிப்ளமஸி ஓயாமல் புகழ்ந்தே எதிர்ப்பையும் எதிரியையும் அழிப்பதுதான் கமலீ!''—என்று கேலியாக அதற்கு உடனே பதில் சொல்ல எண்ணிய ரவி அவள் காமாட்சியம்மாளைப் புகழ்ந்த குரலிலிருந்த பக்திபூர்வமான தொனியையும், மனப்பூர்வமான ஆழத்தையும் உணர்ந்து கொண்டு அதை வேடிக்கையாக்கிவிடப் பயந்து தயங்கியவஞகத் தன் எண்ணத்தைத் தவிர்த்துக்கொண்டு பேசாமலிருந்தான். எண்ணியதை விட்டுவிட்டு வேறு விதமாகப் பேசிஞன்:

''எங்க அம்மா ஒரு புராதனமான தென்னிந்திய வைதீகக் குடும்பத்தின் பூர்ணமான அம்சங்கள் அத்தனையும் பூர்ணமாக உள்ளவள் என்ருல் ப்ளஸ் பாயிண்ட் மைனஸ் பாயிண்ட் ரெண்டையும் சேர்த்துத்தான் சொல்றேன். ஆஞ அம்மாவைப் பொறுத்தவரை ப்ளஸ் பாயிண்டா மட்டும்தான் உன் கண்ணுக்குப் படறது...''

''ஒரு விஷயத்தின் சாதக பாதகத்தைக் கணக்கிடும்போது நமக்கு ஒத்து வராததை எல்லாம் மைனஸ் பாயிண்டாக் கணக்கிடறது அவ்வளவு சரியில்லை.''

தன் அம்மாவிடம் குறைகளும் முரண்டுகளும் உண்டு என்று தானே சொல்வதைக்கூட அவள் ஒப்புக் கொள்ளாமல் மறுப்பதை அவன் அப்போது கவனித்தான். அம்மா பம்பரமாகச் சமையலறையில் வேலை செய்வது, பூஜை செய்வது, காலையில் நீராடியதும் துளசி வழிபாடு, பசு வழிபாடுகள் செய்வது பல்லாங் குழியாடுவது, வீணை வாசிப்பது; ஸ்தோத்திரம் ஸ்லோகம் சொல்லுவது, எல்லாமே கமலிக்கு அதிசயமாக இருப்பதை அவன் கண்டான். தான் அளித்திருந்த பயிற்சிகள், பழக்க வழக்கங்கள், முன் தகவல்கள், அவளை ஓரளவு இந்திய வாழ்க்கைக்கு எந்தவிதத் தயக்கமுமின்றிப் பொருந்த வைக்கும் என்று அவன் அறிந்திருந்தாலும் இப்போது இங்கே வந்தபின்தான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவும் அவள் அதற்குக் கனிந்து பக்குவப்பட்டிருப்பது தெரிந்தது அவனுக்கு.

''உங்கள் அம்மா புடவை கட்டிக்கொள்வதுபோல் நானும் கட்டிக் கொண்டு பார்க்க வேண்டும்போல் எனக்கு ஆசையாயிருக்கிறது. அதைக் கற்றுக் கொடுப்பதற்கு நாளைக்கு வசந்தியை வரச் சொல்லியிருக்கிறேன்'' — என்று தனது ஒரு விருப்பத்தைக் கமலி வெளியிட்டபோது அவனுக்கு வியப்பாகக் கூட இருந்தது. மடிசார் வைத்துப் புடைவை கட்டுவது அநாகரிகமாகவும், பத்தாம் பசலித்தனமாகவும் ஆகி அப்படிக் கட்டுவதை வழக்கமாகக் கொண்டவர்களே அதிலிருந்து விடுபட்டுத் தங்களை அந்நியப் படுத்திக்கொண்டு மாறி வரும்போது எங்கோ ஆருயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வந்த ஒரு பிரெஞ்சு யுவதி இப்போது அதற்கு ஆசைப்படுவது விநோதமாயிருந்தது.

மறுநாள் காலையில் இறைமுடிமணி வடக்குத் தெருவில் மடத்து மனையில் தாம் தொடங்கும் புதுப் பலசரக்குக் கடைத் தொடக்க



விழாவுக்கு வந்து கூப்பிட்டுவிட்டுப் போனுர். அவர் வந்த போது சர்மா எங்கோ வெளியே போயிருந்தார். ரவியிடமும் கமலியிடமும் 'தான் விவரம் சொல்லி விட்டுப் போயிருந்தார் அவர். ''தம்பீ! உங்க அப்பாருக்குச் சம்மதம் இல்லாம இருக்கலாம். ஆனு எங்க இயக்க வழக்கப் படி ஐயா படத்தை மாட்டி நல்ல ராகு காலமாப் பாத்துத்தான் நான் கடை தொறக்கறேன். அது என் கொள்கை சம் பந்தப்பட்ட விசயம். நட்புக்காக அவரை அழைக்கிறேன். 'முடிஞ்சா 'இவுங்களேயும்' கூப்பிட்டுக்கிட்டு வாங்க'' — என்று கமலி பக்கம் சுட்டிக் காட்டி ரவியிடம் சொல்லி விட்டுப் போயிருந்தார் இறைமுடி மணி.

குமார் கல்லூரிக்கும், பார்வதி தனது பள்ளிக்கும் புறப்பட்டுப் போனபின் காலே ஒன்பதரை மணிக்கு மேல் அப்பா வீட்டுக் குத் திரும்பி வந்ததும் ரவி இறைமுடி மணி வந்துவிட்டுப் போனது பற்றி அவரிடம் தெரிவித்தான்.

அவன் தெரிவித்ததற்குச் சாதகமா கவோ, பாதகமாகவோ அப்போது ஒரு பதிலும் சொல்லாமல் கவனிக் காதது போல் இருந்தார் சர்மா. முகக்குறிப்பிலிருந்து அப்போது அவர் கலக்கமாகவும் மனம் குழம்பியும் இருப் பதுபோல் காணப்பட்டது.

''அவரோட இயக்க வழக்கப்படி ஐயா படம் மாட்டி ராகு காலத்திலேதான் கடை ஆரம்பிக்கிருராம். அதை நெனேச்சுத் தயங்கிப் பேசாமெ இருந்துடாமே சிநேகி தத்தை மதிச்சு நீங்க ஒரு நடை வந்துட்டுப் போகணும்னு சொல்லிட்டுப் போனுர்.''

''..........''

''என்னப்பா? என்னமோ மாதிரி இருக் கேள்?...''

''எல்லாத் தகராறும் இதனுலேதான்! போருக் குறைக்கு நான் அங்கே வேற



போய் நின்னேன்னு வெறும் வாயை மெல்லற சீமாவையர் வாய்க்கு அவல் கிடைச்ச மாதிரி ஆயிடும் '

''எல்லாத் தகராறும்னு என்ன தகராறு அப்பா?''

''தேசிகா மணிக்கு அந்த வடக்குத்தெரு எடம் கிடைக்க விடாமப் பண்ணனும் கிறதுக்காக — அவனுக்கு நான் வாக்குக் குடுத்து அட்வான்ஸ் வாங்கினப்புறம் - சீமா வையரு அஹமத் அலிபாயைக் கூட்டிண்டு வந்து அவனுக்குத்தான் அந்த எடத்தை விட்டாகணும்னு ஒத்தைக் கால்லே நின்னர். நான் ஒத்துக்கல்லே குடுத்த வாக்குப்படி தேசிகாமணிக்கு விட்டுட்டேன். மடத்திலே யிருந்தும் நான் செய்ததுதான் நியாயம்னு லெட்டர் வந்துடுத்து. சீமாவையரிடமும் அதைக் காமிச்சாச்சு. பார்த்துட்டு ஆகா சத்துக்கும் பூமிக்குமாக் குதிகுதின்னு குதிச்சார். சாமி பூதம் இல்லேங்கற சு. ம. ஆளுக்கு மடத்து எடம் வாடகைக்குப் போறது பெரிய அக்ரமம்னர். என்னைத் திட்டினர். முந்தாநாள் மடத்து நிலங்களைக் குத்தகைக்கு விட்டபோதும் அவர் சொன்னபடி எதையும் கேக்காமே நான் நியாயமானவாளுக்காப் பார்த்து விட்டுட்டேன். அதிலே வேறே அவருக்கு என்மேலே மகாகோபம். இதுக்கு முந்தின கூட்டத்திலே அவருக்கு வேண்டிய் பினமி ஆள்களாச் சேத்துண்டு வந்து அவாளுக்கே எல்லா நிலத்தையும் குத்தகை முடிச்சுடப் பார்த்தார். நான் விடலே. கூட்டத்தையே அன்னிக்கி ஒத்திப் போட்டுட்டேன்.''

''சரி. இதுலே வருத்தப்படறதுக்கும் தயங்கறதுக்கும் என்ன இருக்கு? எது நியாயமோ அதைத்தானே செஞ்சிருக்கேள்?'' —

''வருத்தம் ஒண்ணும் படலேடா! அங்கே போறதுக்குத்தான் தயக்கமாயிருக்கு. ராகு காலம், ஐயா படம்னு நீவேற என்னென்னமோ சொல்றே. ஒண்ணொண்ணும் சீமாவையருக்கு ஒரு கலகத்தை மூட்டறதுக்குத் தான் பிரயோஜனப்படும்.... கொள்கை எப்படி இருந்தாலும் தேசிகாமணி யோக்கியன்...''

''நீங்க தயங்கறது ரொம்ப வேடிக்கையாத்தான் இருக்குப்பா! அயோக்கியன் ஒருத்தன் என்ன நினைச்சுப்பானேன்னு பயந்து யோக்கியன் ஒருத்தனை மதிக்கவும், ஆதரிக்கவும் தயங்கி நின்னுடற சுபாவம் நம்ம தேசத்துக்கே 'ஸ்பெஷாலிட்டி'யாப் போச்சு. மனத்திலை சமூக விரோதிகளுக்கும் அயோக்கியர்களுக்கும் பயந்து நடுங்கிக் கொண்டே, கையால் தெய்வத்தைக்



தேவர் பெருமானே! திரும்பிவர மாட்டீரா?...

கண்ணதாசன் பக்கம்



தங்கரதம் வைத்திருந்தேன் சதிகாரக் கூற்றுவந்து
பொங்கும்ஒளிப் பூரதத்தை போட்டுடைத்துப் போனதடி!
கங்கைநதி பார்த்திருந்தேன் காலனெனும் பாவிவந்து
கைகொடுத்த கங்கையினைக் காயவைத்துப் போனுண்டி!
மேகம்வரப் பார்த்திருந்தேன் மேலடித்த காற்றுவந்து
தாகம் தவிர்க்கவரும் தண்ணீரைக் கெடுத்ததடி!
ஊற்றுக்கண் போனதடி உள்ளம் புலம்புதடி
ஆற்றுவார் இல்லாமல் அலறுகிறேன் பாவியடி!
ஆலகாலங் குடித்த அந்தச்சிவன் தனைப்போல்
காலகாலங் களுக்கும் கைகொடுத்த தேவனடி!

கம்பனுக்குச் சடையப்பன் கைநிறையத் தந்ததுபோல்
நம்பிஎனை வைத்திருந்த நாயகனை இழந்தேண்டி!
உலையேற்றி வைத்துவிட்டு ஓடிப்போய் நின்ருலும்
கலையாத பசிதீர்க்கும் கற்பகப்பூந் தீபமடி!
கோவில் பலதேடிக் கும்பிட்டு வந்தாலும்
தேவரைப்போல் ஒருதெய்வம் தேடக் கிடைப்பதில்லை!
சீரான வள்ளலடி! திறமைமிக்க செம்மலடி!
ஆருத புண்கொடுத்து அடங்கிவிட்ட தாவியடி!
தக்கசம யத்திலெலாம் தந்தவனை இழந்துவிட்டு
திக்குத் தெரியாமல் திகைக்கின்றேன்; என்னசெய்வேன்?
சேதிஒன்று கேட்டேண்டி தேவர் மரணமென்று
நாதியற்றேன் அப்பொழுதே, நாளைஎனைக் காப்பவர்யார்?

---

கூப்பித் தொழும் தேசம் இது. நியாய வேட்கையும் அந்தரங்க சுத்தியோடு கூடிய சத்திய தரிசனமும் இல்லாத பக்திகூடப் பிரயோஜனமில்லாத விஷயம்தான். யாரோ ஒரு கெட்டவன் என்னமோ நினைச்சுக்கப் போருன் கிறதுக்காக நீங்க உங்க சிநேகிதரோட அழைப்பைப் பொருட்படுத்தாம விடறது எனக்குப் பிடிக்கலே. நீங்க வரேளோ: வல்லியோ, என்னையும் கமலியையும் அவர் கூப்பிட்டிருக்கார். நாங்க போகப்போறேம்.''

''அதுக்குச் சொல்லலே.... சரி... நானும் வரேண்டா... சேர்ந்தே போயிட்டு வந்துடலாம்'' — என்று ஒரு நிமிஷம் தயக்கத்துக்குப்பின் சர்மாவும் வருவதற்கு இசைந்தார். அவர் மனத்துக்குள் இன்னும் தயக்கம் தான் நிலவியது. மகனேடும் அவனேடு வந்திருக்கிற பிரெஞ்சு யுவதியுடனும் சேர்ந்து ஒன்ருகச் சங்கர மங்கலத்தின் வம்புகள் நிறைந்த தெருக்கள் வழியே நடந்து போய்ப் பரம வைதிகனுகிய தான் ராகு காலத்தில் திறந்து வைக்கப்படும் ஒரு கடைத் திறப்பு விழாவுக்கு விஜயம் செய்வது என்பதை நினைத்துப் பார்ப்பதிலேயே ஆயிரம் தயக்கங்கள் இருந்தன.

தயக்கங்கள் எல்லாம் ஊராரையும் சீமாவையரையும், எதிரிகளையும் நினைத்துத் தான். தனிப்பட்ட முறையில் நினைக்கும் போது எந்தக் குழப்பமும் தயக்கமும் இல்லாமல் தேசிகாமணியின் மருமகனுக்காகத் திறக்கப்படும் பலசரக்குக் கடைத் திறப்பு விழாவுக்குப் போய் விட்டு வரவேண்டும் என்றுதான் தோன்றியது. ''நல்ல வேளை பார்த்துத் தொடங்குவதும், ராகு காலத்தில் தொடங்குவதும் அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. நாம் நிர்ப்பந்தப்படுத்த முடியாது. அதேபோல் வாடகைக்குப் பேசி எடுத்துக் கொண்ட ஓர் இடத்தில் வாடகைக்கு இருப்பவருக்கு விருப்பமான எந்தப் படத்தையும் அவர் தாராளமாக மாட்டிக் கொள்ள உரிமை உண்டு. அதில் நாம் தலையிட முடியாது.'' — என்றே சரியாக நினைத்து மதிப்பிட்டார் அவர்.

''நீங்கஎெல்லாம் கையால் நியாயத்தைத் தொழுது கொண்டே மனத்தால் அநியா யத்துக்குப் பயப்படுகிறீர்கள்'' — என்று மகன் சொல்லிக் குத்திக் காட்டிய பின்பே உடனடி யாக அவனோடு போவதற்குச் சர்மா இசைந் திருந்தார். உடை மாற்றிக் கொண்டு கமலி யையும் அழைத்துவர மாடிக்குப் போயிருந் தான் ரவி.

ரவியும், கமலியும், மாடியிலிருந்து கீழே வருவதற்குள் உள்ளே போய்க் காமாட்சி யம்மாளிடம் வெளியே புறப்படப் போவ தாக ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு வந்தார் அவர்.

அவர் முதலில் நினைத்தபடிதான் நடந்தது. சர்மாவும், ரவியும், கமலியும், தெருவில் சேர்ந்து நடந்து போவதை ஒரு விநோத மான புது ஊர்வலத்தைப் பார்ப்பது போல் தான் பார்த்தார்கள்.

எதிரே ஊர்ப் புரோகிதர் ஜம்புநாத சாஸ்திரி வந்தார். சர்மாவையும், ரவியை யும் விசாரித்தார். கமலியைப் பார்த்துவிட்டுச் சர்மாவிடமே மறுபடியும், ''அவா யாரு? புதுசா இருக்கே?'' என்று கேட்டார் சாஸ்திரி.

''பிரான்ஸிலேந்து வந்திருக்கா. நம்ம தேசம், கலாசாரம், பழக்கவழக்கம்லாம் பத்திப் படிச்சு எழுதறதிலே ஆசை'' - என்று சர்மாவிடமிருந்து பதில் வந்தது.

''சரி! அப்புறமா வந்து பார்க்கறேன்'' — என்று சாஸ்திரி விடைபெற்றுக்கொண்டு போனார். வடக்குத்தெரு முனையை அடைவ தற்கு முன் இப்படியேயும் இதைவிடச் சுருக்கமாகவும் இன்னும் இரண்டொரு சந்திப்புக்களுக்கும், விசாரணைகளுக்கும் சர்மாவோ ரவியோ பதில் சொல்ல வேண் டியனவாக நேர்ந்தன.

''அங்கெல்லாம் நம்மோட கூட வர்ர ஒரு பெண்ணையோ ஆணையோ நாமாச் சொல்லி இன்னார்னு அறிமுகப் படுத்த லேண்ணு எதிரே சந்திக்கிறவா யார்னே கேட்க மாட்டாப்பா...'' — ரவி தந்தை யிடம் சொன்னான். சர்மா சிரித்தபடி அதற்குப் பதில் சொன்னார்: ''மேற்கத்திய தேசங்களைப் பத்தி நீ சொல்றே ரவி! நம்ம தேசத்துலே ஒவ்வொரு சிசுவும் தொப்புள் கொடியை நீக்கின மறுநிமிஷத்தி லேருந்தே மத்தவாளையும் மத்ததுகளையும் பத்தி அறிஞ்சுக்கற ஆவல்லேதான் உயிர் வாழறதுங்கறதை மறந்துடாதே...''

அவர்கள் போய்ச் சேர்ந்த போது இறை முடிமணியின் புதுப் பலசரக்குக் கடையில் கூட்டம் அதிகம் இல்லை. மூன்று பக்கமும் செங்கல் சுவரெழுப்பி மேலே தகரக் கொட் டகையாக அமைத்துச் ''**சுயமரியாதைப் பல் பண்ட நிலையம்**'' — என்று புதிதாகப் பள பளத்து மின்னும் போர்டு மாட்டியிருந்தார் இறைமுடிமணி. வாழை மரம் மாவிலைத் தோர ணம் கிடையாது. போர்டிலோ கதவுகளிலே முகப்பிலோ, எங்கும், குங்குமம், சந்தனப் பொட்டு எதுவும் இல்லை. போர்டிலும், கடைக்குள் பிரதானமாகப் பார்வையில் படும் இடத்திலும் இறைமுடிமணியின் இயக்கத் தலைவராகவும் வழிகாட்டியாகவும் விளங்கிய ஐயா படம் இருந்தது. கல்லாப் பெட்டியில் குருசாமி, அதாவது இறைமுடி மணியின் மருமகன் உட்கார்ந்திருந்தான். முகப்பில் நின்று இறைமுடி மணி வருகிற வர்களை வரவேற்றுக் கொண்டிருந்தார். வருகிறவர்களை உட்கார வைப்பதற்காகப் பக்கத்துக்கு ஒன்று வீதம் கடைமுகப்பின் இருபக்கமும் இரண்டு நீள பெஞ்சுகள் போடப்பட்டிருந்தன. (தொடரும்)

# சரித்திரம் காணாத சம்பவம்!

ஜாஃப்னா தீபகர்ப்பத்தில் உள்ள திருக்கேதீசுவரம் ஸ்தலத் தில் ஓர் இணையற்ற நிகழ்ச்சியைக் காண இலங்கையின் பல பகுதிகளிலிருந்தும் நூற்றுக் கணக்கான பக்தர்கள் வந்திருந் தனர்.

கொழும்புவைச் சேர்ந்த முஸ்லிம் வர்த்தகரும் கொடை வள்ளலும் பிரமுகருமான ஜனாப் எஸ். எச். மூஸாஜீ மேற்படி ஸ்தலத்திலுள்ள கோயிலின் வசந்த மண்டபத்துக்கு அடிக்கல் நாட்டினார். வேதங்களும் திருமுறைகளும் ஒலித்தன.

ஹிந்துக் கோயில் ஒன்றில் ஒரு முஸ்லிம், மண்டபத்துக்கு அடிக்கல் நாட்ட அழைக்கப்படுவதென்பது இதுவரை சரித் திரத்தில் கண்டதில்லை.

பரமேசுவரா கல்லூரி முதல்வரான பேரறிஞர் எம். ஞானப் பிரகாசம் திருக்கேதீசுவரம் கோயில் திருப்பணிக் குழுவின் உப தலைவர். அவர் ஷேக் மூஸாஜீயை ஹிந்துக்களுக்குப் பேராதரவு தந்த அக்பர் சக்கரவர்த்திக்கு ஒப்பிட்டார்.

வசந்த மண்டபத்தின் முழுச் செல வையும் ஷேக் மூஸாஜீ தாமே ஏற்றுக் கொண்டிருப்பதாகக் காரியதரிசி திரு நமச்சிவாயம் தெரிவித்தார்.

படத்தில் ஷேக் மூஸாஜீயுடன் அவர் மனைவியாரும் சேர்ந்து அடிக்கல் நாட்டு வதைக் காணலாம்.-கே.வி.எஸ்.வாஸ்



மாசற்ற

# அழகுமுகம்

—உங்களைக்
கொஞ்ச அழைக்கிறது...



அன்பு பொங்கச் செய்யும் குழந்தைமுகம். நீங்கள் வேண்டுமளவு கொஞ்சுங்கள். குழந்தையின் தேவைகளுக்காகத் திட்டமிட்டு சேமிக்கவும் வேண்டுமே.

ஒவ்வொருவரின் தேவைக்கும் ஏற்ற சீரிய திட்டங்களுடன். முழுமையான சேவை புரிய லக்ஷ்மி விலாஸ் வங்கி காத்திருக்கிறது. தனிப்பட்ட சேவை LVB-யின் பாரம்பரியம்.

**நிறைவு தரும் சேவைக்கு
வருகை தாருங்கள் LVB-க்கு.**



LVB.2009




**லக்ஷ்மி விலாஸ் பாங்க்** லிமிடேட்

பதிவு அலுவலகம்: கரூர் 639 001

நிர்வாக அலுவலகம்: சென்னை 600 086

# மல்லிகை மணம்

ருக்மிணி பார்த்தசாரதி

மினி மர்மத் தொடர்

## 5

ஞாயிற்றுக் கிழமை விருந்துக்குச் செல்லும்வரை ''மைதிலி... மைதிலி...'' என்று ஜபித்துக் கொண்டிருந்தாள் புஷ்பா... எப்படி இருப்பாள் மைதிலி? பார்ப்பவர்கள் ஸ்தம்பித்து நிற்கும் அழகோடு? உருண்டை முகமும், சிவந்த நிறமுமாக... சிலை போன்ற உடலமைப்போடு? வைரங்களும் பட்டும் ஜொலிக்க, கூந்தலில் மல்லிகைச் செண்டு நறுமணம் வீச....?

''மல்லிகை'' என்றவுடன் அவளுக்குத் தன்னோடு கல்லூரியில் படித்த பெண்ணின் நினைவு வந்தது. அவள் பெயரும் மைதிலி தான், நல்ல உயரம், கச்சிதமான பருமன்.. மாநிறம்... அலை அலையான கேசத்தில் மல்லிகைச் சரம் இல்லாத நாளே கிடையாது... அவ்வப்போது, அதை அளவுகடந்த பிரேமையோடு தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொள்வாள் மைதிலி... கல்லூரியில் மற்ற மாணவிகள், ''உனக்கு மைதிலி என்ற பெயர் பொருந்தாது... மல்லிகா என்றல்லவா உன் பெயர் இருந்திருக்கணும்!'' என்பார்கள்.

அந்த நாட்களில் மைதிலியும் புஷ்பாவும் இணைபிரியாத தோழிகள்... வகுப்பில் என்றுமே முதலாவதாகத் திகழும் மாணவி மைதிலி... ஆனால் இனிமையான சுபாவம் கொண்டவள்... மாறாத சிரித்த முகம்... அந்த மல்லிகைச் சரமும் முகத்து முறுவலும் தான் அவளை அழகியாக்கின... புஷ்பா அவளிடம் அடிக்கடி பாடங்களில் ஏற்படும் சந்தேகங்களில் விளக்கம் கேட்பாள்... வகுப்பில் இருவரும் அடுத்தடுத்த ஆசனங்களில்தான் அமருவார்கள். அப்பொழுதெல்லாம் மைதிலியின் கூந்தல் நறுமணம் தன்னை மிருதுவாக அரவணைப்பதாகக்கூட புஷ்பா நினைத்துக் கொள்வாள்....

மைதிலி மல்லிகை... அவள் புஷ்பம்... என்ன பொருத்தம்!

கல்லூரிப் படிப்பு முடிந்தபின் அவர்களுடைய வாழ்க்கைப் பாதைகள் பிரிந்தன... புஷ்பாவின் வீட்டில் உணர்ச்சிகளின் எரிமலை வெடித்துவிட்ட நிலை. இருபது வயதில் அவள் அநாதையாய் வீட்டை விட்டுக் கிளம்ப வேண்டிய நிர்ப்பந்தம்.

எப்போதாவது பூக்கடையில் மல்லிகைச் சரங்களைப் பார்த்தால் புஷ்பா மைதிலியை நினைத்துக் கொள்வாள்... ''அவளுக்கென்ன? ப்ரிலியண்ட் கர்ல்! அன்பான



பெற்றோர்கள்... என்னைப்போல் துரதிர்ஷ்டக் கட்டையா என்ன?'' என்று சிநேகிதியின் நினைவை ஒதுக்கி விடுவாள்... ''உலகத்தில் எத்தனையோ பெண்கள். என் அழகு யாருக்குமே இல்லை. என்ன பலன்? வசதியான வாழ்க்கையை அளிக்க முடியாத இந்த அழகினால் என்ன லாபம்? என்னை விடத் துரதிருஷ்டசாலி யாருமே இருக்க முடியாது!'' என்ற கசப்புத்தான் கடைசியில் நெஞ்சில் மிஞ்சி நிற்கும்.

புஷ்பா கசப்பே உருவாகத்தான் மாறிக் கொண்டு வந்திருந்தாள்!

ஞாயிற்றுக் கிழமை அவள் தன்னை விசேஷமாக அலங்கரித்துக் கொண்டாள். ''மிஸஸ். மைதிலி ராகவன் பேரழகியாகத் தான் இருக்கட்டுமே! என் அழகுக்கெதிரே அவள் தூசுதான் என்று காட்டவேண்டும்!'' என்று அவளுள் ஓர் ஆவேசம்!

ராகவனின் வீட்டை அடைந்தாள். புஷ்பா... பிரும்மாண்டமான வீட்டையும் அழகான தோட்டத்தையும் பார்த்தவாறு அவள் மயங்கி நின்றபோதே, ''புஷ்பா! நீயா!'' என்றொரு குதூகலக் குரல் அவளை அதிர வைத்தது.

திரும்பினாள் புஷ்பா... எதிரே மைதிலி... ஆம்! அவளுடைய கல்லூரித் தோழிதான்! கூந்தலில் மல்லிகைச்சரம் எழில் சிந்த, புன்னகை தவழும் முகத்தோடு நின்றவளைக் கண்டபோது புஷ்பாவின் மனம் கசப்பின் எல்லையையே அடைந்துவிட்டது...

(தொடரும்)

# வெள்ளம்

இந்திரா பார்த்தசாரதி



சுனில் அந்தக் கிழவியை அணுகினான். எல்லாரும் விரைவாகத் தங்கள் தங்கள் சாமான்களைப் படகுகளில் ஏற்றிக் கொண்டு வெள்ளத்தைக் கடக்க முற்படும்போது, அந்தக் கிழவி மட்டும் அவ்வீட்டின் முதல் மாடியில் நின்றவாறு புலம்பிக் கொண்டிருந்தாள்.

சுனில் தில்லிப் பல்கலைக்கழக மாணவன். சமூக சேவையின் பொருட்டு அங்கு வந்திருக்கும் அவனுக்கு, அந்தக் கிழவியின் பிரச்னை என்னவென்று அறிந்து அவளுக்கு உதவி செய்ய வேண்டுமென்று தோன்றியதில் ஆச்சர்யமில்லை. தங்களையும், தங்களுடைய உடைமைகளையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற தற்காப்புப் போராட்டத்தில், வலிமையற்ற உயிரான அக்கிழவி அவர்களுடன் போட்டியிட முடியாமல், தான் தப்பித்துக் கொள்ள வாய்ப்பே இல்லாமல் போய் விடுமோ என்று வருந்துகிறாளோ? — படகுகளைப் பங்கீடு செய்யப் போலீஸ் முன்வந்திருக்கலாம்... ஆனால் அவர்கள் அப்படிச் செய்யாமல், வசதியுள்ளவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதுதான் தங்கள் கடமையென்று நினைத்து அவர்களுடைய ஃபிரிஜிடேர்களையும் மற்றைய பொருள்களையும் பா கில் ஏற்றுவதை மேற்பார்வை பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள்! இதனால் அவர்களுக்கு ஆதாயம் கூட இருக்கலாம்... ஆனால் இந்தக் கிழவி போன்றவர்களுக்கு யாராவது உதவி செய்து தானே ஆக வேண்டும்?—

''மாதாஜி... உங்கள் பிரச்னை என்ன?'' என்று கேட்டான் சுனில்.

சுனிலுக்கு அவளுடைய பிரச்னை புரிந்தது. அவளுடைய பேரன் அந்த வீட்டில், கிரவுண்ட் ஃப்ளோரைச் சேர்ந்தவர்கள் வீட்டில் சமையற்காரப் பையனாக வேலை செய்து கொண்டிருந்தான். இப்பொழுது அவர்கள் படகுகளில் ஏறிச் சென்று விட்டார்கள்... பையனைப் பற்றித் தங்களுக்கொன்



றும் தெரியாது என்கிறார்கள்... பையனுக்குப் பத்து, பன்னிரண்டு வயது தான் இருக்கும். நாலரை அடி உயரந்தான் இருப்பான். வெள்ளமோ, மாடல் டவுனில் ஆறடி உயரத்துக்குப் பாய்ந்து கொண்டிருக்கிறது. அந்தக் கிழவிக்கு அந்தப் பையனைத் தவிர உறவினர் வேறு யாரும் கிடையாது... பேரன் மூழ்கி விட்டானே என்ற பயம் அந்தக் கிழவிக்கு! போலீஸ்காரர்களைக் கேட்டால் மனித உயிர் எதுவும் நஷ்டமடைந்ததாகத் தெரியவில்லை என்கிறார்கள். அப்படியானால் அந்தப் பையன் எங்கே?—

''நீங்கள் படகில் ஏறி அக்கரைக்குச் செல்லுங்கள்... நான் உங்கள் பேரனைப்பற்றி விசாரித்துச் சொல்கிறேன். எனக்கும் அவன் மூழ்கியிருக்க முடியாது என்றுதான் தோன்றுகிறது'' என்றான் சுனில்.

''இந்த வீட்டில்தான் அவன் இருந்தான்'' என்று தீர்மானமாகச் சொன்னாள் அந்தக் கிழவி.

''மேல் மாடியில் பார்த்து விட்டீர்களா?''

''பார்த்தாகி விட்டது. அங்கில்லை.''

''அதோ படகு வருகிறது... என்னுடன் புறப்படுங்கள். உங்கள் பேரனைத் தேடித் தருவது என் பொறுப்பு.''

படகு வந்ததும் அந்தக் கிழவி ஏறப் போன போது, ஒரு நடுத்தர வயது பஞ்சாபிக்காரன் அவளைத் தடுத்தான்.

''ஏன் தடுக்கிறீர்கள்...?'' என்று கேட்டான் சுனில்.

''இன்னும் எங்கள் சாமான் எல்லாம் போய்ச் சேரவில்லை... கட்டில் இருக்கிறது.''

''மனித உயிரைக் காட்டிலும் உங்களுக்குக் கட்டில் முக்கியமா...?''

''போலீஸ் அனுமதியுடன் தான் நான் செல்கிறேன்...போலீஸ்...! இந்தப் பையனைப் பாருங்கள். கலாட்டா செய்கிறான்.''

போலீஸ்காரர் ஒருவர் வந்தார். ''மாதாஜி... அடுத்த படகில் நீங்கள் போகலாம். கீழே இறங்குங்கள்'' என்றார் அவர்.

''மாதாஜி இந்த படகில்தான் போகப் போகிறாள். நானும் போகப் போகிறேன். எங்களைக் கீழே உருட்டித் தள்ளிவிட்டு நீங்கள் போங்கள்'' என்றான் சுனில்.

இவ்வாறு சொன்னதோடு மட்டுமல்லாமல், அந்தக் கிழவியைப் படகில் ஏற்றிவிட்டுத் தானும் உட்கார்ந்தான் சுனில்...

''என்னிடம் போலீஸ் கமிஷனர் உத்தரவு இருக்கிறது. கீழே இறங்கப் போகிறாயா இல்லையா?'' என்று உரத்த குரலில் சத்தமிட்டான் அந்த நடுத்தர வயதுப் பஞ்சாபிக்காரன்.

''இந்த நேரத்தில் மாடல் டவுனில் வெள்ளம் வரப் போகிறது. அப்படி வரும் போது இந்தப் படகில் நீங்கள் ஆறுதடவை போய் வருவதற்கு உத்தரவு அளிக்கிறேன் என்று கமிஷனர் எழுதித் தந்திருக்கிறாரா..? எங்கே காண்பியுங்கள் அந்த உத்தரவை?''

''போலீஸ்..'' என்று கூப்பிட்டுக் கொண்டே திரும்பினான் அவன்.. சுனிலுக்குச் சட்டம் தெரிந்திருக்கிறது என்றுணர்ந்த அந்தப் போலீஸ்காரர், அந்த இடத்தை விட்டு ஓசைப் படாமல் நழுவிவிட்டார்.

சுனிலின் துணிச்சலைக் கண்டதும், மற்றவர்களுக்கும் தைரியம் பிறந்து விட்டது. முன்னால் நாலைந்து தடவை அந்தப் படகைச் சாமான்களுடனும், உறவுக்காரர்களுடனும் அவர் சென்ற போது, ஒருவேளை அது அவர் சொந்தப் படகோ அல்லது கமிஷனரிடமிருந்து தான் விசேஷ அனுமதி வாங்கியிருக்கிறார் போலிருக்கிறது என்று ஒதுங்கியவர்கள் இப்பொழுது படகில் ஏறி உட்கார்ந்தார்கள்.

அந்த நடுத்தர வயதுப் பஞ்சாபிக்காரன், ஒன்றும் பேசாமல் படகை விட்டுக் கீழே இறங்கினான். அவன் கீழே இறங்கியபிறகு ஏதோ முணு முணுக்கத் தொடங்கினான்... அவனும் இந்தப் படகிலேயே வந்திருக்கலாம் என்றுதான் தோன்றிற்று சுனிலுக்கு. ஆனால் அவன் கட்டில்களை விட்டுவரத் தயாராக இல்லை. அடுத்த தடவை எப்படியாவது சமாளித்துக் கட்டில்களைக் கொண்டு வரலாமென்பது அவன் யோசனையாக இருக்கலாம்.

அந்தக் கிழவி சீமாபுரியைச் சேர்ந்தவள் என்று தெரிந்து கொண்டான் சுனில்... அந்தக் கிழவியிடம் இழப்பதற்குப் பேரனைத் தவிர வேறு எந்த உடைமைப் பொருளுமில்லை என்பதை அவன் அறிந்தபோது அவனுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. 'எப்படியாவது இவளுடைய பேரனைக் கண்டு பிடித்துத் தந்தாக வேண்டும்' — வெள்ளம் வரப்போவதை முன்கூட்டியே தெரிந்து

**"அதிசயக் கட்டம்"**

| | | | |
|---|---|---|---|
| 96 | 11 | 89 | 68 |
| 88 | 69 | 91 | 16 |
| 61 | 86 | 18 | 99 |
| 19 | 98 | 66 | 81 |

மேலேயுள்ள கட்டத்திலுள்ள எண்களைப் பக்க வாட்டிலோ, குறுக்காகவோ, மூலைக்கு மூலை யாகவோ கூட்டினுல் 264தான் வரும். அதிசயம் என்னவென்ருல், கட்டத்தைத் தலை கீழாக வைத்துக் கொண்டு எப்படிக் கூட்டி ருலும் அதே தொகைதான் வரும்!

— நங்கைநல்லூர் கி.சங்கர்

கொண்டு அவன் ஓடிப் போயிருக்கலாம்.. ஆனல் எங்கு?' — சீமாபுரிக்குப் போயிருக்க முடியாது. அங்கு நேற்று மாலையிலிருந்தே வெள்ளம்... அவன் எந்த வீட்டில் வேலை யாயிருந்தானே, அவர்கள் இன்று காலையி லிருந்து அவனைப் பார்க்கவில்லை என்று சொன்னதாகக் கிழவி கூறுகிருள்... பத்து பன்னிரண்டு வயதுப்பையன் தன்னைப் பாது காத்துக் கொள்ள முடியாமலேயே வெள் ளத்தில் மூழ்கிப் போயிருப்பானு?—

படகிலிருந்து கிழவியைக் கையைப் பிடித்துக் கீழே இறங்கச் செய்தான் சுனில். ஒரே கூட்டம். கிழவியின் பேரன் இந்தக் கூட்டத்தில் இருப்பானே?... இருந்தால் எப்படித் தேடுவது?—

'என்னுடைய அந்தச் சாமான் போய் விட்டது, இந்தச் சாமான் போய்விட்டது' என்று ஒரே கூச்சல், ஆரவாரம், எத்தனை அகதிகள்? 1947லும் இப்படித்தான் இருந் திருக்குமென்று பட்டது சுனிலுக்கு.

இந்தக் கிழவி தங்குவதற்கு, ஓர் ஏற்பாடு செய்து விட்டுப் பிறகு அவளுடைய பேரனைத் தேடிப் போகலாம் என்று அவன் தீர்மா னித்தான்... அங்கு நிறையக் கூடாரம் கட்டியிருந்தார்கள். ஓர் அதிகாரி இந்த ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

''இந்தக் கிழவியின் குடிசையை வெள்ளம் அடித்துக் கொண்டு போய்விட்டது... இவள் தங்குவதற்கு...'' என்று அவன் முடிப்பதற் குள் அவ்வதிகாரி குறுக்கிட்டார்: ''ரேஷன் கார்டு எங்கே?''

''குடிசை போய் விட்டதென்ருல் ரேஷன் கார்டைப் பற்றிக் கேட்கிறீர்களே?''

''ரேஷன் கார்டு உள்ளவர்களுக்குத்தான் கூடாரம் ஒதுக்க வேண்டுமென்பது உத் தரவு.''

''அப்படியானல் இந்தக் கிழவி எங்கே தங்குவாள்...? இவள் பேரனையும் காணும்.''

கிழவி அழ ஆரம்பித்து விட்டாள்...

''ஏ... கிழவி சும்மா இரு... உன் ரேஷன் கார்டு எங்கே?'' என்ருர் அதிகாரி.

கிழவி பதில் கூருமல் அழுது கொண்டிருந் தாள்.

திடீரென்று அங்கு காமிராவும் சகிதமு மாக ஒருவன் முளைத்தான்.

திடீரென்று மின்னிய ஃப்ளாஷ் பல்பின் காரணமாகக் கிழவியின் கண்கள் கூசின.

நாளைப் பத்திரிகையில் இப்புகைப் படத் தின் கீழே பிரசுரமாக இருக்கிற தலைப்பு சுனிலுக்குத் தெரிந்து விட்டது.. 'யமுனை யின் வெள்ளத்தினுல் விளைந்த கிழவியின் கண்ணீர் வெள்ளம்!... ஆண்டின் சிறந்த புகைப்படம்' என்ற விருதையும் இது பெறலாம்.... .காமிராக்காரன் போய் விட்டான்.

''இந்தக் கிழவிக்கு ஒரு வழி சொல் லுங்கள்'' என்ருன் சுனில் அந்த அதிகாரி யிடம்.

''இந்தக் கிழவி எங்கே இருக்கிருள்? மாடல் டவுனு?''

''இல்லை... சீமாபுரி.''

''அப்படியானல் இந்த இடத்தில் அவ ளுக்குக் கூடாரம் ஒதுக்கப்படவில்லை'' என்ருர் அதிகாரி.

''இந்தக் கிழவியின் பேரன் இருப்பது மாடல் டவுன்.''

''எங்கே அவன்?''

''பத்து வயதுப் பையன்... ஒரு வீட்டில் சமையல் வேலை செய்து கொண்டிருந்தான். அவனை இனிமேல் தேடிப் பிடித்தாக வேண் டும்.. இந்தக் கிழவி இங்கேயே இருக்கட்டும்., நான் அவனை, அந்தப் பையனைக் கண்டு பிடித்து...''

''சரி.. சரி... அதோ தூரத்திலிருக் கிறதே, அங்கு நாலாவது கூடாரத்துக்கு அழைத்துச் செல்லுங்கள். அங்கு ஏற்கனவே நாலைந்து குடும்பங்கள் இருக்கின்றன. இந்தாருங்கள் அனுமதிச்சீட்டு.''

இக்காட்சிகளை வேடிக்கை பார்க்கக் கார்களிலும் ஸ்கூட்டர்களிலும் பலபேர் வந்திருந்தார்கள். ஒரு திறந்த ஸ்போர்ட்ஸ் காரில் ஐந்தாறு பேர் உட்கார்ந்து கொண் டிருந்தார்கள். பெண்கள் ஐஸ்கிரீம் சாப் பிட்டுக் கொண்டிருந்தார்கள். ஆண்கள் 'பீர்' குடித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களில் இளைஞனுக இருந்த ஒருவன் சொன்னுன்: ''என்ன பரிதாபக் காட்சி!'' அவன், தம்ளரைக் காலி செய்து விட்டுப் பக்கத்திலிருந்தவனிடம் நீட்டினுன். தம்ளர் மறுபடியும் நிறைந்தது.

ஒருபெண் 'பாப் கார்னை'க் கொறித்துக் கொண்டே சொன்னுள்: ''இந்த மாதிரி வெள்ளம் வந்தால் தண்ணீரினுல் பல வியாதிகள் வரும் என்பார்களே, என்ன செய்ய?''

''வெளிநாட்டுக்காரர்கள் மாதிரி 'மினரல் வாட்டர்' குடிக்க வேண்டியதுதான்...''

''அது 'பீரை'க் காட்டிலும் விலை ஜாஸ்தி.''

''விலைவாசிகள் இப்படி ஏறிக் கொண்டே போகிறதே, இதை அரசாங்கம் கட்டுப் படுத்தாமல்...''

இதற்குள் அங்கு ஒரு சலசலப்பு ஏற் பட்டது. போலீஸ்காரர்கள் திடீரென்று இயங்கத் தொடங்கினார்கள்.

சுனில் கிழவியை ஓரமாக அழைத்துச் சென்று, போலீஸ்காரர்களின் இந்தத்திடீர் சுறுசுறுப்புக்கு என்ன காரணம் என்று யோசித்துக் கொண்டு நின்றான்.

காரணம் புரிந்தது.

அமைச்சர் ஒருவர் திறந்த ஜீப்பில் வந்து கொண்டிருந்தார்.

சுனில் நின்று கொண்டிருந்த இடத்தி னருகே 'ஜீப்' வந்து நின்றது. அமைச்சரும் அதிகாரிகளும் கீழே இறங்கினார்கள்.

அமைச்சரின் முகம் கவலையில் ஆழ்ந் திருந்தது. அவர் பார்வை கிழவியிடம் லயித்தது. அவர் கிழவியை நோக்கிச் சென்றார்.

''மாதாஜி... நீங்கள் இப்படிக் கஷ்டப் படுவதைப் பார்க்கும் போது...''

கிழவி அவ்வமைச்சரை ஒன்றும் புரி யாமல் விழித்துப் பார்த்தாள்.

அமைச்சர் அக்கிழவியின் கைகளைப் பற்றிக் கொண்டார்.

'கிளிக்'.... காமிராக்கள் இயங்கின.

''இக்கிழவிக்கு ஒரே ஆதரவாக இருந்த அவளுடைய பேரனைக் காணவில்லையாம்...'' என்றான் சுனில் அமைச்சரிடம்.

அவன் சொன்னது அமைச்சரின் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவர் புகைப் படங்கள் எடுக்கப்பட்டு விட்டன என்று உறுதி செய்து கொண்ட பிறகு, மேலே நடந்து சென்றார்.

''யார் இவர்?'' என்று கேட்டாள் கிழவி.

''மேலே வாருங்கள். போகலாம்...'' என்றான் சுனில்.

''எங்கே?... என் பேரனைத் தேடித் தருவ தாகச் சொல்லிவிட்டு என்னை எங்கே அழைத்துச் செல்கிறாய்?''

''நீங்கள் அகதி முகாமில் இருங்கள். நான் உங்கள் பேரனை எப்படியாவது...''

''நான் எங்கும் போவதாக இல்லை.... எனக்கு என் பேரன் வேண்டும்.''

கிழவி அந்த இடத்திலேயே ஆணி அடித்தாற் போல் நின்று விட்டாள்.

அப்பொழுது சில போலீஸ்காரர்கள் வேகமாகக் கிழக்குப் பக்கமாக ஓடினார்கள்..

என்ன ஆகிவிட்டது?—

சுனில் அவர்கள் ஓடிய திசைப் பக்கமாக உற்றுப் பார்த்தான்.

இதற்குள் அவன் அருகில் வந்து கொண் டிருந்த அகதிகள்பலர் போலீஸ்காரர்கள் ஓடிச் சென்ற திசையில் தலைதெறிக்க விரைந்து போகத் தொடங்கினார்கள்.

அங்கு என்ன ஆரவாரம்?... அமைச்ச ருக்கு ஏதாவது ஆபத்தா? மக்கள் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் ஏதாவது செய்து விட்டார்களா!

''மாதாஜி... இங்கேயே இருங்கள்... இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விட்டேன்.''

சுனில் குழப்பம் ஏற்பட்ட இடம் நோக்கிச் சென்றான்.

விஷயம் புரிந்தது.

எதிர்க் கட்சிக்காரர்கள் சார்பில் அகதி களுக்குத் துணி மணி வழங்க, ஒரு 'வான்' அங்கு வந்திருக்கிறது. அக்கட்சியின் கொடி, 'வானி'ல் பறந்து கொண்டிருந்தது. எதிர்க் கட்சித் தலைவரின் புகைப்படம் வேறு...

அகதிகள் துணிமணியை 'நான், நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு வாங்கத் தொடங்கியிருக்கின்றனர். அவர்கள் அவ்வாறு பெற்றுக் கொள்வதற்கு முன்னால், ஒரு நிபந்தனை... எதிர்க்கட்சித் தலைவருக்கு 'ஜே' போட வேண்டும். அந்தப் பக்கமாக அமைச்சர் வந்து கொண்டிருப்பதைப் பார்த் ததும், போலீஸ்காரர்கள் 'வானை'த் திருப்பி அனுப்ப முற்பட்டிருக்கிறார்கள்... பூசலுக்கு இதுதான் காரணம்.

இதற்குள் அமைச்சர் அந்த இடத்தருகே வந்து விட்டார்.. போலீஸ் அதிகாரிகள் அவர் காதில் ஏதோ கிசுகிசுத்தார்கள்.





தீபாவளியின்
வண்ணங்களையும்
மகிழ்ச்சியையும்
தாங்கி
வெளிவருகிறது

தனிப் பிரதி விலை ரூ. 15/-

இந்தியாவில் தபால்
செலவு உள்பட ரூ. 18-50

இலங்கையில்
(இந்திய நாணயப்படி)
தபால் செலவு உள்பட
ரூ. 20-00

இதர வெளி நாடுகளில்
(இந்திய நாணயப்படி)
தபால் செலவு உள்பட
ரூ. 25-00

1978

●●●●●●●●●●



'கிழக்கே போகும் ரயில்' திரைப்படம் சமீபத்தில் பார்த்தேன்.

பரஞ்சோதியின் தங்கை கன்னியம்மாவின் திருமணவிழா. பட்டாளத்தார் 'மொய்' எழுதுபவர்களின் பெயரை மைக்கில் அறிவித்துக் கொண்டிருக்கிறார். அதில், ''பெட்டிக் கடை 'மயிலு' புருஷன் 'சப்பாணி' பெண்ணுக்கு ஐந்து ரூபாய்'' என்று அறிவிப்புச் செய்கிறார் பட்டாளத்தார்.

'16 வயதினிலே' படத்தின் இறுதியில் ''சப்பாணி நிச்சயமாகத் திரும்பி வருவான்; மயிலின் வாழ்க்கை மலரும்'' என்று காட்டினார்கள். அவர்களது இரண்டாவது தயாரிப்பான 'ரயில்' படத்தில் சப்பாணியை விடுதலை ஆனவனாக — மயிலின் கணவனாக அறிவித்து விட்டார் டைரக்டர். — சக்திநாயனார்.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

சுனில் தன்னை ஒரு 'ஹீரோ'வாக எப்பொழுதும் நினைத்துக் கொண்டதில்லை. ஆனால் இச்சூழ்நிலையில் அமைச்சரை நெருங்கி மனம் திறந்து பேசுவது நியாயந்தான் என்று அவனுக்குப் பட்டது.

''துணி மணிகள் கொடுக்கின்றவர்கள் எதிர்க் கட்சிக்காரர்களாக இருக்கலாம்... கொடுப்பதில் அரசியலிருந்தாலும், பெற்றுக் கொள்கின்றவர்களைப் பொறுத்த வரையில் என்ன அரசியல் இருக்கிறது? போலீஸ் எதற்காக இதைத் தடை செய்ய வேண்டும்?''

அமைச்சர் அவனைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். முகத்தில் புன்னகையின் கீறு படிந்தது. ''வானில்' கட்சிக் கொடி பறக்கின்றதே, இது அவசியந்தானா?... கட்சித் தலைவரின் புகைப்படம் மாட்டியிருக்கிறதே, இது அவசியந்தானா?''

''நான்தான் சொன்னேனே, கொடுப்பதில் அரசியல் இருக்கலாம்... ஆனால்...''

''கொடுப்பதைப் புனரமைப்பு நிர்வாகிகளிடம் கொடுக்கட்டுமே... எதற்காக இங்கு வந்து கூட்டத்தில் சலசலப்பை உண்டாக்கிக் கொண்டு கொடுக்க வேண்டும்..?''

''புனரமைப்பு அதிகாரிகளிடம் கொடுத்தால், இன்னார் கொடுத்தார்கள் என்று இவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது?'' என்றான் 'வானில்' வந்து துணிகளை வழங்கிய வள்ளல்.

''இன்னார் கொடுத்தார்கள் என்பது முக்கியமா அல்லது இவர்கள் உதவி பெற வேண்டியது முக்கியமா?'' என்று கேட்டான் அமைச்சருடன் வந்த ஒருவன்.

''நீங்கள் அந்தக் கிழவியைப் பரிவுடன் கையைப் பிடித்துக் கொண்டு விசாரிக்கும் போது புகைப்படம் எடுத்தார்களே, அது முக்கியமா?'' என்று கோபத்துடன் வினவினான் 'வானி'ல் வந்த இன்னொருவன்.

போலீஸ்காரர் ஒருவர் அவனை நெருங்கினார். அமைச்சர் கையமர்த்திப் போலீஸ்காரரை மேலே செல்ல விடாமல் தடுத்தார்.

''அவர்களுக்குப் பேச்சுரிமை இருக்கிறது. அதை நாம் தடுக்க வேண்டாம். அவர்களுடைய தலைவருக்கு 'ஜே' போட்டால் தான் இந்த அகதிகளுக்குத் துணிகள் வழங்க வேண்டும் என்பது அவர்களுக்கிடப்பட்ட உத்தரவாயிருந்தால், இவ்வேழை மக்கள் யார் அவர்களுக்கு அனுகூலமாக இருக்கிறார்கள், யார் இல்லை என்று தாங்களாகவே தெரிந்து கொள்ளட்டும்'' என்றார்.

'''ஜே' போட்டுத்தான் உரிமைகளை இம்மக்கள் பெற வேண்டுமென்றால் நாமடைந்த சுதந்திரத்தைப் பற்றி நாமே பெருமைப்பட வேண்டியதுதான்'' என்றான் சுனில்.

''நீங்கள் யார் பக்கம் பேசுகின்றீர்கள்?'' என்றான் 'வானி'ல் வந்தவன்.

''நான் உங்கள் இருவருடைய பக்கம் நிச்சயமாக இல்லை.... அதோ, இங்கிருந்து ஒரு ஃபர்லாங் தூரத்தில் சத்தியத்தைப் புதைத்திருக்கிறீர்களே, அச்சத்தியத்தின் பலஹீனமான குரல்தான் என்மூலம் ஒலிக்கிறது... அரசியல் விளம்பரத்தின் பயங்கரக் கூச்சலில் இக்குரல் உங்களுக்குக் கேட்காமலேயே போகலாம்'' என்று கூறினான் சுனில்.

அப்பொழுது ஓர் அதிகாரி வேகமாக வந்து அமைச்சர் காதில் ஏதோ சொன்னார்... அமைச்சர் விரைவாக ஜீப்பை நோக்கி நடந்தார்.

ஒலிபெருக்கி மூலம் ஒரு குரல் அச்சமயம் கேட்டது. ''இன்னொரு மதகு உடைந்து விட்டது... வெள்ளம் பெருக்கெடுத்து இத்திசை நோக்கிப் பாய்ந்து வருகின்றது... இந்த இடத்தை உடனே காலி செய்யுங்கள்.''

மக்கள் தலைதெறிக்க ஓடத் தொடங்கினார்கள். 'வானி'ல் வந்தவர்கள் 'வானை' நோக்கிப் பாய்ந்தார்கள்.

ஒருவரையொருவர் தள்ளிக் கொண்டு ஓடுவதைப் பார்த்ததும் சுனிலுக்குக் கிழவியின் நினைவு வந்தது. அவனும் ஓடினான்.

ஆனால் அவன் அந்த இடத்தை அடைவதற்குள் அவன் பயந்தது நடந்து விட்டது.

கிழவி கீழே விழுந்து கிடந்தாள்.

சுனில் அவளையே பார்த்துக் கொண்டு சிறிது நேரம் நின்றான்.

வேடிக்கை பார்க்க வந்தவர்கள், ஸ்கூட்டர்களிலும், கார்களிலும் விரைந்தார்கள். கீழே எங்கு பார்த்தாலும் ஐஸ்கிரீம் கோப்பைகள், காலியான 'பாப்கார்ன்' பொட்டலங்கள், 'பீர்' பாட்டில்கள்...

சுனில் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் வெள்ளம் பெருகி வருவது தெரிந்தது.

தண்ணீர்ப் பிரவாகம் ராஜ்காட்டைப் பிரதட்சணம் செய்து கொண்டு வருவது அவனுக்கு ஆச்சர்யமாக இல்லை....!

காலையில் உடற்பயிற்சியும், கிட்டத்தட்ட அதே கால அளவில் மாலையில் நெட் பிராக்டீசும் முதல் இரண்டு தினங்கள் நடந்தன.

நெட் பிராக்டீஸ் ஏனோ தானோதான்! பலம் வாய்ந்த அணிக்கு எதிராக நம்மைத் தயார் செய்து கொள்கிறோம் என்கிற நினைப்பே இருந்ததாகத் தெரியவில்லை.

விஸ்வநாத் நன்றாக போலிங் பிராக்டீஸ் செய்தார். ராஜிந்தர் சிங் ஹன்ஸ் டர்பனுடனும் தாடியுடனும் ஏதோ போலிங் போட்டுக் கொண்டு இருந்தார். பிரிஜேஷ் பட்டேல் சற்று இளைத்தது போல் காணப்பட்டார். அழகான மீசையுடன் சௌஹான் இங்கும் அங்கும் நடந்து கொண்டிருந்தார்.

வேகப்பந்து வீச்சுக்குப் பயிற்சி பெறாமல் பேட்ஸ்மென்கள் போடும் போலிங்கிற்கு பவுண்டரி லைனுக்குக்கூடத் தாண்டாத அளவுக்கு ஆகாசத்தில் தூக்கி அடிப்பது என்ன பிராக்டீசோ?

சும்மா சொல்லிவிடக் கூடாது. மாலை நெட் பிராக்டீஸின் போது திரு மான் சிங் ஜம்மென்று உட்கார்ந்து கொண்டு இந்த இரண்டு தினங்களிலும் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தார்.

அது போகட்டும், நம்மிடம்தான் சரியான ஃபாஸ்ட் பௌலர்கள் இல்லை. ஆனால் நாம் பாகிஸ்தானில் இம்ரான் கான், சஃப்ரஸ் நவாஸ் ஆகியவர்களின் அதிவிரைவுப் பந்துகளைச் சந்தித்தாக வேண்டுமே, இம்மாதிரிப் பயிற்சி முகாம் சமயங்களில் பயிற்சி அளிப்பதற்காகவாவது இரண்டு அயல் நாட்டுத் தீவிர பந்து வீச்சுக் காரர்களை ஊதியம் கொடுத்துத் தாற்காலிகமாக வரவழைக்க முயன்றிருக்கக் கூடாதா? ஒன்றரை லட்சம் செலவழிப்பது பெரிய விஷயமல்ல. அதனால் எந்த அளவு நம் கிரிக்கெட் பயன் அடைகிறது என்று பார்க்க வேண்டாமா?

இதற்கெல்லாம் சிகரம் வைப்பது போல் இந்திய கிரிகெட் போர்ட் இந்திய அணியில் பங்கேற்கும் ஆட்டக்காரர்கள் மீது திணித்துள்ள கட்டுப்பாடுகள் திகைக்க வைக்கிறது.

ரேடியோ, டெலிவிஷன், பத்திரிகைகள் போன்ற வெகுஜனத் தொடர்பு சாதனங்களுக்கு பாகிஸ்தான் டூர் சம்பந்தமாக டூர் முடிந்து ஆறுமாதங்களுக்குப் பேட்டியளிப்பதற்கோ, எழுதுவதற்கோ தடை விதிக்கப் பட்டிருக்கிறது.

இம்மாதிரி சுமார் ஆறு பக்கங்களை நிரப்பியுள்ள கடினமான கட்டுப்பாடுகளை இந்திய கிரிக்கெட் போர்ட் ஆட்டக்காரர்கள் மீது திணித்துள்ளது.

விளையாட்டுக்காக ஆட்டக்காரர்களும், ஆட்டக் காரர்களை நிர்வகிப்பதற்காக அதிகாரிகளும் இருக்க வேண்டுமே தவிர, அதிகாரிகளின் அதிகாரங்களைக் காட்டுவதற்காக ஆட்டக் காரர்களும், ஆட்டக் காரர்களின் சௌகரியத்திற்காக ஆட்டமும் இருக்கும் நிலையைப் பார்த்தால் இந்திய கிரிக்கெட்டின் எதிர்காலம் பற்றிக் கவலையாகத்தான் இருக்கிறது.

—பி. ரங்காநாயகி

# கிரிக்கெட் கற்கலாம்! 3

கோச்: கே. சந்திரசேகர் படம்: ராஜு

விக்கெட் கீப்பருக்கு விரைவான உடல் அசைவுகளும், கூர்ந்த நோக்கும் அவசியம்.















தயாரிப்பு: குண்டுமணி

இறைமுடி மணி அவர்களைத் தம்முடைய புதுக்கடைக்கு வரவேற்று உட்கார வைத்துச் சந்தனம் கல்கண்டு கொடுத்தார். சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு அவர்கள் புறப்படுவதற்குமுன், ''கொஞ்சம் இப்பிடி. வர்றியா விசுவேசு வரன்? உங்கிட்ட ஒரு நிமிஷம் தனியாப் பேசணும்'' — என்று சர்மாவைக் கூப்பிட்டார் இறைமுடிமணி. சர்மா எழுந்திருந்து இறைமுடி மணியோடு சென்றார்.

கடைக்கு வலது பக்கம் காலியாயிருந்த புல்தரையில் நின்று கொண்டு இருவரும் பேசினார்கள்.

''அகமத் அலி பாய்க்கு நீ இந்த இடத்தை விடலேங்கிற கோபத்திலே அந்தச் சீமாவையன் ஊர் பூராத் துஷ் பிரசாரம் பண்ணியிருக்கான். நான் ஏதோ அக்கிரகாரத்து வாசிகளைச் சண்டைக்கு இழுக்கறதுக்காகத்தான், இங்கே கடை போட்டிருக்கேனும். என் கடையிலே அக்கிரகாரத்து ஆளுங்க யாரும் சாமான் செட்டு வாங்கப் படாதுன்னு வேற இந்த ஊர் பூராப் பிரச்சாரம் பண்ணியிருக்கான் அந்த ஆளு. நான் நல்லவனுக்கு நல்லவன். பொல்லாதவனுக்குப் பொல்லாதவன். வியாபாரத்துக்காகக் கொள்கையைக் காத்திலே பறக்க விடற ஆளு நான் இல்லே. அதே சமயத்திலே கடைக்கு வியாபாரத்துக்கு வர்றவங்க தலைமேலே எல்லாம் அரிப்பெடுத்துப் போய் வலிந்து என் கொள்கையைத் திணிக்கிறவனும் இல்லே. வியாபாரத்தை எப்பிடி நியாயமா வளர்க்கணும்கிறது எனக்குத் தெரியும். ஆயிரம் சீமாவையரு வந்தாலும் என்னை ஒண்ணும் பண்ணிடமுடியாது.''—

''அதெல்லாம் சரிதான் தேசிகாமணி! உன் உரிமையிலே நான் தலையிடறேன்னு தப்பா நினைச்சுக்காதே. இந்த இடமோ மடத்துக்குச் சொந்தம். சூழ்நிலையோ முழுக்க முழுக்கத் தெய்வ பக்தியுள்ள மனுஷாளுது. இங்கே நடத்தப் போற ஒரு பல சரக்குக் கடைக்கு இந்தப் பேரு, இந்தப் படம், எல்லாம் ஒரு விதத்திலே பெரிய எடைஞ்சலா இருக்கும்னு படலியா உனக்கு?''

''இடைஞ்சலா இருந்தா இருக்கட்டும்ப்பா! அதுக்காக ஒவ்வொரு இடத்துலே நடத்தற கடைக்கும் ஒவ்வொரு வேஷம் போடற ஆளு நான் இல்லே. வியாபார நஷ்டத்தை விடக் கொள்கை நஷ்டத்தைப் பெரிசா மதிக்கிறவன் நான்...'' — ஆவேசமாக இதைச் சொன்னார் இறைமுடிமணி.

இறைமுடி மணியின் அந்த ஒருமைப்பாடு கள்ளங் கபடமில்லாத கொள்கைப் பிடிவாதம் எல்லாமே சர்மாவுக்குப் பிடித்திருந்தாலும் சீமாவையரின் எதிர்ப்பில் சில கலகங்கள் இன்றோ நாளையோ அங்கே விளையக் கூடும் என்றே எதிர் பார்த்தார் அவர்.

நா. பார்த்தசாரதி



''நீ சொல்றது நியாயம் தான் தேசிகாமணி! உன் கொள்கையை, நீ விரும்பற படத்தை, உன்னோட வியாபார ஸ்தலத்திலே நீ வச்சுக்கறது எந்த விதத்திலேயும் தப்பில்லே. சீமாவையர் பண்ற வம்பைப் பத்தி நீ எங்கிட்டச் சொல்ல வந்ததாலே உன் சிநேகிதன்கிற முறையிலே உனக்கு என் யோசனையைச் சொன்னேன். அவ்வளவுதான். உன்னை நான் எதுவும் வற்புறுத்தறதா நீ நெனைச்சுக்க வேண்டாம். நீ இஷ்டப்படறபடி உன் கடையை நடத்த உனக்கு உரிமை இருக்கு.''—

''என்ன நடந்துக்கிட்டிருக்குங்கிறதை உங்கிட்டச் சொல்லிடணும்னுதான் இதைச் சொன்னேன்''—என்று கூறி அந்த உரையாடலுக்கு அதோடு முற்றுப் புள்ளி வைத்தார் இறைமுடிமணி. அப்போது அவரைப் போலவே கருஞ் சட்டை அணிந்த நண்பர்கள் நாலைந்து பேர் கடைக்கு வரவே அவர்



மனைவி: ஏனுங்க இவ்வளவு பெரிய டம்ளர்!

கணவன்: என் நண்பன் கொடுத்தது. அவன் வரும் போதெல்லாம் சின்ன டம்ளரில் காப்பி கொடுக்கிறாயாம். அதனால் இதை அன்பளிப்பாகக் கொடுத்தான்.

கோவி.பரஞ்ஜோதி.

---

களை வரவேற்றுப் பேசி உபசரித்து அனுப்பி விட்டு மறுபடியும் இறைமுடிமணி சர்மா நின்றுகொண்டிருந்த புல்தரைக்குத் திரும்பி வந்தார்.

''நீ மட்டும் வந்து தலையைக் காட்டிட்டுப் போயிடாமத் தம்பியையும், இந்தப் பிரெஞ்சுப் பெண்ணையும் உன்கூடக் கூட்டி யாந்ததுலே எனக்கு ரொம்ப மகிழ்ச்சி விசுவேசுவரன்! நானே கண்டிப்பா எல்லாரும் வரணும்னுதான் நேரே வந்து சொல்லிப் போட்டு வந்தேன்.''—

சிறிது நேர மௌனத்துக்குப் பின் சீமாவையர் தம்மிடம் நேருக்கு நேர் கூப்பாடு போட்டு மிரட்டியதைப் பற்றி இறைமுடிமணியிடம் கூறினார் சர்மா. ''அட அவன் கிடக்கிறான். விட்டுத் தள்ளுப்பா... அந்த ஆளுக்கு அழிவு காலம் வந்திரிச்சுன்னுதான் நினைக்கிறேன்...'' — என்று வெறுப்போடு பதில் வந்தது இறைமுடி மணியிடமிருந்து.

சர்மா, ரவி, கமலி, எல்லாரும் இறைமுடி மணியிடம் சொல்லி விடைபெற்றுக் கொண்டு புறப்பட இருக்கையில் தற்செயலாகக் கடையின் பெஞ்சில் ஒரு மூலையில் அடுக்கியிருந்த புத்தகங்களை எடுத்துப் புரட்டினான் ரவி.

1. ஆதி சங்கரரும் அவரது தத்துவங்களும்—
பிரும்மஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி எழுதியது.

2. ''போதாயனீயமும் பாஞ்சராத்ர வைகானஸ வழிபாட்டு முறைகளும்''—
உபயவேதாந்தி ஸ்ரீவைஷ்ணவ சண்டமாருதம் – பிரதிவாதி பயங்கரம். கோளூர் கோபாலாச்சார்யார் எழுதியது.

3. அண்ட கோள விருத்தி –மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைப் பிரதம ஆசிரியர் ஸ்ரீ. உ. வே. திருநாராயணய்யங்கார் சுவாமிகள் இயற்றியது.

என்று மூன்று புத்தகங்கள் அடுக்கடுக்காக இருந்தன.

''என்ன தம்பீ? அப்பிடிப் பார்க்கிறீங்க? நம்பளுதுதான்; படிக்கிறதுக்காக எடுத்து வச்சிருக்கேன்'' — என்று அர்த்த புஷ்டியோடு சிரித்துக் கொண்டே ரவியிடம் சொன்னார் இறைமுடிமணி.

''ஒண்ணுமில்லே... சும்மா பார்த்தேன்'' —என்று கூறிவிட்டுப் புறப்பட்டான் ரவி. தெருமுனை திரும்பியதும் தந்தையிடம் கேட்டான் அவன்:

''இதெல்லாம் ராகு காலத்திலே புதுக் கடை தொடங்கற ஒருத்தர், படிக்கிற புஸ்தகங்களான்னு நெனைக்கறப்போ ரொம்ப ஆச்சரியமாத்தான் இருக்குப்பா?...''

''இதிலே ஆச்சரியமென்ன? எல்லா விஷயங்களையும் வெறுப்பில்லாமத் தெரிஞ்சுக்கணும்கிற சுத்தமான ஞானவேட்கை அவனுக்கு உண்டு. அவனுடை இந்த முரண்பாடுகளுக்கு நடுவேயும் ஒரு முழுமை இருக்கு.''

''அவை ரொம்பவும் ரம்யமான முரண்பாடுகளா இருக்குப்பா! இவரையும் நினைச்சுட்டுத் தெருத் திண்ணையிலே ஊர்ச் சோம்பேறிகளோட சீட்டாடீண்டே புகையிலையைக் குதப்பித் துப்பிண்டு இருக்கிற சீமாவையரையும் நினைச்சா, ஞானவேட்கைக்கும் ஜாதிக்கும் சம்பந்தமே இல்லேன்னு கூடத் தோண்றதே? இல்லியா?'' — ரவி கேட்டான். சர்மா அதற்கு அப்போது உடனே பதில் எதுவும் சொல்லவில்லை.

ரவியின் வினாவுக்குத் தந்தை பதில் சொல்லா விட்டாலும் அந்த வினாவைப் பற்றி அவர் சிந்திக்கிறார் என்பதே அவனுக்குத் திருப்தியாக இருந்தது. அதை உடனே அவர் பதில் சொல்லி மறுப்பார் என்று அவன் எதிர்பார்த்தது நடக்கவில்லை.

**அ**வர்கள் மூவரும் வீடு திரும்பியதுமே சீமாவையரின் துஷ்பிரசார வலிமை சர்மாவுக்குத் தெரியும்படியான நிகழ்ச்சி ஒன்று நடந்தது. ரவியும், கமலியும், சர்மாவும் வீட்டுப் படியேறி உள்ளே நுழைந்தபோதே திண்ணையில் அக்ரஹாரத்தின் மூன்று தெருக்களையும் சேர்ந்த பிரமுகர்கள் சிலர் சர்மாவை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். சர்மா அப்படியே அவர்களை வரவேற்று முகமன் வார்த்தைகள் கூறி அவர்களோடு திண்ணையில் அமர்ந்து கொண்டார். ரவியும் கமலியும் அவர்களுக்கு ஊடே நடந்து அவர்களைக் கடந்துதான் வீட்டுக்குள்ளேயே செல்ல வேண்டியிருந்தது அப்போது.

வந்திருந்தவர்களின் முகங்களை ஒவ்வொருவராகப் பார்த்த போதே சர்மாவால் அவர்கள் எதற்கு வந்திருக்கக்கூடும் என்பதைச் சுலபமாகவே அனுமானிக்க முடிந்தது.

பஜனை மடம் பத்மநாபஐயர், வேததர்ம சபைக் காரியதரிசி ஹரிஹர கனபாடிகள், கர்ணம் மாத்ருபூதம், மிராசுதார் சுவாமிநாதன் ஆகியோர் வந்திருந்தார்கள். ஹரிஹர கனபாடிகள்தான் ஆரம்பித்தார்:

''எப்போ அது பொதுச் சொத்துன்னு ஆச்சோ, அப்போ நீர் ஸ்ரீமடத்துக்கு வேண்டியவா நாலு பேரைக் கலந்து பேசி — அக்ரஹாரத்து மனுஷாளே யாராவது கடைகிடை வச்சுப் பராமரிக்கத் தயாரா இருக்காளா, இல்லியான்னு முதல்லே தெரிஞ்சுண்டு அப்புறம் வெளியிலே வாடகைக்கு விட வேண்டாமோ?''—

சர்மா பொறுமையாக இதற்குச் சமாதானம் சொன்னார். ஆனால் யாரும் அதை ஏற்கவில்லை.

''ஒரு டெண்டர் நோட்டீஸ் ஒட்டி ஏலம் போட்டு இன்னும் அதிக வாடகைக்கு விட்டி

ருக்கலாம். தெய்வ பக்தியில்லாத மனுஷாளுக்கு விட்டிருக்க வேண்டாம்'' என்றார் பஜனை மடம் பத்மநாபன்.

''ஸ்ரீமடத்திலே எழுதிக் கேட்டதுக்கு மனுஷா யாராயிருந்தாலும் பரவாயில்லே. வாடகை ஒழுங்காக் குடுக்கற யோக்கியமான பார்ட்டிக்கு விடலாம்னு பதில் வந்தது. அதான் விட்டேன்.''—

''இத்தனை பெரிய ஊர்ல அந்தச் சுருமாணுக் காரன்தான் யோக்கியமானவனு உமக்குக் கிடைக்கணுமோ?''

''ஒருத்தர் யாரு என்கிறதை விட எப்படிப் பட்டவர்ங்கிறது தான் ரொம்ப முக்கியம்.''

''அதையேதான் உம்மைத் திருப்பிக் கேக்கறோம்! எப்படிப் பட்டவர்னு தெரிஞ்சு தான் அவனுக்கு எடத்தை விட்டீரா?''

விவாதம் வளர்ந்தது. அவர்கள் அனைவரும் சீமாவையரால் தூண்டி விடப்பட்டுப் புறப்பட்டு வந்திருக்கிறார்கள் என்பது தெளிவாகவே தெரிந்தது. போகிறபோது சர்மாவைக் கடுமையான வார்த்தைகளால் கண்டித்து விட்டு எழுந்திருந்து போனார்கள் அவர்கள்.

அன்று பிற்பகலில் சர்மா ஏதோ காரியமாகப் பூமிநாதபுரம் புறப்பட்டுப் போயிருந்தார். வசந்தி வந்திருந்தாள். ஒரு வாரத்தில் தான் பம்பாய் போக வேண்டியிருக்கும் என்று அவள் தெரிவிக்கவே கமலி அவளிடம் சில யோசனைகள் கேட்டாள். கமலிக்கு யோசனைகள் கூறியதோடு காமாட்சி மாமி கட்டிக் கொள்கிற மாதிரிப் புடைவை கட்டிக்கொள்வது எப்படி என்று அவளே வற்புறுத்திக் கேட்கவே அதையும் அவளுக்குக் கற்றுக் கொடுத்தாள் வசந்தி.

அப்போது ரவி எங்கோ வெளியே போயிருந்தான். ஆகவே மனம் விட்டுப் பேசிக் கொள்ள அவர்களுக்கு வசதியாயிருந்தது. சர்மாவின் குடும்பத்தைப் போன்ற மிகவும் வைதீகமான குடும்பங்கள் பழக்க வழக்கங்கள் — நடை முறைகள், பற்றிப் புத்தகங்களில் படித்தும் ரவியிடம் கேட்டும் கமலி நிறைய அறிந்திருந்தும், சில நுணுக்கமான சந்தேகங்கள் அவளுக்கு இன்னுமிருந்தன. அப்படிப் பட்டவற்றை அவள் வசந்தியிடம் இப்போது கேட்டறிந்தாள். அதில் ஒன்று மிகவும் நாசூக்கானது. வசந்தி அதற்குத் தெளிவாகவே பதில் சொன்னாள். கமலியை முன்னெச்சரிக்கை செய்தும் வைத்தாள்.

''அப்படி நாட்களில் இந்த வீட்டு வழக்கப்படி பின்னால் கொல்லைப் பக்கம் தனி அறை ஒண்ணு இருக்கு. அதிலே போய் இருந்துக்க வேண்டியதுதான். நிறையப் புஸ்தகம் எடுத்து வச்சுக்கோ. படி. குளிக்கிற நாள் வரவரை ஜெயில் மாதிரித்தான்னு வச்சுக் கோயேன்.''

தான் காமாட்சியம்மாளுக்குத் திருப்தியாக நடந்து கொள்ள வேண்டுமென்பதற்காக ஒவ்வொன்றாய்த் தூண்டித் தூண்டி விசாரித்து அறிந்து கொண்டாள் கமலி. தான் அந்தி விளக்கு ஏற்றியதனால் காமாட்சியம்மாள் செய்த சிறுபூசல், ரவியின் தந்தை தன்னிடம், 'ஒரு வருஷத்துக்கு மேல் இந்த வீட்டிலே இருக்க உனக்கு



டாக்டர்: உங்க உடம்புக்கு ஏதாவது விளையாட ணும்னு சொன்ன சீட்டு விளையாடினேன்னு சொல்றீங்களேய்யா!
—விசு.

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

வசதிப்படுமா' என்று தன்னைக் கேட்டது எல்லாவற்றையும் வசந்தியிடம் மனம் விட்டுச் சொல்லிய பின்பே ஒவ்வொன்றாக யோசனை கேட்டிருந்தாள் கமலி.

''ரொம்பச் <u>சிரமமா</u> இருந்தா எங்க வீட்டு மாடிக்குப் போயிடு. நான் அப்பாட்டச் சொல்லிட்டுப் போறேன்'' என்று வசந்தி கூறியதற்குக் கமலி ஒப்புக் கொள்ளவில்லை.

''பார்க்கலாம், அதற்கு அவசியம்நேராது வசந்தி!'' என்றாள் கமலி. புத்தகத்தில் படித்துத் தெரிந்து கொண்டிருப்பதைத் தவிரப் பூஜை, புனஸ்காரங்கள் பற்றியும் வசந்தியிடம் நிறையக் கேட்டறிந்து கொண்டாள் கமலி.

''நீ கொல்லைப் பக்கத்து அறையில் போய் உட்கார்ரப்போ பாருவை வேணும்னு ஸ்கூலுக்குப் லீவு போடச் சொல்லி உனக்குத் துணைக்கு வச்சுக்கோ. பல்லாங் குழி சோழி எல்லாம் ஆடலாம்'' என்று சிரித்தபடி கூறினாள் வசந்தி.

''துணை எதற்கு? எனக்கென்ன பயமா?'' என்று கேட்டாள் கமலி. அவள் விரும்பியபடி அன்று முன்னிரவில் அவளைப் பூமிநாத புரத்திலிருந்த பெரிய சிவன் கோயிலுக்கு அழைத்துப் போனாள் வசந்தி. கையில் தேங்காய், பழம், பூ, ஊதுவத்தி அடங்கிய பூஜைக் கூடையுடன் வெள்ளைக்காரி ஒருத்தி புடைவையும் குங்குமத் திலகமுமாகக் கோவிலுக்கு வந்ததைப் பெரிய அதிசயமாகப் பார்த்தார்கள் சங்கரமங்கலம், பூமிநாத புரம் கிராமத்து மக்கள். கோவிலிலிருந்த சிற்பங்களை அவற்றின் திருவிளையாடல் கதைக் குறிப்புக்களை எல்லாம், வசந்தி கமலிக்கு விளக்கிக் கூறினாள்.

வசந்தியோடு கர்ப்பக் கிருகத்துக்கு நெருக்கமாக ஆலயத்திற்குள் சென்று சர்மாவின் குடும்ப க்ஷேமத்துக்காக என்று அர்ச்சனையும் செய்து வழிபட்டுப் பிரசாதம் வாங்கிக் கொண்டு திரும்பினாள் கமலி.

பூமிநாதபுரம் சிவன் கோவிலும் அதன் அழகும் அமைதியும், ஆயிரங்கால் மண்டப முகப்பிலிருந்த சிற்பங்களும் கமலிக்கு மிக மிகப் பிடித்திருந்தன.

(தொடரும்)

# நிஜ வாழ்க்கையில் நடிக்கலாமா? — பி.பானுமதி

நடிப்பு என்பது ஒரு வரப்பிரசாதம். இக்கலை ஒரு மனிதனின் உணர்வுகளுள் ஊறிப் போயிருப்பது ரொம்பவும் அபூர்வம். நிஜ வாழ்க்கைக்கும் நடிப்புக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நிஜ வாழ்க்கையில் யதார்த்தமாக நடப்பனவற்றைத்தான் திரையில் நடித்துக் காட்டுகிறோம். அப்பொழுது அதில் விசேஷ கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

எத்தனை வகை உணர்ச்சிகள் உண்டோ அத்தனையையும் நடிப்பில் ஏற்றிக் காட்ட வேண்டியிருக்கிறது. அப்பொழுதுதான் அது நடிப்பாகிறது.

நிஜ வாழ்க்கையில் நிகழும் கோபம், சோகம், மகிழ்ச்சி போன்ற உணர்வுகள் நடிப்புக்குப் பயன்படாது என்பது என் அனுபவம். வீட்டில் ஒரு சோக நிகழ்ச்சி நடந்து விட்டது என்பதற்காக மகிழ்ச்சியான ஒரு காட்சியில் நடிக்க இயலாமல் போயிற்று என்று கூறுபவர்கள் உண்மையான நடிப்பாற்றல் உள்ளவர்கள் அல்ல என்பது என் எண்ணம். எத்தகைய சூழ்நிலையிலும் தேவைப்படும் உணர்வுகளுக்குத் தன்னை அடிமைப் படுத்திக்கொள்வது என்பது தனிக் கலை. அப்படிச் செய்யும் பொழுது தான் அவர் உண்மையான நடிகராகிறார்.

உதாரணத்துக்குச் சொல்ல வேண்டுமானால் 'கோராகாகஸ்' என்ற படக்கதை 'விவாக பந்தம்' என்னும் பெயரில் தெலுங்கில் தயாரான பொழுது என். டி. ராமாராவுடன் ஒரு காதல் காட்சியில் நடித்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் என் சகோதரர் இறந்து போனதாக எனக்குத் தந்தி வந்தது. பெரும் துக்கத்துக்குரிய செய்தி அது என்றாலும் என். டி. ராமாராவின் கால்ஷீட் தேதிகள் படம் முடிய வேண்டிய அவசரச் சூழ்நிலை போன்ற பிரச்னைகளை மனத்தில் கொண்டு நான் சந்தோஷமான அக்காட்சியில் தொடர்ந்து நடித்து முடித்தேன். நான் இடிந்து போய் அமர்ந்து கொண்டு 'சோகச் செய்தி என் நடிப்பைப் பாதித்து விட்டது' என்று சொல்லியிருந்தால் அனைவரும் ஏற்றுக் கொண்டிருப்பார்கள். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை.

அதே சமயம் இன்னொன்றையும் நான் கூறிக் கொள்வேன். நடிப்பு என்பது ஏதாவது ஒரு சமயம்தான் உச்சகட்டத்தில் அமையும். அதுமுதல் 'டேக்'காகவும் இருக்கலாம். இரண்டாவது 'டேக்'காகவும் இருக்கலாம். அப்படி உணர்ச்சி மேலிட நடிக்கும் பொழுது உடன் நடிப்பவர்களாலோ, வேறு காரணங்களாலோ 'டேக்' ஓகே ஆகவில்லை யென்றால் நடிப்பின் வேகம் குறைந்து போக வாய்ப்பு ஏற்படுகிறது. ஆகையால் நன்கு நடிக்கக் கூடியவரின் நடிப்பு ஆற்றல்






# ஜ..ஜீ..ஜ..ஜா!

'ஜ. ஜீ. — ஜ. ஜா' என்ற தலையங்கத்தைப் படித்தேன். கொக்கின் தலையிலாவது வெண்ணெயை வைத்துப் பிடித்து விடலாம்; ஆனால் அதைவிடப் புத்தி சாலித்தனமாக இருக்கிறது ஆங்கிலத்தை அகற்றி விட்டு, பின் ஏதாவதொரு பிரதேச மொழியை (ஏதாவதொரு என்ன, இந்தியைத்தான்) அனைத்திந்திய ஆட்சி மொழியாகக் கொள்ளலாம் என்று நமது மத்திய அமைச்சர் ஜெகஜீவன்ராம் கூறுவது!

விருத்தாசலம் எம். ஏ. அப்துல்காதர்

ஏதோ சமூகப் பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்த்து விட்டது போலவும், தீர்க்க முடியாத ஒரே பிரச்னை ஹிந்தி என்பது போல் ஜனதாத் தலைவர்கள் பேசி வருவதைத் தலையங்கத்தில் தாங்கள் கண்டித்திருக்கும் விதத்தை நான் மிகவும் ரசித்துப் படித்தேன்.

திருவாரூர் பா. சந்திரசேகரன்

சாதுரியமாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு சங்கடம் விளைவிக்கும் வகையில் பேசிய மத்திய அமைச்சர் ஜகஜீவன் ராமிற்குச் சரியான பதிலடி கொடுத்திருக்கிறீர்கள். 'இந்தித் திணிப்பு இராது' என்று ஒரு புறம் அறிவிப்பு, மறுபுறம் அதற்கு நேர்மாறான வகையில் பல மத்திய அமைச்சர்களின் பேச்சும் செயலும்! இந்த Double Standard இந்திரா அரசிலும் இருக்கத்தான் செய்தது. ஆனால் ஜனதா அரசில் கொஞ்சம் ஓவராகவே இருக்கிறது.

மேலூர் எஸ். வைத்தியநாதன்

'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற கொள்கையால் தமிழ் நாட்டின் பல கல்லூரிகள் என்று சொல்லப்படும் தொழிற்சாலைகளிலிருந்து வெளிவரும் நம் பட்டதாரிகளுக்கு வேலை கிடைத்து விடுமா? அல்லது அதற்கு நமது மாநில அரசுதான் உத்தரவாதம் வழங்குமா? ஆங்கிலம், தமிழ் இரு மொழிகளை மட்டும் படித்து விட்டு நம் பட்டதாரிகள் பிற மாநிலங்களில் போய் வேலை செய்யத்தான் திறன் இருக்கிறதா?

தேசீய இதழான 'கல்கியில்' தேசீயத்திற்கு ஒவ்வாத 'இந்தித் தாடகை' என்ற வார்த்தையைக் கண்டு மனம் வெம்பினேன்.

சென்னை—30. வ. ரங்கராஜன்

புனிதமான காந்தி ஜெயந்தி இதழில், காந்தியடிகளின் கருத்தையே 'ஜகஜ்ஜாலப் புரட்டு' என்று 'கல்கி' எழுதி இருக்கிறதே என்று எனது மனம் புண்பட்டது. மாநிலங்களில் மாநில மொழிகள்தான் முழு அளவில் எங்கும், எதிலும் ஆட்சி செலுத்த வேண்டுமென்பதும், மத்திய அரசின் ஆட்சி மொழியாக இந்தி வரவேண்டும் என்பதும் காந்தியடிகளின் கருத்தாகும்.

மதுரை—16 நா. திருமலை

ஆகம விதிப்படி அமையாவிட்டாலும் இறைவன் அருள் கிட்டப் பக்தியிருந்தால் போதும். கண்ணப்பர் ஆகம விதிப்படியா பக்தி செலுத்தினார்?

அது போலவே நடை பாதைக் கோவில்களில் உள்ள இறைவன் மேல் எவ்வளவோ மக்கள் பக்தி செலுத்தி இறைவனின் அருளுக்குப் பாத்திரமாகி உள்ளார்கள்.

நீதிபதி மோகன் அவர்களின் பேச்சுக்குத் திரு பக்த வத்ஸலம் அவர்களின் பதில் பக்தர்களுக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது.

சென்னை—18 ஆர். நடராஜன்

ஞான பீடம் பரிசு பெறற டாக்டர் கே. சிவராம காரந்த் பற்றிய விஷயங்கள் கல்கியில் வெளியாகியுள்ளன. அவரைப் பற்றி மற்றொரு ருசிகரமான தகவல்.

1976ம் வருடத்திய சிறந்த படத்துக்கான தங்கத் தாமரை பரிசு பெற்ற ''சோமன துடி'' படம் அதே பெயருள்ள திரு. சிவராம காரந்தின் நாவலைத் தழுவியதே. இருந்தும் திரு. சிவராம காரந்திற்குத் தமது நாவல் சரியானபடி படமாக்கப் படவில்லை என்ற குறை உண்டு. அதனால் ''மலெய மக்களு'' என்ற பெயரில் அவரது இன்னொரு நாவலை அவரே படமாகத் தயாரித்து டைரக்டும் செய்து வருகிறார். கன்னட சினிமாவில் புகழ் பெற்ற கல்பனா முக்கிய பாகமேற்றுள்ளார்.

பெங்களூர்—9 என். கணேசன்

தபால் இலாகாவில் புகார் பிரிவில் பணியாற்றுபவன் நான். ''இராஜ கர்ஜனைப் பரிசுத் திட்டம்'' என்று மட்டும் எழுதிய தபால் தங்களுக்குச் சரியான முறையில் பட்டுவாடா ஆனதற்குக் கல்கியின் பெருமையை மட்டும் குறிப்பிடாது தபால் இலாகாவின் திறமையையும் குறிப்பிட்டதைக் காண அளவில்லா மகிழ்ச்சி அடைந்தேன்.

காரைக்குடி—2 ஜி. சீனிவாசன்

'நடனத்திற்குப் பின்' என்ற இந்தச் சிறுகதை டால்ஸ்டாயின் அதிகம் பிரசாரத்திற்கு வராத, ஆனால் மிகச் சிறந்த சிறுகதைகளில் ஒன்றாகும். அநாயாசமாகத் தமிழாக்கம் செய்துள்ள கே. எம். ரங்கசாமி மிகுதியான பாராட்டுக்குரியவர்.

சென்னை—93 திருப்பூர், சு. கிருஷ்ணன்

# துளசி மாடம்

நா. பார்த்தசாரதி

## 20

தன் பெயருக்குப் பதிவுத் தபாலில் வந்திருந்த கடிதத்தைப் பார்த்துச் சர்மா எதுவும் வியப்போ பதற்றமோ அடையவில்லை. அமைதியாகக் கடிதத்தை மடித்து மறுபடியும் உறையில் வைத்து விட்டு உட்கார்ந்திருந்தார். இது அவர் ஏற்கனவே எதிர்பார்த்தது தான்.

இதற்கு நேர்மாறாகக் கமலி தன் பெயருக்கு வந்திருந்த கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டு ஆச்சரியம் அடைந்தாள். இப்படி ஒரு நோட்டீஸ் ரிஜிஸ்தர் தபாலில் வருகிற அளவு எந்தப் பெரிய குற்றத்தையும் தான் செய்யவில்லையே என்பதுதான் அவளுடைய இந்த ஆச்சரியத்துக்குக் காரணமாய் இருந்தது. படித்து முடித்ததும் அவளே தன் பெயருக்கு வந்திருந்த கடிதத்தை ரவியிடம் கொடுத்தாள்.

அவளுக்கு வந்திருந்த கடிதத்தைப் படித்ததனால் அதேபோல ஒரு பதிவுத் தபாலில் தந்தைக்கு வந்திருந்த கடிதத்தைப் பற்றியும் என்னவென்று தெரிந்துகொள்ளும் ஆவலில் தந்தையிடம் அதைக் கேட்டு வாங்கிப் படிக்கத் தொடங்கினான் ரவி.

அந்த இரண்டு ரிஜிஸ்தர் கடிதங்களும் ஒரே நோக்கத்தோடுதான் அனுப்பப் பட்டிருந்தன. 'லோகா சமஸ்தா சுகினோ பவந்து' (எல்லா உலக மக்களும், நன்றாக இருக்கட்டும்) 'சர்வே ஜனா சுகினோ பவந்து' (எல்லா மக்களும் நன்றாக இருக்கட்டும்) என்ற வேண்டுதலோடு தங்கள் வழிபாடுகளையும் பிரார்த்தனைகளையும் முடிப்பவர்கள் அடுத்த வீட்டுக்காரன் நன்றாயிருப்பதைப் பொறாதவர்களாக இருப்பது புரிந்தது.

'பாதிக்கப்பட்ட' உள்ளூர் ஆஸ்திகப் பெருமக்களின் சார்பாக வக்கீல் நோட்டீஸ்களாக அவை அனுப்பப் பட்டிருந்தன.

ஸ்ரீமடத்து நிலங்களையும், சொத்துக்களையும், காலி மனைகளையும் ஆஸ்திகர்களின் உணர்வுகளைப் புண்படுத்துகிறவர்கள் வசம் விட்டிருப்பதாலும், மடத்து முத்திராதிகாரியாயிருந்தும், ஆசார அனுஷ்டானங்களுக்குப் புறம்பானவர்களோடு பழகுவதும், அப்படிப் பட்டவர்களை வீட்டிலேயே தங்க வைத்துக் கொள்வதும், முறையற்ற செயல்களாகப் படுவதாலும், சரியான காரணமும், சமாதானமும் கூறாத பட்சத்தில் சட்ட ரீதியாக ஏன் அவர்மேல் நடவடிக்கை எடுக்கலாகாது?' —என்று சர்மாவைக் கேட்டது அந்த வக்கீல் நோட்டீஸ்.

'உள்ளூரில் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களின் நம்பிக்கைக்குரிய கோயில்களில் நுழைந்து கர்ப்பக் கிருஹத்துக்கு மிகச்சமீபம் வரை சென்று தரிசித்துக் கோவிலின் விதிகளையும், ஆகம சுத்தத்தையும் மீறுவதானது மதாபிமானிகளாகிய ஆஸ்திகர்களைப் பாதிப்பதனால் பிறமதத்தைச் சேர்ந்தவளாகிய கமலியின் மேல் சட்டப்படி ஏன் நடவடிக்கை எடுக்கலாகாது?' — என்று கமலியின் பெயருக்கு வந்திருந்த நோட்டீஸ் அவளைக் கேட்டது.

கமலிக்கு வந்திருந்த நோட்டீஸை அப்பா கேட்காமலே அவரிடம் படிப்பதற்கு நீட்டினான் ரவி. அவரும் அதை வாங்கிப் படித்தார். பின்பு இரண்டு கடிதங்களையும் ஒன்றாகச் சேர்த்துத் தம்வசமே வைத்துக் கொண்டார்.

''நீ ஒண்ணும் கவலைப்பட்டு மனசைக் குழப்பிக்காதேம்மா! எல்லாம் நான் பார்த்துக்கறேன்'' — என்று கமலியை நோக்கிச் சர்மாவே சமாதானமும் சொன்னார்.

கமலிக்கு வந்திருந்த கடிதத்தில் கோவிலில் ஆகம ரீதியான சுத்தி பண்ணுவதற்கான செலவை அவள் ஏற்க வேண்டும் என்று வேறு மிரட்டியிருந்தது. சீமாவையர் நேரில் ஈடுபட்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை என்றாலும் அவர் தூண்டி விட்டுத்தான் காரியங்கள் நடக்கின்றன என்பதைச் சர்மாவால் வெகு சுலபமாக அனுமானித்துக் கொள்ள முடிந்தது. முன்பு சீமாவையர் மடத்து ஏஜண்டாக இருந்த காலத்தில் அவர் ஸ்ரீமடத்து நிலங்களை அடைத்திருந்த பினாமி ஆள் ஒருவன் இப்போது நிலங்கள் தனக்கு அடைக்கப் படாத கோபத்தில் இருந்ததைப் பயன்படுத்தி அவன் மூலம்தான் வைக்கோற் படைப்புக்குத் தீவைக்க ஏற்பாடு செய்திருந்தார் என்ற இரகசியம் ஏற்கெனவே சர்மா காதுக்கு எட்டியிருந்தது.

ரவி கேட்டான்: ''நான் யாராவது வக்கீலிடம் போய்க் கன்ஸல்ட் பண்ணிண்டு வரட்டுமா அப்பா?''

''வேண்டாம். அவசியமானா அப்புறம் நானே உங்கிட்டச் சொல்றேன். கோர்ட்டு, வக்கீல், இந்த மாதிரி விஷயங்களிலே வேணு மாமா பெரிய விவகாரஸ்தர். முதல்லே நான் இது விஷயமா அவரைப் போய்க் கலந்துக்கறேன்''—



அவன்: ''மனைவி தொந்தரவு இல்லாமல் அக்கடான்னு ஆபீஸில் இருந்த காலம் போச்சு...!''
இவன்: ''என்ன ஆயிடிச்சு இப்ப....?''
அவன்: ''என் மனைவிக்கும் இதே ஆபீஸில் வேலை கிடைச்சிடுச்சு... நாளை ஜாயின் செய்கிருள்!''

உ. ராஜாஜி.

''செய்யுங்கோ அப்பா! எனக்கும் அது நல்ல யோசனையாப் படறது'' —

இரண்டு கடிதங்களையும் எடுத்துக்கொண்டு வேணு மாமா வீட்டுக்குப் புறப்பட்டார் சர்மா.

தெரு திரும்பும் போது வில் வண்டியில் அமர்ந்தபடி சீமாவையர் எங்கோ புறப்பட்டுப் போய்க் கொண்டிருப்பது தெரிந்தது. சர்மா எந்தத் திசையில் நடந்து போய்க் கொண்டிருந் தாரோ அந்தத் திசையிலேயே அவருக்கு முன்பாகச் சிறிது தொலைவில் அந்த வண்டி போய்க் கொண்டிருந்ததனுல் வண்டியில் பின்புறம் பார்த்தபடி அமர்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த சீமாவையர் சர்மா பின்னுல் நடந்து வந்து கொண்டிருப் பதைப் பார்த்து விட்டார். உடனே அவர் வண்டியில் இருந்தபடியே உரத்த குரலில் சர்மாவைக் குசலம் விசாரித்தார். சர்மாவும் சிரித்தபடியே மறுமொழி கூறினுர்.

''நீர் ஊரிலே இல்லாத சமயத்திலே படப்புத் திப்பிடிச்சு எரிஞ்சுதுன்னு. போய்ப் பார்த்து உம்ம பையனிட்ட விசாரிச்சுட்டு வந்தேன். ஏதோ கஷ்ட காலம் போலி ருக்கு.''

''....''

அவர் அப்படி வண்டியில் உட்கார்ந்த படியே பேசிக் கொண்டு வர, தான் பின்னுல் அதற்குப் பதில் சொல்லியபடியே தொடர்ந்து நடந்து செல்வதைச் சர்மா விரும்பவில்லை.

''வரேன்... அப்பறமாப் பார்க்கலாம்'' — என்று கூறிவிட்டு விரைந்து வண்டியைக் கடந்து அதற்கு முன்னுல் நடக்கத் தொடங் கினுர் அவர். ஓர் அயோக்கியனுக்குக் கூட நல்லவனைப் போலப் பிறருக்குமுன் தன்னைக் காட்டிக் கொள்ளும் பாவனையை விட முடியா மல் இருப்பதைப் பற்றிச் சிந்தித்தார் அவர். சில சமயங்களில் சுபாவமாகவே நல்லவனு யிருப்பவனை மிஞ்சிவிடும் அளவுக்குப் பாவனை யினுல் நல்லவராக இருப்பவர்கள் சாதுரிய மாக நடித்து அதில் வெற்றியும் பெற்று விடுவதாகக் கூடத் தோன்றியது.

பூர்வ ஜென்மத்து விட்ட குறையோ, தொட்ட குறையோ, கமலி இந்தியக் கலா சாரம், இந்திய வழிபாட்டுமுறை என்ருல் அதற்காக மனம் நெகிழ்ந்து உருகுகிருள். கோவிலுக்கு உள்ளம் மலர்ந்த பக்தியுடனும் சிரத்தையுடனும் ஓடுகிருள்.

அந்தக் கலாசாரத்திலேயே அதன் வாரி சாகப் பிறப்பெடுத்திருப்பதாகச் சொல்லிக் கொள்ளும் சீமாவையருக்குச் சீட்டாடவே நேரம் போதவில்லை. அவர் கோவிலுக்குப் போய் வருஷக் கணக்கில் இருக்கும். ஆவ லோடு கோவிலுக்குப் போகிறவளுக்கு ஏன் போகிருய் என்று வக்கில் நோட்டீஸ் மட்டும் அனுப்ப முடிகிறது. இந்த முரண்பாட்டை நினைத்துப் பார்த்தபோது சர்மாவின் உள் மனம் கொதித்தது.

சர்மா தேடிச் சென்ற போது வேணுமாமா எங்கோ புறப்படத் தயாராயிருந்தாற்போல் தோன்றியது.

''எங்கேயோ கிளம்பிண்டிருக்கேள் போல் இருக்கே...? போயிட்டு அப்புறம் சாகவாசமா வரட்டுமா?''

''அவசரம் ஒண்ணுமில்லே! வாங்கோ, போஸ்டாபீஸ் வரை போகலாம்னு புறப்பட் டேன். இப்போது உடனே போய்த்தான் ஆகணும்கிறதில்லே. அப்புறம் கூடப் போய்க் கலாம். நீங்க உட்காருங்கோ... அதென்ன கையிலே? லெட்டரா?''...

சர்மா உட்கார்ந்தார். வேணு மாமாவின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் அந்தக் கடி தங்களையே அவரிடம் நீட்டினுர்.

''படியுங்கோ... இது விஷயமாத்தான் உங்க கிட்டப் பேசிட்டுப் போகலாம்னு வந் தேன்! இது ரெண்டும் இப்பத்தான் சித்தெ முன்னுடி ரிஜிஸ்தர் தபால்லே வந்துது.''

''ஒண்ணு கமலி பேருக்கு வந்திருக்காப்லே இருக்கே?''

''ஆமாம்! அவ பேருக்கு ஒண்ணும், எம் பேருக்கு ஒண்ணுமா வந்திருக்கு....''

—வேணுமாமா அவற்றை ஒவ்வொன் ருகப் படித்தார்.

''ஒகோ! விஷயம் இவ்வளவு தூரத்துக்கு வந்துடுத்தா? யார் வேலை இதெல்லாம்? வைக்கோல் படப்புக்குத் தீ வைச்சு நாசம் பண்ணினது போருதுன்னு இது வேறயா?''

''யார்னு நான் சொல்லித்தான் தெரிய ணுமா? எல்லாம் சீமாவையர் வேலைதான்! என்னமோ, ஆத்திரத்திலே, எதுஎதையோ பண்ணிண்டிருக்கார். என் மேலேதான் ஆத் திரம். என் வீட்டிலே வந்து தங்கின பாவத் துக்கு அந்தப் பொண் மேலேயுமா இப்பிடி விரோதம் காண்பிக்கணும்?''

''இப்போ என்ன பண்றதா இருக்கேள்?''

''என்ன பண்றதுன்னு உங்க கிட்டக் கலந்து பேசலாம்னுதான் இங்கே புறப்பட்டு வந்தேன்...''

''வந்த மட்டிலே ரொம்ப சந்தோஷம்! ஆனு இதுக்கு நீரோ கமலியோ, பதிலொண் ணும் எழுத வேண்டாம். தூக்கி மூலேலே எறிஞ்சிட்டுப் பேசாமே இரும். சொல் றேன்...''

''எங்க மேலே ஏன் சட்ட ரீதியா நட வடிக்கை எடுக்கக் கூடாதுன்னு என்னமோ நோட்டீஸ் விட்ட மாதிரியின்னு, அனுப்பிச் சிருக்கா? பதில் எழுதாமே எப்பிடிச் சும்மா இருக்கறது?''

''நடவடிக்கை எடுக்கட்டுமே; அப்பப் பாத்துக்கலாம்.''

'''ஆஸ்திகாள் மனம் புண்படுறப்பலேயோ, ஸ்ரீமடத்து நெறி முறைகளுக்குப் புறம்பாகவோ எதுவும் செஞ்சுடலே'ன்னு நானும் 'எனக்கு இந்து மதத்தின் மேலேயும், இந்து கலாசாரத்தின் மேலேயும் மதிப்பும் பக்தியும் இருக்கு. அந்த மதிப்போடேயும் பக்தி சிரத்தையோடேயும்தான் நான் கோவிலுக்குப் போறேன்'னு கமலியும் ஆளுக்கொரு பதில் எழுதிப் போட்டுட்டா நல்லதில்லேயா?''

''வீண் வம்புக்காகவும் விரோதத்துக்காகவும் அனுப்பப் பட்டிருக்கிற இந்தக் கடிதாசுகளுக்கு அத்தனை மரியாதை தர வேண்டியது அவசியம்தானா சர்மா? நீரோ, கமலியோ, பதில் எழுதினாலும், எழுதா விட்டாலும் அவா உங்க மேல் நடவடிக்கைன்னு கோர்ட்டுக்குப் போகப் போறதென்னவோ, நிச்சயம். நீர் பதில் எழுதறதாலே அது ஒண்ணும் மாறவோ குறையவோ போறதில்லே. பேசாம இரும். மேற் கொண்டு அவா என்னதான் செய்யறான்னு பார்ப்போம். அப்புறம் நாம் பண்ண முடிஞ்சதைப் பண்ணலாம்'' —

''சரி! நீங்களே சொல்றப்போ நான் வேற என்ன பண்றது? பதில் எழுதலே. விட்டுடறேன்'' —

''ஓய்! சர்மா! தைரியமா இரும். உம்மைப் போல ஞானவான்கள் எல்லாம் வெறுமனே பூச்சாண்டி காட்டறவாளுக்குக் கூடப் பயப்படறதாலேதான் மத்தவா குதிரை யேற முடியறது. கமலியையும், ரவியையும் இங்கே பொறப்பட்டு வரச் சொல்றதுக்குக்கே பயந்தேள். அப்பவும் நானும் என் பொண்ணும் தான் 'வரச்சொல்லி எழுதும்! பயப்படாதேயும்'னு உமக்கு உறுதி சொன்னோம். இப்பவும் நான் சொல்றேன். பயப்படாதேயும். பயமே இல்லாத கெட்டவனைக்கூட மதிச்சுப் பணிந்து கொடுத்து விடுவதும், பயந்த சுபாவமுள்ள ஒரு நல்லவனைத் தொடர்ந்து மிரட்டிக் கொண்டேயிருப்பதும் வழக்கமாகி விட்ட தேசம் இது!''

''பல சமயங்கள்ளே என்னோட சாத்விக குணத்தை நீங்க பயம்னு தப்பாப் புரிஞ்சுக்கறேள். நான் நீங்க நினைக்கறது போல அத்தனை பயந்தவன் இல்லே. பயந்தவனா இருந்தாத் துணிஞ்சு பிள்ளையையும் கமலியையும் வரவழைச்சு ஆத்திலேயே தங்க வச்சிண்டிருக்க மாட்டேன். எங்காத்துக்காரியே அதற்குக் கடும் எதிர்ப்பு ஓய்! பயந்தவனா இருந்தா மடத்து இடத்தை இறைமுடி மணிக்கு வாடகை பேசி விட்டிருக்க மாட்டேன். நிலங்களைச் சீமாவையரின் பினாமி ஆட்களுக்குக் குத்தகை அடைக்க மறுத்து நியாயமான விவசாயிகளுக்கு விட்டிருக்க மாட்டேன். என் தைரியத்தை நானே விளம்பரப்படுத்திக்கப்படாது...''

வேணுமாமா சர்மாவை நிமிர்ந்து பார்த்தார்.

''சபாஷ்! இப்போதான் நீர் உண்மையான வேதம் படிச்ச பிராமணர்! தைரியமில்லாத ஞானம் சோபிப்பது இல்லே. தப்பாக வேதம் படித்தவனை விட நன்றாகச் சிரைப்பவனே மேல்னு மகாகவி பாரதியார் எதிலியோ எழுதியிருக்கார். ஓய்!''

சர்மா சொல்லியதை ஒவ்வொன்றாகச் சிந்தித்துப் பார்த்த போது அவர் பயந்த சுபாவமுள்ளவர் என்று தாமாக அவரது குடுமியையு





மேலட்டை :

அலங்காரப் பூவையின் பூ அலங்காரம்!

வண்ணப்படம் :

ஏ. எஸ். ராஜகோபாலன்

யும் விபூதிப் பூச்சையும், பஞ்சகச்ச வேஷ்டியையும், செருக்குத் தெரியாத பவ்யமான நடையையும் பார்த்து நினைத்திருந்ததுதான் தவறோ என்று வேணு மாமாவுக்கே இப்போது தோன்றியது. 'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்ற பழமொழி நினைவு வந்தது அவருக்குச் சிறிது நேர யோசனைக்குப் பின், ''நீர் டதிலொண்ணும் எழுத வேண்டாம். ஆனு இன்னிக்கிச் சாயங்காலமே ரவியிடம் நான் சொன்னேன்னு கமலியைக் கோயிலுக்கு அழைச்சிண்டு போகச் சொல்லும் போயி...'' என்று அருகே நெருங்கி மீதி விஷயத்தைச் சர்மாவின் காதருகே கூறினுர் வேணு மாமா.

''இப்படிச் செய்யறதாலே என்ன பிரயோஜனம்னு புரியலியே?''

''பிரயோஜனம் நிச்சயமா இருக்கு. ரசீது மட்டும் ஞாபகமா வாங்கிக்கச் சொல்லும். மறந்துடாதேயும்! நாளே, நாளன்னிக்கின்னு ஒத்திப் போட்டுடப் படாது. இதை இன்னிக்கே செஞ்சாகணும்...''

''சரி! நீங்க சொன்னபடியே பண்ணிடச் சொல்றேன். வரட்டுமா?'' — என்று சர்மா புறப்பட்டார். வேணு மாமாவும் சர்மாவுக்கு உற்சாகமாக விடை கொடுத்தார்.

அன்று மாலை சர்மா ரவியையும் கமலியையும் அழைத்து, ''ஏய் ரவீ! இன்னிக்கிக் கமலியைக் கோவிலுக்கு அழச்சிண்டு போயிட்டுவா! அதோட அங்கே கோவில் அர்த்த மண்டபத்திலே திருப்பணி நிதி வசூல்னு போர்டு மாட்டிண்டு ஒரு கிளார்க் உட்கார்ந்துண்டிருப்பன். அவனிட்ட இந்த ஐந்நூறு ரூபாயைக் கமலி கையாலே குடுக்கச் சொல்லி நம்ம வீட்டு அட்ரஸ் போட்டு அவ பேருக்கே ஒரு ரசீதும் வாங்கிக்கோ'' —

என்று கூறி ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை அவனிடம் நீட்டினுர்.

''திருப்பணி உண்டியல்னு வச்சிருக்காளே; அதிலே பணத்தைப் போட்டுட்டா என்ன? இதுக்குப் போயி ரசீது எதுக்குப்பா?''

''கண்டிப்பா ரசீது வேணும். அதுவும் நான் சொன்னபடி கமலி பேருக்கே வேணும். உண்டியல்லே போடப்பிடாது. நேரே குடுத்தே ரசீது வாங்கிண்டு வந்துடு'' — என்று மீண்டும் வற்புறுத்திச் சொல்லி அனுப்பினுர் சர்மா.

அப்பா சொல்லியபடியே அன்று ரவி கமலியை அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போனுன். கணவனுக்கு அருகே அடக்க ஒடுக்கமாகச் செல்லும் ஓர் இந்துப் பெண் போல் ரவியோடு தேங்காய் பழத்தட்டு ஏந்திக் கோவிலுக்குச் சென்றுள் கமலி. (தொடரும்)

---




அறுவைக்கு ஆயிரமாய்
அர்த்த மிருந்தும்
அறுசுவையி லொன்றுமட்டும்
பிரித்தாற் போன்றே
'பொறுமையினே சோதிப்பது'
எனும்பொருள் கொண்டார்
அறுவையுடை பிறபொருளை
அறியா அன்பர்!

அறுப்பென்றல் தஞ்சையிலே
ஆனந்தம் பொங்கும்!
அறுவடைதான் நஞ்சையிலே
எனும்பொருள் தங்கும்!
அறிவைஎன பெண்களைநாம்
அழைப்பது உண்டு.
அறுவைஎனில் விதவையெனும்
அர்த்தமும் உண்டு!

:

அறுப்பதனை 'வெட்டுவது'
என்றே சொல்வோம்!
அறுப்பதனுல் ஆடையினை
அறுவை யென்போம்!
இப்படிநான் தொடர்ந்திட்டால்
என்னையும் நீங்கள்
செப்பிடுவீர் அறுவையென
சொன்னேன் நன்றி!






மல்லிகை மணத்திலிருந்து விடுதலை பெற ஏங்கினுள் புஷ்பா... ஆனால் அந்த விடுதலை அவளுக்குக் கிடைக்கவேயில்லை.

நாட்கள் தேயத் தேய, தனிமையே அவளுக்கு அச்சம் அளிப்பதாயிற்று. இரவுகளில் மட்டும் அவளைச் சூழ்ந்த மல்லிகை நெடி இப்போதெல்லாம்,. நாளெல்லாம், கதிரவனென்றும், வெண்மதியென்றும் பாராமல், அவளை வாட்டிற்று. சற்று நேரம் அவள் தனித்திருந்தால் போதும்... அந்த மணம் அவள் துணைக்கு வந்துவிடும்... ''நான் இருக்கிறேன், என்னை மறந்துவிட அனுமதியேன்!'' என்கிருளோ மைதிலி?

அப்படியிருந்தும், புஷ்பா தன் வாழ்க்கையை வளமாக, தன் இச்சைப்படி, அமைத்துக் கொண்டாள்....

ஆண்டுகள் தேய்ந்தன... மறைந்தன.... வாழ்க்கை அவளிடம் கருணைகூர்ந்தது....

ஆம்... இப்போது அவள் ராகவனின் மனைவி... அவனுடைய இரண்டாவது குழந்தையின் தாய்....

இந்த நிலை ஏற்பட அவள்தான் எத்தனை திறமையோடு நடந்து கொண்டாள்? மைதிலியின் உயிர்ச் சிநேகிதி என்ற தகுதியை அஸ்திவாரமாக அமைத்துத்தான் அவள் தன் வாழ்க்கைக் கட்டடத்தைக் கட்டினுள்...... ராகவனிடம் அவள் காட்டிய தனி பரிவு அன்பு... அவன் மைதிலியின் நினைவில் தன்னை இழந்து துயரத்தில் மூழ்கின போதெல்லாம், ஓர் உண்மையான நண்பனைப் போல் நடந்து கொண்ட பாங்கு... ஆபீஸில் அவன் அலுவல்களை அப்பழுக்கில்லாமல் செய்யும் திறமை....

புஷ்பா நடந்து கொண்ட விதத்திலிருந்த இதத்தால், மென்மையால் கவரப்பட்டு, மைதிலியின் பெற்றோர்களே முன்னின்று ராகவன் — புஷ்பாவின் திருமணத்தை நடத்தி வைத்தார்கள்... தம் மகளின் இடத்தை மகளின் தோழி நிறைப்பதில் அந்தக் களங்கமற்றவர்களின் உள்ளத்தில் ஓர் அசட்டுத் திருப்தி!...

புஷ்பாவின் தாம்பத்திய வாழ்க்கையில் எந்த விதமான இசைகேடும் கூடாது என்றுதான் அவர்கள் மைதிலியின் மகனைத் தம்மோடு வைத்துக் கொண்டார்கள்... பள்ளியில் சேர்த்துப் படிக்க வைத்தார்கள்...

ராகவன் அன்பான கணவனுகத்தான் இருந்தான்... ஆனால் மணமாகிச் சில மாதங்களிலேயே ஒரு பேருண்மையைப் புஷ்பா உணர்ந்து கொண்டாள். மைதிலியின் நிலையில் அவள் இருப்பதில் பூரணத்துவம் இல்லை. மலையுச்சியிலிருந்து மைதிலி அலறி விழுந்தபோது, ராகவனின் இதயத்தின் ஒரு பாகமும் விழுந்து சிதைந்து விட்டது... அவள் சிரிப்பைப் போன்று அதுவும் இயற்கையோடு சங்கமித்து விட்டது. அவள் கூந்தலின் மல்லிகை மணம் போல் ஒப்பற்ற நறுமணமாகி அவனுள் நீக்கமற நிறைந்து விட்டது.

மைதிலியின் இடத்தைப் புஷ்பா என்றுமே நிறைக்க முடியாது!

முதலில் புஷ்பா இந்த நிலையை அப்படியே ஏற்றுக் கொண்டாள்... ஒரு குழந்தைக்குத் தாயான போது, ராகவனின் மனத்திலிருந்து மைதிலியை அகற்ற முடியுமென்று அவள் மனப்பால் குடித்தது கூட நிஜம்தான். ஆனால் காலம் மெள்ள மெள்ள அவளுக்குச் சில யதார்த்தங்களைப் புரிய வைத்தது.

ராகவனின் உயிரெல்லாம் அவனுடைய முதல் மகன்தான். மைதிலியின் மகன்தான்.. புஷ்பாவின் மகனை அதே அளவு விரும்புவதைக் கூட மைதிலிக்குச் செய்யும் துரோகமாக நினைத்தவனைப் போலத்தான் அவன் நடந்து வந்தான்...

வளமான வாழ்க்கை அமைந்த போது அகன்ற புஷ்பாவின் மனக்கசப்பு மெள்ள மெள்ள மறுபடியும் வருகை தரலாயிற்று... வளர்ந்தது... விசுவ ரூபமெடுத்தது.

ஆண்டுகள் மறைந்தன....

தனிமையிலோ அந்தப் பாழாய்ப் போன மல்லிகை மணம்!

''மைதிலி! என்னை விட்டுவிடு... இல்லாவிட்டால்.... நான் மிகமிகப் - பொல்லாதவள்!'' புஷ்பாவின் மனம் கசப்பில்மூழ்கி ஆத்திரத்தில் கதறிற்று....

# மிகச் சிறிய விஷயங்கள்தான் எங்களுக்கு மிகப் பெரிய பொறுப்பினை அளிக்கின்றன.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகாப்பு என்பது ஒரு அர்த்த மற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.







ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான பெற்றோர்கள் அவர்களுடைய அன்புச் செல்வங்களைப் பள்ளிக்கு அனுப்புகின்றனர் — வர்த்தக வண்டிகளில் பொருந்தியுள்ள பாதுகாப்பு சாதனங்களில் நம்பிக்கை வைத்தே.

இந்த பாதுகாப்புச் சாதனங்களை உருவாக்கிய நாங்கள் பெருமிதமடைவது இயற்கைதானே. இருந்தபோதிலும் இது ஒரு மிகப் பெரிய பொறுப்பு. முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி பிரேக் சாதனங்களின் ஒவ்வொரு சிறிய உறுப்பினையும் மிகவும் நுணுக்கமாகக் கவனிக்கிறோம். இதனால்தான் அனேகமாக ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வர்த்தக வண்டியிலும் எங்களுடைய ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இது ஒரு அத்யாவசியமான தேவையும்கூட.

### உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்

தொடர்ச்சியான ஆராய்ச்சி, அபிவிருத்தி மற்றும் தரக் கட்டுப்பாடு — இவைகள் முழுமையான பாதுகாப்பினை அளிக்கும் ஒரு பிரேக் சாதனத்திற்கு வித்திடுகின்றன.

### நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம் — அதனைப் பாதுகாக்கவும்

CD-TVS' அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவிகொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள். மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்ய வேண்டாம். உங்கள் நன்மைக்காகத்தான் சொல்கிறோம்.

## சுந்தரம்-கிளேட்டன் லிமிடெட்

பாடி, சென்னை 600 050

## உங்கள் பாதுகாப்பு எங்கள் தொழில்





SAA/SCL/2588

# துளசி மாடம்

நா. பார்த்தசாரதி

## 21

ஓர் ஆணும் பெண்ணும் தங்களுக்கு இடையிலான உறவு என்ன என்பதைச் சொல்லாமலே சேர்ந்து தங்கியிருப்பது என்பது சங்கர மங்கலத்தைப் போன்ற ஓர் இந்திய கிராமத்தில் தொடர்ந்து சாத்திய மாகக் கூடியது இல்லை. அதுவும் பெண் முற்றிலும் புதியதும் அந்நியமானதுமான ஒருநாட்டிலிருந்து வந்தவள் என்னும்போது வதந்திகளுக்கு ஒரு வரம்பே இருக்க வழியில்லை. ஒழுங்கும் நியாயமும் கூட இராது. வதந்திகளுக்கும் விவஸ்தை இராது. அந்த வதந்திகளைப் பரப்புகிறவர்களுக்கும் விவஸ்தை இராது. சாதாரண விஷயங்கள் பிரமாதப்படுத்தப்படுவதும் பிரமாதமான விஷயங்கள் சாதாரணப் படுத்தப்பட்டுக் கொச்சையாக்கப் படுவதும் வதந்திகளைப் பொறுத்தவரை மிகவும் சகஜம்.

ரவியும் கமலியும், ஊருக்கு வந்ததிலிருந்து இலைமறை காயாக அவர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தவர்களுக்கு இறைமுடிமணியின் பகுத்தறிவுப் படிப்பகத்தில் நடந்த கமலியின் சொற்பொழிவும் அந்தச் சொற்பொழிவில் கமலியை அறிமுகப் படுத்திய அவர் 'விசுவேசுவர சர்மாவின் எதிர்கால மருமகள்' என்கிற குறிப்புடன் கமலியைப் பற்றிக் கூறியிருந்ததும் ரவியைக் கொண்டே அவளுக்கு மாலையணிவிக்கச்செய்ததும் இப்போது வதந்திகளை மிகவும் அதிகப்படுத்தியிருந்தன.

சர்மாவிடமே பகுத்தறிவுப் படிப்பகச் சொற்பொழிவில் 'அவரது எதிர்கால மருமகள்— என்று கமலியை இறைமுடிமணி அறிமுகப்படுத்தியது பற்றி இரண்டொருவர் விசாரித்திருந்தனர். ஒளிவுமறைவாகப் பேசுவதோ விஷயங்களைப் பூசி மெழுகுவதோ, ஆஷாடபூதித் தனமோ இறைமுடிமணிக்கு அறவே பிடிக்காதென்பது சர்மாவுக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் வக்கீல் நோட்டீஸுகளைப் பற்றியும், இதைப் பற்றியும், இறைமுடிமணியிடமே நேரில் பேசவேண்டுமென்று எண்ணினார் அவர்.

கமலியையும் ரவியையும் கோயிலுக்கு அனுப்பி விட்டு இறைமுடிமணியைப் பார்க்கப் புறப்பட்டிருந்தார் சர்மா.

முதலில் பலசரக்குக் கடைக்குப் போய்ப் பார்த்தார். அங்கே அவர் இல்லை. அவருடைய மருமகன் குருசாமிதான் இருந்தான். அவனே விவரமும் சொன்னான்:—

''மாமா விறகுக் கடையிலே இருக்காக. அங்ஙனே போனாப் பார்க்கலாம்.''

பலசரக்குக் கடையில் நல்ல கூட்டம் இருந்தது. சீமாவையரின் துஷ்பிரசாரம் எதுவும் எடுபடவில்லை என்று தெரிந்தது. கலப்படமில்லாமல் விலையும் நியாயமாக வைத்து வியாபாரம் செய்ததால் அந்தக் கடையின் வளர்ச்சியை யாராலும் தடுக்க முடியவில்லை. கடைக்குச் சாமான் வாங்க வருகிற ஆண்களோ, பெண்களோ, சிறுவர்களோ, யாவரிடமும் காண்பிக்கப்பட்ட மரியாதையும், பண்பாடும், அக்கறையும், அந்தக்கடைக்குத் தனிப் பெருமையை அளித்திருந்தன. இறைமுடிமணி கடைக்கு வைத்திருந்த பெயர்,. கடையில் மாட்டியிருந்த படம், அவரது தனிப்பட்ட கொள்கைச் சார்புகள், எதுவும் விற்பனையைப் பாதிக்கவில்லை. சர்மாவுக்கே நிலைமை புரிந்தாலும் ஒரு வார்த்தைக்காக ''வியாபாரம்லாம் எப்பிடி இருக்கு குருசாமி?'' — என்று அவனையும் கேட்டு வைத்தார்.

''ரொம்ப நல்லாவே இருக்குங்க'' என்று அவனிடமிருந்து பதில் வந்தது. பின்பு அங்கிருந்து இறைமுடிமணியின் விறகுக் கடைக்குப் போனார் அவர்.

விறகுக் கடைக்கு அவர் போனபோது இரண்டு மூன்று லாரியில் மூங்கில், சவுக்குக் கட்டைகள், கிடுகு கீற்று, எல்லாம் வந்து இறங்கிக் கொண்டிருந்தன.

''தேசிகாமணீ! நாம தனியாக் கொஞ்சம் பேசணும். இங்கே ரொம்பக் கூட்டமா இருக்கே? ஆத்தங்கரைப் பக்கமாப் போகலாமா?''

''ஒரு பத்து நிமிஷம் உட்காரேன் விசுவேசுவரன்! 'லோடு' இறக்கிக்கிட்டிருக்காங்க.''

சொன்னபடி பத்து நிமிஷத்தில் இறைமுடிமணி வந்து விட்டார். அவரும் சர்மாவும் பேசிக் கொண்டே ஆற்றங்கரைப் பக்கம் நடந்தார்கள்.

இறைமுடி மணியை ஆற்று மணலில் ஓரிடத்தில் உட்கார வைத்து விட்டுச் சர்மா — சந்தியா வந்தனத்தை முடித்துக்கொண்டு வந்துவிடுவதாகச் சொல்லிச் சென்றார். அவர் வருகிறவரை இறைமுடிமணி ஆற்று மணலில் காத்திருக்க வேண்டியதாயிற்று.

சர்மா வந்ததும் அவரே பேச்சை ஆரம்பித்தார்: ''எனக்கும் கமலிக்கும் வக்கீல் நோட்டீஸ் வந்திருக்கு. வேணு மாமாவுக்கும் உனக்கும் தவிர வேறு யாருக்கு நான் இதைச் சொல்லலே. கமலிக்கும் ரவிக்கும் மட்டும் விஷயம் தெரியும்.''

''எதுக்கு வக்கீல் நோட்டீஸ்? யார் விட்டிருக்கானுவ?''...

''யார்னு சொல்றது? எல்லாம் ஊர் ஜனங்கதான். என் நடத்தைகள் மடத்து முத்திராதிகாரிங்கிற பதவிக்கும், வைதிகத்துக்கும் பொருத்தமாயில்லியாம். கமலி இந்து ஆலயங்களுக்குள்ளே கேள்விமுறை இல்லாமத் தரிசனத்துக்குப் போறாளாம்...''

''உங்க ஆளுங்களைப் போலப் பொறாமைப் புடிச்சவங்க உலகத்துலேயே கிடையாதுப்பா! வரவரக் கோயிலுக்குப் போற ஆளுங்களே கொறைஞ்சி போச்சு. நமக்குப் புடிக்குதோ புடிக்கலியோ அதை நிஜமா நம்பிப் போற ஒருத்தர் ரெண்டு பேரையும் உங்க ஆளுங்

அவள்: ''எங்க அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இடையே ஒரு பந்தயம். யார் ஜெயிப்பது யார் தோற்பது என்பது உங்கள் கையில்தான் இருக்கு...!''

அவன்: ''என்ன புதிர் போடறே... விளக்கமாச் சொல்லு!''

அவள்: ''தீபாவளி முடிந்த மறுநாளே நீங்க ஊருக்குப் போயிடுவீங்கன்னு அம்மா சொல்ரு. இல்லே இரண்டாவது நாள்தான் போவார்னு அப்பா சொல்கிருர்...!''

உ. ராஜாஜி.

---

களே கெடுத்துப் போடுவாங்கபோல இருக்கே? அதுக்கு எங்க பிரச்சாரமே கூட வேணும் போலிருக்கே.'' —

''சீமாவையர்தான் தூண்டிவிட்டு எல்லாக் காரியமும் பண்றுவர்னு தோன்றது. என்னே நேரே பார்த்துட்டாத் தேனுப் பேசருர், விசாரிக்கிருர். ஆனுப் பின்னுலே பண்றதும் தூண்டி விடறதும் எல்லாம் இப்பிடிக் காரியங்களா இருக்கு.''—

''அவன் நாசமாப் போயிருவான். பாம்பு தேளு, நட்டுவாக்காலி மாதிரித் திரிஞ்சுக்கிட்டு இந்த ஊரைக் கெடுக்கருன். எங் கடையை ஒழிச்சிப்பிடறதுன்னு தலைகீழே நின்னு பார்த்தான். முடியலே. ஜனங்க சரக்கு எப்பிடியிருக்குதுன்னு பார்த்தாங்களே ஒழிய ஆளு யாருன்னு பார்க்கலே.'' —

''இப்ப இந்த நோட்டீஸ்லேயும் உனக்குக் கடை விட்டதை ஒரு குத்தமா எழுதியிருக் காங்க.''

''அப்பிடியா?... உனக்கு இத்தினி தர்ம சங்கடம் என்னுலே வரும்னு நானே இதைக் கேட்டிருக்க மாட்டேனே? வாடகைக்கு யாருக்காவது விடப் போறதை நமக்குத்தான் விடட்டுமேன்னு கேட்டு வச்சேன்.'' —

''நீ கேட்டதும் தப்பில்லே. நான் விட்டதும் தப்பில்லே தேசிகாமணீ! எல்லாம் முறையாத்தான் நடந்திருக்கு. அஹமத் அலி பாய்க்கு விடலாம். உனக்கு விடப்படாதா?''

''கோவில் குளத்தை வெறுக்கிறவனைவிடக் கோவில் சிலைங்களையே பணங் குடுத்துத் திருடிக் கடத்தி அந்நிய நாட்டுக்கு விற்கிறவங்களே தேவலைன்னு பார்த்தாங்க போலிருக்கு! தவிரவும் பாய் சீமாவையருக்குப் பாட்டில், ஸெண்டு, ஃபாரின் சரக்குங்க, சமயத்திலே கைமாத்து எல்லாம் குடுக்கிறவருவேறே!''—

''அதிருக்கட்டும்! உன்னுேட படிப்பகத்துக் கூட்டத்திலே நீ ரவி யோட கூட வந்திருக்கி ற அந்தப் பொண்ணைப் பத்திச் சொல்றப்போ, ஏதோ 'என் எதிர்கால மருமகள்'னியாமே?''

''ஆமாம். சொன்னேன்! உள்ளதைச் சொல்றதுக்கு ஏன்ப்பா எல்லாரும் பயந்து பயந்து சாகறீங்க? கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதிச்சாலும் அந்தப் பொண்ணைத் தவிர வேறே யாரையும் கட்டிக்கிடப் போறதில்லைன்னு தனியாப் பேசிக்கிட்டிருக்கிறப்பத் தம்பியே எங்கிட்டச் சொல்லிடிச்சு. அந்தப் பொண்ணே தம்பி மேலேயும் நம்ம நாடு நம்ம நாட்டுப் பழக்கவழக்கங்கள் எல்லாத்து. மேலேயும் உயிரையே வச்சிருக்கு. மூட நம்பிக்கை, மூடப் பழக்கவழக்கங்களைக்கூட ஏன்னு கேக்காமே கடைப்பிடிக்க அது தயாராயிருக்கு. எங்க படிப்பகத்திலே எந்தக் கூட்டத்திலேயும் கடவுள் வாழ்த்து — வெங்காயம் அது இது எல்லாம்கிடையாது. அண்ணைக்குக் கூட்டத்திலே திடீர்னுயாரும் எதிர் பாராமே அந்தப் பொண்ணு என்ன செஞ்சிச்சித் தெரியுமா விசுவேசுவரன்? பேச்சைத் தொடங்கறத்துக்கு முன்னுடிதானே தன் குரலிலே ஏதோ ஒரு கணபதி ஸ்தோத்திரத்தை முணுமுணுத்துப் பிட்டுத்தான் தொடங்கிச்சு.

''எங்க இயக்க ஆளுங்க ரொம்பப் பேருக்கு அது பிடிச்சிருக்காது. ஆனு அது தமிழ்லே பேசின அழகிலே அத்தினி பேரும் இதை மறந்துட்டானுவ. ரெண்டொரு விடாக் கண்டங்க கூட்டம் முடிஞ்சதும் எங்கிட்ட வந்து கேட்டானுவ. 'அதுனுேட நம்பிக்கைப்படி அது கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கு! நம்மையோ படிப்பகத்தையோ அது பாதிக்காதுன்'னு பதில் சொல்லி அவனுகளை அனுப்பிச்சேன். உங்க ஐயமார் குடும்பத்திலேயே கூட இத்தினி நறுவிசாப் பதவாகமா ஒரு படிச்ச பொண்ணு ரவிக்குப் பொருந்தருப்ல கிடைக்க மாட்டாப்பா. அந்தப் பொண்ணு கமலிக்கு நிறம் மட்டுமில்லே, குணமும் தங்கந்தான்ப்பா... எனக்கு இதிலே ஒளிவு மறைவு எல்லாம் தெரியாது. நிஜத்தைப் பேசினேன். மறைச்சுப் பேச எனக்குத் தெரியாதுப்பா!'' —

''வெளிப்பட வேண்டிய காலத்துக்கு முந்தி வெளிப்படற நிஜங்கள் வதந்தியாயிடும். சில நிஜங்களும் பிரசவிப்பதைப் போலப் பத்து மாதக் காலமோ, அதற்கு மேலோ நிறைந்து பின் வெளிவர வேண்டும். காலத்துக்கு முந்திய பிரசவம் குறைப்பிறவி ஆகியும்விடும் தேசிகாமணீ!''—

''சரிதான்! ஆனு ஒரு பொண் பிரசவிக்கப் போருங்கிறது ஒண்ணும் அத்தினி இரகசியமா இருக்க முடியாதே?''

இதைக் கேட்டுச் சர்மா சிரித்தார். இறைமுடி மணியின் வாதம் முரட்டுத் தனமாக இருந்தாலும் அதை எதிர்த்து சர்மா மேலும் விவாதிக்கவில்லை. இறைமுடி மணி தொடர்ந்தார்:

''அது மட்டுமில்லே விசுவேசுவரன்! இன்னெண்ணையும் தம்பி எங்கிட்டச் சொல்லிச்சு. நடுவிலே ஒருநாச் சாயங்காலம் இப்ப நீயும் நானும் பேசிக்கிட்டிருக்கிற மாதிரி இதே ஆத்தங் கரையிலே தம்பியும் நானும் பேசிக்கிட்டிருந்தோம். அப்ப மனசுவிட்டுப் பலதை எங்கிட்டச் சொல்லிச்சு. எல்லா வெள்ளைக்காரப் பொம்பளைங்களையும் போலக் காதலிச்சாலே கல்யாணமாயிடிச்சின்னுே, மோதிரம் மாத்திக்கிட்டாக் கல்யாணமாயிடிச்சின்னுே அந்தப் பொண்ணு நினைக்கலியாம். இந்த

ஊரு முறைப்படி சாஸ்திர சம்மதத்தோட, ஒரு சடங்கு கூட விடாம, நாலுநாள் கல்யாணம் நடத்தணும்னு ஆசைப் படுதுன்னு தம்பி சொல்லுச்சு! 'என்னப்பா பயித்தாரத் தனமாயிருக்கு? இந்தூர்ல இருக்கறவங்களையே சீர்திருத்தத் திருமணத்துக்கும், பதிவுத் திருமணத்துக்கும் நாங்க தயாராக்கிட்டு வர்ரோம். விஞ்ஞானம் வளர்ந்த தேசத்திலேருந்து வர்ர இளம் பொண்ணு ஒண்ணு இப்பிடிப் பத்தாம் பசலித் தனமா ஆசைப்படுதே' —ன்னு நான் கூடத் தம்பியைக் கேலி பண்ணினேன்! 'இல்லே! இங்கே புறப்பட்டு வர்றப்பவும் வந்தப்புறமும் அதைக் கமலி வற்புறுத்துது'ன்னு தம்பி சொல்லுது. இந்த விஷயத்தை அது தன் பேரண்ட்ஸ் கிட்டவே சொல்லி அந்த மாதிரிக் கல்யாணத்துக்கு ஆகற செலவுக்குன்னு நெறையப் பணம்வேறே வாங்கிக்கிட்டு வந்திருக்குன்னும் தம்பி சொல்லுச்சுப்பா...''

''ஊர் உலகம் ஒரு பக்கம் இருக்கட்டும் தேசிகாமணி! என் மனைவி காமாட்சி இருக்கறவரை அது நடக்கவே நடக்காதுப்பா.'' —

''நீதான் அவங்க மனசையும் மாத்தணும். ஒருத்தரோட முரண்டுக்காக மத்தவங்க தாங்க ஆசைப்படற நல்வாழ்வைக் கெடுத்துக்க முடியாது.'' —

''வக்கீல் நோட்டீஸ் விஷயமா இப்ப என்ன சொல்றே நீ?''

''சும்மா மிரட்டறானுவ! கோர்ட்டுக்கு வந்தா ஒருகை பார்த்துடலாம். நீ தைரியமா இரு. எதுக்கும் பயப்படாதே!''—

வேணு மாமாவின் யோசனையை நண்பனிடம் கூறினார் சர்மா.

''நல்ல யோசனைதான்! நோட்டீஸுக்குப் பதில் எழுதாதே! விஷயம் கோர்ட்டுக்கு வரட்டும் பார்க்கலாம்.''—

மேலும் சிறிது நேரம் பொதுவான பல விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்து விட்டு இருவரும் புறப்பட்டார்கள். தம் கடை முகப்பு வந்ததும் இறைமுடி மணி விடை பெற்றார். அப்போது சர்மாவின் மனம் தெளிவாக இருந்தது. மனம் விட்டுப் பேசியதில் கலக்கங்கள் நீங்கியிருந்தன.

சர்மா வீடு திரும்பிய போது பார்வதி விளக்கு ஏற்றி வைத்துத் தீப நமஸ்காரம் செய்து சுலோகம் சொல்லிக் கொண்டிருந்தாள். காமாட்சி பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் பேசுவதற்குப் புறப்பட்டுப் போயிருக்க வேண்டும் என்று தோன்றியது.

பார்வதியின் சுலோகம் முடிந்ததும், ''பாரு! இங்கே வாம்மா!'' — என்று சர்மா மகளைக் கூப்பிட்டார். பார்வதி அவரருகே வந்ததும் அவளைப் பூஜையறைக்கு அழைத்துச் சென்று, ''ஒரு முக்கியமான விஷயமாப் பூக்கட்டிக் குலுக்கிப் போடறேன். சுவாமிக்கு நமஸ்காரம் பண்ணிட்டு ஒரு பொட்டலம் எடும்மா'' — என்றார்.

பார்வதி அப்பா சொன்னபடியே செய்தாள். அவள் எடுத்துக் கொடுத்த பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்ததும் சர்மாவின் முகம் மலர்ந்தது.

''காயா பழமா அப்பா?''

''பழந்தான் அம்மா'' — பிரித்த பூப் பொட்டலத்தை அப்படியே கண்களில் ஒற்றிக் கொண்டார் அவர். வாசலில் யாரோ படியேறி வருகிற ஓசை கேட்டது பார்வதி எட்டிப் பார்த்து விட்டு, ''அண்ணாவும் கமலியும் கோயில்லேருந்து திரும்பி வராப்பா...'' என்றாள்.

பொன்நிற நெற்றியில் வெளேரென்று விபூதிக் கீற்றும் குங்குமமுமாகக் கமலி சர்மாவுக்கு முன்வந்து, ''கோவில் பிரசாதம்... வாங்கிக் கொள்ளுங்கள்'' — என்று தட்டில் காகிதங்களில் மடித்து வைத்திருந்த விபூதி குங்குமம், வில்வத் தளங்களை அவர் முன் நீட்டினாள்.

தொடரும்)





# எல்லா தேர்வுகளிலும் தேர்ச்சி பெற்றது!

# ஃபோர்ட் 3600

- இணையில்லா செயல் திறன்
- இணையில்லா நம்பிக்கை
- இணையில்லா சிக்கனம்



**எஸ்கார்ட்ஸ் லிமிடெட்**
ஃபார்ம் எக்விப்மெண்ட் டிவிஷன்,
18/4 மதுரா ரோடு, ஃபரீதாபாத்

EL-5140 TAM A



# மல்லிகை மணம்

ருக்மிணி பார்த்தசாரதி

[8]

மாலைப் பொழுது மதிமயக்கும் அழகோடு உலகையே சரணடையச் செய்கிறது...

புஷ்பா பால்கனியில் அமர்ந்திருக்கிறாள்.... எதிரே புஷ்பங்கள் பூத்துக் குலுங்கும் தோட்டம்... பச்சைக் கம்பளமாக விரிந்த புல்தரை... இயந்திரமாக இயங்கும் தோட்டக்காரன்... புல்தரையில் கால்பந்தை உதைத்து விளையாடும் அவள் மகன்... அருகே, அவனுக்குப் பாதுகாப்பாக பொறுப்பான ஆயா....

ஒரு கணம் புஷ்பா தன் வாழ்க்கையின் நிறைவை நினைத்துப் பூரிக்கிறாள்... மைதிலியின் நினைவு வருகிறது... ''உன் ஆசீர்வாதம் தான் எல்லாம்!'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்கிறாள், ஏளனமாக....

அந்த எண்ணம் மறையக் கூட இல்லை... பால்கனியில் குப்பென்று மல்லிகை நெடி... தோட்டத்தில் மல்லிகை மலரே கிடையாதே! அதன் மீதுள்ள வெறுப்பினால் — பயத்தினால் — அதைத் தோட்டத்தில் வளர அவள் அனுமதித்ததே இல்லையே?

நெடி மெள்ள மெள்ளப் படர்கிறது... புகை போல அவளைச் சூழ்ந்து கொள்கிறது... புஷ்பாவின் கண்களில் தாள முடியாத எரிச்சல். மூச்சு அடைக்கிறமாதிரி தள்ளாடுகிறாள்.

எழுந்திருக்கிறாள்... உள்ளே, தன் அறைக்குள், ஓடுகிறாள்... மல்லிகை மணம் அங்கும் அவளைத் தொடர்கிறது, கருநாகம் போல்...

''போய்விடு நீ... போய்விடு... இல்லாவிட்டால்... உன்னை... உன்னை...'' புஷ்பா பல்லை நெரித்துக் கைகளை வீசி, கண்ணுக்குத் தெரியாத தன் விரோதியை விரட்டப் பார்க்கிறாள். மல்லிகை மணம் இப்போது விஷக் காற்றைப் போல் அவளைத் தள்ளாட வைக்கிறது...

மேஜை மீதிருக்கும் பூஜாடியைக் கையில் எடுத்துக் கொள்கிறாள் புஷ்பா... சுவரில், முறுவலித்த முகமாகக் காட்சி தரும் மைதிலியின் புகைப் படத்தை ஓங்கி அடிக்கிறாள்... கணகணவென்று கண்ணாடி நொறுங்கி விழுகிறது... மைதிலி வாய்விட்டுச் சிரிக்கிறாளோ? மல்லிகை மணம் மட்டும் அகலவில்லை...

பைத்தியக் காரியைப் போல் இங்குமங்கும் ஓடுகிறாள் புஷ்பா... பின், சட்டென்று நினைவு வந்தவளாக, தோட்டத்துக்கு ஓடுகிறாள்... தனிமை கூடாது... அருகே யாராவது இருந்தால் இந்த நெடி அவளை இப்படித் தொடராது.

இதயத்தின் பீதி அடங்க வெகு நேரமாகிறது. உடலெல்லாம் நடுநடுங்கித் துடிக்கிறது..''என்னம்மா? என்ன?'' ஆயா அவளைப் பரிவோடு விசாரிக்கிறாள். ... அவளுடைய நாவுதான் வறண்டு விட்ட மாதிரி அசைய மறுக்கிறது...

எத்தனை தடவை இப்படி நடந்து விட்டது! எத்தனை ஆண்டுகள்? எத்தனை எத்தனை ஆண்டுகள்?

ஒரு வேலைக்காரியைத் தன்னோடு எப்போதும் இருக்கிறமாதிரி அமைத்துக் கொண்டாள் புஷ்பா.. அப்படியும் அந்த மல்லிகைமணம் தருணம் பார்த்து அவளை வாட்டத்தான் செய்தது. அதன் கற்பனையில், அதன் பீதியில் — அஞ்சி அஞ்சியே — வாழ்ந்து வந்தாள் புஷ்பா.

ஆண்டுகள் மறைந்தன.....

ராகவனை அவள் மணந்து பதினெட்டு ஆண்டுகள் கழிந்து விட்டன... அவளுடைய பதினாறு வயது மகன் இன்னும் பள்ளியைத் தாண்டவில்லை... மைதிலியின் மகனோ மருத்துவக் கல்லூரியிலிருந்து தேர்ச்சி பெற்று விட்டான்.

ஒவ்வொரு ஆண்டும் கோடை விடுமுறையின் போது, அவன் தன் தந்தையிடம் வருவான்... அந்த நாட்கள்தாம் ராகவனின் வாழ்வில் பொன்னான நாட்கள். மகனோடு கழிக்கும் ஒவ்வொரு கணத்தையும் அவன் பொக்கிஷமாகக் கருதி வந்தான் என்பது புஷ்பா அறிந்த விஷயம்தான். ''அருகிலேயே இரண்டாவது மகன் இருக்கிறான்... அவனோடு அதிகம் பேசுவது கூட இல்லை... அப்படியென்ன மைதிலியின் பிள்ளை உயர்த்தி!'' என்று புஷ்பா பொருமுவாள். நெஞ்செல்லாம் கசந்து போகும்.

அந்தக் கசப்பு அவளை இரண்டாவது முறையாக மிருகமாக்கிற்று. (தொடரும்)

# குடும்ப கௌரவம்

## ஜயேந்திரன்

சாப்பிட்டு முடிச்சுட்டு டிபன்பாக்ஸைக் கூட அலம்பிண்டு வந்துட்டேன். இன்னும் கூடக் கலாவைச் சுத்தியிருக்கிற அந்தக் கும்பல் கலையவேயில்லே.

கலா முகத்தைச் சுளிச்சி, கைகளை நொடிச்சி, ஏதோ சேஷ்டைகள் பண்ணிண்டிருக்கா. அவளைச் சுத்தி உக்காந்துண்டிருக்கிற விஜி, ரமா, ராதிகா, மத்த பெண்கள் எல்லாரும் ஒரேயடியாய்க் கைகொட்டிச் சிரிச்சிண்டிருக்கா.

எனக்கு வேதனையா இருக்கு.

புரியறது. கலா தன் மாமியாரோட உருவத்தைத்தான் சேஷ்டைகளோட வர்ணிச்சிண்டிருக்கா.

இப்போ ரமா, கீச்சுக் குரல்லே ஏதோ பேசறா. ஒரே கலகலப்பு. தன் நாத்தனாரோட குரலைத்தான் ரமா இமிடேட் பண்றா.

இப்போ விஜியோட 'டர்ன்.'

எனக்கு மனசு லேசா வலிக்கிறது. இந்த மாதிரி அவா பண்ற கேலிக் கூத்துக்களை நான் இது வரைக்கும் நூறு தடவையாவது பார்த்திருப்பேன். கொஞ்ச நாளைக்கு நான் கூட ரசிச்சேன். ஆனா மெள்ள மெள்ள இந்தப் பெண்கள் மேலே எனக்கு வெறுப்பு உண்டாயிடுத்து. மாமியாரோட பெருமூச்சு, மாமனாரோட அசட்டுத் தனம், மச்சினரோட காதல் லீலைகள், நாத்தனாரோட அட்டகாசங்கள் — இவாளுடைய கூட்டங்களோட 'ஸப்ஜெக்ட்' இதுதான்.

நான் இந்தக் கும்பலிலிருந்து மாறுபட்டவள். கொஞ்சம் கொஞ்சமா, அவா மத்தியிலிருந்து நான் என்னையே விலக்கிண்டுட்டேன்.

'லொட்'டுன்னு விஜி வந்து டிபன் பாக்ஸை வெக்கற சத்தம் கேக்கறது. 'அரட்டை'க் கச்சேரி முடிஞ்சுடுத்து போல இருக்கு.

இந்தப் பெண்கள் கிட்ட, நான் இதைப் பத்தி விவாதிச்சுப் பேசறதேயில்லே. கேட்டா, என்ன சொல்லப் போறான்னு தெரியும். ''நாங்கள்ளாம் 'ஓபனா' பேசறோம். உனக்கு அது பிடிக்கல்லே. நீ ரொம்ப அழுத்தக் காரி.'' அப்படீன்னுதானே பதில் வரும்.

இனிமேல் நாளைக்கு 'லஞ்ச்' நேரத்துக்கு, 'லேடீஸ் ரூம்' போற வரைக்கும் எனக்கு இந்த நினைப்பு வர்றதுக்கு சான்ஸ் இல்லே. நிம்மதியா பெருமூச்சு விடணும் போல் இருக்கு.

எதிர் ஸீட்டிலே ஏதோ சப்தம் கேக்கறது. ஆமாம். விஜிதான், அக்கௌண்டன்ட் கேதார்நாத் கிட்டே, தன்னுடைய வீட்டிலே நடந்த ஒரு சம்பவத்தைச் சொல்லிண்டிருக்கா, அவரும் ரசிச்சுக் கேட்டுண்டிருக்கார். எனக்கு அது நாராசமா காதுலே விழுந்துண்டிருக்கு.

''சார்! நாளைக்கு லீவு வேணு''ம்னு கேட்டவுடனேயே ஹெட் கிளார்க் அர்த்த புஷ்டியோட பார்த்தார். ''சுஜா! பெஸ்ட் ஆஃப் லக்''னு சிரிச்சார்.

இதோட நாலு பேர் என்னை வந்து பெண் பார்த்தாச்சு. ஒண்ணும் வெற்றி பெறல்லே! இந்த வரனை முடிக்க அப்பாவும் அம்மாவும் பெரு முயற்சி செய்கிறார்கள். சொஜ்ஜி பஜ்ஜி விவகாரத்துக்குப் பிறகு 'பிடிச்சிருக்கு'ன்னு நல்ல சேதியும் காதிலே விழுந்தது! எங்க குடும்பமே சந்தோஷத்தில் மூழ்கியது.

'ஒரு மாசம்' லீவு அப்ளை பண்ணினப்போதான், ஹெட்கிளார்க் கேட்டார், ''சுஜா, எப்போ கல்யாணம்?''

ஸெக்ஷனே என்னைத் துளைக்கிற மாதிரி பார்த்தது. ''நல்ல அழுத்தக் காரிதான்'' அப்படீன்னு அவாள்ளாம் நினைக்கிற மாதிரி எனக்குத் தோணித்து. இன்விடேஷனை எல்லாருக்கும் டிஸ்ட்ரிப்யூட் பண்ணின உடனேதான் 'லேடீஸ் ரூம் அரட்டைக் கும்பல்' சுறுசுறுப்பாச்சு. ''நீ போயிட்டு வா. பார்த்துக்கறோம் ஒரு கை'' அப்படீங்கிற மாதிரி அவா சொல்ல நினைக்கிறதை, அவாளுடைய ஏளனப் பார்வையே எனக்குக் காட்டிடுத்து.

சரசரக்கும் பட்டுப் புடவை, மேளம், கல கல சிரிப்பு, கேலி, அந்தப் புது ஸ்பரிசம், எல்லாமே எனக்குப் புது உணர்ச்சியைத்தந்தன. அதே சமயத்திலே புகுந்த வீட்டைப் பத்தின என்னோட கணிப்புக்களும் வேகமா வளரத் தொடங்கின. அப்பா எவ்வளவோ செலவு செஞ்சி, கஷ்டப்பட்டு, ஃபிக்ஸ் பண்ணின அந்தச் சத்திரத்துலே, பாதி காலியாவே இருந்தது. ஏன்? அந்த லைட் மியூசிக் ப்ரோக்ராம்லேகூட, முக்கால்வாசி நாற்காலிகள், காலியாவேதான் இருந்தன. நூறு கார் வரும்னு சொல்லியிருந்தா, ஆனா, கல்யாணத் தன்னிக்கு நாங்க ஏற்பாடு பண்ணின டாக்ஸி மட்டும்தான் வாசல்லே நின்னுது.

வெறும் படாடோபமும், பகட்டும், வாய்ப் பேச்சும் மட்டும்தான், பெரிய மனுஷத் தனத்துக்கு அடையாளம்னு நினைக்கிற கும்பல்ல, இவாளும் ஒருத்தர் தான்னு எனக்கு அப்பவே புரிஞ்சு போச்சு.

நான் சத்திரத்தை விட்டு அவாளோட கிளம்பினப்போ, அப்பாவும், அம்மாவும், குலுங்கிக் குலுங்கி அழுதுட்டா. அப்பா என்னை எவ்வளவு செல்லமா வளர்த்தார்.

புதிய இடத்துலே, புதிய யுகத்துலே, புதிய மனுஷா நடுவிலே, நான் புதிய பிறவியே எடுத்துட்ட மாதிரி இருந்தது.

எனக்கு என்னமோ என்னைக் கூண்டிலே கட்டிப் போட்ட மாதிரிதான் இருக்கு. எங் காத்துலேதான் நான் எவ்வளவு சுதந்திரமா பறந்திண்டிருந்தேன்?

ரெண்டுநாள் முழுக்க அந்த அறையே கதியாயிருந்தேன். அப்புறம்தான் மெள்ள மெள்ள வெளியே வந்தேன். என்னைச் சுத்தியிருக்கற, அந்தப் புதிய உறவுக்காராளைப் பத்தியும், புரிஞ்சிக்க ஆரம்பிச்சேன்.

முதல் ரெண்டு நாள் பாதியிலேயே சாப்பிடறதை, நிறுத்திண்டு எழுந்துட்டேன்.

மூணாவது நாள் ''ஒரு சினிமாவுக்கு போகலாம், ரெடியா இரு''ன்னு சொல்லிட்டு வெளியே போன அவர், ராத்திரி பதினொரு மணிக்குத்தான் வந்தார். ''மறந்து போயிட்டேன்''னு சொன்னார். சின்ன விஷயங்களைக் கூட ஸ்திரமாக முடிவு பண்ற பழக்கம் இல்லாதவர் அவர்னு எனக்குப் புரிஞ்சு போயிடுத்து.

சில நேரங்களிலே, என் கிட்டேயே அவர் அலுத்துக்கிறது, ''ஏண்டா, இவளைக் கல்யாணம் பண்ணிண்டோம்''னு ஃபீல் பண்ணற மாதிரிகூட இருக்கு.

மாமியார், இந்த ஆறுநாளா என்னைப் பார்த்து ஒரு வார்த்தைகூட பேசலே. என்னைப் பார்த்தாலே முகத்தைச் சுளிச்சுக்கிறா. இப்பத்தான் விஷயம் புரியறது. பக்கத்தாத்து மாமி, மாமியார் இல்லாத சமயத்துலே, எங்கிட்டே பேசிண்டிருந்தப்போ சொன்னாள். மாமியார், இவருக்குத் தன்னுடைய அண்ணா பெண்ணைத்தான் கொடுக்கணும்னு ரொம்ப நாளா சொல்லிண்டிருந்தாளாம். ஆனா, கல்யாணம் பண்ணனும்னு முடிவு பண்ணப்போ, மாமனார், ''வேற எங்கேயாவது வெளியிலேதான் சம்பந்தம் பண்ணிக்கணும்''னு கண்டிப்பா சொல்லிட்டாராம். பலன் — என் மாமியாரைப் பொறுத்த வரைக்கும் நான் இப்போ வேண்டாத விருந்தாளி.

என் மாமனார் — பார்க்கிறதுக்கு என்னவோ சாதுவாகத்தான் இருக்கார். ஆனா மனுஷனுக்கு மூக்குமேல் கோபம் ரெடியாயிருக்கு.

மச்சினர் — காலங் கார்த்தாலேயே நான் எழுந்திருக்கறதுக்கு முன்னாலேயே கிளம்பிடறார் போல் இருக்கு. ராத்திரி நான் தூங்கப் போறப்பதான் திரும்பி வரார். ஏதோ கம்பெனியிலே மெக்கானிக்கா இருக்கார். ஏதோ எங்கிட்ட அவர் சொல்ல நினைக்கிறார்னு எனக்குப் புரியறது. எங்கிட்ட அவர் பேச வறப்போ, அம்மா அந்தப் பக்கம் வறதைப் பார்த்துட்டா, அலறி அடிச்சுண்டு ஓடிடறார்.

என்னைச் சுத்தி இருக்கிற அந்த விசித்திரமான குணங்களோட இருக்கிற, அந்த மனுஷாளையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா புரிஞ்சுண்டு வறேன். எனக்கு இந்த இடம் தானே சாஸ்வதம். என்னை இந்த வளைக்குள்ளேயே, இவா அத்தனை பேரிலும் ஒருத்தியா, கலந்துக்க, என்னுடைய பழக்கவழக்கங்களையும், மனசையும், சமன் படுத்திக்க ஆரம்பிச்சுட்டேன். வரவர, இவாளுடைய செய்கையெல்லாம் எனக்குப் பழக்கமானதாக ஆயிண்டிருக்கு.





''என்ன சார் அவர் இப்படித் திடீர்னு மாறிப் போயிட்டார்! எப்பப் பார்த்தாலும் எரிஞ்சு விழறார்?''
''ஆமாம். விறகுக் கடை வைச்சதிலிருந்தே அவருக்கு யாரைப் பார்த்தாலும் பத்திக் கிட்டுத்தான் வருது!''
''சிவம்''

ஒருநாள் சாயந்திரம் மணி நாலு இருக்கும். நானும், அவரும், வடபழனி கோயில் போற துக்காகத் தயாராயிண்டிருக்கோம். திடீர்னு ஒரு கூச்சல் கேட்டது. நான் அலறி அடிச்சிண்டு ஹாலுக்குப் போனேன்.

''அவளை யார்டீ உள்ளே விட்டது. ஓடுகாலி. இனிமேல் இங்கே வராதேன்னு சொல்லியிருந்தேனே. என் முகத்திலே விழிக்காதேன்னு, அன்னிக்கே உனக்கும், எனக்கும் இருந்த பந்தத்தை அறுத்துட்டேனே. ஏண்டி திரும்பி வந்தே?'' — மாமனார் தொண்டை கிழியக் கத்திண்டிருந்தார்.

''ஏன்னு சத்தம் போடறேள். அவ எப்படியிருந்தாலும், நம்ம பொண்ணுதானே'' அழுதுண்டே திருப்பிக் கத்தினாள் மாமியார்.

வாசல்லே ஒரு பெண், கையிலே குழந்தையோட நின்னுண்டிருந்தா. குழந்தை, அந்தக் கத்தலைக் கேட்டு அழுதிண்டிருந்தது. ஓ! இவ...நான் இதுவரைக்கும் பார்க்காத, கேட்காத இந்த வீட்டுப் பெண்ணா?

''அம்மா... மன்னியை...'' அந்தப் பெண் ஏதோ சொல்ல வந்தாள்.

''ஓஹோ... அன்னிக்கு எவனையோ இழுத்துண்டு ஓடச்சே நாங்கள்ளாம் கதறினது உனக்குத் தெரியலே. இன்னிக்கு மன்னியை, ஆசையா பார்க்க வந்துட்டியா? கெட் அவுட்... நாயே... இனிமேல நீ இந்தப் பக்கம் வந்தே.. அவ்வளவுதான்'' ருத்ர தாண்டவம் ஆடிண்டிருந்தார் மாமனார்.

இவர் ''ப்ளீஸ்...அப்பா... கத்தாதீங்கோ. மானம் போறது''ன்னு கெஞ்சிண்டிருந்தார்.

அந்தப் பெண்ணோ, தாரை தாரையாக் கண்ணீர் வழிய, திரும்பிப் போயிண்டிருந்தா.
எனக்கு எல்லாமே புரிஞ்சு போச்சு.

அந்தப் புயலுக்கப்புறம் சில நிமிஷத்திலே, வீடு அமைதியாயிருந்தது. கோயிலுக்குப் போற ப்ரோக்ராம்லே மண் விழுந்துடுத்து. அன்னிக்கு முழுக்க யாரும், யாரோடையும் பேசவேயில்லே. யாரும் சாப்பிடவும் இல்லே.

மறுநாள் கார்த்தாலே எழுந்தவுடனேயே அவர், என்னைக் கூப்பிட்டு, ''சுஜா, நீ இன்னிலேந்து ஆபீசுக்குப் போக ஆரம்பிச்சுடு. லீவை கட் பண்ணிட்டுப் போய் ஜாயின் பண்ணிடு''ன்னார்.

எனக்குப் புரிஞ்சுடுத்து. தங்களுடைய வீட்டு விஷயங்களைக் கொஞ்ச நாளைக்காவது எனக்குத் தெரியாம வச்சிக்கணும்னு நினைக்கிறார். ஆனா, நான் இவாளையெல்லாம் எவ்வளவு தூரம் 'ஸ்டடி' பண்ணி வச்சிருக்கேன்னு இவருக்குத் தெரியாதே.

மறுநாள் ஆபீஸுக்குப் போனவுடனேயே, எல்லாருக்குமே ஆச்சர்யம்தான். நான் அவ்வளவு சீக்கிரம் லீவை 'கட்' பண்ணிட்டு வருவேன்னு, யாருமே நினைக்கலே.

லஞ்ச் டைம் வந்தது. டிபன் பாக்ஸை எடுத்துண்டு லேடீஸ் ரூமுக்குப் போனேன். என்னை எதிர்பார்த்துக் கலா, விஜி, ரமா, ராதிகா எல்லோரும் உட்கார்ந்திண்டிருக்கா.

''சுஜா... ஹௌ ஈஸ் யுவர் மேரிட் லைஃப்? உங்க மாமனார், மாமியார், நாத்தனார் எல்லாம் எப்படி?'' — கலாதான் கேட்டாள்.

மெள்ளக் கண்களை மூடிண்டேன்.

என் மனக் கண் முன்னாலே மாமனார் வந்தார், அவரோட அசாத்தியக் கோபமும் கூடவே வந்தது. என்னை அந்நிய மனுஷியா நினைக்கிற மாமியாரும் வந்தா, தினம் இரவு வெகு நேரம் கழித்தே வீடு திரும்பும் மச்சினரும் வந்தார். ஸ்திரமான முடிவெடுக்க முடியாத என் 'அவ'ரும் வந்தார். அழுதுண்டே தெருவிலே நின்ற நாத்தனாரும் பரிதாபமாத் தெரிஞ்சா.

இந்தக் கலா அண்ட் கோவுக்கு இப்ப நான் என்ன பதில் சொல்ல முடியும்?

அவாளைப் பத்தி யெல்லாம், நன்னா விவரமா நான் இவாளுக்குச் சொல்ல முடியும். ஆனா, நான் புகுந்த வீட்டினுடைய மதிப்பு, இவா மத்தியிலே தூசிக்குச் சமானமாயிடும்.

ஒரே நாள்லே அந்தக் கௌரவத்தை நான் தவிடு பொடியாக்கிடலாம். ஆனா, அந்த இடிபாடுகள் நடுவிலேதான் நானும் ஒருத்தியா வாழ்ந்தாகணும்.

அந்த வீட்டு மருமகளா காலடி எடுத்து வச்ச அன்னியிலிருந்தே, எனக்குன்னு சில கடமைகள் வந்து சேர்ந்துடுத்து. அந்த வீடு இப்போ, கள்ளிச் செடியும், கோரப் புல்லும் நிறைஞ்ச பாழடைஞ்ச கோயிலா இருக்கு. அதைச் சீர்ப்படுத்தி, செப்பனிட வேண்டிய பொறுப்பு என்னோடது.

''என்னடி, இது? கண்ணை மூடிண்டு மௌனியாயிட்டே....'' விஜிதான் கேட்டா.

''ஹூம்.'' — நான்.

''மாமியார், மாமனாரெல்லாம் எப்படி?'' திரும்பவும் கேட்டாள் கலா.

''தே ஆர் வெரி நைஸ். எங்கிட்ட எவ்வளவு அன்பா இருக்கா தெரியுமா? ரியலி, நான் ரொம்பக் கொடுத்து வச்சவடி.'' பதில் சொல்லிவிட்டு வேகமாக எழுந்து நடந்தேன்.

அறையை விட்டு வெளியே வந்து திரும்பிப் பார்க்கறேன். அவலை எதிர்பார்த்துக் காத்திருந்த கலா அண்டு கோவினுடைய கண்கள்லே இப்போ பெரிய ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது எனக்குப் புரியறது.

எனக்கு இப்போ மனசுலே பெருமை நிரம்பி வழியறது.

# மல்லிகை மணம் ௭





ருக்மிணி பார்த்தசாரதி

கோடை விடுமுறைக்காக மைதிலியின் மகன் வந்திருந்தான்...

ஆண்டுதோறும் வருபவன் தான்... அவன் வளர்ச்சியை எந்த விதமான மகிழ்ச்சியோ பூரிப்போ இன்றிக் கவனித்து வந்தவள்தான் புஷ்பா... ஆனால் இந்த முறை அவன் வந்த போது அவள் இதயத்தில் வேல் பாய்ந்தது. எத்தனை லட்சணமாக இருக்கிறான் அவன்! மைதிலியின் சிரிப்பிலிருந்த அதே அழகின் ஆகர்ஷணம்... ஆறடி உயரம்... தந்தையின் சிவந்த நிறம்... அகன்ற தோள்களும் மார்பும் நிதானமான நடையும், நேர்ப் பார்வையும் — கஜ கம்பீரம் தான்...

அருகேயிருந்த தன் மகனையும் பார்த்தாள் புஷ்பா... வளர்த்தியே இல்லை... சிவந்த நிறம்தான்... ஆனால் அண்ணன் அருகே நின்ற போது சிங்கத்துக்கருகே பூனை நிற்கிற மாதிரி தான் இருந்தது.

'மைதிலி! நீ அதிர்ஷ்டசாலி.... இத்தனை வருடங்களுக்குப் பிறகும் உன் கணவனின் மனத்தில் அரசியாய் வீற்றிருக்கிறாய்... தேஜஸ்வியாகத் திகழ்கிறான் உன் மகன்... இந்த அதிர்ஷ்டத்தைப் பெற உன்னிடம் என்ன தகுதி இருக்கிறது? என்னிடமில்லாத எந்தத் தனித் தகுதி உன்னிடம் இருக்கிறது?' புஷ்பாவின் மனம் உள்ளுக்குள்ளே பொருமி ஒடிந்து போயிற்று.

ராகவன் அவளிடம் பேச்சோடு பேச்சாகச் சொன்னான்... ''பிஸினஸ்மான் கோவிந்தனைத் தெரியுமல்லவா? அவர் என் சம்பந்தியாக விரும்புகிறார்... தம் ஒரே மகளை என் மகனுக்குக் கொடுக்க விரும்புகிறார்!''

செய்தியின் சாராம்சமே புஷ்பாவை அதிர வைத்தது. லட்சாதிபதியின் மகளா மைதிலிக்கு மருமகளாக வரப் போகிறாள் என்ற ஆத்திரம். ஆனால் அதைவிட அதிகமாக உறுத்திற்று, ராகவன் விஷயத்தைச் சொன்ன விதம். 'என் மைதிலியின் மகனுக்கு ஈடு இணை உண்டா!' என்றல்லவா ராகவன் சொல்லாமல் சொல்கிறான்! 'உனக்கு இந்தப் பெருமையில் பங்கில்லை!' என்றுதானே முகத்தில் அறைந்த மாதிரி சொல்கிறான்!

நெஞ்சில் சாட்டையடி விழுந்த மாதிரி வலித்தது... அந்த வலியை அதிகப் படுத்துவதைப் போல், அவள் மகனும் மைதிலியின் மகனும் அடுத்த அறையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''அண்ணா? நீ எனக்கு டென்னிஸ் விளையாடக் கற்றுத் தருவாயா?''

''ஓ! இன்று மாலையே ஆரம்பிக்கலாம்...''

''சரி!... அண்ணா... இப்போது மாட்டினி ஷோ போகலாமென்று பார்த்தேன்... அம்மா பணம் தர மாட்டேன் என்று சொல்லி விட்டாள்!''

''நான் தருகிறேன்!'' ஒரு நூறு ரூபாய் நோட்டைப் பரிவோடு தம்பியிடம் தந்தான் அண்ணன்.

''வேண்டாம்... அம்மா கத்துவாள்...''

''நான் சொல்லிக் கொள்கிறேன், உன் அம்மாவிடம்!''

''அப்புறம் உன்னைப் பார்த்தும் அவள் கத்துவாள்!''

''என்னைப் பார்த்தா? உன் அம்மாவா?'' அவன் சிரித்தான்... மைதிலியே ஏளனமாகக் கைகொட்டிச் சிரிப்பதாய் புஷ்பா உணர்ந்தாள்... உள்ளம் கோபத்தில் குமுறிற்று. 'நீ பிச்சையா தருகிறாய் என் பிள்ளைக்கு? உன் தகப்பனின் ஐசுவரியத்தில் அவனுக்குச் சம பாத்தியதை இருக்கிறது.'

சட்டென்று இதயத்தில் ஒரு விபரீத எண்ணம். 'மைதிலியின் மகன் இல்லா விட்டால்... நானும் என் பிள்ளையும் தானே சொத்து முழுவதையும் அனுபவிப்போம்!'

அடுத்த அறையில் அவள் மகன் வெகுளித்தனமாகத் தன் அண்ணனிடம் சொல்லிக் கொண்டிருந்தான்... ''அண்ணா! அடுத்த வாரம் நாமெல்லாம் ஏதாவது ஹில் ஸ்டேஷனுக்குப் போகலாமா?''

''ஓ! போகலாமே!''

புஷ்பாவின் மனம் விழிப்பு அடைந்தது. என்ன சொல்கிறான் அவள் மகன்! 'ஹில் ஸ்டேஷனா?'

''எனக்கு ஹைகிங் என்றால் மிகவும் பிடிக்கும்!'' என்றான் அவள் மகன்.

''எனக்கும்!'' என்றான் மைதிலியின் மகன்.

புஷ்பாவின் கண்கள் ஜ்வலித்தன...

(தொடரும்)

ஜரிகை வேட்டியும் கைமடித்து விட்ட சட்டையுமாக அவன் முழுக்க முழுக்கத் தமிழனுகப் புது தில்லி மண்ணில் காலெடுத்து வைத்த பொழுது புதியதோர் உலகம் தென் பட்டது அவனுக்கு. எப்படியோ கஷ்டப் பட்டு ஒரு விடுதியில் இடம் பிடித்துக் கொண்டு கரோல் பாக்கில் ஜாகை தேடும் படலத்தில் இறங்கினுன்.

அவ்வளவு பெரிய டில்லிப் பட்டணத்தில் ஓர் அறை கிடைப்பது கூட அத்தனை கடின மாக இருந்தது.

''பர்சாத்தியில் ரூம் இருக்கிறது வேண் டுமா?'' என்ருர் ஒருவர். புரியாமல் திரு திருத்த சுந்தர் பர்சாத்தியா பார்த்த சார தியா என்று சந்தேகப்பட்டு 'எங்கே' என்ருன்.

அவர் அவன் கையைப் பிடித்து இறுகப் பற்றித் தரதரவென்று இழுத்தவாறு மாடிப் படிகளில் ஏறினுர்.

மனுஷர் இரண்டாவது மாடி வந்ததும் தான் கையை விட்டார். அங்கிருந்த அறை யைத் திறந்து காண்பித்தார்.

சாப்பாடோ 'மெஸ்ஸில்' கழிந்து விடும். பகல் பொழுது முழுதும் ஆபீஸில் போய் விடும்.

கீழே ஐயங்காரும், சென்குப்தா என்கிற வங்காளியும் இருந்தார்கள். முதல் மாடியில் தல்வார் என்கிற பஞ்சாபியும் அகர்வால் என்கிற உத்தரப் பிரதேசக் காரரும். எல் லோர் தலைக்கும் மேல் கோபுர உச்சியில் சுந்தர்!

ஒருநாள்... அவன் அலுவலகத்திலிருந்து திரும்பிய பொழுது மூச்சு முட்டப் பின்னல் ஓடிவரும் கிஷோர் - அகர்வாலின் எட்டு வய துப் பையன் வழக்கம் போல் வரவில்லை. அறைக்கு வெளியில் சுராயில் நீர் மட்டும் இருந்தது. அறைக்கதவை யாரோ லேசா கத் தட்டினுர்கள்.

கதவைத் திறந்த பொழுது ஆச்சரியம் அகர்வாலின் மகள் - கிஷோரின் அக்கா நிஷாவின் உருவத்தில் அங்கு நின்றிருந்தது. மங்கியதோர் நிலவில் கண்ட அழகுத் தெய்வ

# பர்சாத்தியில் ஒரு பிரம்மச்சாரி

லட்சுமி ரமணன்



கோடை காலத்தில் மாடியில் திறந்த வெளியில் படுத்துக் கொள்பவர்கள் மழை திடீரென்று வந்துவிட் டால் ஒதுங்கக் கட்டிக் கொள்ளும் அறை தான் பர்சாத்தி என் பது என்று அவர் விளக்கினுர். ஓர் அறை யும் குளியலறையும் இருந்தன. அதற்கே நூற்றி ஐம்பது ரூபாய் வாடகை. குடிநீர் அவன் கீழே இருக்கும் குடித்தனக்காரர்கள் யாரையாவது சிநேகம் பிடித்துக் கொண்டு அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும்.

சுந்தருக்கு இடம் பிடித்து விட்டது.

ஒப்புக் கொண்டு முன் பணம் கொடுத்து விட்டு அரை மணிக் குள் பெட்டி படுக்கை யுடன் குடிபுகுந்தான்.

மெனத் தோற்றம். உடல் முழுவதும் மூடிய மாக்ஸி உடை.. காதில் ஊசலாடிய வளை யங்கள். பிரகாசமான முகம். அவளை அதற்கு மேல் வர்ணிக்கத் தெரியவில்லை அவனுக்கு. அவனைக் கண்டதும் அவள் பரபரப்பு வழிய ''கிஷோருக்குக் காலையிலிருந்தே நல்ல ஜுரம். அப்பா வேலை விஷயமாக டூர் போயிருக்கிருர். சாதாரண ஜுரம்தான் என்று நினைத்து மருந்து ஏதோ கொடுத்தோம். குறையவில்லை. எங்கள் குடும்ப டாக்டர் பூசா ரோட்டில் இருக்கிருர். விலாசம் தருகிறேன். போய் அழைத்து வர முடியுமா?'' என்று தெளி வான ஆங்கிலத்தில் கேட்டாள்.

டாக்டரை அழைத்து வந்து அவர் கிஷோரைப் பரிசோதித்து ஃப்ளூ ஜுரமாக இருக்கலாம் என்று அனுமானித்து எழுதிக் கொடுத்த மருந்தையும் சுந்தர் உடனடியாக வாங்கி வந்தான்.

மருந்தைக் கொடுத்து விட்டு விடை பெற்றுக் கொண்டவனை வாயில் வரை வழி யனுப்ப வந்த நிஷா ''ரொம்ப ஸாரி! உங்க ளுக்கு ரொம்ப சிரமம் கொடுத்து விட்டேன்'' என்ருள் வருத்தம் தொனிக்க.

''நிஷா அப்படிச் சொல்லாதே. ஒருவருக்கு மற்றவர் இந்த அளவில்கூட உதவி செய்து கொள்ளா விடில் மனிதனுக வாழ்ந்து என்ன பயன்? நீ தப்பாக நினைக்கா மாட்டாய் என்ருல் ஒன்று கேட்கலாமா?''

''கேளுங்கள்'' என்று தலையசைத்தாள் அவள்.

''கிஷோர் ஏன் பேச மாட்டேன் என்கிறான்? ஏதாவது,'' ...

நிஷாவின் விழிகள் பளபளத்தன.

''அவனுக்கு ரொம்ப தாழ்வு மனப்பான்மை உண்டு. அதுவும் புதியவர்களைக் கண்டால் வாயையே திறக்க மாட்டான். காரணம் அவனால் நம்மைப் போல் கோவையாகப் பேச முடியாது. நடுவில் ஸ்டாமரிங் வந்து விடும். எல்லா வைத்தியமும் பார்த்தாச்சு.''

''அப்படியா?'' என்றான் சுந்தர் வியப்புடன்.

ஏதேதோ நினைவுகளில் ஆழ்ந்து விட்டிருந்த சுந்தர் இரவு நெடு நேரத்துக்குப் பின்னர் தான் தூங்கி இருக்க வேண்டும்.

அந்த அலுப்பில் பொழுது நன்றாக விடிந்தபிறகே அவனுக்கு விழிப்பு ஏற்பட்டது. ''மிஸ்டர் சுந்தர்...'' கதவை யாரோ தட்டின மாதிரி, இருந்தது.

தட்டில் ஆவி பறக்கும் தேனீர், சிற்றுண்டி சகிதம் நிஷாதான் நின்றிருந்தாள்.

''குட் மார்னிங். கிஷோர் எப்படி இருக்கிறான்.''

''தேவலை. இப்பொழுது கண் விழித்துக் கொண்டு சியர்புல் ஆக இருக்கிறான். இரவு உங்களைத் தொந்தரவு செய்துவிட்டேன். .''

''மறுபடி சொன்னால் இந்த டீ, டிபன் எதையுமே தொடாமல் திருப்பி அனுப்பி விடுவேன்'' என்று பயமுறுத்தினான் சுந்தர்.

அதன்பின் அவள் அவனைத் தேடி அடிக்கடி வந்தாள். புத்தகம் எடுத்துப் போகும் சாக்கில். கடிதங்களைக் கொடுக்கிற பாவனையில். தொடர்ந்து சில நிமிட உரையாடல்கள் விமரிசனங்களின் பரிமாறல்கள். அவை போதும் அவன் மனத்தை நிறைப்பதற்கு சுந்தர் தன்னையும் அறியாமல் தன் உள்ளத்தை அவளிடம் இழந்து கொண்டிருப்பதை உணரத்தான் செய்தான்.

ஒவ்வொரு முறை சந்தித்த பொழுதும் ஒரு புது அழகு தெரிந்தது அவளிடம். அவளைக் காணாத நாட்கள் யுகங்களாய் நீண்டன.

ஒரு • நாள் திடீரென்று ''ஏதாவது சினிமாவுக்குப் போய்வரலாம். வருகிறீர்களா சுந்தர். என் அம்மாவைக் கேட்டேன் உங்களுடன் போகச் சொல்லுகிறாள்'' என்றாள்.

## போட்டிக்கதை • 18





இளம் குற்றவாளிகளுக்குப் பெரிய தண்டனை கொடுக்க வேண்டாம் என்று ஐஸ்லாந்து அதிகாரிகள் தீர்மானித்திருக்கிறார்கள். அப்படிப் பிடிபட்ட குற்றவாளிகளைக் குறிப்பிட்ட காலம் வரை சமூக சேவையில் ஈடுபடுத்துகிறார்கள். குற்றவாளிகள் அடுத்த குற்றத்தைப் பற்றிச் சிந்திப்பதே இல்லை. —யு. பி. ஐ. - ஆர்.எம்.



அந்த அழைப்பு அவனுக்குக் கண நேரத் திகைப்பைத் தராமல் இல்லை.

சுந்தர் ஒப்புக் கொண்டு அவளை அன்று ஆங்கில படம் ஒன்றுக்கு அழைத்துப்போனான். அருகருகே அமர்ந்து படம் பார்த்த பொழுது 'நிஷா நான் உன்னை விரும்புகிறேன். நான் உன்னை நேசிக்கிறேன்' என்று படபடத்தது மனம். காட்சி முடிந்து இருவரும் ஆட்டோவில் வீடு வந்து சேர்ந்தார்கள்.

படம் பார்த்து விட்டு வந்து இறங்கிய பொழுது வீட்டு முன்னால் தல்வாரின் மகன் பூஷண் தல்வார் நின்று கொண்டிருந்தான். உள்ளே ஐயங்கார் ஏதோ கத்திக் கொண்டிருப்பது தெரிந்தது.

''சுந்தர் ஒரு நிமிஷம் உன்னோடு பேச வேண்டும்'' என்றான் பூஷண்.

நிஷாவை மேலே வீட்டுக்குப் போகும்படி சொல்லி விட்டு ''சொல், பூஷண்! என்ன சமாசாரம்?'' என்றான் அவன்.

''நானும் வசந்தாவும் 'லவ்' பண்ணுகிறோம். வீ வாண்ட் டு மாரி. அதை இத்தனை நாள் வெளியில் எப்படிச் சொல்வது என்று தயங்கிக் கொண்டிருந்தோம். இந்த வருஷத்தோடு என் படிப்பு முடிகிறது. வசந்தாவுக்கு வேறு இடத்தில் கல்யாணம் நிச்சயம் பண்ணப் பார்க்கிறார் ஐயங்கார். இன்று துணிந்து அவள் நாங்கள் காதலிப்பதைச் சொல்லி இருக்கிறாள். அதிலிருந்து அவளைப் போட்டுக் கன்னங் கன்னமாகப் பிரட்டி எடுக்கிறார். என்னையும் உள்ளே அனுமதிக்க மாட்டேன் என்கிறார். நீயாவது சொல்லி அவரைத் தடு'' என்று கெஞ்சினான் தல்வாரின் மகன்.

''உன் பெற்றோர்களுக்கு இது தெரியுமா?'' என்று வினவினான் சுந்தர்.

''இரண்டு பூகம்பங்களை இந்தப் பில்டிங் ஒரே நேரத்தில் தாங்காது. அவர்களை நான் எப்படியாவது பின்னால் சமாளித்துக் கொள்வேன்'' என்று சிரித்தான் அவன். மனத்தைக் கலக்கும் அந்தச் சூழ்நிலையிலும் அவனால் எப்படிச் சிரிக்க முடிகிறது என்று தனக்குள் வியந்தவாறு ஐயங்காரின் வீட்டுக் கதவைத் தட்டினான் அவன். பூஷண் தான் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து கொண்டான். ஐயங்கார் கதவைத் திறக்காமல் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து ''என்ன வேண்டும்? நான் இப்போது ரொம்ப பிஸியாக இருக்கிறேன்'' என்று கோபமாகச் சொன்னார் சுந்தரிடம்.

அவர் அப்படிக் கோபமாக இதுவரை அவனிடம் நடந்து கொண்டதில்லை.

உள்ளிருந்து வசந்தாவின் விசும்பும் குரல்.

''சார் ரொம்ப அர்ஜென்டான விஷயம். ஒரு நிமிஷம் திறந்தீர்களானால் சௌகரியமாக இருக்கும்.'' அவர் ககடுகடுவென்ற முகத்துடன் வாயிற் கதவைத் திறந்து கொண்டு நின்ற பாவனை 'ம் சீக்கிரம் சொல்லித் தொலை' என்பது போல் இருந்தது.

''சார் உங்கள் குடும்ப விஷயத்தில் தலை இடுகிறேன் என்று நினைக்காதீர்கள். வசந்தா என் தங்கை மாதிரி...''

''யூ ஷட் அப்... எனக்கு இந்த விஷயத்தில் யாரோட அட்வைஸும் தேவையில்லை.''

ஐயங்கார் கதவை மறுபடியும் சாத்த முடியாமல் சுந்தர் குறுக்கே நின்று கொண்டான்.

''ஒன்று சொல்றேன் சார். கல்யாணம் என்பது சொர்க்கத்தில் நிச்சயமானது. நீங்கள் அதைத் தடுத்து விட முடியும் என்று நினைப்பதில் பிரயோசனமில்லை. வேலைக்காக வடக்கே வந்து விட்டீர்கள். குளிருக்குக் கம்பளிச் சட்டை போட்டுக் கொள்கிறீர்கள். சுற்றிலும் உள்ளவர்களிடம் ஹிந்தி கற்றுக் கொண்டு பேசிச் சமாளிக்கிறீர்கள். உலர்ந்த ரொட்டியையும் சப்ஜியையும் ரசித்துச் சாப்பிடுகிறீர்கள். இத்தனை தூரத்துக்கு உங்களை மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கும் நீங்கள் சில அடிகள், எ ஃப்யூ ஸ்டெப்ஸ் முன்னால் வைத்து உங்கள் மகளின் காதலுக்கு ஆசியும் வழங்கலாமல்லவா?''

''யூ ஃபூல்'' என்று இரைந்தார் ஐயங்கார். ''ரொட்டி சப்ஜியும் என் மகளின் கல்யாணமும் ஒரே மாதிரிப் பிரச்னையா? கெட் அவுட். எனக்கு யாரோடு பேசவும் இஷ்டமில்லை. ஜாஸ்தி வம்பு செய்தாயானால் போலீஸைக் கூப்பிடுவேன்!'' அவர் பிடித்துத் தள்ளின தள்ளில் வாயில்புற மதில் சுவரின் மீது முட்டிக் கொண்டு சுந்தரின் நெற்றியில் இரத்தம் கசிந்தது. பூஷண் ஓடி வந்தான். ''அடே பாவி! மனுஷனா, அவன்? வசந்தாவுக்காகப் பார்க்கிறேன் இல்லை என்றால்...'' முட்டியை மடித்து அவன் சொன்ன விதமே பயமாக இருந்தது பார்க்க.

''பூஷண். ஒரு சின்ன வேண்டுகோள், அவசரப் பட்டு எந்தக் காரியத்தையும் செய்து விடாதே. இரு தரப்பிலும் பெற்றோர்கள் சம்மதத்தைப் பெற்றுப் பின்னரே இந்தக் கல்யாணத்தை நீ முடித்துக் கொள்ள வேண்டும்.''

சுந்தர் வேகமாக மாடி ஏறித் தன் அறைக்குப் போனான். நிஷா நடந்ததை எல்லாம் வராந்தாவிலிருந்து பார்த்திருக்க

வேண்டும், முதல் உதவிப் பெட்டி பாண்டேஜ் சகிதம் அவன் அறைக்கு ஓடிவந்தாள்.

''நன்ருக இருக்கிறது அவர் நியாயம். உங்களை இப்படிக் காயப் படுத்த அவருக்கு எந்த உரிமையும் கிடையாது. நான் ஐயங்கார் அங்கிளிடம் சண்டை போடப் போகிறேன்'' என்ருள் நிஷா மனத் தாங்கலுடன்.

அவன் எத்தனை மறுத்தும் கேளாமல் அவள் அவனது நெற்றிக் காயத்தைத் துடைத்து மருந்து போட்டாள்.

'நிஷா... வசந்தா - பூஷண் விஷயம் இருக்கட்டும். உன் – என் இந்தத் தோழமை பற்றி அதை நீயோ நானே வெளிப்படுத்தும் பொழுது உன் உலகம் அதை எப்படி ஏற்கப் போகிறது?' என்று கேட்க நினைத்தான் சுந்தர்.

சொல்ல நினைத்ததில் ஒரு வார்த்தையைக் கூட அவனுல் உச்சரிக்க முடியவில்லை.

சுந்தருக்கு உடல் நலம் சீர்ப்பட இரண்டு நாட்களாயின. அகர்வால் குடும்பத்தினர் அவனைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டனர்.

கீழே அதற்குள் பிரளயம் நிகழ்ந்து விட்டிருந்தது. திருமதி சென் குப்தா வீட்டைப் பூட்டிக் கொண்டு கடைத் தெருவுக்குப் போக அவள் திரும்பி வருவதற்குள் பூட்டு உடைக்கப் பட்டு விலையுயர்ந்த சாமான்கள் அனைத்தும் கொள்ளையிடப் பட்டு விட்டது.

அதே சமயத்தில் தல்வாரின் மகன் பூஷண் திடீரென்று வீட்டிலிருந்து மறைந்து விடவே அவன்தான் திருட்டுக்கு உடந்தையாக இருக்கும் என்று ஐயங்கார் சென்குப்தாவுக்குத் தூபம் போட்டுக் கொண்டிருப்பதாக நிஷா வந்து சொன்னுள். அதே நேரத்தில் வசந்தாவையும் வீட்டில் காணும் என்கிற செய்தியை அவர்கள் மறைத்து விட்டார்கள். எத்தனை நாட்கள் மூட முடியும்? சீக்கிரம் குட்டு உடைந்தது. பூஷண் தல்வார், வசந்தா இருவரையும் ஒரே நேரத்தில் காணும் என்றதும் சுந்தருக்கு விஷயம் விளங்கி விட்டது.

தான் சொன்னதைக் கேட்காமல் பூஷண் இப்படி அவசரப்பட்டு விட்டானே என்று சுந்தருக்குச் சொல்ல முடியாத வருத்தம்தான்.

பூஷணின் அப்பா விஷயத்தை எப்படி எடுத்துக் கொண்டிருப்பாரோ? ஆறுதலாக அவருக்கு நாலு வார்த்தைகள் சொல்ல வேண்டும் போல் இருந்தது சுந்தருக்கு. மெல்லத் தட்டுத் தடுமாறி அவன் கீழே முதல் மாடிக்கு இறங்கி வந்த பொழுது அவர் அவனைப் பார்த்து விட்டு என்ன நினைத்தாரோ என்னவோ? முகம் கொடுத்துக் கூடப் பேசாமல் படீரென்று கதவை அறைந்து சாத்திக் கொண்டு அவர் போய் விட்டார்.

'மதராஸிக் கழுதை' என்று அவர் முணுமுணுத்தது இலேசாக அவனுக்குக் கேட்டது.

வசந்தாவுக்குத்தான் அறிவு எங்கே போயிற்று? பூஷண் சொன்னன் என்று வீட்டை விட்டு ஓடி விட வேண்டுமா? கொஞ்சம் பொறுமையாக நிலைமையைச் சமாளித்திருக்கலாமே? அவளது அவசரச் செய்கையில் இப்போது தென்னிந்தியர்களுக்கே அல்லவா கெட்ட பெயர்?

நிஷாவின் போக்கில் திடீரென்று ஒரு மாற்றம் தெரியத் தொடங்கியது.

அவள் முன்போல் அடிக்கடி புத்தகம் கேட்க அவன் அறைக்கு வருவதில்லை. மாடிப் படிகளில் எதேச்சையாகச் சந்தித்தால் அவசரமாக ஓரிரு வார்த்தைகளை உதிர்த்து விட்டு ஓடி விடுவாள். எதனுல் இந்த மாறுதல்? ஒரு வேளை இது பூஷண் – வசந்தா காதலால் விளைந்த பாதிப்பின் எதிரொலியோ?

ஒருநாள் கன்னுட் பிளேஸில் நிஷாவை எதேச்சையாகச் சந்தித்தான். சிநேகிதியைப் பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள் அவள்.

''நிஷா... ஒரு நிமிஷம் உன்னுடன் பேச வேண்டும்.''

''சுந்தர். தப்பாக நினைக்காதீர்கள். நானும் நீங்களும் பழகுவது என் எதிர் காலத்தையே பாதிக்கும் போல் இருக்கிறது. எனக்கு ஏற்கனவே திருமணம் நிச்சயமாகி விட்டது. இதே ஊரில் இருக்கும் பிரகாஷ் என்பவர் என்னை மணக்கப் போகும் இஞ்ஜினியர்...'' நிஷா நடுவில் நிறுத்தினுள்.

சுந்தருக்குக் காலுக்கடியில் பூமி நழுவுகிற பிரமை.

''அன்று நாம் இருவரும் சினிமா பார்க்கப் போனேம் அல்லவா? அவர் நம்மைப் பார்க்க

## ஆட்டோவைக் கிளப்பியவர்!



ஜன நடமாட்டம் மிகுந்த மல்லேஸ்வரப் பகுதி — பெங்களூர் நகரத்தில் இரவு 9மணி அளவில் ஆட்டோவைக் கூப்பிட்டுத் தான் சொன்ன இடத்துக்கு வரக் கூறினுர் ஒரு பிரயாணி. அவசரம் என்று சொல்லி இரட்டிப்பு சார்ஜ் தருவதாயும் சொன்னுர். என்ன காரணமோ, ஆட்டோ டிரைவர் வர மறுத்து விடவே பிரயாணிக்கும் ஆட்டோ டிரைவருக்கும் வாக்குவாதம் முற்றியது. முடிவில் ஆட்டோ டிரைவர் சற்று அசந்து கவனக் குறைவாக இருந்தபோது அந்தப் பிரயாணி தாமே ஆட்டோவைக் கிளப்பித் தாம் போக வேண்டிய இடத்துக்கு ஓட்டிச் சென்று விட்டார்! ஆட்டோ டிரைவர் புலம்பிக் கொண்டே போலீஸ் ஸ்டேஷனில் தமது ஆட்டோ களவு போனது பற்றிப் புகார் கொடுக்க நேர்ந்தது!

ஆதாரம்: டெக்கான் ஹெரால்ட்
தகவல்: வி. ராஜாமணி

நேரிட்டிருக்கிறது. பிரகாஷ் அதன் பிறகு என் அப்பாவின் ஆபிசுக்கு வந்து கூப்பாடு போட்டாராம். என் படிப்பு தடைப்படும் என்று பிரகாஷ் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வரக்கூடாது என்று அப்பா தடை விதித்திருக்கிறார். 'உங்கள் பெண் வேறு யாருடனோ ஊரெல்லாம் சுற்றுகிறாளே அது மட்டும் பரவாயில்லையா?' என்று கேட்டாராம். சுந்தர் ஒரு பெண் ஓர் ஆணுடன் வேறு எந்த மனோ பாவத்துடனும் நெருங்கிப் பழகவே முடியாதா? உங்களை என் உடன் பிறந்த சகோதரன் மாதிரிதான் நான் இதுநாள் வரை நினைத்து வந்திருக்கிறேன். என்னைப் பற்றி வேறு எப்படியேனும் தவறாக எண்ணும்படி நான் நடந்திருக்கிறேனா சொல்லுங்கள், சுந்தர்! ஒரு பெண் கலகலப்பாகப் பழகுகிறாள் என்பதற்காக அவள் நடத்தை கெட்டவள் என்று கூறிவிட முடியுமா? ''கலங்கினாள் நிஷா.

அந்த ஒரு நிமிஷம்... அதற்குள் தலையில் விழுந்த இடியைச் சமாளித்துக் கொண்டு நின்றான் அவன்.

''நிஷா... உலகத்தை விட்டுத் தள்ளு. நம் மனத்தில் களங்கம் இல்லாத வரை அதற்கு நாம் பயப்பட வேண்டியதில்லை. ரக்ஷா பந்தன் அன்று ரக்ஷையைக் கட்டி என் நெற்றியில் திலகமிடு. நம் உறவை உன் கணவன் அப்பொழுதாவது உணர்ந்து கொள்ளட்டும்'' என்றான் சுந்தர் உணர்ச்சிப் பெருக்கில் குரல் தழுதழுக்க.

நிஷாவின் திருமண ஏற்பாடுகளில் அகர்வாலுக்கு உதவுவதில் ஆழ்ந்து போயிருந்தான் சுந்தர். மஹேஷ் தல்வாரும் ஐயங்காரும் அவன் மீது தாங்கள் கொண்ட கோபம் எத்தனை அர்த்தமற்றது என்பதை உணர்ந்து கொண்டு மனம் வருந்தி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். பூஷணும், வசந்தாவும் பதிவுத் திருமணம் செய்துகொண்டு குடும்பம் அமைக்க நினைத்த பொழுது சுந்தர்தான் வீடு தேடிக்கொடுத்தான்

தல்வாரும், ஐயங்காரும் அந்தத் திருமணத்தை ஒப்புக் கொள்ளா விட்டாலும் இப்பொழுதெல்லாம் அவர்கள் வீடேறி வந்தால் கதவை மூடிக் கொள்வதில்லை!

திருமதி சென் குப்தாவுக்கு உடல்நிலை சரியில்லாமல் ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். அவளுக்கு ஆகாரம் கொண்டு கொடுப்பது சுந்தர்தான். குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது, காரைத் தள்ளி ஸ்டார்ட் செய்ய உதவுவது போன்று எத்தனையோ காரியங்கள் அவனுக்கு.

அவன் ஓர் ஒண்டிக் கட்டை. பிரம்மச்சாரி! ஆயின் அவன் குடும்பம் எத்தனை பெரிது! அதில் எத்தனை அங்கத்தினர்கள்! எத்தனை பிரச்னைகள், எத்தனை ஆசாபாசங்கள்! எத்தனை மனக் கொந்தளிப்புகள்! எல்லாவற்றுக்கும் மையப் புள்ளியாக அவன் நிற்கிறான்.

விழிக்கடையில் எப்பொழுதோ ஒருமுறை தன்னையும் அறியாமலே பனிக்கும் நீரை ரகசியமாகத் துடைத்துக் கொள்கிறான், சுந்தர்!

## ஒரு பெண்ணின் டைரியிலிருந்து!



ஆனாலும் இவர் ரொம்ப மோசமானவர். தோடு வாங்கித்தான்னு ரொம்ப நாளா கேட்கிறேன். காதில் போட்டுண்டா தானே!!

சரி மூக்குத்தியாவது வாங்கித் தரப்படாதோ! அதைக் கேட்டவுடனே அப்படி மூக்குக்கு மேல் கோபம் வருவானேன்!!

அது போகட்டும்! ஒரு பவுன் சங்கிலி செய்து போடச் சொன்னா, சுத்த கழுத்தறுப்புன்னு கத்தறார்!!

அதுதான் விடுங்கோ, வாயில் புடவை கேட்டா, வாயில் வந்தபடி கத்தறார்!! புடவை வாங்கிக் கட்டிக்கிறேனோ இல்லியோ, தினம் இவர் வாயாலே வாங்கிக் கட்டிக்கறேன்!

-கே. ஜி. எஸ். விஸ்வநாதன்

## பேஷ்பூரி



சட்டவிரோதமாக ஒரு பொருளை விற்கும் வியாபாரத்தில் ஈடுபட்டு இருந்ததாக ஒருவரைக் கைது செய்திருக்கிறார்கள். அவ்வாறு கல்கத்தாவில் அவர் வியாபாரம் செய்த பொருள்:

மனித மண்டைஓடு!

—தீஸ்டேட்ஸ்மன்






திரு கோவி. மணிசேகரன் எழுதும் ''ராஜ கர்ஜனை'' நாவலில் கல்கி வாசகர்கள் எவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்களோ,

அதே அளவு ஆர்வத்தை ''ராஜ கர்ஜனை'' பரிசுத் திட்டத்திலும் காண்பித்தார்கள்.

அதற்குச் சற்றும் குறையாத ஆர்வத்துடன் நாங்களும் பல்லாயிரக் கணக்கான நேயர்கள் அனுப்பி வைத்து இங்கு குன்றெனக் குவிந்த போட்டித் தாள்களைப் பரிசீலித்தோம்.

சரியான நான்கு விடைகளைத் தேர்ந்தெடுத்துப் பதினொரு பேர் எழுதியிருந்தார்கள்.

அந்தப் பதினொரு பேரும் ''என் கருத்து'' என்ற தலைப்பில் எழுதியவற்றைப் பரிசீலித்து அதன் அடிப்படையில் பரிசுக்குரிய நால்வரைத் தேர்ந்தெடுத்தோம்.

**முதல் பரிசு:** *(இரண்டு ஆண்டு கல்கி சந்தா):*

ஆர். இந்திரா, ஆசிரியை, 127. சிவாஜி தெரு, எருமப் பட்டி போஸ்டு, நாமக்கல் தாலுகா, சேலம் (மா. வ)

இவர் கருத்து: நல் வைரம் வண்ண வண்ண வர்ண ஜாலங்களை வாரி இறைப்பது போல் வண்ண வண்ண சரித்திரப் படைப்புக்கள் பல வழங்குபவர் கோவி. மணிசேகரன்.

**இரண்டாம் பரிசு:** *(ஓராண்டு கல்கி சந்தா)*

பி. லக்ஷ்மி நரசிம்மன், 24, ராஜாஜி தெரு, கரூர் 639001 திருச்சி மாவட்டம்.

இவர் கருத்து: இலக்கிய மணமும் இசைநயமும் கமழ வரலாற்றுப் புதினங்கள் படைப்போரில் கோவி. மணிசேகரனுக்கு என்றும் ஒரு சிறப்பான இடமுண்டு.

**மூன்றாம் பரிசு:** *(ஆறுமாதக் கல்கி சந்தா):*

மீனாட்சி வைத்தியநாதன், C. 22. N.E.E. நான்காவது கிராஸ், தில்லை நகர், திருச்சி 620 018.

இவர் கருத்து: சரித்திர பொற்காலங்களைச் சேகரித்து மணியான எழுத்துக்களால் மாளிகை எழுப்பும் எழுத்துலகச் சிற்பி.

**நான்காம் பரிசு :** *(1978 கல்கி தீபாவளி மலர்):*

வி. கணேசன், துணை கிளை நிர்வாகி (A) எல். ஐ. சி. ஆஃப் இந்தியா, கிளை II மைசூர் 570 001.

இவர் கருத்து: தமிழில் சரித்திர நாவல்கள் எழுதுவதில் ''கல்கி'' அவர்கள் முன்னோடி என்றால் அவருடைய உண்மையான வாரிசுகளில் ஒருவர் கோவி. மணிசேகரன் ஆவார்.

சரியான விடைகள்:

(1) கல்கி அவர்களையே மனத்தளவில் ஆசானாகக் கொண்டு சரித்திரக் கதைகளை எழுத ஆரம்பித்தார்.

(2) இதுவரை எழுபத்தைந்து சரித்திர நாவல்களும் ஐந்நூறுக்கு மேற்பட்ட சரித்திரச் சிறுகதைகளும் எழுதியுள்ளார்.

(3) சேரன் குலக்கொடி என்றசரித்திர நாவல் தமிழக அரசின் முதல் பரிசு பெற்றது.

(4) நச்சள்ளையின் காதல் என்ற கதை கல்கி சிறப்புச் சிறுகதைப் போட்டியில் வாசகர்களாலேயே தேர்ந்தெடுக்கப் பட்ட முதல் பரிசுக் கதை.

போட்டியில் பேரார்வத்துடன் பங்கேற்ற பல்லாயிரக் கணக்கான வாசகர்களுக்கு இதய பூர்வமான நன்றி.

# துளசி மாடம்

நா. பார்த்தசாரதி

## 22

பிரம வைதீகரான அப்பா எங்கே கமலியின் கையிலிருந்து பிரசாதம் வாங்காமல் நாசூக்காகத் தட்டிக் கழித்து விடுவாரோ என்று உடன் வந்து அருகே நின்ற ரவி மனத்தில் தயங்கினுன். ஆனுல் அப்படி ஏதும் நடந்து விடவில்லே.

சர்மா புன்முறுவலோடு பிரசாதம் எடுத்துக் கொண்டார். கமலி கையிலிருந்த தட்டைக் கண்களில் ஒற்றிக் கொண்டு அவர் பிரசாதம் எடுத்துக் கொண்ட காட்சியை ரவியால் நம்பவே முடியாமல் இருந்தது.

''திருப்பணிக்குப் பணம் குடுத்து ரசீது வாங்கினேளா?''

''இதோ ரசீது வாங்கியிருக்கோம்ப்பா'' — ரவி கோவில் திருப்பணிக்குப் பணம் கொடுத்துக் கமலி பேருக்கு வாங்கியிருந்த ரசீதை எடுத்து அப்பாவிடம் நீட்டினுன்.

கமலி மாடிக்குப் போனுள். அவளேப் பின் தொடர்ந்த ரவியை, ''நீ கொஞ்சம் இரு... உங்கிட்டப் பேச வேண்டியதிருக்கு'' —என்று அவன் காதருகே கூறினுர் சர்மா.

''இதோ வந்துடறேன்ப்பா. ஒருநிமிஷம்'' என்று அவருக்கு மறுமொழி கூறி விட்டு மாடிப் படியேறினுன் ரவி.

அந்த விநாடியில் சர்மாவின் மனநிலே துல்லியமாகவும் தெளிவாகவும் இருந்தது. ஒரு பரிசுத்தமான பூர்ண ஞானியின் துணிச்சலுடனும், ஒரு கள்ளங் கபடமற்ற குழந்தையின் வெறுப்பற்ற மகிழ்ச்சியுடனும் இருந்தார் அவர்.

மாடிக்குப் போன ரவியை எதிர்பார்த்துக் கையில் பஞ்சாங்கத்துடனும் பென்சில் பேப்பருடனும் மனத்துக்குள் ஒரு தீர்மானத்துக்கு வந்தவரைப் போல் காத்திருந்தார் அவர்.

ஏதோ இனம் புரியாமல் ரவிக்கும் மனத்தில் ஒரு குதூகலம் பிறந்திருந்தது. அப்பா தன்னேக் கூப்பிட்டுக் கமலியைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போகச் சொன்னதும், கமலியின் கையிலிருந்து பிரசாதம் வாங்கிக் கொண்டதும், அதன் பின் உடனே 'உன்னேடு கொஞ்சம் பேச வேண்டும் வருகிருயா?' — என்று தன்னேத் தனியே அழைத்ததும் நல்ல அடையாளங்களாகப் பட்டன அவனுக்கு.

அப்பா கொஞ்சமும் தயக்கமின்றிக் கமலியின் கையிலிருந்து கோயில் பிரசாதத்தை வாங்கிக் கொண்ட பெருந்தன்மையை அவளிடமே சொல்லி வியந்துவிட்டு, ''இதுவே அம்மாவாயிருந்தா ஒரு ஸீன் கிரியேட் பண்ணியிருப்பா கமலி! என்ன இருந்தாலும் அப்பா தப்பாதான்'' என்று கூறிய பின் கீழே இறங்கிஅ தந்தையைச் சந்திக்க வந்தான் ரவி. அவன் படியிறங்கத் தொடங்கியபோது, ''உங்கள் அம்மாவும் இப்படி முக மலர்ச்சியோடு என் கையிலிருந்து பிரசாதம் வாங்குகிற நாள் ஒன்று வரும். அதையும் நீங்கள் உங்கள் கண்களாலேயே பார்க்கத்தான் போகிறீர்கள்'' என்று கமலி உற்சாகமாகப் பதில் சொல்லியது அவன் காதில் விழுந்தது.

''தோட்டத்துக் கிணற்றடிக்குப் போய்ப் பேசலாமா?'' என்று கேட்ட ரவிக்கு, ''வேண்டாம்! இங்கே மூணும் மனுஷா யார் இருக்கா இப்போ? திண்ணேயிலேயே உட்கார்ந்து பேசலாம் வா'' என்று பதில் சொல்லியபடி திண்ணேக்கு அவனே அழைத்துச் சென்ருர் சர்மா.

அப்பாவின் கையில் பஞ்சாங்கமும் பேப்பர் பென்சிலும் இருப்பதைப் பார்த்து இன்னும் அதிக வியப்பு உண்டாயிற்று ரவிக்கு. எதற்கும் அவரே விஷயத்தை முதலில் சொல்லட்டும் என்று சிறுவனுயிருந்தபோது அதிகாலேயில் அவரிடம் படிப்பதற்காக அடக்க ஒடுக்கமாக அதே திண்ணேயில் அதே இடத்தில் எப்படிப் பவ்யத்தோடு உட்காருவது வழக்கமோ அப்படியே இன்றும் இப்போதும் உட்கார்ந்தான் அவன்.

''ஏண்டா! உன் மனசிலே என்னதான் இருக்கு? உனக்கு நான் என்ன பண்ணணும்கிறதை நீ முதல்லே எங்கிட்டச் சொல்லணுமே ஒழிய என்னே மூணும் மனுஷன் மாதிரி நெனேச்சுண்டு மூணும் மனுஷாளா இருக்கிற தேசிகாமணி கிட்டவும், வேணு மாமா கிட்டவும் முதல்லே சொல்லி அப்புறம் அவா அதை எங்காதுலே போடற மாதிரி விடப்படாது. அது கொஞ்சம் கூட நன்னு இல்லே. இந்தச் சின்ன விஷயத்திலே நீ ஏன் இத்தனே இங்கிதம் இல்லாமே நடந்துக்கணும்னுதான் எனக்குப் புரியலே.''

இதைக் கேட்டதும் திருடனுக்குத் தேள் கொட்டினது மாதிரி இருந்தது ரவிக்கு. என்ன பதில் சொல்லலாம் என்று அவன் தன் மனத்தில் வார்த்தைகளே யோசித்துத் திரட்டுவதற்கு முன் தந்தையே மேலும் தொடர்ந்தார்.

''நான் முடிவு பண்ண வேண்டிய சமாசாரத்தைப் போயி நீ தேசிகாமணி கிட்டவும் வேணு மாமா கிட்டவும் பிரஸ்தாபிச்சு என்ன பிரயோஜனம்?''

''தப்புத்தான் அப்பா! உங்களுக்கு ரொம்பவும் வேண்டியவளாச்சேன்னு பிரஸ்தாபிச்சேன்.''

''நான் முடிவு பண்ணியாச்சு! உங்கம்மா முதல் ஊரார் வரை யாருக்கும் என்ன உறவு எதுக்கு வந்திருக்கான்னு கமலியைப் பத்தி ஓர் உறவும் சொல்லாமே இப்படி மெல்லவும் முடியாம விழுங்கவும் முடியாமே வீட்டோட வச்சிண்டு வீண் வதந்தியையும் ஊர் வம்பையும் அரட்டையையும் பெருக விடறதுக்குப் பதில் துணிஞ்சு உனக்கும் அவளுக்கும் சாஸ்திரோக்தமாகவே ஒரு கல்யாணத்தைப் பண்ணிடறது எவ்வளவோ தேவலே. முன்னே எப்பவோ ஒரு நாள் வந்த புதிசிலே நீயே எங்கிட்டக் கேட்டே. அப்போ நான் அதுக்குத் தயங்கினேன். இப்போ நானே துணிஞ்சிட்டேன்.''

ரவிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லே. பேசுவது அப்பாதானு என்றே சந்தேகமா யிருந்தது.

''அப்பா.... நிஜமாவா....?'' என்று உற்சாக மேலிட்டுக் கூவினுன் ரவி.

''பின்னே என்ன? உங்கிட்ட விளையாட்டுப் பேச்சுப் பேசவா வேலே மெனக்கெட்டு இப்போ கூப்பிட்டிருக்கேன்? இந்த மாசக் கடைசியிலே ஒரே ஒரு முகூர்த்தம்தான் மீதமிருக்கு. பெத்தவனே, பெத்தவளோ இங்கே இல்லாமே யாருடா அவளைத் தாரை வார்த்துக் குடுப்பா?''

''கேபிள் குடுத்தா கமலியோட அப்பா அம்மா ரெண்டு பேருமே கூட இங்கே வருவா அப்பா... ஆனு நீங்க சொல்ற முகூர்த்தத்துக்குள்ள அது முடியாது. வேணு மாமாவை வேணுக் கேட்டுப் பார்க்கலாம்.''

''ஏண்டா ஏற்கெனவே நீ அவரிட்டப் பேசி முடிவு பண்ணி வச்சாச்சா? என்னமோ தயாரா ஏற்பாடு பண்ணிட்ட மாதிரிச் சொல்றியே?''

''இல்லே... கேட்டா ஒத்துப்பார்னு பட்டுது, அதான் சொன்னேன்.''

''சரி! வா, போகலாம். அவரிட்டயேநேரக் கேட்டுடுவோம்.''

''நான் எதுக்குப்பா? நீங்க கேட்டாலே ஒத்துப்பார். நானும் அவசியம் வந்தாகணும்னு வரேன்.''

''சும்மாக் கூட வாயேன். போயிட்டு வரலாம். நீ ஒண்ணும் பேச வேண்டாம். கேட்கிறதெல்லாம் நாளே அவரிட்டக் கேட்டுக்கறேன்.''

கூட வருவதற்கு ரவி சற்றே சங்கோஜப்பட்டாற் போலத் தோன்றியது. ஆனுலும் தட்டிச் சொல்லாமல் புறப்பட்டான். அந்த விஷயத்தில் அப்பாவின் திடீர் முடிவும் அவர் காட்டிய அவசரமும் உண்டாக்கிய சந்தோஷ அதிர்ச்சியிலிருந்து இன்னும் அவனுல் முற்றுக மீள முடியவில்லே. அதனுல் தெருவில் நடந்து போகிறபோது அப்பாவிடம் அவன் எதுவுமே பேசக் கூட இல்லே. வீட்டிலிருந்து படி இறங்கியதும் நிறைந்த தண்ணீர்க் குடத்தோடு ஒரு சுமங்கலி தெருவில் எதிர்ப்பட்ட போது, ''சகுனம் ரொம்ப நன்னு ஆறது'' என்ருர் சர்மா.

வேணு மாமா வீட்டை அவர்கள் அடைந்தபோது அவர் திண்ணையிலிருந்த மர பெஞ்சில் அமர்ந்திருந்தார். அவருக்கெதிரே ஒரு பெரிய பழுக்காத் தாம்பாளம் நிறையப்பழம் — பூ வெற்றிலே பாக்கு — பச்சை ஏலக்காய்க் கொத்து எல்லாம் இருந்தன. வேணு மாமா அப்போது மிக மிக உற்சாக மாயிருந்தார்.

''வாங்கோ! என்னேட எஸ்டேட் மானேஜர் புதுசா வீடு கட்டிக் கிரகப் பிரவேசம் பண்ருனம். இப்பத்தான் வந்து அதுக்கு என்னை அழைச்சிட்டுப் போருன். ஏது... அப்பாவும் பிள்ளேயுமா இப்படிச் சேர்ந்து வந்திருக்கேள்... ரவிக்கும் எவனுவது வக்கீல் நோட்டீஸ் அனுப்பிச்சிருக்கானு?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. கோவில் திருப்பணி டொனேஷன் விஷயம் நீங்க சொன்னபடி பண்ணியாச்சு. ரவியே கூடப் போயிக் கமலி பேருக்கு ரசீதும் வாங்கிண்டு வந்துட்டான்.''

''சபாஷ்! அப்புறம்?''

''சுபஸ்ய சீக்கிரம்னு பெரியவா சொல்லுவா. இந்த ஊர்க்காராளும், மத்தவாளும் பண்ற புரளியைப் பார்த்துப் பார்த்து நேக்கே தைரியம் வந்தாச்சு.... நீங்க கொஞ்சம் பெரிய மனசு பண்ணி ஓர் ஒத்தாசை செஞ்சாகணும். இது மாதிரி ஒத்தாசையைப் பண்ற துணிச்சல் இந்த ஊர்ல உங்களைத் தவிர வேறு யாருக்கும் இருக்கிறதுக்கில்லே.''

''ஏதேது? பீடிகை ரொம்பப் பெரிசாப் போடறேளே? விஷயம் என்னன்னு முதல்லே சொல்லுங்கோ.''

கூட்டி முழுங்கித் தட்டுத் தடுமாறி ஒரு வழியாக விஷயத்தைச் சொன்னுர் சர்மா.

இதைக் கேட்டு உடனே பதில் எதுவும் சொல்லாமல் சிறு குழந்தை போல் வயதுக்கு மீறின உற்சாகத்தோடு உள்ளே ஓடிய வேணு மாமா கைப்பிடி நிறையச் சர்க்கரையோடு திரும்ப ஓடிவந்து சர்மாவை வாய் திறக்கச் சொல்லிப் பிடிவாதம் பண்ணி அதை அவர் வாயில் போட்டார். உற்சாகம் கரை புரண்டது வேணு மாமாவுக்கு.

''இப்பவே வசந்திக்குத் தந்தி கொடுத்தாகணும். நீர் கொஞ்சம் கூடக் கவலேப்





''இதென்ன! இட்லி மாவு, தோசை மாவு, போண்டா மாவு, பகோடா மாவு, கோதுமை மாவு என்று வச்சிட்டே?''

''என்ன சார் செய்யட்டும்? சரக்கு மாஸ்டர்கள் சங்கம் திடீர் ஸ்ட்ரைக் துவக்கிட்டிதே!''

---

படாதேயும். எப்போ கமலியை நான் தாரை வார்த்துக் குடுக்கணும்னு நீரே சொல்றீரோ அப்போ பொண்ணுக்குப் பிறந்த வீடு இதுதான். கல்யாணமும் இந்த வீட்டிலேயேதான் நடக்கணும். லக்கினப் பத்திரிகை, முகூர்த்தக்கால் எல்லாத்துக்கும் உடனே ஏற்பாடு பண்ணிடறேன்.''

''உம்ம ஆத்துக்காரியை ஒரு வார்த்தை கேட்டுக்க வேண்டாமோ?''

''கேட்கணும்கிறதில்லே. 'வசந்தி மாதிரி இவளும் நம்ப பொண்தான். இவளே நாமதான் தாரைவார்த்துக் குடுக்கணும். புதுப் புடவையைக் கட்டிண்டு மணையிலே வந்து என் பக்கத்திலே நில்லு'ன்னு மறு பேச்சுப் பேசாம வந்து நிப்பள் என் ஆத்துக்காரி. அவளைப் பத்தி நீர் ஒண்ணும் கவலைப்பட வேண்டாம். உம்மாத்திலேதான் அந்தக் கஷ்டமெல்லாம். உம்ம ஒய்ஃப் இந்தக் கல்யாணத்தை ஒத்துண்டு மணையிலே வந்து நிப்பாளோ, சர்மா?''

''அதைப் பத்தி இப்போ நான் நிச்சயமா ஒண்ணும் சொல்றதுக்கில்லே. ஆனா அது சந்தேகம்தான்.''

'அதனாலே ஒண்ணும் பாதகமில்லே. ஒத்து வராத மனுஷாளுக்காக உலகம் காத்துண்டு நிக்காது. இருபது முப்பது வருஷத்துக்கு முந்தி உம்ம கல்யாணமும், என் கல்யாணமும் நடந்த மாதிரி சாஸ்திரோக்தமா ஒரு சின்ன விஷயம் கூட விட்டுப் போகாமல் நாலு நாள் ஜாம் ஜாம்னு இதை நடத்திப்பிடலாம். நீர் எதுக்கும் கவலைப்படாதீயும். எல்லாத்தையும் என்கிட்ட விட்டுடும். நான் பார்த்துக்கறேன். இப்ப நீர் சம்பந்தி. பிள்ளை வீட்டுக்காரர். நான் தான் பொண் வீட்டுக்காரன். நீர் வந்திருந்து கல்யாணத்தை நடத்திக் கொடுத்தால் மட்டும் போறும். மத்ததெல்லாம் நான் பார்த்துக்கறேன்.''

''நான் அப்படி விட்டுட முடியுமா? எல்லாக் கல்யாணமும் போல இல்லியே இது? நானும் சேர்ந்து கவலைப்பட்டாகணுமே? நாலு நாள் முகூர்த்தத்துக்கு வாத்தியார் ஒத்துண்டு வரணும். சீமாவையர் சொல்லி வச்சு மிரட்டித் தடுப்பர். 'இது சாஸ்திர சம்மதமான கல்யாணமில்லே. வர முடியாதுன்னு' வைதிகாள் அட்டி சொன்னா என்ன பண்ணுவேள்? அப்படி ஏதாவது இடைஞ்சல் வரும்னுதான் தோணறது. வந்தாலும் பரவாயில்லே. நானே எல்லாம் பண்ணிக்கிறேன், பிருஹஸ்பதி ஸ்தானத்திலே நானே இருந்துடறேன்.''

''அதுக்கு அவசியம் இருக்காது, சர்மா! இன்னிக்கி முக்காவாசிப் புரோகிதாளும் வைதிகாளும் சாஸ்திரத்தையும், மந்திரங்களையும் நல்ல ரேட்டுக்கு வித்திண்டு தான் இருக்கா. கூடப் பத்து ரூபா தட்சிணை தர்றதா இருந்தாச் சீமாவையர் ஆத்திலே பூர்வ காரியங்கள் பண்ணி வைக்கிற அதே வாத்தியாரே வந்து நம்ம கமலியோட கல்யாணத்தை நடத்தி வச்சாலும் ஆச்சரியப்படறதுக்கில்லே.''

''இந்த ஈரோப்பியன்ஸ் வேடிக்கையான ஜனங்களா இருப்பா போலிருக்கு. இதுக்கெல்லாம் வேணும்னு ஆசைப்பட்டுத் தன்னோட அப்பாகிட்டவே சொல்லி வேண மட்டும் பணம் வாங்கிண்டு வந்திருக்கா அவ. நீங்க சிரமப்படணும்கிறதேயில்லே... அதையே கமலிகிட்டக் கேட்டு வாங்கிக்கலாம்...''

''உளறாதேயும் சர்மா! எனக்கென்ன சிரமம் இதிலே? நான் இதைப் போலப் பத்துக் கல்யாணத்தைச் சொந்தமாக் கையிலேருந்து செலவழிச்சுப் பண்ணி வைப்பேன். அத்தனை சௌகரியத்தைப் பகவான் எனக்குக் கொடுத்திருக்கான்.... எனக்கு இன்னும் ஒரு பொண்ணிருந்து நான் அவளுக்குக் கல்யாணம் பண்ண நேர்ந்தா அதுக்கு நான்தானே கையிலேருந்து செலவழிக்கணும்?''

''அதுக்கில்லே! நீங்க தப்பாப் புரிஞ்சுக்கப்படாது. கமலி இதை ஒரு ப்ரஸ்டிஜ் இஷ்யூவா எடுத்துக்காமே இருக்கணும் பாருங்கோ. அதுனாலே நீங்க இதுக்காகன்னே அவகிட்ட இருக்கிற டிராவலர்ஸ் செக்கை மாத்திப் பணம் எடுத்துக்கிறது தான் முறை'' என்று அதுவரை பேசாமல் இருந்த ரவி மெல்லக் குறுக்கிட்டு விளக்கினான்.

''அப்பிடியா? பொண்ணுக்கு அப்பாவைக் கல்யாணத்துக்குச் செலவழிக்கக் கூடாதுன்னு சொல்ற முதல் மாப்பிள்ளையை இப்போதான்டா பார்க்கிறேன், ரவி!'' என்று சிரித்தபடியே கூறினார் வேணு மாமா.

சர்மாவோ ரவியோ அப்போது வேணு மாமாவை எதிர்த்து எதுவும் பேசவில்லை. உடனே புறப்பட்டு வரச் சொல்லி பம்பாயிலிருக்கும் தன் மகள் வசந்திக்கு ஓர் அவசரத் தந்தி கொடுத்துவிட்டு வரச் சொல்லி ரவியையே தபாலாபீசுக்குப் போகச் சொல்லி அப்போது அனுப்பினார் வேணு மாமா.

''கல்யாணத்துக்கு முன்னாடியே மாப்பிள்ளையை வேலை வாங்கறேனேன்னு நினைச்சுக்காதே, அப்பா! எப்போ சாஸ்திரோக்தமான கல்யாணம்னு முடிவாயாச்சோ அப்புறம் பொண் பிறந்தாத்திலேதான் வந்து இருக்கணும். கமலி இங்கே வந்து தங்கிண்டிருக்கணும்னா அவளுக்குத் துணை வேணும். அதனாலே வசந்தி உடனே வரவேண்டியதா

யிருக்கு. அவ இருந்தாத்தான் கல்யாணம் சோபிக்கும். அதுவும் இந்தக் கல்யாணத்துலே அவளுக்குக் கொள்ளை ஆசை''

தந்தியைக் கொடுத்துவிட்டு வரப் புறப்பட்டான் ரவி.

''இன்னிக்கி என் மனசு சந்தோஷமா இருக்கறுப்பலே வேறே எந்த நாள்லேயும் இத்தனை சந்தோஷமா இருந்ததில்லே சர்மா! லக்கினப் பத்திரிகை எழுத ஒரு நல்ல நாள் — நாழிகை பாருங்கோ.''

''என் மனசிலே திருப்தியும் இருக்கு, தயக்கமும் இருக்கு. இது தவிர்க்க முடியாதது. இதைச் செய்துதான் ஆகணும்கிற நிர்ப்பந்தம் ஒருபுறம் இருக்க — ஊரார் வாயை மூடி அடைக்கவாவது இதைத் தாமசப்படுத்தறதை விடச் சீக்கிரமே பண்ணிடறது நல்லதுன்னுதான் நான் இந்த முடிவுக்கு வந்தேன். ஆனு இதிலேயும் பல சிரமங்கள் வரும்....''

''ஒண்ணும் வராது. நானுச்சு, இதை மங்களகரமா முடிச்சு வைக்க.''

''நீர் மட்டும் இல்லே. உம்மைப் படைச்ச பிரும்மாவே வந்தாலும் என் ஆத்துக்காரி காமாட்சியை மனசு மாறும்படி பண்ண முடியாது. விஷயம் தெரிஞ்சதும் என்னை அவ பிடுங்கித் தின்னப் போறு.''

''இதமா எடுத்துச் சொல்லிப் பார்த்துச் சமாதானப் படுத்த முடியாதா சர்மா? உம்மை விடவா உம்ம ஆத்துக்காரி பெரிய வைதிகம்?''

''என்னை விட வைதீகமோ இல்லியோ, முரண்டு அதிகம். அறிவு காரண காரியத்துக்குச் செவி சாய்க்கும். முரண்டு எதுக்கும் செவி சாய்க்காது.''

''ரவியையே விட்டுப் பேசிப் பார்க்கச் சொல்லுமேன்.''

''யார் சொன்னுலும் அவ கேக்க மாட்டா, அது அவ பிறந்த ஊர் ராசி. தலைப்பை இழுத்துப் போத்திண்டு அடக்க ஒடுக்கமா அதிகப் படிப்பில்லாமத் தனக்குக் கட்டுப்படற மாதிரி ஒரு கிராமாந்தரத்து மாட்டுப் பொண்ணைக் கனவு கண்டுண்டிருக்கா அவ.''

''கல்யாணம் பண்ணிக்கப் போறது அவளா உம்ம பிள்ளையான்னு கேக்கறது தானே? அவன் வேலை பார்க்கற தேசம் அவனுடை படிப்பு — சூழ்நிலை அதுக்கெல்லாம் பாந்தமா ஒரு பொண்ணைப் பார்க்கறதா? நம்ம கட்டுப்பெட்டித்தனம், மடிசஞ்சி மனப்பான்மை இதையெல்லாம் யார் கேக்கரு இப்போ? அதிர்ஷ்ட வசமா அவனே அப்பிடி ஒரு பொண்ணைத் தேடிண்டுட்டான். இதுக்கு ஏன் நாம குறுக்கே தடையா இருக்கணும்?''

''பணிவுக்கும் அடக்கத்துக்கும் கூட கமலி கிட்டக் குறை யொண்ணும் இல்லே. இத்தனை அடக்கமாவும், விநயமாவும் இன்னிக்கி நம்ம தேசத்துப் பொண்டுகள் இருப்பாளான்னு எனக்கே சந்தேகம்தான்.''

''நீர் இரண்டு நாள் கொஞ்சம் பொறுமையா இரும் சர்மா! எதுக்கும் வசந்தி வந்துடட்டும். அவளை விட்டு மாமி கிட்டப் பேசிப் பார்க்கச் சொல்லலாம். அநேகமா அவ பிளேன்லேதான் வருவா. இந்தக் கமலியோட கல்யாண விஷயத்திலே அவளாலே ஆவலை அடக்கிக்க முடியாது.''

''தனக்கா மனசுலே பட்டாலொழியக் காமு இதுக்குச் சம்மதிக்க மாட்டா. முரண்டுன்னு அப்படி ஒரு முரண்டு அவளுக்கு.''

தந்தியைக் கொடுத்துவிட்டு ரவி தபாலாபீஸிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தான். (தொடரும்)


## மகாகவி வள்ளத்தோல் நூற்றுண்டு விழா கச்சேரி

செருத்துருத்தி கேரள கலாமண்டலம் ஆதரவில், கேரள மாநிலம் செருத்துருத்தி வள்ளத்தோல் நகரில் அமைக்கப்பட்டுள்ள விசேஷ பந்தலில் 1978 நவம்பர் 9-ந் தேதி வியாழனன்று மாலை 7.30 மணிக்கு

சங்கீத கலாநிதி

### ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

★

ஸ்ரீமதி ராதா விஸ்வநாதன் உடன் பாடுவார்

சாலக்குடி ஸ்ரீ N. S. நாராயணசாமி : வயலின்

மாவேலிக்கரை ஸ்ரீ கிருஷ்ணன் குட்டி : மிருதங்கம்








**கோ**குலம் இன்று பார்த்து விட்டுச் சொல்லி முடியாத வருத்தத்தில் இந்தக் கடிதம் எழுதியிருக்கிறோம். இந்த மாதிரி நல்லதும் சிறந்ததும் நிறுத்தப்படாமலிருக்கக் காலம்தான் வழி விட வேண்டும்.
சென்னை—14 ஆர். கோபால கிருஷ்ணன்

**ஒ**ரு மகவைப் பிரிந்த தாயின் சோகம் எத்தன்மையது? அதே நிலைதான் எனக்கு உங்கள் அறிவிப்பைக் கோகுலத்தில் பார்த்த போது ஏற்பட்டது.
திருவாரூர் தே. லட்சுமி காந்தன்.

"**இ**ருள் கவியும் சில கணங்கள்'' என்ற சிறுகதை படித்தேன். ஓவியர் ஆஞ்சலோவின் உள்ளத்துப் பாதிப்பு எங்களுக்கும் ஏற்பட்டது. திகைக்க வைக்கிறது.
சென்னை—78. பத்மா துவாரகநாத்

**தி**டீர்க் காதலும், திடீர்க் கவர்ச்சிகளும், திடீரென்று தான் முடிந்து விடும் என்பதை, அழகுறச் சித்திரிக்கிறது ''இருள் கவ்விய சில கணங்கள்'' என்னும் சிறுகதை.
சென்னை—5 ஸரஸ்வதி ஸ்ரீனிவாசன்

**வே**லை கிடைப்பதென்பது குதிரைக் கொம்பாகப் படும் இந்தக் காலத்தில் எந்த இளைஞனும் தனக்குக் கிடைக்க இருக்கும் வேலையை இன்னொருத்திக்கு விட்டுக் கொடுக்க முன்வரமாட்டான்; 'இருள் கவ்விய சில கணங்கள்..' கதையில் வரும் பாஸ்கரைப் போன்ற 'இளிச்சவாயன்'களைத் தவிர!
அரகண்ட நல்லூர் கே. பிரதாப்சிங்

"**பா**தம் நோக வைத்தார்! மனம் குமுறச் செய்தார்'' என்ற தலையங்கம் அற்புதமாக அவசியமான நேரத்தில் எழுதப்பட்டது.

எம். ஜி. யாரின் பரந்த மனப்பான்மையையும், இரக்கக் குணத்தையும் தவறாகப் புரிந்து கொண்டு அவர் ஆட்சி ஏற்பட்டதிலிருந்து வேண்டுமென்றே வேலைநிறுத்தம் செய்து அவரது பொறுமையைச் சோதிக்கிறார்கள்.
குளித்தலை கே. வி. சண்முகம்

**பொ**துமக்களின் நலனுக்காகப் பஸ்கள் விடப் படுகின்றன. ஆனால் அடிக்கடி இவ்வாறு வேலைநிறுத்தம் செய்யும் பொழுது பொது மக்கள் எப்படிப் பல்லவனைச் சபிக்கிறார்கள் என்பது ஊழியர்களுக்குத் தெரியவில்லை போலும்.
சென்னை—11 சீனிவாசன்

**வே**லைநிறுத்தம் பற்றிய பொது நோக்குத் தலையங்கம் மிகவும் அருமை. பொதுமக்களுக்கு ஏற்படும் இன்னல்களும் ஏராளம். ஆனால் எந்த ஒரு நிர்வாகமும் இதுவரை நமது நாட்டில் தொழிலாளர் ஒற்றுமையை வளர்த்ததில்லை. ''அழும் பிள்ளைதான் பால் குடிக்கும்'' என்ற மூதுரையை நிரூபிக்கும் நிர்வாகமே இன்றைக்கு உள்ளது.
பெங்களூர் சரோஜா தண்டபாணி

'**கி**ட்ட வந்து பேசு மச்சான்' — நகைச்சுவை மிளிர்ந்தாலும், ரிகார்டுகளின் கூச்சலால் ஏற்படும் தொந்தரவுகளைப் பற்றி அனைவரையும் சிந்திக்க வைக்கிறது. இங்கு ஓயாமல் ஆத்தில் மீன் பிடிப்பது, மீன் குழம்பு பாட்டுத்தான். பைத்தியமே பிடித்து விடும் போல் இருக்கிறது.
பெரம்பூர் பி. இந்திரா

"**வா**ழைப் பழத்துண்டு வசந்த கால நண்டு'' படு ஜோர். ஆமாம், அது என்ன ''மானுஷ்யோபநிஷதம்?'' கதாசிரியரின் புதுக் கண்டுபிடிப்பா?
பெங்களூர் எஸ். விசுவநாதன்

**ஸ்**கூட்டர் விளையாட்டுக்கள் கட்டுரையில் சில தவறுகள் உள்ளன. மெதுவாக ஸ்கூட்டர் ஓட்டும் போட்டியில் பங்கேற்றவர்கள், கணவன் — மனைவி, காதலர்கள் மட்டுமல்ல, சகோதரிகளையும், தோழமை உணர்வுடன் சிநேகிதிகளையும் பில்லியனில் வைத்துக் கொண்டு சென்றவர்களும் உண்டு. அன்று சாம்பியனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர் திரு வி. கே. தனசேகரன்.
சென்னை—21 எம். ஜி. ராஜ்குமார்

"**ஓ**ர் அறுவையின் ஆரம்பம்'' என்ற கவிதையில் கட்டுக்கோப்பு இல்லாதது மட்டுமல்ல; ஒரு தவறான கருத்தையும் தந்துள்ளது! ''அறிவை'' எனப் பெண்களை அழைப்பதுண்டு என்பது தவறு. ''அரிவை'' என்றால்தான் பெண்.

''அறுவை'' என்றால் விதவை என்ற பொருள் எந்த அகராதியில் உள்ளது? என்னிடம் உள்ள மூன்று தமிழ் அகராதிகளிலும் இந்தப் பொருள் இல்லையே!
சென்னை ''அல்லியப்பா''

**செ**ன்ற வாரம் 22 — 10 — 78 கல்கி மேலட்டை வண்ணப் படம் நான் எடுத்தது. தவறுதலாக வேறு ஒருவரின் பெயர் அச்சிடப்பட்டிருப்பதைப் பார்த்து அதிர்ச்சியடைந்தேன்.
சென்னை—17 உத்ரா



# துளசி மாடம்

நா. பார்த்தசாரதி

## 23

வேணு மாமா ரவியைக் கேட்டார்:

''எக்ஸ்பிரஸ் டெலகிராமாக் குடுத்தியோ? ஆர்டினரியாக் குடுத்தியோ?''

''எக்ஸ்பிரஸ்தான் மாமா. எப்பிடியும் நாளைக் காலம்பரத்துக்குள்ளே வசந்திக்குக் கிடைச்சு அவ பம்பாயிலிருந்து புறப்பட்டுடலாம்.''

சர்மா கையோடு பஞ்சாங்கம் கொண்டு வந்திருந்ததைப் பார்த்து முகூர்த்தக் கால் நடுவதற்கும், லக்கினப் பத்திரிகை வைப்பதற்கும் உடனே நாள் பார்த்துச் சொல்லும்படி அப்போதே அவரை வேண்டினார் வேணு மாமா. சர்மாவும் உடனே பொறுமையாகவும், நிதானமாகவும் பஞ்சாங்கத்தைப் புரட்டிப் பார்த்து விவரங்களைத் தெரிவித்தார்.

அன்று தமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் ரவியையும், சர்மாவையும் வடை பாயசத்தோடு அங்கே தம் வீட்டிலேயே சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டுமென்று மன்றாடினார் வேணு மாமா.

''அதெல்லாம் இன்னிக்கி வேண்டாம். லக்கினப் பத்திரிகை எழுதற அன்னிக்கி வச்சுக்கலாம். உங்க வீட்டுச் சாப்பாடு எங்கே ஓடிப் போறது?'' — என்று சொல்லிக் கொண்டு வேணு மாமாவிடம் விடைபெற்றுத் தன் மகன் ரவியுடன் வீடு திரும்பினார் சர்மா.

திரும்பி வீட்டுக்கு நடக்கிற போது அவர்கள் ஒருவருக்கொருவர் அதிகம் பேசிக் கொள்ளவில்லை என்றாலும், ''தங்கமான மனுஷன். உபகாரி, உபகார குணமும் மனோதைரியமும் மனுஷா கிட்டச் சேர்ந்து அமையறது ரொம்பவும் அபூர்வம். சிலபேர் இது மாதிரி நல்ல காரியத்துக்கு முன்வந்து உபகாரம் பண்ணணும்னு நினைப்பன். ஆனாத் துணிஞ்சு முன் வந்து உபகாரம் பண்றதுக்கு வேண்டிய மனோ தைரியம் இராது'' — என்று வேணு மாமாவைப் புகழ்ந்து சொல்லிக் கொண்டு வந்தார் சர்மா.

ரவி அப்பா சொல்லியதை ஆமோதிப்பது போல் மௌனமாக இருந்தான். ஏற்பாடுகள் நிறைவெய்துகிற வரை இதுபற்றிப் பிறரிடம் எதுவும் பேசுவதில்லை என்று இருவரும் பரஸ்பரம் தங்களுக்குள் எச்சரிக்கை உணர்வோடு கூறிக் கொண்டார்கள். காமாட்சியம்மாளிடம் இது பற்றிப் பேசுகிற பொறுப்பைக் கூட வேணு மாமா சொல்லியது போல் வசந்தியின்வசம் விட்டுவிடலாம் என்று தந்தை மகன் இருவருமே கருதினார்கள். அன்றிரவு கமலியிடம் மட்டும் குறிப்பாக விஷயத்தைப் புலப்படுத்தினான் ரவி.

மறுநாள் காலை முதல் தபாலில் கிடைத்த ஒரு கடிதம் அவர்கள் ஏற்பாட்டில் சிறு மாறுதல் ஒன்றை உண்டாக்கியது. சர்மாவுக்கும், கமலிக்கும் வக்கீல் நோட்டீஸ்கள் அனுப்பியிருந்தவர்கள் அதன் நகல்களை ஸ்ரீமடம் ஹெட் ஆபீஸ் மானேஜருக்கு அனுப்பியிருந்ததுடன் சர்மாவையும் ரவியையும் பற்றி இல்லாததும் பொல்லாததுமாகக் குறை சொல்லி ஒரு மொட்டைக் கடிதமும் போட்டிருந்தார்கள் போலிருக்கிறது.

ஸ்ரீமடம் மானேஜர் அவற்றைப் பொருட்படுத்தவில்லை யென்றாலும் ரவியையும், அவனோடு வந்திருக்கும் பிரெஞ்சுப் பெண்மணியையும் ஸ்ரீமடத்துக்கு வரச் சொல்லிப் பெரியவர்களைத் தரிசனம் செய்து விட்டுப் போகுமாறு யோசனை கூறியிருந்தார். எழுதியிருந்த பாணியிலிருந்து அந்தத் தரிசனமே இவர்களுக்கு ஒரு சோதனையாகவோ பரீட்சையாகவோ அமையும்போலிருந்தது. பெரியவர்களின் குறிப்பறிந்து அந்த மகாஞானியின் சமிக்ஞையோ ஆக்ஞையோ பெற்றுத்தான் அந்தக் கடிதமே மானேஜரால் எழுதப்பட்டிருக்குமென்று சர்மாவால் சுலபமாக அநுமானிக்க முடிந்தது.

கடிதத்தை ரவியிடம் படிக்கக் கொடுத்து, ''அவளைக் கூட்டிக் கொண்டு ஒரு நடைபோய் விட்டு வா! பெரியவர்களின் ஆசீர்வாதமும் கிடைக்கட்டும்'' — என்றார் சர்மா. ரவி அதற்கு உடனே ஒப்புக்கொண்டான். ஆனால் சிறிது தயக்கத்தோடு தந்தையைக் கேட்டான்:

''இந்த ஊக்காரா ஒரு வண்டி குத்தம் சுமத்திக் கோள் சொல்லி எழுதின கடிதாசையும், வக்கீல் நோட்டீஸையும் பார்த்துட்டு மடத்திலேருந்து இதை எழுதியிருக்கா. என்ன நடக்குமோ? வரச் சொல்றது அவா. போகச் சொல்றது நீங்க. மகாஞானியும் பூர்ண திருஷ்டியும் உள்ள ஒருத்தரைத் தரிசிக்கப் போறதை எங்க பாக்கியம்னு நெனைச்சு நானும் கமலியும் போறோம். வேற ஒண்ணும் சிரமமோ கஷ்டமோ வராதே?''

''ஒரு கொறையும் வராதுடா! போய் அவா அநுக்கிரகத்தையும் வாங்கிண்டு வந்து சேருங்கோ''....

யோசிக்கவோ, பிரயாணத்துக்குத் திட்டமிட்டுத் தயாராகவோகூட அவர்களுக்கு நேரமில்லை. உடனே கிடைத்த பகல் நேர ரயிலைப் பிடித்து விரைந்தார்கள் அவர்கள். மறுநாள் அதிகாலை ஐந்து ஐந்தரை மணிக்குத்தான் அங்கே போய்ச் சேர முடிந்தது.

ஸ்ரீமடத்தையும், பழம் பெருமை வாய்ந்த ஆலயங்களையும் தரிசிக்க வரும் பக்தர்களுக்காகவும், யாத்திரீகர்களுக்காகவும், அந்த ஊரில் தங்குவதற்குச் சில நல்ல லாட்ஜுகளும், ஹோட்டல்களும் ஏற்பட்டிருந்தன. அவற்றில் ஒன்றில் தங்கி நீராடி உடைமாற்றிக் கொண்டு ரவியும் கமலியும் தயாரானார்கள். ஊருக்கு வெளியே இரண்டு மூன்று மைல் தொலைவில் ஒரு மாந்தோப்பில் ஆசார்ய சுவாமிகள் தங்கியிருப்பதாகவும் அப்போது சாதுர் மாஸ்ய விரதம் இருப்பதால் அவர் யாரோடும் பேசுவதில்லை என்றும் எல்லாம்

சமிக்ஞைதான் என்றும் ஹோட்டல் மானேஜர் கூறினர். கூட்டம் சேருவதற்கு முன் சீக்கிரமே போய் விட்டால் சுலபமாகத் தரிசனம் ஆகும் என்று சொல்லி அவரே ரவியும் கமலியும் அந்த மாந்தோப்புக்குப் போவதற்கு ஒரு டாக்ஸி பேசி விட்டார்.

பழைய நாள் சுங்குடிப் புடைவை போலத் தோன்றிய ஓர் எளிய கைத்தறிப் புடவை அணிந்து குங்குமத் திலகமிட்டு, நீராடிய ஈரம் புலராத கூந்தலை நுனி முடிச்சிட்டுக் கொண்டு அதிகாலையின் புனித உணர்வுகள் நிறைந்த மனத்துடன் புறப்பட்டிருந்தாள் கமலி. நிறமும், கண்களும், கூந்தலும் வித்தியாசமாகத் தோன்றின என்பது தவிர மற்ற விதங்களில் அவள் ஓர் இந்தியப் பெண்ணாகவே காட்சியளித்தாள். சில நோட்டுப் புத்தகங்களும் டைரியும் அவள் கையில் இருந்தன.



அரையில் சரிகைக் கரையிட்ட பட்டாடையும், மேல் உத்தரியமும், பொன் நிற மார்பில் வெளேரென்று மின்னல் இழையாகத் துலங்கிய யக்ஞோபவீதமுமாகப் புறப்பட்டிருந்தான் ரவி. நடுவழியில் பழக்கடை, பூக்கடை இருந்த பகுதியில் நிறுத்தி ஆப்பிள், ஆரஞ்சு, மாதுளை, திராட்சைப் பழங்களும், ஒரு துளசி மாலையும் வாங்கிக் கொண்டார்கள் அவர்கள்

அதிகாலையில் கிழக்கு வெளுத்துக் கொண்டிருக்கும் போது அப்படி ஒரு தரிசனத்துக்குப் போவது மனத்துக்கு ரம்மியமாக இருந்தது. ரவி, கமலி இருவருடைய மனங்களும், சரீரங்களும், அப்போதுதான் பூத்த பூக்களைப் போல் சிலிர்ப்புடனும் நறு மணத்துடனும் தண்ணென்றும் களங்கமற்றும் இருந்தன. மனங்களும், உடல்களும், உஷ்ணமின்றிக் குளிர்ந்திருந்தன.

அந்த அதிகாலையிலும் கூடப் பெரியவர்கள் தங்கியிருந்த மாந்தோப்புக்கு வெளியே நாலைந்து டூரிஸ்ட் கோச்கள், பத்துப் பன்னிரண்டு கார்கள், சில குதிரை வண்டிகள் நின்று கொண்டிருந்தன. அவர் தங்கியிருப்பதை ஒட்டி அந்த இடம் ஒரு க்ஷேத்திரமாகி இருந்தது. அந்தப் பெரிய மாந்தோப்பில் நடுவாக இருந்த ஒரு தாமரைப் பொய்கையின் கரையில் சிறுகுடிசை போன்ற பர்ணசாலை ஒன்றில் அவர் தங்கியிருந்தார். கோயில் கர்ப்பக் கிருஹத்தில் இருப்பது போல் அந்த இடத்தைச் சுற்றித் துளசியும் கர்ப்பூரமும், சந்தனமும் - நெய்யும் கலந்த வாசனை நிலவியது. ஆணும் பெண்ணுமாக நிறையப் பக்தர்கள் கையில் பழத் தட்டுக்களுடன் தரிசனத்துக்குக் காத்திருந்தனர். ரவி கமலியோடு ஸ்ரீமடத்து நிர்வாகியைப் போய்ப் பார்த்தான். அவர் பிரியமாக வரவேற்றுப் பேசினர். எங்கே தங்கியிருக்கிறீர்கள் எப்போது வந்தார்கள் என்ற விவரங்களை எல்லாம் விசாரித்துக் கொண்டார். தங்கியிருக்கிற இடத்தில் எல்லாம் சௌகரியமாயிருக்கிறதா — என்று கேட்டார். "நீங்கள் சம்ஸ்கிருதத்திலும், சாஸ்திரங்களிலும் இந்தியக் கலாசாரங்களிலும் நிரம்ப ஈடுபாடுள்ளவராயிருப்பதை அறிந்து பெரியவர்களுக்கு வெகு திருப்தி" — என்று நடுவே கமலியைப் பார்த்துத் திடீரென்று ஒரு வாக்கியம் சொன்னார் அவர். தங்களைப் பற்றித் தாங்கள் அங்கே வருவதற்கு முன்பே நிறையப் பேச்சு நடந்திருப்பதை ரவியும் கமலியும் அதிலிருந்து புரிந்து கொள்ள முடிந்தது. பெரியவர்கள் சாதுர்மாஸ்ய விரதம் இருப்பதால் அவர்கள் பேசுவதை எல்லாம் கேட்டுப் புரிந்து கொள்வார்கள் என்பதையும் அவர் எதுவும் பேச மாட்டார் என்பதையும் கமலிக்கு விளக்கினர் அவர். மொட்டைக் கடிதாசுகள் வக்கீல் நோட்டீஸ்கள் பற்றி அவரும் பேச வில்லை. அவர்களும் பேசவில்லை.

அங்கே தரிசனத்துக்குக் காத்திருந்தவர்களோடு அவர்களும் போய் நின்று கொண்டார்கள். ஒரு ஐரோப்பிய யுவதி புடவை குங்குமத் திலகத்தோடு தரிசனத்துக்கு வந்திருப்பது காத்திருந்த மற்றவர்களிடம் சிறிது வியப்பை உண்டாக்கியது. சிலர் ரவியிடம் வியந்து விசாரித்தார்கள். சிலர் கமலியிடமே ஆங்கிலத்தில் விசாரிக்க ஆரம்பித்து அவள் தமிழிலேயே பதில் சொல்லியது கண்டு ஆச்சரியப் பட்டார்கள். கமலியைச் சுற்றி இளம் பெண்கள் மாமிகளின் கூட்டம் கூடி விட்டது.

பெரியவர்கள் பொய்கையில் நீராடிவிட்டுப் படித் துறையிலேயே ஈர ஆடையுடன் ஜபம் செய்து கொண்டிருப்பதாக அங்கிருந்தவர்கள் சொன்னார்கள். படித் துறையிலிருந்து அவர் குடிலுக்கு வந்ததும் தரிசனம் கிடைக்கலாம்

என்று காத்திருந்தவர்களிடையே பேச்சு நிலவியது.

கிழக்கு நன்றாக வெளுத்து மாந்தோப்பில் பறவைகளின் குரல்கள் வீச்சுக் குறையத் தொடங்கியிருந்தன. ஸ்ரீமடம் நிர்வாகி அப்போது அவர்கள் நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி வந்தார்.

''நீங்க ரெண்டு பேரும் படித் துறைக்கே போயிடுங்கோ. பெரியவா உட்கார்ந்திருக்கிற படிக்கு ஒருபடியோ, ரெண்டு படியோ கீழே இறங்கிண்டாப் பேசச் செளகரியமாயிருக்கும்.''

அவர் கூறியபடி அவர்கள் இருவரும் படித் துறைக்கு விரைந்தனர். பொய்கையில் பூத்திருந்த பல செந்தாமரைப் பூக்களில் ஒன்று கரையேறிப் படிக்கட்டில் அமர்ந்திருப்பது போல் கிழக்கு நோக்கித் தேஜோ மயமாக அமர்ந்திருந்தார் அவர். கிழக்கே உதித்துக் கொண்டிருந்த இளஞ் சூரியனின் வரவு படித்துறையில் வீற்றிருந்த இந்த மூத்த ஞான சூரியனைக் காண வந்தது போலிருந்தது. அவர் பாதங்களின் அருகே பழத் தாம்பாளத்தை வைத்து விட்டுக் கீழே சற்று அகலமாக இருந்த மற்றொரு படியின் அசெளகரியமான குறுகிய இடத்துக்குள்ளேயே சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்கள், ரவியும், கமலியும்.

தானே அறிமுகப் படுத்திக்கொள்ளும் எண்ணத்துடன், ''சங்கர மங்கலம் விசுவேசுவர சர்மாவின் ஜ்யேஷ்ட குமாரன்''... என்று தொடங்கிய அவனைப் புன்முறுவலுடன் ''போதும், தெரிகிறது'' — என்கிற பாவனையில் கையமர்த்தி விட்டு உட்காரும்படி இருவருக்குமே ஜாடை காட்டினார் அவர். கமலி நோட்டுப் புத்தகத்தில் ஒரு பக்கத்தைப் புரட்டி வைத்துக் கொண்டு அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள். அவரோ அதே மலர்ந்த முகத்தோடு 'சரி தொடங்கு' — என்பது போலக் கையயை அசைத்தார். தயக்கங்கள் இல்லாமல் தடைகள் இல்லாமல் சொல்லி வைத்தது போல் எல்லாம் நடந்தன.

''ஏதோ எனக்கு இருக்கும் குறைந்த ஞானத்தைக் கொண்டு கனகதாரா ஸ்தோத்திரம், செளந்தர்யலஹரி, இரண்டையும் பிரெஞ்சில் மொழிபெயர்த்திருக்கிறேன். பெரியவர்கள் கேட்டருள வேண்டும்'' —கமலி வேண்டினாள்.

புன் முறுவலோடு அவளை நோக்கிய அவர் கையை அசைத்தார். ஒளி நிறைந்த அந்த விழிகளில் ஞானத்தின் நிறைவும், கனிவும், தெரிந்தன. முதலில் சம்ஸ்கிருத ஸ்லோகத்தையும் அப்புறம் பிரெஞ்சு மொழி பெயர்ப்பையும் அவள்



மலர்ந்த முகத்தோடு ஆசி கூறுகிற பாவனையில் அவரது கரம் உயர்ந்து தணிந்ததை அவர்கள் காணமுடிந்தது. வெளி நாடுகளில் சுற்றிய பழக்கத்தாலும் அந்த மகானுக்குத் தான் யாரென்று நினைவிருக்குமோ, இராதோ என்ற தயக்கத்தாலும் தன்னைத்

மேலட்டை :

**''சிரிப்பின் எதிரொளி!''**

வண்ணப்படம் : **உத்ரா**

படித்தாள். அவர்களுக் கிடையே ஒரு பவ்ய மான சாட்சியைப் போல் அடக்க ஒடுக்கமாக அமர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான் ரவி.

அங்கே படித்துறைக்கு மேலே பக்தர்களின் கூட்டம் கூடி விட்டது. ஓர் ஐரோப்பியப் பெண்மணி ஸ்பஷ்டமான — குறையில்லாத உச்சரிப்போடு ஸௌந்தர்ய லஹரி ஸ்லோகத்தைச் சொல்லி அதன் பிரெஞ்சு மொழி பெயர்ப்பையும் கூறுவதைக் கூட்டத்தினர் நிசப்தமாகக் கட்டுண்டு கேட்டுக் கொண்டிருந்தனர். கூட்டத்துக்கு அது ஒரு புதிய மெய் சிலிர்க்கச் செய்யும் அநுபவம்.

சிற்சில இடங்களில் சைகையாலேயே 'மறு முறையும் படி' — என்று தெரிவித்துக் கமலியைத் திரும்பக் கூறச் செய்து கேட்டார் அவர். எப்போது நிறுத்தச் சொல்லி ஜாடை காட்டுகிறாரோ அப்போது நிறுத்தி விடலாம் என்று படித்துக் கொண்டிருந்தவளை — அவர் நிறுத்தச் சொல்லாமலே சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். நேரம் போவதை யாருமே உணரவில்லை. ஸௌந்தர்ய லஹரி, கனகதாரா ஸ்தோத்திரம் முடிந்து, அவள் தாள்களை மூடியதும், ''வேறு ஏதாவது மொழிபெயர்ப்பு வேலை நடக்கிறதா?' — என்று எண்ணி அதையும் சைகை மூலமே அவர் கேட்ட போது, கமலி அதைப் புரிந்து கொண்டு, ''பஜகோவிந்தம் பண்ண முயன்று கொண்டிருக்கிறேன்'' — என்றாள். வாயருகே வலது கையை அடக்கமாகப் பொத்தி அவள் பதில் கூறிய பாணியின் இந்தியத் தன்மையை அனைவரும் வியந்து கொண்டிருக்கும் போதே, ''பஜ கோவிந்தத்தைப் பிரெஞ்சு மொழியில் பண்ணத் தொடங்கியிருந்தால் அதிலிருந்தும் ஒன்று சொல்லேன்'' — என்பது போல் சைகை செய்தார் அவர்.

''புனரபி ஜனனம், புனரபி மரணம், ...புனரபி ஜனனி .... ஜடரே சயனம்...'' — என்ற பகுதியைச் சொல்லி விட்டு அதன் பிரெஞ்சு மொழிபெயர்ப்பைக் கூறினாள் கமலி.

இதில் ஆச்சரியம் என்னவென்றால் அவர் நினைத்தது — அந்த நினைப்பின் சைகையிலேயே அவளுக்குத் தவறாமல் புரிந்தது. 'மகான்கள் பேசாமலே தங்களுடைய நினைப்பைப் பிறருடைய இதயத்தில் தெளிவாக்கி விடுவார்கள். வாயும் செவியும் பாமரர்களுக்குத்தான். அப்படிக் கேட்கவும், பேசவும் செய்யும் கருவிகள் இல்லாமலே கேட்பிக்கவும், பேசுவிக்கவும் செய்ய மகான்களால் முடியும்' என்பதை அவருடைய அந்த நிலைமை அவர்களுக்கு உணர்த்தியது.

நீண்ட நேரத்திற்குப் பின் அவருடைய பார்வை ரவியின் பக்கம் திரும்பியது. அவன் பவ்யமாகத் தன்னைப் பற்றிய விவரங்களையும், கமலியைப் பற்றிய சில தகவல்களையும் கூறினான். பிரான்ஸின் [illegible] மொழிகளைக் கற்கும் மாணவர்கள் பற்றிச் சொன்னான். அவர்களில் முதன்மையாகத் தேறிப் பக்குவம் பெற்றவள் கமலிதான் என்பதையும் கூறினான்.

பழத் தட்டிலிருந்து ஒரு மாதுளையையும், ஆப்பிளையும், துளசி மாலையையும் வலது கையால் தொட்டு ஆசீர்வாதம் செய்து அவர்களிடம் தனித்தனியே அளித்தார் அவர். அவனுக்கு ஆப்பிளும், அவள் கையில் மாதுளையும் வந்திருந்தன. இருவரையும் முகமலர்ந்து ஆசீர்வதித்தார் அவர். சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தபின் புறப்பட இருந்த போது கமலி திடீரென்று ரவியே எதிர்பாராத விதமாக ஓர் ஆட்டோகிராப் நோட்டையும் பேனாவையும் எடுத்துப் பெரியவர்களிடம் நீட்டவே—அது சம்பிரதாயமில்லையே என்று ரவி தயங்கி நின்றான். பெரியவர்களோ முக மலர்ச்சியோடு புன்முறுவல் பூத்தபடி ஆட்டோகிராப் நோட்டின் அந்தப் பக்கத்தில் கொஞ்சம் அட்சதையையும் குங்குமத்தையும் தூவிக் கையை உயர்த்தி ஆசீர்வாதம் செய்தார். 'மறுபடி வாருங்கள்' என்று சைகையும் காண்பித்தார்.

படியேறி மேலே வந்ததும் ரவி கடிகாரத்தைப் பார்த்தான். காலை பத்தே முக்கால். மாந்தோப்பில் வெயில் உறைக்கவில்லை. மடத்துப் பிரசாதங்கள் பிரசுரங்கள் அடங்கிய உறைகளோடு வந்த மானேஜர், ''பெரியவா பேனாவைத் தொட்டு எழுதி ஆட்டோகிராப் போடறதுங்கறது எந்த நாளிலேயும் வழக்கமில்லே. ஆனாலும் இவா மேலே இருந்த பிரியத்தாலே அந்த ஆட்டோகிராப் தாளிலே அட்சதை குங்குமத்தை எடுத்துத் தூவினதே பெரிய அநுக்கிரகம்னு தான் சொல்லணும். இதுக்கு முன்னாடியும் இப்பிடி எத்தனையோ பேர் விவரம் தெரியாமல் ஆட்டோ கிராப்பை எடுத்து நீட்டியிருக்கா. ஆனா அப்போ எல்லாம் பெரியவா மறுத்தாப் போலக் கையைத் தடுத்து நீட்டிப் போகச் சொல்லிடுவா. முத முதலா இன்னிக்கித்தான் இப்பிடிச் சிரிச்சிண்டே சுமுகமா அட்சதை குங்குமத்தை எடுத்துத் தாளிலே இட்டதை நானே பார்க்கறேன். நீங்க ரொம்பக் குடுத்து வச்சிருக்கணும்'' — என்றார்.

அவரிடம் நன்றி தெரிவித்து விடைபெற்றுக் கொண்டார்கள் அவர்கள். ''ஸௌந்தர்ய லஹரி, கனக தாரா ஸ்தோத்ரம், பஜ கோவிந்தம்லாம் பிரெஞ்சிலே அச்சானதும் மறந்துடாமே நீங்க மடத்து லைப்ரரிக்கு அனுப்பி வைக்கணும்'' — என்று கமலியிடம் கூறினார் அவர்.

ஹோட்டலுக்குத் திரும்பி ரவியும் கமலியும் சிற்றுண்டி காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது ஸ்ரீமடத்து நிர்வாகி அனுப்பியதாகப் பித்தளை டவாலி அணிந்த மடத்து ஊழியன் ஒருவன் ஏதோ ஒரு கடிதத்தோடு அவர்களைத் தேடி வந்திருந்தான். கடிதம் உறையிட்டு ஒட்டி அவன் தந்தை பெயருக்கு எழுதப்பட்டிருந்தது.

ரவி ஊர் திரும்பியதும் தந்தையிடம் சேர்த்துவிடுவதாக அதை வாங்கிக்கொண்டான்.

(தொடரும்)



# RAJAJI BIOGRAPHY

The first volume of Rajaji Biography

**A WARRIOR FROM THE SOUTH**

★

Written by RAJMOHAN GANDHI and published by Bharathan Publications

★

**Lok Nayak Shri JAYAPRAKASH NARAYAN**
releases the Rajaji Biography
on Saturday, November 18 at Patna

★

**Price per copy Rs. 45/-**
**Postage extra Rs. 5/- within India and Rs. 12/- by Sea Mail to places abroad**

**SPECIAL REDUCTION OFFER!**

For Orders with remittance by M. O. or draft before December 10, 1978
Rs. 35/- per copy plus postage

★

DIRECTOR
**BHARATHAN PUBLICATIONS PRIVATE LIMITED**
**GUINDY, MADRAS - 600032 — Phone: 431543**


அதிகம்... நிறைய தொழிற்சாலைகள் இருப்பதால் சூழ்நிலையில் தூய்மைக் குறைவு. மற்றப்படி அதிக வித்தியாசங்கள் கிடையாது!... அது போகட்டும்! உங்கள் எதிர் காலத்தைப் பற்றி என்ன யோசனை வைத்திருக்கிறீர்கள்?

*சுமித்ரா:* ரசாயனத்தில் டிகிரி முடித்ததும் மேலே படிப்பேன்... நடுவில் நல்ல வேலையாகக் கிடைத்தால் வேலையில் சேர்ந்து விடுவேன்!

*சங்கர்:* ஒரு வேளை ஏதாவது பேங்கில் குமாஸ்தா வேலை கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்... போவீர்களா?

*சுமித்ரா:* நிச்சயமாகப் போவேன்...

*சங்கர்:* நீங்கள் படிக்கும் ரசாயனத் துறைக்கும் பேங்கில் குமாஸ்தா வேலைக்கும் சம்பந்தமே இருக்காதே!

*சுமித்ரா:* தற்போது வேலையில் இருக்கும் எவ்வளவு பேர்கள், அவ்வேலை சம்பந்தப்பட்ட துறைகளில் பயின்றவர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லுங்கள்! படிப்பது நல்ல வேலை கிடைப்பதற்குத்தான். நல்ல வேலை கிடைக்கும் போது இதையெல்லாம் பார்க்க முடியாது!

*சங்கர்:* விளையாட்டுத் துறையில் உங்களுக்கு நாட்டம் உண்டா?

*சுமித்ரா:* 'த்ரோ பால்' விளையாடுவோம். கிரிக்கெட் விளையாட்டில் ஈடுபாடு உண்டு... விளையாடினது கிடையாது...

*சங்கர்:* உங்கள் கல்லூரியில் கிரிக்கெட் டீம் கிடையாதா?

*சுமித்ரா:* இன்னும் அமைக்கவில்லை. ஆனால் பல பெண்களுக்கு ஆர்வம் இருக்கிறது. விரைவில் விளையாடத் தொடங்க வாய்ப்புக்கள் உள்ளன.

*சங்கர்:* சென்னையில் சில பெண்கள் கல்லூரிகளில் மாணவிகளுக்குக் கராத்தே சொல்லித் தருவதாகக் கேள்விப் பட்டேன். அது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

*சுமித்ரா:* ஆயுதம் எதுவுமின்றிக் கையினாலேயே தன்னைக் காப்பாற்றிக் கொள்ள உதவும் ஒரு தற்காப்புக் கலை கராத்தே. என்னைப் பொறுத்த மட்டில் எல்லாப் பெண்கள் கல்லூரிகளிலும் மாணவிகளுக்குக் கட்டாயமாகக் கராத்தே கற்பிப்பதை நான் வரவேற்கிறேன்!

*சங்கர்:* ஐ டூ வெல்கம் யுவர் ஐடியா....

*சுமித்ரா:* இவ்வுரையாடலைப் பயன் படுத்தி ஒரு விஷயம் சொல்ல ஆசைப் படுகிறேன். பெரிய நகரங்களிலேயே நிறைய பெண்கள் கல்லூரிகள் இருக்கின்றன. மற்ற ஊர்களில் பெண்கள் கல்லூரிகள் மிக மிகக் குறைவு. அதிலும் அத்தகைய கல்லூரிகள் எல்லா பாடங்களும் போதிப்பதில்லை. உதாரணமாக எங்கள் கல்லூரியில் பி. காம். பி. எஸ்ஸி. (பிஸிக்ஸ்) போன்றவை கிடையாது. இக்குறைகளைக் களையச் சென்னை சர்வ கலா சாலையும், அரசாங்கமும் முன்வர வேண்டும்.

*சங்கர்:* படிக்கும் ஆர்வமிருந்தும் படிக்க முடியாமல் போகும் நிலையே இந்த நாட்டில் இருக்கக் கூடாது. எவ்வளவு துரிதமாக இந்த மாற்றம் ஏற்படுகிறதோ அவ்வளவு வேகமாக இந்தத் தேசம் முன்னேறும் இல்லையா?

உரையாடல் ஏற்பாடு: நாயகன்
போட்டோ: மன்னை மூர்த்தி

ஊருக்குத் திரும்பும் போது கமலிக்கும், ரவிக்கும், மனம் நிறைவாக இருந்தது. 'சொல்லாமற் செய்வர் பெரியார்' – என்பது போல் தர்ம சங்கடமான எதைப் பற்றியும் சொல்லாமற், கேட்காமல் அனுக்கிரகம் செய்து அனுப்பியிருந்தார் பெரியவர். அவரது அந்தப் பரந்த கருணையையும் பெருந்தன்மையையும் வியந்து கொண்டே சங்கரமங்கலம் திரும்பியிருந்தார்கள் அவர்கள். ரவியும், கமலியும் ஊர் திரும்பிய அதே நாளில் சில மணி நேரம் முன்னதாகவே வசந்தியும் பம்பாயிலிருந்து வந்திருந்தாள். சென்னை வரை விமானத்தில் வந்து அப்புறம் இரயில் பயணம் செய்து சங்கர மங்கலத்தை அடைந்திருந்ததால் எதிர்பார்த்ததை விட விரைவிலேயே அவள் வந்து சேர முடிந்திருந்தது. முதல் வேலையாக வசந்தி சர்மாவின் வீட்டுக்கு வந்து பெட்டி சூட் கேஸ்களுடன் கமலியைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டாள். நாலு நாள் கலியாணம் முடிந்து கிருஹப் பிரவேசத்துக்காகப் புகுந்த வீட்டுக்குள் நுழைவது வரை இனிமேல் கமலி வேணு மாமா வீட்டில்தான் இருப்பதென்று முடிவாகியிருந்தது. சர்மா வேணு மாமா இருவருமே சேர்ந்து செய்த ஏற்பாடுதான் இது.

ஸ்ரீமடத்திலிருந்து ஊருக்குத் திரும்பி வந்ததிலிருந்து ரவி தன் அம்மாவிடம் ஒரு மாறுதலைக் கவனித்து உணர முடிந்தது. அவள் அப்பாவிடமும், அவனிடமும் பேசுவதை அறவே நிறுத்தியிருந்தாள். அவர்களாக வலுவில் போய்ப் பேச முயன்றாலும் பதில் சொல்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு போனாள்.

''நீ மடத்துக்குப் புறப்பட்டுப் போன மறுநாளிலேர்ந்தே எங்கிட்ட இப்படித்தான் முறைச்சிண்டிருக்கா. வேணு மாமாவும் நாமும் பேசிண்டிருந்ததெல்லாம் எப்பிடியோ இவ காது வரை எட்டியிருக்கும்னு தோண்றது'' – என்றார் சர்மா. அப்படித்தான் இருக்க வேண்டும் என்று ரவியும் நினைத்தான். அன்றைக்குச் சாயங்காலமே வசந்தியைப் அம்மாவிடம் பேசச் சொன்னால் அவள் கோபத்துக்குக் காரணம் என்னவென்று தெளிவாகப் புரிந்து விடுமென்று சர்மாவும் ரவியும் எண்ணினார்கள். தற்செயலாகவே அன்று மாலை வேணு மாமாவின் பெண் வசந்தி ரவி கமலி கல்யாண விஷயமாகக் காமாட்சியம்மாளிடம் பேசிப் பார்ப்பதென்று ஏற்பாடாகியிருந்தது. ஸ்ரீமடத்து மானேஜர் ரவி மூலம் சர்மாவுக்கு எழுதி அனுப்பி யிருந்த கடிதத்தில் பெரியவர்கள் இவர்களிடம் எப்படி மிகவும் பிரியமாக நடந்து கொண்டார் என்ற விவரங்களை எல்லாம் விவரித்து விட்டு வேறு சில செய்திகளையும் குறிப்பிட்டிருந்தார். அந்தக் கடிதத்தை அப்படியே காமாட்சியம்மாளுக்குப் படித்துக் காட்டி விடச் சொல்லலாமா என்றுகூட எண்ணினார் சர்மா. தானோ, ரவியோ இருவரில் யார் அந்தக் கடிதத்தைப் படித்துச் சொல்ல முயன்றாலும் பொய்யாக இட்டுக் கட்டி ஒரு கடிதத்தை வாசிப்பதாக அவளுக்குச் சந்தேகம் வரும் என்பதால் பார்வதியிடமும் குமாரிடமும் அதைக் கொடுத்தனுப்பினர். ''தங்களை நம்பாததோடு அம்மா அதைப் படிக்கத் தொடங்குவதற்குக் கூட விடவில்லை'' – என்று திரும்பி வந்து கடிதத்தைக் கொடுத்தார்கள் குமாரும் பார்வதியும். சர்மா தாமே நேரில் போய் மீண்டும் முயற்சி செய்யத் தயங்கினார். கடைசியாக அந்தக் கடிதத்தை வசந்தியிடம் கொடுத்துப் பார்க்க முடிவு செய்தார். ஏற்கெனவே ரவியும் கமலியும் ஊரில் இல்லாத போது இந்த விஷயம் காதில் விழுந்ததுமே ஹிஸ்டீரியா வந்தது போல் அழுது கதறிக் கூப்பாடு போட்டு ஆர்ப்பாட்டம் பண்ணியிருந்தாள் காமாட்சி அம்மாள். சொல்லக்



டார்த்தைத் எல்லாம் சொல்லியிருந்தாள். கேட்கக் கூடாததை எல்லாம் கேட்டிருந்தாள். ரவியிடமும், குமாரிடமும் சொன்னால் அவர்கள் மனம் வீணில் புண்படுமே என்றுதான் அவற்றை யெல்லாம் சர்மா அவர்களிடம் சொல்லாமல் மறைத்திருந்தார்.

காமாட்சியம்மாளுக்கு இரத்தக் கொதிப்பு உண்டு. வீட்டில் அவளைப் பொருட் படுத்தாமல், அவளுடைய அபிப்பிராயத்தை இலட்சியமே செய்யாமல் நடை பெற்றுக் கொண்டிருந்த இந்தக் கல்யாண ஏற்பாடுகள் அவள் உடல் நிலையையும், மன நிலையையும் பெரிய அளவில் பாதித்திருந்தன. குமாரிடம் சொல்லிக் கயிற்றுக் கட்டிலை எடுத்துக் கூடத்தில் போட்டு மெத்தென்று விரித்துத் தலைக்கு உயரமாக வைத்து அதில் படுத்துக் கொள்ளச் சொல்லியும் கேட்காமல் வேண்டுமென்றே ஈரத் தரையில் புடைவைத் தலைப்பை விரித்துப் படுத்துக் கொண்டிருந்தாள் காமாட்சியம்மாள். சரியான அன்ன ஆகாரமின்றித் தளர்ந்தும் போயிருந்தாள். அன்றைக்குச் சாயங்காலம் வசந்தி காமாட்சியம்மாளிடம் பேச வரும் போது, தானோ, ரவியோ வீட்டில் இருக்க வேண்டாம் என்று முடிவு செய்திருந்தார் சர்மா. காமாட்சியம்மாள் ஆத்திரப்பட்டுச் சீறினாலும், எரிந்து விழுந்தாலும் பொறுமை இழந்து விடாமல் அவளிடம் தொடர்ந்து பேசி எடுத்துச் சொல்லி விவாதிக்கும்படி வசந்தியிடம் கூறியிருந்தார் அவர். திட்டமிட்டிருந்தபடி மாலையில் சர்மா ஆற்றங்கரைக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். ரவி இறைமுடி மணியைப் பார்த்துப் பேசிக் கொண்டிருக்கலாம் என்று அவருடைய கடைக்குப் போனான். குமார் கல்லூரியில் அடுத்த வாரம் வரப்போகிற ஒரு பரீட்சைக்காகத் திண்ணையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தான். பார்வதி வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

எப்போது பம்பாயிலிருந்து வந்தாலும் மாமிக்கென்று சில சமயங்களில் அவளே பிரியப் பட்டுச் சொல்லியிருக்கிற பேரீச்சம் பழமும், உலர்ந்த திராட்டைப் முந்திரிப் பருப்பு ஆகியவற்றை வாங்கிக் கொண்டு வந்து தருவது வசந்தியின் வழக்கம். அதிலும் பக்குவப் படுத்தப் பட்டு மெதுவாக்கப் படாமல் காய்ந்த ருத்ராட்சக் கொட்டைபோல் பேரீச்சைதான் வேண்டும் என்பாள் மாமி. அதுதான் பூஜைக்கு ஆகுமாம்.

அழகாகப் பாலிதீன் பைகளில் கட்டிய பேரீச்சை, உலர்ந்த திராட்சை, முந்திரிப் பருப்போடு, காமாட்சியம்மாளைச் சந்தித்தாள் வசந்தி.

''உங்க உடம்புக்கென்ன மாமீ! நாரா இளைச்சுப் போயிட்டேளே இப்படி?''

''வாடீம்மா! நீ எப்போ ஊர்லேர்ந்து வந்தே?''

''காலம்பர வந்தேன் மாமீ! மறக்காம உங்க பண்டம்லாம் வாங்கிண்டு வந்திருக்கேன்'' –

''கலியாணத்துக்காகப் பொறப்பட்டு வந்திருக்கியாக்கும்?''–

குரலிலிருந்து மாமி சுபாவமாக அவைக் கேட்கிறாளா, எகத்தாளமாகக் கேட்கிறாளா என்பதை வசந்தியால் கண்டு பிடிக்க முடியாமலிருந்தது.

''நான் ஊருக்கு வரத்துக்குத் தனியாக் காரணம்னு ஒண்ணு வேணுமா மாமீ? அடிக்கடி ஊருக்கும் பம்பாய்க்குமா வந்துண்டும் போயிண்டும்தானே இருக்கேன்...''

இருவருக்கும் இடையே சிறிது நேரம் எதைப் பேசுவது எப்படி மேற் கொண்டு முறியாமல் சுமுகமாக உரையாடலை வளர்ப்பது என்று தெரியாமல் மௌனம் நிலவியது.

சிறிது நேரத்திற்குப் பின் சம்பந்தமில்லாமல் ஏதோ ஒரு குழந்தைக்குப் பழைய கதையைச் சொல்லுவது போல் காமாட்சியம்மாளே ஆரம்பித்தாள்: – ''புருஷா அக்னி சந்தானம்னு – ஔபாசனம் பண்ணி – நெருப்பு அணையாமக் காத்துண்டு வரமாதிரி இந்தக் குடும்பத்திலே பொண்டுகளும் தலைமுறை தலைமுறையா ஒரே வித்திலேருந்து வளர்ர துளசியை 'வளர்த்துப் பூஜை பண்ணிண்டு வரோம். இந்தக் குடும்பத்தோட சௌபாக்கியங்களும், லட்சுமி கடாட்சமும், விருத்தியும் நாங்க பரம்பரையாச் சரீர சுத்தத்தோடேயும் அந்தரங்க சுத்தத்தோடயும் பண்ணிண்டு வர துளசி பூஜையாலேதான்னு எங்களுக்கு நம்பிக்கை. நாங்க நல்லநாள் தவறாமே, விரத நியமம் தப்பாமே துளசி மாடத்திலே ஏத்தற விளக்குத் தான் இதுவரை இந்தக் குடும்பத்தைப் பிரகாசப் படுத்திக் காப்பாத்திண்டு வரது. எத்தனையோ தலைமுறைக்கு முன்னே ராணி மங்கம்மா காலத்திலே விரத நியமம் தப்பாத ஒரு பிராம்மண சுமங்கலிக்குத் தானம் பண்ணணும்னு தை வெள்ளிக் கிழமையும் அதுவுமா சொக்கத் தங்கத்துலே பண்ணின, சொர்ண விளக்கு ஒண்ணை வச்சுண்டு கிராமம் கிராமமாகத் தேடினாளாம். கடைசியா அந்தச்





## ரசித்தால் தட்டு!

''வட இந்தியாவில் சாதாரண மாக யாரும் ஜோக் அடித்தால், அவர் கையை நீட்டுவார். ஜோக்கைக் கேட்டவர் நீட்டிய கையில் தன் கையால் தட்டினால் அதைத் தான் ரசித்ததாக அர்த் தம். அப்போது அங்கு இருப்பவர்கள் எல் லோருமே அப்படி செய்வார்கள்.'' என்று 'சன்' பத்திரிகை எழுதி யிருக்கிறது. - பாபு

சொர்ண தீபத்தை இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண் ஒருத்திதான் தானம் வாங் கிண்டாளாம். அன்னியிலேர்ந்து இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண்கள் ஒவ்வொருத் தரா அந்தச் சொர்ண தீபத்தையும் துளசி பூஜை பண்ற உரிமையையும் முந்தின தலை முறைப் பெரியவா கிட்டேருந்து பரம்பரை பரம்பரையா அடைஞ்சிண்டு வரோம். இன் னிக்கும் தைவெள்ளிக் கிழமை தவறும அந்தத் தங்க விளக்கைத் துளசி மாடத்திலே நான் ஏத்தி வைக்கிறேன்.''—

இப்படிச் சொல்லிய படியே தன் தலை மாட்டிலிருந்த ஒரு பழைய காலத்து ஒழுக் கறைப் பெட்டியைத் திறந்து அதிலிருந்து ஒரு பட்டுத் துணியில் சுற்றி வைத்திருந்த அந்தத் தங்க விளக்கை எடுத்து வசந்தியிடம் காட்டினாள் காமாட்சியம்மாள்.

''நான் இந்தாத்து மூத்த மாட்டுப் பொண்ணு வந்ததும் எங்க மாமியார் இதை எங்கிட்டக் குடுத்தா...'' என்று கூறி ஒரு பெரு மூச்சுடன் அந்தப் பேச்சை அப்படியே நிறுத்தி விட்டு வசந்தியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் காமாட்சியம்மாள்.

''ஒண்ணும் கவலைப் படாதீங்கோ மாமீ! உங்க மாமியார் உங்க கிட்டக் குடுத்ததைப் போலவே நீங்களும் உங்க மூத்த மாட்டுப் பொண்ணிட்ட இதைக் குடுக்கலாம். அதுக்கு ஒரு கொறையும் வராது.''...

''குமாருக்குக் கல்யாணமாயி ரெண் டாவது மாட்டுப் பொண்ணுவது இந்தக் குடும்பத்துக்கு ஏத்தவளா வந்தா அவ கிட்டக் குடுக்கலாம்...''

''ஏன் மாமீ? உங்க மூத்த மாட்டுப் பொண்ணுக்கு என்ன கொறை வந்துது?''

''போறும்டீ! அவளைப் பத்தியோ ரவியைப் பத்தியோ எங்கிட்டப் பேச்சே எடுக்காதே. என் வயிறு பத்திண்டு எரியறது. நம்ம ஆசாரம் அனுஷ்டானம் எதுவுமே புரியாத யாரோ ஒருத்தியை எந்த தேசத்திலிருந்தோ இழுத்துண்டு வந்துட்டு அவளைத்தான் கல் யாணம் பண்ணிப்பேன்னு அவன் ஒத்தைக் கால்லே நிற்கிறதும், அதுக்கு எல்லாம் தெரிஞ்ச இந்தப் பிராமணனும் தலையாட்டற தும் எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலே. எல் லாம் சேரழிஞ்சு குட்டிச் சுவராத்தான் போகப் போறது. அவன் பாட்டுக்கு அவளைக் கட் டிண்டு அடுத்த மாசமே பிளேன்ல ஏறிப் பிரான்சுக்குப் போகப் போறான். மாட்டுப் பொண் வரான்னு வீட்டிலே விளக்கேத்தி வைக்க லட்சுமி வரான்னு எங்க நாள்லே சொல்லுவா...? எங்கேருந்தோ வந்துட்டு அங்கேயே திரும்பிப் புருஷனையும் இழுத் துண்டு போகப் போற யாரோ ஒருத்தி எப்பிடி இந்தாத்து லட்சுமியாக முடியும்டீ?''

''மாமீ! நீங்க எதை வேணுச் சொல் லுங்கோ. ஆனா நம்ம ஆசார அனுஷ்டானம் தெரியாதவள்னு மட்டும் கமலியைப் பத்திச் சொல்லாதீங்கோ. நம்ம குடும்பங்களிலே இப்போ வளர்ர இளம் பொண்களைவிடக் கமலி எத்தனையோ சிரேஷ்டமானவள். அவ தெரிஞ்சிண்டிருக்கற அத்தனை ஆசார அனுஷ் டானம் இப்போ நம்மடவாளுக்குக் கூடத் தெரியுமாங்கறதே எனக்குச் சந்தேகம் மாமி. அப்படியில்லேன்னாப் பெரியவாளே ஸ்ரீமடத் துக்கு அவளை வரச் சொல்லி அநுக்ரகம் பண்ணு வாளா? அவ பிரெஞ்சிலே மொழிபெயர்த் திருக்கிற ஸௌந்தரிய லஹரியையும், கனக தாரா ஸ்தோத்திரத்தையும் பஜ கோவிந்தத் தையும் கேட்டுட்டுப் பெரியவாளே ஆசீர்வா தம் பண்ணியிருக்கான்னா அது எத்தனை பெரிய விஷயம்? அதைப் பத்தி ஆச்சரியப் பட்டு ஸ்ரீ மடத்து மானேஜரே உங்காத்து மாமாவுக் குப் பெரிசா ஒரு லெட்டர் போட்டிருக் கார்... படிக்கறேன்... கேக்கறேளா?''

''வேண்டாம்டீ! ஸ்ரீமடத்து மானேஜருக்கு முந்தின மடம் ஏஜண்டாக இங்கே இருந்த சீமாவையர் மேலே ஏகக் கோபம். சீமா வையர் சங்கர மங்கலம் சம்பந்தப் பட்ட மடத்து ஆஸ்திகளை எல்லாம் ஊழல் மயமாப் பண்ணிப் பிட்டார்னு அவருக்குப் பதிலா இந்தப் பிராமணரைக் கூப்பிட்டு நியமிச்சதே அந்த மானேஜர்தான். அவர் இந்தப் பிராம ணருக்கு நெருங்கின சினேகிதம். அவராலே இவரை விட்டுக்குடுத்து எழுத முடியாது. என்னைச் சரிப் படுத்தறதுக்காக இந்தப் பிரா மணரே அவரை விட்டு இப்பிடி இங்கே ஒரு கடிதாசு எழுதச் சொல்லியிருந்தாலும் ஆச் சரியப் படறத்துக்கில்லேடீ!''

மாமியின் பிடிவாதத்தை எப்படிச் சமா ளிப்பதென்று வசந்திக்குப் புரியவில்லை. பிள்ளை அந்தப் பிரெஞ்சுக் காரியை மணந்து கொள் வதன் மூலம் நிரந்தரமாக அவள் அவனைப் பிரான்ஸுக்கே இழுத்துக் கொண்டு போய் விடுவாள் என்ற மனக்குறை மாமியின் சொற் களில் தொனிப்பதைக் கவனித்தாள் வசந்தி. கமலியின் நற் பண்புகளையும் தன்னடக்கத் தையும், கோடீசுவரர்களாகிய தன் பெற் றோரிடமிருந்து அவள் ரவியை நம்பி அவனோடு

புறப்பட்டு வந்திருக்கும் இணையற்ற எளிமையையும் ஒவ்வொன்ருக மாமியிடம் விவரித்தாள் வசந்தி. நல்லவேளையாக அதைக் கேட்கவே மறுக்காமல் மாமி எல்லாம் பொறுமையாகக் கேட்டுக் கொண்டாள்.

''நேக்குத் தெரியும்டீ! நீ, ஒங்கப்பா, எல்லாருமே இந்தக் கலியாணத்துலே உள்கைகள். எல்லாருமாச் சேர்ந்து நேக்கு எதிராச் சதி பண்ணிண்டிருக்கேள்னு நன்ஞத் தெரியும். இந்த விஷயத்திலே நீ இப்பிடித் தான் பேசுவேன்னும் நேக்கு முன்னலேயே தெரியும்.''

''தப்பா நான் ஒண்ணும் சொல்லல்லே மாமீ! உள்ளதைத் தான் சொல்றேன். கமலி ரொம்பத் தங்கமான பொண்ணு.''

''இருக்கட்டுமேடீ! யார் வேண்டாம்னது? தங்க ஊசின்னு அதுக்காக அதை நாம எடுத்துக் கண்ணைக் குத்திக்கணுமா என்ன?''

''உங்க மேலே அவளுக்குத் தேவதா விசுவாசம் மாமீ; புராதனமான இந்தியப் பெண்மையின் கலாசாரச் சின்னம்'னு உங்களைப் பத்தி அவ எங்கிட்டச் சொல்றது வழக்கம் மாமீ...''

''அதாவது சுத்தக் கர்நாடகம், மடிசஞ்சீன்னு என்னைக் கேலி பண்றுளா?''

''சிவ, சிவா! அப்படியில்லே மாமீ! வேடிக்கைக்காகக் கூட அந்த மாதிரி அவளைப் பத்திச் சொல்லாதீங்கோ. உங்களை அவ தேவதையா மதிக்கிறு.''

''.... நேக்கு அவளைக் சுட்டோடப் பிடிக்கலேடீ.''

''நீங்க அப்படிப் பாராமுகமா இருக்கக் கூடாது. மகா லட்சுமி மாதிரி சுமங்கலியா வந்திருந்து மாமாவோட மணையிலே கூட நின்னு கல்யாணத்தை நடத்தித் தரணும்! நாங்க பொண்ணுத்துக் காராளா ஏத்துண்டிருக்கோம். நீங்க வந்து நடத்தித் தரணும்...''

''இந்தத் தட்டுக் கெட்டுப் போன கல்யாணத்துக்குச் சாஸ்திரம், பொண்ணுத்துக் காரா புள்ளையாத்துக் காராள்ன்னு இதெல்லாம் வேற கேக்கறதாக்கும்?''

''மாமீ! நீங்க ரொம்பப் பெரியவா... மங்களமான காரியத்தைப் பத்தி உங்க வாயாலே இப்படி வார்த்தை சொல்லப் படாது. உங்களைக் கொறை சொல்ல எனக்கு அத்தனை வயசாகலே.''

''புள்ளைக்கு அம்மாவைக் கலந்துக்காமே - அவ சம்மதமே இல்லாமே நடக்கப்போற கல்யாணத்துக்கு — இப்பிடி வந்து அவளைக் கூப்பிடறது மட்டும் என்ன நியாயம்?''

''நீங்க வந்து கூட இருந்து ஆசீர்வாதம் பண்ணுமே இந்தக் கல்யாணம் நிறையாது.''

''நான் ஏன் வரேன்? நேக்கு மான ரோஷம் இல்லியா என்ன? இந்தப் பிராமணர் எங்கிட்ட ஒரு வார்த்தை கூடக் காதிலே போடாம இத்தனை தூரம் ஏற்பாடு பண்ணியிருக்கார். லக்கினப் பத்திரிகை முகூர்த்தக்கால் எல்லாம் கூட ஏற்பாடு பண்ணியாச்சாம். யாரிட்ட வந்து நீ காது குத்தறே? நான் இந்தக் கலியாணத்துப் பக்கமே தலைவச்சுப் படுக்கப் போறதில்லே. யாரோ ஒத்தியை




எவனே ஒத்தன் எங்கேயோ கல்யாணம் பண்ணிண்டா எனக்கென்ன வந்துது?''

மாமியின் கோபத்தை மறு பக்கமாகப் புரட்டிப் பார்த்தால் ரவியின் மேல் அவளுக்கு இருந்த பிள்ளைப் பாசம் புரிந்தது. மிகவும் பிரியமான விஷயத்தைப் பற்றி வெறுப்போடு பேசிக் கொண்டிருந்தாள் மாமி. அந்த வெறுப்பிலும், கோபத்திலுமே பிரியத்தின் அளவு தெரியக் கூடிய தொனி மறைந்திருந்தது. வசந்தி சுற்றி வளைத்து விதம் விதமாக முயற்சி செய்து மாமியின் மனத்தை இளக்க முயன்ருள். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை. சுற்றுப்புறத்துக் கிராமங்களில் உள்ள ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணி வைத்தால் தான் பிள்ளைக்கு ஊரோடு தேசத்தோடு, தாய் தந்தையோடு சம்பந்தமும் தொடர்பும் இருக்க முடியும். கமலி போன்ற ஒரு பிரெஞ்சுப் பெண்ணை மணந்து கொண்டு பிரான்ஸுக்கே போவதால் ரவி நிரந்தரமாகத் தங்களை விட்டே நழுவிப் போய் விடுவானே என்று இனம் புரியாத அச்சம் ஒன்று மாமியின் உள் மனத்தில் இருப்பது புரிந்தது. அதைத்தான் வசந்தியால் புரிந்து கொள்ள முடிந்தது. கடைசி முயற்சியாக மாமியிடம்,

''கல்யாணம் பழைய முறைப்படி நாலு நாள் நடக்கப் போறது. நலங்கு ஊஞ்சல் பாலிகை வளர்க்கறது எல்லாம் நாலு நாளும் உண்டு'' என்ருள் வசந்தி.

''எத்தனையோ விஷயத்திலே சாஸ்திரம் சம்பிரதாயம் எல்லாத்தையும் நீங்க மீறியாச்சு! இது ஒண்ணுலே மட்டும் ஏதுக்குச் சாஸ்திரம்? பேசாம அவா நாட்டு முறைப்படி ரிஜிஸ்டிரார் ஆபீஸிலே போய்ப் பதிவு பண்ணிக்க வேண்டியதுதானே? இல்லேன்னுச் சர்ச்சிலே போயி மோதிரம் மாத்திக்கலாமே?'' — என்று கசப்பாக எரிச்சலோடு பதில் சொன்னுள் மாமி.

(தொடரும்)

"கூப்பிட்டீங்களாமே முதலாளி..."

கைகட்டி நின்று கொண்டிருந்தான் வீரய்யா. அவனுடைய ஆறடி உயரமும் ஒரே அடியில் ஆறு பேரை வீழ்த்தும் வலிமையும் பண்ணையார் பரமசிவம் முன்னே மண்டியிட்டுக் கொண்டிருந்தன.

''ஏலே வீரய்யா... வர வர இந்தச் சேரிப் பயலுக கொளுத்துப் போயிட்டானுகடா.''

''என்ன நடந்துச்சு எசமான்...?''

''நடந்ததை நினைச்சாலே இரத்தம் கொதிக்குதடா...''

''விளக்கமாச் சொல்லுங்க எசமான்...! உங்களுக்கு எதிரா எவன் இளம்பினாலும் அவன் கழுத்தைச் சீவி உடம்பை உப்புக் கண்டம் போட்டுடுறேன்.''



''சொல்லாதேடா.... நாயே.... செஞ்சு காட்டு....''

''நீங்க ஆளைக் காட்டுங்க எசமான்...''

''இந்தச் சின்னான் பய என்ன செஞ்சிட்டான் தெரியுமா?''

''எந்தச் சின்னானைச் சொல்றீங்க எசமான்? பரம்பரை பரம்பரையா நம்ம வயக்காட்டை உழறானே அந்தச் சின்னானா?''

''அந்தப் பயலேதான். இன்னிக்கு மத்தியானம் வயக்காட்டுக்கு நம்ம மூத்த மருமவ எனக்குச் சோறு கொண்டாந்தது.... அப்போ இந்தப் பய....''

''ஏதாச்சும் தப்புத் தண்டாப் பண்ணிட்டானா முதலாளி....''

''இல்லேடா... வெள்ளிக்கூஜாவில் மருமவ எனக்குக்கொண்டு வந்த ஜீரகத்தண்ணியை இந்த பைய எடுத்துக் குடிச்சிருக்கான். 'ஏண்டா குடிச்சேன்னு' மருமவ கேட்டதுக்கு, 'தாகமாக இருந்தது... குடிச்சேன்னு சொன்னானாம்... எவ்வளவு திமிர் இருக்கணும்...''

''போனா போயிட்டு போறான் முதலாளி...! காலம்பற உழ வந்துடுறான் இல்லையா..... அதுனாலே தவிச்சிருப்பான்...''

''அது எனக்குத் தெரியாதாலே... இன்னிக்குத் தண்ணியை எடுத்துக் குடிப்பான்... நாளைக்கு வரப்போற பஞ்சாயத்துப் போர்டுத் தேர்தல்லே எனக்கு எதிர்த்துப் போட்டி போட்டு என் முன்னாலேயே கால் மேல் கால் போட்டு உட்காருவான்.''

''இப்போ என்ன செய்யணுமுன்னு சொல்றீங்க முதலாளி?''

''எனக்குச் சொந்தமான வெள்ளிக் கூஜாவைத் தொட்ட கை இனிமேல் அவன் உடம்பிலே இருக்கக் கூடாது. அது மட்டுமில்லே... வரப்போற எலக்ஷனிலே நிக்கறதுக்கு அவன் குடும்பத்திலே அஞ்சு வயசுப் பிள்ளை கூட உயிரோட இருக்கக் கூடாது...''

''காரியத்தை முடிச்சுடறேன் முதலாளி... ஆனா.... போலீசிலே மாட்டிக்கிட்டா?...''

''அவசரப்படாதலே. அதுக்கும் ஒரு வழி பண்ணி வைச்சிருக்கேன். இப்போ மணி என்னா? அஞ்சாவுது. இருட்டுன உடனே அதாவது ஏழு மணிக்கு மேலே சேரியைத் தீ வைச்சுக் கொளுத்திடுறதுன்னு நாட்டாண்மை நல்லசிவம் முடிவு பண்ணிக் காக்கநல்லூர் ஆட்களெல்லாம் வந்தாச்சு...''

''சேரியை எதுக்கு எசமான் கொளுத்தப் போறாங்க?''

''மடப்பய மவனே.... குறுக்கே பேசாமக் கேளுடா. அடுத்த மாசம் அறுவடை வருதுல்ல.... இப்பவே இந்தப் பசங்களைக் குடிசை இல்லாம, குடிக்கக் கூழ் இல்லாமச் செஞ்சாத்தான் அறுப்பு விழுற சமயம் நாம குடுக்குற கூலியை வாங்கிக்கிட்டு வேலை செய்வாங்கன்னு நாட்டாண்மையோட ஐடியா...''

''அப்படீன்னா...''

''ஒரே கல்லில் இரண்டு மாங்காய்... நாட்டாண்மை ஆளுக சேரிக்குத் தீ வைக்கறப்போ நீ சின்னான் குடிசையை இழுத்துப் பூட்டித் தீ வைச்சிட்டு அவன் குடும்பத்தோட செத்துப் போயிட்டான்னு எங்கிட்டே வந்து சொல்லு... போ...''

''சரி... எசமான்...''

''டேய்... நில்லுடா.. ஆத்தா அயிரை மீன் கொழம்பு வைச்சிருக்கா... சாப்பிட்டுட்டு... நம்ம தோட்டத்து வைக்கோல் படப்புக்குக் கீழே இரண்டு பாட்டில் சரக்கு இருக்கு. ஊத்திக்கோ...''



''சந்தோஷம் எசமான்...''

இருளின் வரவு மாலைநேர வெண் மேகத்துக்குக் கறுப்புப் போர்வையைப் போர்த்தத் தொடங்கி விட்டது.

நேரம்... மாலை 6.30.

சேரிப் புறமாக அமைந்துள்ள அம்மன் கோவிலின் பெரிய தூண்களின் பின்னே வீரய்யா ஒளிந்து கொள்ண்டிருக்கிறான்.

அயிரை மீன் சோறும், நல்ல 'நாட்டுச் சரக்கும்' முதலாளி விசுவாசத்தை அவனுக்கு அதிகரித்துக் கொண்டிருக்க... அவன் அருகே எண்ணெயில் தோய்த்த தீப்பந்தமும் ஒரு தீப்பெட்டியும் இன்னும் சற்று நேரத்தில் ஆசைதீர விளையாடப் போகிற ஆர்ப்பாட்டத்தை மறந்து தன்னடக்கத்தோடு கிடந்தன.

பஞ்சாயத்து போர்டு மணிக் கூண்டு ஆறு முறை அடித்து ஓய்ந்தது.

பீடி ஒன்றை உதடு இடுக்குகளில் நுழைத்து அதை வீரய்யா பற்ற வைக்கும் போது...

தீச்சுவாலை துல்லியமாகத் தெரிகிறது...

காக்க நல்லூர் ஆட்கள் பிள்ளையார் சுழி போட்டு விட்டனர்.

அக்கினியின் கொடுங் கரங்கள்!...

அபயக் குரல்கள்...

வீரய்யா புறப்பட்டு விட்டான்.

பல்லிடுக்குகளில் புகுந்து கொண்டிருந்த அயிரை மீன் துணுக்குகளை 'வெள்ளி பல் குத்தியால்' வெளியே எடுத்து அந்தத் துணுக்கை மீண்டும் சுவைத்துக் கொண்டிருந்த் பண்ணையார், ''எசமான் காப்பாத்துங்க...'' என்ற குரல் கேட்டு ஈசிச்சேரிலிருந்து நிமிர்ந்து உட்கார்ந்தார். அவர் எதிரே...

சின்னான்..., அவன் மனைவி..., மகன்..., மருமகள்..., பேரன்...,

''என்னலே... சின்னா...? என்ன நடந்துச்சு... அகால நேரத்துலே புள்ளை குட்டியோட வந்து நிக்கிறே...''

''எசமான்... அநியாயம் பண்றுங்க... எங்க குடிசைகளையெல்லாம் தீ வைச்சுக் கொளுத்துறானுக... பாவ்... குழந்தை குட்டியெல்லாம் தீயிலே வெந்து செத்துக்கிட்டு இருக்கு... நாங்க மட்டும் தப்பிச்சு வந்துட்டோம்...''

''யார்லே இந்தக் காரியம் பண்ணினது?''

''தெரியலையே... எசமான்...''

''ஏலே சின்னா... பொண்டாட்டிப் புள்ளைகளைக் கூட்டிக்கிட்டு நம்ம தோட்டத்துக்குப் போடா... அங்க போயி வைக்கோல் படப்புக்கு நடுவிலே ஒளிஞ்சுக்கோ... நான் சேரி வரை போயிட்டு வந்துடுறேன்...''

''எசமான்... உங்க பாதம் எங்க பூமியிலே படுறதாவது...''

''பட்டா என்னடா... கால் அழுகியா போயிடும்...? நீ முதல்லே ஓடிப்போய் வைக்கோல் படப்பிலே ஒளிஞ்சுக்கோ...''

சேரியை நோக்கிப் பண்ணையார் வேகமாக நடந்து கொண்டிருக்கிறார்.

அம்மன் கோவில் அருகே நெருங்கும்போது வீரய்யா அவர் எதிரே வந்து கொண்டிருந்தான் அவனைக் கண்டதும்...

வாழ்க்கைக் கடலை
கடக்கப் புறப்பட்ட
துடுப்புக்கள் அற்ற படகுகள்
ஜாண் வயிற்றை
தலைநகராகக் கொண்டு ஆளும்
பசியின் பிரஜைகள்.
கல்லுக்குள்ளும்
ஈரத்தைவைத்த இறைவனின்
வறட்டுப் புறக்கணிப்புக்கள்.
கண்ணீரும் வியர்வையும்
கடலெனப் பெருகிக் காயும்
உடல் கொண்ட உப்பளங்கள்.
வாழ்வாங்கு வாழும்
வளம்மிகு திமிங்கலங்களின்
இரைமீன்கள்.
நெருப்புக்கள் இன்றி எரியும்
இவர்களின் வயிறுகள்
புகை இல்லாத அதிசய அடுப்புகள்.
உடலில் படியும் தூசுகளே
இவர்களின் உடுப்புக்கள்.
தன்மானம் காக்க
உணவின் பலவீனத்தை
உணர்ச்சிகளால் வெற்றிகொள்ள
முயன்று கொண்டிருக்கும்
ஒருவகை நடமாடும் கல்லறைகள்.

— கே. வேங்கடேசரனி



## பேல்பூரி

### அமோக விளைச்சலுக்கும் வரி வஜா!

பொதுவாக நிலங்களில் தாங்கள் எதிர்பார்த்த அளவு விளைச்சல் இல்லாமல் இருந்தால்தான் விவசாயிகள் அரசாங்கத்திடம் வரியை வஜா செய்யும்படி கேட்டுக் கொள்ளுவார்கள். ஆனால் அக்பர் காலத்தில் இதற்கு நேர்மாறான நிலையில் குடியானவர்கள் வரியை வஜா செய்யும்படி கேட்டுக் கொண்டார்கள்.

1585க்கும் 1590க்கும் இடைப்பட்ட காலத்தில் டில்லிக்கும் அலகாபாத்துக்கும் இடையில் உள்ள பகுதியில் ஏராளமான தானியங்கள் விளைவிக்கப் பட்டு, விலைக்கு வாங்குவாரற்றுக் கிடந்தன. தங்கள் நிலங்களில் விளைந்த தானியங்களை விற்க முடியாத குடியானவர்களிடம் அரசாங்கத்திற்கு வரி செலுத்தப் பணமில்லை. அதனால் அரசாங்கத்தார் வரித் தொகையை வஜா செய்ய வேண்டியதாயிற்று.

- லலிதா நாராயணன்

மணச் சஞ்சலத்துக்கும் நம்பிக்கைக்கும் இடையே உள்ள பாலம்— இரவின் அமைதியான தூக்கம்.

— ஹாரீரூபி

— சாமி

## மூளைக்கு வேலை

இந்தப் புள்ளிகள் எல்லாவற்றையும், கையை எடுக்காமல் இணைக்க வேண்டும். குறுக்குக் கோடுகள், வந்த இடத்துக்குத் திரும்பி வரக் கூடாது! -பாபு






''தங்கம் விலை ஏறிண்டே போறதுக்கு நீ ஏண்டி கவலைப்படறே?''

''நான் பொம்மனாட்டி ஆச்சே! கவலை இருக்காதா? நான் பெரியவளாகி, கல்யாணம் ஆகி, பெண் குழந்தை பிறந்து, அதுக்குக் கல்யாணம் பண்ணச்சே தங்கம் என்ன விலை விக்கும்னு யோசனை பண்ணினேன். ரொம்பக் கவலையா இருக்கு!''

- கிட்டு -





## சிரிக்கத் தெரியாதவர்!

ஹாலிவுட் நடிகர் மைக்கேல் கேயன் சிரிப்பது மிகவும் அபூர்வம். அதனால், அவருடைய பரம ரசிகர்களில் சிலர் மைக்கேல சிரிக்கும் போதெல்லாம் அவர் ரசிகர்களுக்கு ஒரு தொகையை அபராதம் செலுத்த வேண்டும் என்று வழக்குப் போட்டிருக்கிறார்களாம். காரணம்?

'மைக்கேல் சிரித்தால் மிகவும் அசிங்கமாக இருக்கிறது. மேலும், அவர் சிரிக்கவே மாட்டார் என்று பந்தயம் வேறுபலரிடம் கட்டியிருக்கிறோம். அதனால் அவர் சிரிக்கும் போதெல்லாம் எங்களுக்குப் பணம் கொடுத்துவிட வேண்டும்' என்று வழக்குத் தொடுத்திருக்கிறார்கள். வழக்கின் முடிவு இன்னமும் தெரியவில்லை.

-என்.வி.ஆர்.

(ஆதாரம்: சைட் அண்ட் சவுண்ட்)

மூளைக்கு வேலை — விடை:




''ஏலே... தண்டத் தீவனம்... ஆளோட கொளுத்தச் சொன்ன... குடிசையை மட்டும் கொளுத்திட்டு வந்து நிற்கிறியே...''

''எசமான் அந்தச் சின்னன் பய எப்படியோ தப்பிச்சுட்டான்... ஆன... சேரியிலே குறைஞ்சது பத்துப் பொணம் வீழுந்திருக்கும்...''

''ஏலே... வீரய்யா... நேரே நம்ம தோட்டத்துக்குப் போலே... அங்க வைக்கோல் படப்புக்குப் பின்னலே சின்னன் குடும்பத்தோட ஒளிஞ்சுட்டு இருக்கான்... வைக்கோலைக் கொளுத்தி அவனை ஒழி... என்னடா... நான் சொல்லிக்கிட்டே இருக்கேன்... நீ சுத்து முத்தும் பார்க்கிறே...''

''நாம பேசிக்கிறதை யாராச்சும் பார்க்கிறாங்களான்னு கவனிச்சேன் முதலாளி...''

''யார் பார்த்தா என்னடா...''

''ஆசாமி பார்த்தா தப்பு இல்லே... ஆன அம்மன் பார்த்துக்கிட்டு இருக்காளே முதலாளி...?''

''அவ கிடக்கிற... கல்லு... நான் எண்ணெய் வாங்கிக் கொடுத்தா தானே அவளுக்கே வெளிச்சம்... நீ போடா முதல்லே..''

விரய்யா போனன். சற்று நேரத்தில் சின்னன் குடும்பத்தோடு ''போனன்.''

ஒரு வாரம் கழிந்ததும்...

அம்மன் கோவிலின் எதிர்ப்புறம் அமைந்துள்ள வேப்ப மரத்து நிழலில் பரப்பப் பட்டுள்ள வெண் மணற் பரப்பு.

ஊர் கூட்டம். நாட்டாண்மை தலைமை. சின்னன் உட்பட அனைவருக்கும் மௌன அஞ்சலி: குடிசைகளை இழந்தவர்களுக்கு ஊர்ப் பணத்திலிருந்து இருபத்தைந்து ரூபாய் உதவி. சின்னனுக்கு 'அடைக்கலம்' கொடுத்த காரணத்துக்காக 'அநியாயமாகத்' தன் வைக்கோல் போர்களை இழந்த 'ஒன்றுமறியாத' பண்ணையாருக்கு ஊர்ப் பணத்திலிருந்து ஐந்நூறு ரூபாய் நஷ்ட ஈடாக அறிவிக்கப் படுகிறது.

பண்ணையார் எழுந்து கொள்கிறார்.

''யார் கண் பட்டதோ நடக்கக் கூடாதது நடந்து விட்டது... என்னோட சின்னனே போயிட்ட பிறகு வைக்கோல் போனதுபற்றி எனக்குக் கவலை இல்லே... இந்த ஐந்நூறு ரூபா பணம் எனக்கு வேண்டாம்... அம்மனுக்குப் பால் அபிஷேகம் பண்ணி — நெய் விளக்கு ஏத்திடுங்க...''

பண்ணையார் அமர்ந்து கொள்கிறார். முதல் ஆளாக வீரய்யா கை தட்டுகிறான்.

வெள்ளிக் கிழமை...

அம்மன் கோவலின் முன்னே நெய்விளக்கு தீப்பந்தமென எரிந்து கொண்டிருக்கிறது.

குருக்கள் அம்மன் உடலின் மீது பாலைக் குடம் குடமாகக் கொட்டுகிறார்.

கரிய அம்மன் உருவச் சிலையில் பால் நெளிந்து ஓடத் தொடங்கும் போது...

கண்களை மூடிய வண்ணம் மெய் மறந்து நிற்கிறார் பண்ணையார்.

கோவிலின் எதிரே உள்ள வேப்ப மரத்து இலைகள் சலசலக்கின்றன.

எரிந்து கொண்டிருந்த நெய் விளக்கின் சுடர் கோவிலினுள் நுழைந்த புதிய காற்றால் அலைக்கழிக்கப் பட்டுச் சற்று உயர்ந்து எழுந்த போது...

''முதலாளி... உங்க வேஷ்டியிலே.. தீ...''

வீரய்யா அலறி முடிக்கும் முன்பு பண்ணையார் பரமசிவத்தின் கைஅகல ஜரிகை வேஷ்டியினை நெய் விளக்கு ஜுவாலை ருசித்து முடித்து விட்டு, அவர் சட்டைக்குத் தாவி... கேசச் சுருளைத் தடவிக் கொண்டிருந்தது...

## இவரா நாத்திகர்?

கவிஞர் சுரதா தம்மைப் பக்கா நாஸ்திகராக எல்லாக் கூட்டத்திலும் நகைச் சுவையாகவும் ஸீரியஸாகவும் விவரித்துக் கொள்வது வழக்கம். ஆனால் தெய்வத்தின் உயர்ந்த ஒரு அருள் இல்லா விட்டால் கவிதை என்கிற மகா சக்தியே ஒரு கவிஞனிடம் தோன்றாது. 'சுரதா' அவர்களின் 'தேன் மழை' புத்தகத்திலுள்ள 'மயில்' என்கிற கவிதையை ஆழ்ந்து படித்தவர்களுக்கு நான் சொல்வது விளங்கும். அவர் சொல்கிறார்:

''மயிலே! ஆடும் பறவை உன் அடிகள் இரண்டும், ஈர நொச்சியின் இலைகளே ஆகும். உன்றன் கழுத்தை ஓங்கி உயர்த்தியும், இட்ட சிற்றடியை எடுத்து எடுத்து ஊன்றியும், வண்ணத் தோகையை வட்டமாய் விரித்தே, 'ஓம்' என்னும் எழுத்தே உனை டாக்கிக் காட்டினை'' — என்கிறார்.

இப்போது சொல்லுங்கள்: 'ஓம்' என்ற பிரணவத்திற்கு உவமையாக மயிலைக் காட்டும் 'சுரதா' எங்களைப் போன்ற ஆஸ்திகரா? இல்லை...?

சைதை பாரதி கலைக்கழக ஆண்டு விழாவில் சொன்னவர்: கவிஞர் மதிவண்ணன்.

கேட்டவர்: கோ.க.



# மல்லிகை மணம்

10 ருக்மிணி பார்த்தசாரதி

அன்று மாலை வீடு வந்த ராகவன், ''நான் ஆபீஸ் வேலையாய் அவசரமாகப் பத்து நாட்கள் டூர் போக வேண்டியிருக்கிறது!'' என்றான்... ''என் பிள்ளையைப் பத்து நாட்கள் பிரிந்திருக்க வேண்டுமே!'' என்ற தாபம் அந்த வார்த்தைகளில் தெளிவாகத் தெரிந்தது...

''அதனாலென்ன? உங்கள் பிள்ளைதான் இரண்டு மாத விடுமுறைக்காக வந்திருக்கிறானே!'' என்றாள் புஷ்பா, முறுவலித்தவாறு... மனத்தில் ஒரு குரூர திருப்தி... ராகவன் இருந்தால் ஹில் ஸ்டேஷனுக்குப் போக அனுமதிக்கவே மாட்டான்... அதுவும் ஹைகிங் போகவோ....

''என்ன மைதிலி? நாங்கள் ஹைகிங் போகப் போகிறோம்!'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் புஷ்பா... உடனே மல்லிகை நெடி சூழ்ந்து கொள்ளும் என்று எதிர் பார்த்தாள். ஆனால் அதன் சுவடே இல்லை...

''ஏன் மைதிலி? பயமாக இருக்கிறதா? உன் குழந்தையும் கால் தவறி விழுந்து விடப் போகிறானே என்று பயப் படுகிறாயா?'' என்றாள் புஷ்பா, மனத்துக்குள்... ''என்ன? ஏன் உன் விஷக் காற்றை அடக்கி வைத்திருக்கிறாய்? என்னிடம் யாசிக்கிறாயா உன் பிள்ளையின் நலனை?'' புஷ்பா ஆணவத்தின் சிகரத்தையே அடைந்து விட்டவள் போல் வாய் விட்டு நகைத்தாள்...

ஆனால் மல்லிகை மணத்தின் சுவடே இல்லை.

ராகவன் டூர் சென்று விட்டான்... சகோதரர்கள் இருவரும், தாயின் ஸ்தானத்தில் புஷ்பாவுமாக, ஹில் ஸ்டேஷனுக்குக் கிளம்பினார்கள்...

காரில்தான் பயணம்... மைதிலியின் மகன் ஓட்ட, அருகே அவள் மகனும் பின் ஸீட்டில் புஷ்பாவுமாக அமர்ந்திருந்தார்கள். புஷ்பாவின் மனத்தில் என்னென்னவோ கற்பனைகள்... பயங்கள்... ஆசைகள்... குரூரங்கள்... விகாரங்கள்...

சட்டென்று, மைதிலியின் கூந்தல் மணத்தை நுகர்ந்தாள் புஷ்பா... ஒருகணம் பீதி கௌவ, தன் அருகே திரும்பிப் பார்த்தாள்... கல்லூரி நாட்களில் அடுத்த ஆசனத்தில் மைதிலி அமரும்போது மென்மையாக மல்லிகை மணம் நாசிக்குள் இறங்குமே, அதே மாதிரியான உணர்வு... ஆம்... மைதிலியும் உடன் வருகிறாள்... ஆனால், இதெப்படி முடிந்தது?

ஹைகிங்... சகோதரர்கள் அருகருகே முன்னால் செல்ல, புஷ்பா பின்னால் நடந்து செல்லலானாள்... ''எப்படியாவது, மைதிலியின் மகனைத் தனியே அழைத்துவிட வேண்டும், உச்சியை அடைந்ததும்!''

ஓரிரு முறைகள், சகோதரர்கள் இருவருமே அவளைப் பார்த்து, ''ரொம்ப கஷ்டமாயிருக்கிறதா ஏறுவது? வேண்டுமானால் திரும்பி விடலாம்'' என்றனர்... புஷ்பா மறுத்து விட்டாள்...

புஷ்பாவுக்குச் சட்டென்று என்ன ஆகி விட்டது? ஏன் இப்படி முன்னால் ஓடுகிறாள்?

குப்பென்று மல்லிகை மணம் அவளைச் சூழ்ந்தது. மதிமயக்கமா இது? கள்ளுண்டவள் போல் புஷ்பா ஏன் தடுமாறுகிறாள்?

சகோதரர்கள் இருபதடி தள்ளி நின்று, இயற்கையின் அழகில் மயங்கி நின்றபோது...

புஷ்பா மட்டும் பாதங்களில் விதி புகுந்து விட்ட மாதிரி, உச்சியின் கோடிக்குச் சென்று, தனியே நின்றுகொண்டாள். மல்லிகை மணம் மெள்ள மெள்ள நெடியாய் மாறிற்று...

புஷ்பாவுக்குப் பித்துப் பிடித்து விட்டதா? குனிந்து பார்த்தாள்... அதள பாதாளத்தைக் கண்டு கைகொட்டிச் சிரித்தாள்... சிரிப்பில் ஏதோ அசாதாரண ஒலி... ஏதோ வெறி...

மல்லிகை நெடி அவளைத் தனியே அழைத்து வந்து விட்டது... தன் பேய்க் கரங்களை நீட்டி அவளை அணைத்தது...

சகோதரர்கள் கல்லாய்ச் சமைந்து பார்த்துக்கொண்டிருந்தபோதே... புஷ்பாவின் சிரிப்பொலி அலறலாக மாறிற்று... புஷ்பா கால் சறுக்கிப் பாதாளத்தை நோக்கி விழுந்தாள்...

மீண்டும் அமைதி, சாந்தம்....

மாலையில்தான் அவள் உடலைக் கண்டெடுத்தார்கள்... அவளைச் சுற்றிச் சுகந்தமாக மல்லிகை மணம் படர்ந்திருந்தது.... (முற்றும்)

# கெமிஸ்ட்ரி மிஸ்ஸின் கவலை



''டோய், அங்கே பார்டா! நெறயப் பொம்பிளேங்க நம்ம குப்பத்துக்குள்ள வருதுங்க!'' — ஓர் உரத்த குரல்.

தொடர்ந்து, கோலி ஆடிக் கொண்டிருந்தவர்கள், சுற்றி நின்று வேடிக்கை பார்த்தவர்கள், தங்கள் வீட்டு மண் சுவர்களில் சாணியை வரட்டியாகத் தட்டிக் கொண்டிருந்த சில பெண்டிர், ஒரு குடிசைக்கு முன்னுல் கோவணத்தோடிருந்த கணவனே அமர வைத்து, பானேயிலிருந்த நீரை ஊற்றி முதுகைத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்த பெண் — அனைவரது கவனமும் திசை திரும்பியது.

கூலிங் கிளாஸ் அணிந்து, பாலிஸ்டர் ஸாரி பளபளக்க கெமிஸ்ட்ரி மிஸ் மல்லிகா முன்னே வர, பின்தொடர்ந்து வந்தனர் ஸ்வீட் சிக்ஸ்டீன்கள்.

காலரில் வைத்திருந்த அழுக்குக் கைக்குட்டையைத் தூக்கி விட்டுக் கொண்டு ஒருவன் விசில் அடித்தான். பீடியைத் தம் இழுத்துச் சுருள் புகை விட்டுக் காட்டினன் இன்னெரு மன்மதன். குப்பத்தின் ஓர் இன்னிசைப் பாடகர் தம் கர்ண கடூரக் குரலில் ''ஆட்டுக் நட்டி முட்டையிட்டு...'' என்று தம் சங்கீத ஞானத்தைக் காட்டத் தொடங்கினர்.

அதிசயத்தைக் கண்டாற் போன்று குடிசை வாசலில் பெண்மணிகள் நின்று அந்தக் கல்லூரி மாணவியரை வேடிக்கை பார்த்தார்கள்.

நறுக்கும் நெடுக்கும் ஓடிய சாக்கடை நதிகளேத் தாண்டும் போது ஒரு முதல் ஆண்டு பி. எஸ் ஸி.யின் குதி உயர் காலணி சகதியில் விழ ''ஐயாவ்!...'' என்று அலறினள் அவள். அதே நேரம், ''டியர் கிட்ஸ்! இதுதான் நாம் சி. எஸ். எஸ்ஸுக்குத் தேர்ந்தெடுத்துள்ள கிராமம்...'' என்று கெமிஸ்டிரி துணைப் பேராசிரியை மல்லிகா பகர்ந்திட, ''இதுவா ...சேச்சே!'' என்று முகஞ் சுளித்து மாணவிகள் மனம் சலித்திட, இவர்களது படையைச் சுற்றி வியூகம் வகுத்தாற்போல் முண்டியடித்துக் கொண்டு கூடியது குப்பவாசிகள்களின் கூட்டம்.

''இன்னும்மா வெளாவரே? ஓட்டுக்கு நிக்கறியா?... இன்னு கொடுப்பே?'' — குப்பத்திலேயே வயது முதிர்ந்த கிழவி கம்சலே கேட்டாள்.

''ஓட்டு கீட்டெல்லாம் இல்லே பாட்டீ! நாங்க லேடீஸ் காலேஜிலேர்ந்து வர்ரேம். ஒரு கிராமத்தைத் தத்து எடுத்துக் கொண்டு அதில் நாங்க சேவை செய்து முன்னேற்றணும். எங்க காலேஜுக்குப் பக்கத்தில் இருக்கிற ஒரே கிராமம் இதுதான்... .. அதான் வந்திருக்கிறேம்....''

''அது இன்னும்மா சேவு? காராச் சேவா? — சீனிச் சேவா?''

மாணவிகள் குபீர்ச் சிரிப்பு சிரித்து, ''சேவு இல்லே பாட்டி, சேவை... ஸர்வீஸ்!'' என்று உரத்த குரலில் விளக்கம் கொடுத்தனர்.

''இன்னு சுகுமாலமோ? இப்ப இன்னுதான் இங்கே பண்ணப் போறீங்க, அத்தெச் சொல்லுங்க!''

''பாட்டி, இங்கே உள்ள முதியவர்களுக்குப் படிப்பு சொல்லித் தரப்போகிறோம் — அடல்ட் எஜுகேஷன். அப்புறம், முடிந்த வரையில் இந்தக் குப்பத்து சந்து பொந்துகளைத் தூய்மைப் படுத்துவோம். குடி தண்ணீர்க் கிணறுகளுக்குக் குளோரினேஷன் செய்வோம். இதற்கெல்லாம் நீங்கள் ஒத்துழைப்பு தர வேண்டும்...''

கல்லூரியில் செமஸ்டர் முறை வந்து, அதில் சி. எஸ். எஸ். என்னும் 'கம்யூனிடி சோஷல் சர்வீ'ஸுக்கு ஒரு மாணவிக்கு இரு நூறு மதிப்டெண்கள் ஒதுக்கினாலும் ஒதுக்கினார்கள், கெமிஸ்டிரி மிஸ் மல்லிகாவின் விழி பிதுங்க ஆரம்பித்து விட்டது.

பிரின்ஸிபல் மங்களம் அம்மாள் நான்காவது முறையாகக் கேட்டுவிட்டார். ''முதல் செமஸ்டர் முடியப் போகிறது. கெமிஸ்ட்ரி டிபார்ட்மென்ட் இன்னுமா ஒரு கிராமத்தை சி. எஸ். எஸ்ஸுக்கு செலக்ட் செய்யவில்லை?''

இரசாயனத் துறைப் பேராசிரியைக்கு ரோஷம் வந்து, அவள் உதவிப் பேராசிரியை மிஸ் மல்லிகாவை விடுவிடென்று விட்டாள். அதன் விளைவாகத்தான் ஒரு திங்கட்கிழமை பிற்பகல் மாணவியர் பட்டாளத்துடன் வல்லவன் குப்பத்துக்கு வந்து சேர்ந்திருந்தாள் மிஸ் மல்லிகா.

''இந்தாங்க பெண்களா, பாட்ச் பாட்சாகப் பிரிந்து கொண்டு குப்பைக் கூளத்தைக் கூட்டுங்க. தெருக்களைப் பெருக்குங்க. சாக்கடைகளைச் சரியா ஓட வையுங்க. என்கூட நாலு பேர் வாங்க, 'வெல் குளோரினேஷன்' பண்ணலாம்!...''

சரமாரியாக உத்தரவுகளைப் பிறப்பித்ததில் கெமிஸ்ட்ரி மிஸ்ஸுக்கு மூச்சு வாங்கியது குப்பத்துக் கோடிக் கிணற்றுக்கருகில் வந்து நின்றது மிஸ் உள்ளிட்ட அக்குழாம்.

இரண்டு மணி நேரம் கழிந்து ஒருவாருக சி. எஸ். எஸ். பணி முடிந்து எல்லோரும் திரும்பிய போது மிஸ் மாணவிகளைக் கேட்டாள். ''எல்லோரும் என்ன பண்ணினீங்க?''

''கிளீன்ட் தி க்ளீன் ப்ளேசஸ் மிஸ்!...'' என்று குறும்புக் கோரஸ் எழும்பியது அவர்களிடமிருந்து.

கல்லூரியில் பிரின்ஸிபல் கெமிஸ்ட்ரி உதவிப் பேராசிரியை மிஸ் மல்லிகாவை அழைத்து வரச் செய்து விசாரித்தார்.

''ஏம்மா, நேற்று சி. எஸ். எஸ். போனீங்களாமே! வல்லவன் குப்பமா? ஸ்டூடண்ட்ஸ் எல்லாம் என்ன செய்தாங்க?''

''கிளீனிங், குளோரினேஷன்... எல்லாம் செய்தோம் மேடம்!''



''ஆல்ரைட். பப்ளிக் ஒத்துழைப்பு தர்றாங்களா?''

''எஸ் மேடம்...''

''ரைட். ஒரு ரிப்போர்ட் கொடும்மா. அதை மேலே ஃபார்வர்ட் பண்ணிடறேன்..''

''எஸ் மேடம்!''

பிரின்ஸிபலின் அறையிலிருந்து வெளிப்பட்டு, மாடிப் படியிறங்கி, கெமிஸ்ட்ரி லாபரடரிக்குப் போகும் வழியில் ''இந்தாம்மே, கொஞ்சம் நில்லு!'' என்று ஒரு முரட்டுக் குரல் கேட்டது.

பரட்டைத் தலை, கொடுவாள் மீசை, பனியன், லுங்கி சகிதம் இருந்த ஒருவன் அவள் முன் வந்து நின்றான். பின்னால் அதே ரௌடித் தோற்றத்தில் இரண்டு மூன்று பேர் வந்து நின்றார்கள்.

''நீதானே நேத்திக்கு எங்க குப்பத்தாண்டே பொம்பிளைப் பசங்களைக் கூட்டிக்கினு வந்தே?''

எடுத்த எடுப்பில் ஆவேசத்துடன் அவன் கேட்பதன் காரணம் புரியாமல், இனம் தெரியாத பீதி நெஞ்சில் பரவ, ''ஆம்'' என்று மல்லிகா தலையசைத்தாள்.

சீறினான் அவன்: ''ஒங்களுக்கெல்லாம் பொயுது போவலைன்னா எத்தினி சினிமாக் கொட்டகை கட்டி உட்ருக்கான் — போறது தானே? ஏம்மா இப்படி ஊரை நாசம் பண்ணக் கௌம்பிடுறீங்க?''

மல்லிகாவின் விழிகளில் நீர் துளிர்த்து நின்றது. ''ஏன்? என்ன ஆச்சு?'' என்று பயத்துடன் கேட்டாள்.

''கிணத்துக்குள்ளே மருந்து போட்டியே, மருந்தா இல்லை வெஷமா? கிணத்துலேந்த மீனெல்லாம் செத்துப் போய் மெதக்குது. மீன் இருந்தாத்தானே கெணறு சுத்தமாயிருக்கும். நீ மருந்தைப் போட்டு மீனுங்களைக் கொன்னுப்புட்டியே — இப்ப நாங்கல்லாம் வெஷத் தண்ணியை எப்படிக் குடிக்கறது?...''

சத்தம் கேட்டு ஓடி வந்த கல்லூரி ஹெட் கிளார்க்கும், வேறு சிலரும் குப்ப வாசிகளைச் சமாதானம் செய்தனர்.

''அது விஷம் இல்லேப்பா, ப்ளீச்சிங் பவுடர் தான். தண்ணீர் சுத்தமாக இருக்கப் போடுகிற மருந்துதான். செத்துப் போன மீன்களை வாளியால் எடுத்துப் போட்டுடுங்க. தண்ணீரை நீங்க தைரியமாக் குடிக்கலாம். ப்ளீச்சிங் பவுடர் போட்டதாலே தண்ணீர் இப்ப சுத்தமாகி இருக்கும்...''

குப்பத்தைச் சேர்ந்த முரட்டு ஆசாமிகள் ஒரு வழியாகக் கிளம்பினார்கள். கெமிஸ்ட்ரி மிஸ்ஸைப் பார்த்து ''இனிமே குப்பம் பக்கமா வாங்க, பேசிக்கிறோம்...'' என்று உறுமி விட்டுத் தான் போய்ச் சேர்ந்தார்கள்.

அடுத்த திங்கட் கிழமைக்குள் வேறு கிராமம் ஒன்றைத் தேர்ந்தெடுத்தாக வேண்டிய கவலையில் மூழ்கியிருக்கிறாள் கெமிஸ்ட்ரி மிஸ்.

உங்களுக்குத் தெரிந்த ஒரு கிராமத்தைக் காட்டி உதவுங்களேன்!

ஃபேஸ்புரா

## நாளைய செய்தியாளர்கள்!

சென்ற ஆண்டு திருவனந்தபுரத்தில், பத்திரிகையாளர் பயிற்சிக்குச் சேர விரும்பிய சில பட்டதாரிகள் தேர்வில் அளித்த விடைகளைக் கேட்டால் வேடிக்கையாக இருக்கிறது; அவர்கள் பொது அறிவின் எல்லை வேதனையளிப்பதாகவும் இருக்கிறது.

''ஃபிளீட் தெரு என்பது என்ன?''

''நெருக்கடி காலத்தில் பலர் சுடப்பட்ட தெரு'' என்பது ஒரு விடை.

''இன்றைய பிரதமர் தில்லியில் வசிக்கும் தெரு'' என்பது மற்றொரு மாணவரின் விடை.

''அதுவா, கப்பல் கட்டும் தளமாயிற்றே!'' என்றார் மூன்றாமவர்.

இது போகட்டும். ''ராய்பரேலி எங்கே இருக்கிறது?''

''முன்னாள் பிரதமர் திருமதி காந்தியை ஜனதா சுகாதார மந்திரி தோற்கடித்த இடம்'' என்று ஒருவர் விடையளிக்க மற்றொருவர், ''அது ஒரு நிலக்கரி சுரங்கம்'' என்கிறார்.

''வயது வந்தோருக்கு வாக்குரிமை'' என்று பொருள்படும் ஆங்கிலத் தொடரான 'அடல்ட் பிரான்சைஸ்' பலருக்குப் பல எண்ணங்களைத் தோற்றுவிக்கிறது. ''வயது வந்தவர்களின் பிரச்னைகள்'' என்கிறார் ஒருவர். ''வயதானவர்களின் குற்றங்களுக்கு ஏற்ற தண்டனையைக் குறிக்கும் தொடர் இது'' என்கிறார் மற்றொருவர்.

(எக்ஸ்பிரஸ் நியூஸ் சர்வீஸ்) - டி. எஸ். வி.

## கேட்டா தந்தார்?

ஸ்ரீ கிருபானந்த வாரியார் அவர்கள் செகந்திராபாத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர் மந்திரில் புதிதாக அமைக்கப்பட்ட இரும்புக் 'கேட்'டைத் திறந்து வைத்தார். காரியதரிசி சுபஸ்ரீ, நன்கொடை தந்த ஸ்ரீ நரஸோஜியைக் காண்பித்து, ''இவர்தான் 'கேட்டு'த் தந்தவர்'' என வாரியாருக்கு அறிமுகப்படுத்தினர்.

''இவர் கேட்டா தந்தார்? கேளாமலே தருவாரே!'' என்றார் வாரியார். — பாரதி ஸ்ரீ



# வெங்கட்டை விலக்கியது சரிதானா?

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே கராச்சியில் நடந்த மூன்றுவது கிரிக்கெட் டெஸ்டில் இந்திய அணியில் பிரசன்னுவுக்குப் பதிலாக வேங்கட ராகவனையும், மொஹிந்தர் அமர்நாத்துக்குப் பதிலாக காவ்ரியையும் தேர்ந்தெடுத்து இந்திய அணி முதலில் அறிவிக்கப் பட்டது. ஆனல் விளையாட்டு ஆரம்பமான அன்று கடைசி நிமிஷத்தில் வெங்கட்டை நீக்கி விட்டு மொஹிந்தர் அமர்நாத்தை இணைத்துக் கொண்டு இந்திய அணி ஆடத் தொடங்கியது. பிரசன்ன, வெங்கட் ஆக இருவரையும் விலக்கி விட்டு ஒரு ஆஃப் ஸ்பின்னர் கூட இல்லாமல் பேடி, சந்திர சேகர் ஆகிய இருவரோடு லெக் ஸ்பின்னிலும் திறமையாளரான மீடியம் பேஸ் பௌலர் காவ்ரியையும் சேர்த்து மூன்று லெக் ஸ்பின் திறமையாளர்களைக் கொண்டு இந்திய அணி விளையாடுவது சமீப வருடங்களில் இதுவே முதல் தடவை. இம்மாதிரி வெங்கட்டைக் கடைசி நிமிஷத்தில் விலக்கியது சரிதான என்று கேட்ட போது:

## 1. திரு வி. எஸ். சம்பத்

ஆந்திர வங்கியில் அதிகாரியாக இருக்கும் இவர் கிரிக்கெட் விளையாட்டிலும், கிரிக்கெட் விமர்சனத்திலும் ஆழ்ந்த திறமை உள்ளவர். இவர் சொன்னது:

வெங்கட்டை விலக்கியது எந்த கோணத்தில் பார்த்தாலும் சரியானதாகப் படவில்லை. எந்த ஒரு கிரிக்கெட் அணியின் தலைவனும் தனது அணியில் மாறுதலான பல வகை பௌலர்களை வைத்துக் கொள்ள விரும்புவாரேயன்றி இது மாதிரி மீடியம் பேஸ் பௌலர்களும், லெக் ஸ்பின் பௌலர்களும் போதும் என்று சொல்ல மாட்டார்கள்! ஒரு லெக் ஸ்பின்னரே அணிக்கு அதிகம் என்று கருதும் காலத்தில் தலை சிறந்த இரு ஆஃப் ஸ்பின்னர்களைக் காலரியில் உட்கார்த்தி வைத்து விட்டு, இரண்டுக்கும் மேற்பட்ட லெக் ஸ்பின்னர்களை மட்டும் கொண்டு விளையாடுவதைப் போன்ற அறியாமை வேறு இருக்கவே முடியாது! அவசியமான சமயத்தில் எதிர் அணி பாட்ஸ்மென்னின் வேகமான ரன் எடுக்கும் திறமையைக் கட்டுப்படுத்தும் திறமை ஆஃப் ஸ்பின்னருக்குத்தான் உண்டு. முதல் இரண்டு டெஸ்ட்களிலும் பிரசன்ன சிறப்பாக விக்கெட் வீழ்த்த முடியாததால், கடைசி டெஸ்டில் வெங்கட்டைத் தேர்ந்தெடுத்தனர். டெஸ்ட்களில் விளையாட வாய்ப்புக் கிடைக்காது போனலும் தாம் விளையாடிய மற்றைய மேட்ச்களில் வெங்கட் திறமையாகப் பந்து வீசியுள்ளார். மாருக முதல் இரண்டு டெஸ்ட்களிலும் விளையாடிய மொஹிந்தர் அமர்நாத் பௌலிங்கிலும், பேட்டிங்கிலும் சோபிக்கவே இல்லை.

இந்திய கிரிக்கெட், அரசியலால் எப்படி பாதிக்கப் படுகிறது என்பதற்கு இது சரியான உதாரணம்! இந்திய அணியின் தலைவராகவே விளங்கியுள்ள வெங்கட்டுக்கு இந்நிலை வர வேண்டாம்!

## 2. திரு என். ராமச்சந்திரன்

சென்னை கிரிக்கெட் அசோசியேஷனின் லீக் ஆட்டக்காரரான இவர் சொன்னது:

வெங்கட்டுக்குப் பதில் மொஹிந்தரைத் தேர்ந்தெடுத்தது சரிதான்! கராச்சி டெஸ்ட் விளையாட இரண்டு பிட்ச்களைத் தயார் செய்துவிட்டுக் கடைசி நேரத்தில்தான் எந்த பிட்சில் டெஸ்ட் விளையாடப்படும் என்று பாகிஸ்தானியர் அறிவித்தனர். அந்த பிட்ச் வேகப் பந்து வீச்சுக் காரர்களுக்கு அதிகமாக உதவுமாதலால் ஒரு ஸ்பின் பௌலருக்குப் பதிலாக மீடியம் பேஸ் பௌலரைக் கொண்டு விளையாடுவது சரியானதாகப் பட்டிருக்கும். இந்திய அணியில் விளையாட இருந்



வி. எஸ். சம்பத்



என். ராமச்சந்திரன்

தது பேடி, வெங்கட், சந்திர சேகர் ஆகிய மூன்று ஸ்பின்னர்கள். பேடிதான் காப்டன். எடுக்க முடியாது. சந்திர சேகர் Match Winner ஆகக் கருதப் படுபவர். அவர் எப்போது திடீரென்று அற்புதமாகப் பந்து வீசுவார் என்று கணிக்க முடியாது. அதோடு அவரை ஸ்பின்னர் என்று சொல்வதைவிட Medium Fast Spinner என்பதுதான் சரியானது. அவரையும் விலக்க முடியாது. வேறு வழியில்லாத நிலையில் வெங்கட்டை விலக்கி மொஹிந்தரை இணைத்துக் கொண்டனர். மொஹிந்தர் மீடியம் பேஸ் பௌலிங்கில் ஸ்விங் செய்யக் கூடியவர். கராச்சியின் தட்ப வெட்ப நிலையில் அவர் நன்ருக பௌலிங் செய்யலாம் என்கிற எதிர்பார்ப்பில் அவரைத் தேர்ந்தெடுத்தனர்.

ஆனல் ஒன்று! இனிமேல் நாம் ஸ்பின் பௌலர்களை மட்டும் அதிகம் நம்பி உலக அரங்கில் விளையாட முடியாது. கபில் தேவ் மாதிரி விளையாட்டுக் காரர்களை உருவாக்க வேண்டும். இவ்விஷயத்தில் திராஜ் பரசான கவனிக்கத் தக்கவர்!

பேட்டி: பி. ரங்கநாயகி



# அப்படித்தான்!

சம்பத்



அன்று அமாவாசை. தினேஷ் என்ற பெயரில் சுற்றித்திரிந்த அவன் சிறையிலிருந்து வெளி வந்து ஒரு வாரம் கூட முடியவில்லை.

இதுவரை திருடிய 96 திருட்டுகளும் அமாவாசை தினத்திலேதான் திருடி உள்ளான். மற்ற தினங்களில் திருட வேண்டுமென்கிற உணர்வு ஏற்படுவது கிடையாது.

நாகரீகமான உடையை உடுத்திக் கொண்டான். ஜன நெரிசல் மிக்க கடை வீதியில் நடந்து சென்முன். பத்திரிகை விற்கும் கடையின் முன்னுல் நின்ருன். அபரிமிதமாக விற்பனையாகிக் கொண்டிருக்கும் வாராந்திரப் பத்திரிகை ''பாரத மாதா'' என்ற இதழில் சில பிரதிகளை எடுத்துக் கொண்டான்.

ரோட்டின் ஓரமாக அழகான கார் ஒன்று நின்றது. அதில் யாருமில்லை. காரின் கதவைத் திறந்தான். தன் ஜேபியில் கைவிட்டு ஒரு சாவிக் கொத்தை எடுத்தான். அதில் ஏராளமான சாவிகள் இருந்தன. காரை ஸ்டார்ட் செய்தான்.


ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்  பிராண்டு (Regd.)



* ஊறுகாய்கள் – மாங்காய், எலுமிச்சை, வெங்காயம்
* சாம்பார் பொடி, ரசப் பொடி
* திடீர் இட்லி & தோசை பவுடர்
* புளியோதரைப் பவுடர், பாவக்காய் பவுடர்
* அப்பளம் (புதுமுறை தயாரிப்பு)
* வடாம், வத்தல்கள்

**ஸ்ரீ கணேஷ்ராம் அண்டு கோ.,**

ப. நெ. 46 – பு. நெ. 193, தம்புச் செட்டி தெரு,

சென்னை – 600 001.

போன்: 20401 & 20402

தந்தி: 'COCHUTN I

பெரிய பெரிய பங்களாக்கள் இருக்கும் பகுதிக்குச் சென்றான். ''குப்பனூர் நகை மாளிகை'' என்ற பெயர் ஜொலித்தது. காவல்காரன் ஓடிவந்து கேட்டைத் திறந்தான். கார் பத்திரமாக உள்ளே சென்று கம்பீரமாக நின்றது.

இடுப்பில் கெண்டை போட்ட பட்டு வஸ்திரமும், மேலே வெண் பட்டு வஸ்திரம் போர்த்திக் கொண்டும் வந்தார் ஒருவர்.

''நான் பாரதமாதா பத்திரிகை ஆசிரியர் குழுவைச் சேர்ந்தவன். தற்போது தங்கத்தின் விலை தாறு மாறாக ஊஞ்சலாடிக் கொண்டிருக்கிறது. அதைப் பற்றி அனுபவமிக்க உங்களைப் பேட்டி கண்டு உங்கள் கருத்துகளைப் பிரசுரிக்க வந்திருக்கிறேன்'' என்று தன்னைத் தானே அறிமுகப் படுத்திக் கொண்டான் தினேஷ்.

''தங்கள் பெயரைச் சொல்லவில்லையே?''

''என் பெயர் தினேஷ். பாரத மாதாவில் வெளியாகும் பேட்டிக் கட்டுரைகள் என்னுடையதாகவே பெரும்பாலும் இருக்கும்!'' என்று கூறிப் பாரத மாதாவின் மூன்று இதழ்களையும் அவரிடம் நீட்டினான்.

பேட்டி என்கிற முறையில் பங்களாவைப் பார்த்துப் பகலிலோ அல்லது இரவிலோ திருட வேண்டுமென்பது அவன் திட்டம்.

காப்பி வந்தது. பருகினர். பங்களா முழுதும் சுற்றிக் காண்பித்தார். மிக பத்திரமான உள் அறைக்கு தினேஷை அழைத்துச் சென்றார். பஜாரில் இருக்கும் தம் கடைக்கு விற்பனைக்கு அனுப்பவிருக்கும் புதுப்புது தங்க வைர நகைகள் 'பளீர்' என்று ஜொலித்துக் கொண்டிருந்தன. ஏராளமான நகைக் குவியல்.

''இவைகளை யெல்லாம் படம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார் வீட்டுக்காரர்.

''சாரி, கேமராவை எடுத்து வரவில்லை!''

''வருத்தப் பட வேண்டாம், நல்ல போட்டோ கிராபராக உடனே வரவழைக்கிறேன். அது வரையில் இந்த நகைகளைப் பார்த்துக் கொண்டிருங்கள்'' என்று கூறி வீட்டுக்காரர் கீழே இறங்கினார்.

'இன்று தெய்வம் எப்படிப் பட்ட இடத்திற்கு அழைத்து வந்திருக்கிறது. அதிர்ஷ்டம் என்றால் இதுதான்', என்று கருதி நகை முழுதும் எடுத்துப் பார்த்தான் தினேஷ். வீட்டுக்காரர் வருவதாகத் தெரியவில்லை.

விலையுயர்ந்த நகைகளைத் தன்னிடம் எவ்வளவு அடக்கம் செய்ய முடியுமோ அவ்வளவைச் செய்து கொண்டு அறையை விட்டு நடுஹாலுக்கு வந்து நின்றான். வீட்டுக் காரரும் வந்தார். அவருடன் போலீஸ் படை அணிவகுத்து நின்றது.

''மிஸ்டர் தினேஷ்! நீர் பாரத மாதா பத்திரிகை நிருபர் என்று கூறினீர், ''பாரத மாதா'' என் முதலீட்டில் நடக்கும் பத்திரிகை. உம்மாதிரி ஒரு நிருபரை அதில் நியமித்ததாக எனக்கு ஞாபகமில்லை'' என்று தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டு போலீஸ் பக்கம் தம் பார்வையைச் செலுத்தினார் வீட்டுக்காரர்.

பத்தாவது முறையாகத் தினேஷ் சிறைக்குச் சென்றான். அவன் என்ன செய்வான்? அமாவாசை அப்படிச் செய்கிறது!


# RAJAJI BIOGRAPHY

The first volume of Rajaji Biography

**A WARRIOR FROM THE SOUTH**

Written by RAJMOHAN GANDHI and published by Bharathan Publications

*

**Price per copy Rs. 45/-**
**Postage extra Rs. 5/- within India and Rs. 12/- by Sea Mail to places abroad**

**SPECIAL REDUCTION OFFER!**

For Orders with remittance by M.O. or draft before December 10, 1978
Rs. 35/- per copy plus postage

*

DIRECTOR

**BHARATHAN PUBLICATIONS PRIVATE LIMITED**
**GUINDY, MADRAS – 600 032** — Phone: 431543







நா. பார்த்தசாரதி

## 25

தன் மூத்த பிள்ளையை அழகும் பண்பும் இளமையும் உள்ள அந்நிய நாட்டுப் பெண் ஒருத்தி தன்னிடமிருந்து பிரித்துக் கொண்டு போய் விடப் போகிறாள் என்ற எண்ணமும் அந்த எண்ணத்தின் அடிப்படையில் அவள் மேல் கொண்ட வெறுப்புமாக இருந்தாள் காமாட்சியம்மாள். வசந்தி எவ்வளவோ முயன்று பார்த்தும் காமாட்சியம்மாளிடமிருந்து சாதகமான மறு மொழியையோ சுமுகமான வார்த்தைகளையோ பதிலாகப் பெற முடியவில்லை. ஒரே முரண்டாக இருந்தாள் காமாட்சியம்மாள். உடல் நிலை சரியா யிருக்கிற காலங்களில் சூரியோதயத்திற்கு முன்பே ஆற்றங் கரைக்குப் போய் விட்டுத் திரும்புவதைத் தவிர வெளியில் எங்கும் நடமாடாத காமாட்சியம்மாளுக்கு எல்லா விவரமும் முன் கூட்டியே எப்படித் தெரிகிறதென்பது பெரிய புதிரா யிருந்தது. பார்வதியை விசாரித்ததில் அந்தப் புதிர் விடு பட்டது. பக்கத்து வீட்டு முத்து மீனாட்சிப் பாட்டி திரிலோக சஞ்சாரி போல் அக்கிரகாரத்தின் மூன்று தெருக்களிலும் எங்கே யார் வீட்டில் என்ன நடக்கிறதென்று ஊர் வம்புகளைத் தெரிந்து கொண்டு வந்து அம்மாவுக்குச் சகலத்தையும் அவ்வப்போது காதில் போட்டுக் கொண்டிருப்பதாகப் பார்வதி வசந்தியிடம் தெரிவித்தாள்.

''புருஷா ஆயிரம் தப்புப் பண்ணலாம். பொம்மனாட்டி மட்டும் முரண்டு பண்ணி மூஞ்சியைத் தூக்கிண்டு நின்னா அப்புறம் தனியா அவா எதைச் சாதிச்சுட முடியும்?''— என்பது தான் பக்கத்து வீட்டுப் பாட்டி அடிக்கடி காமாட்சியம்மாளிடம் சொல்லும் வாக்கியம் என்பதைக் கூடப் பார்வதியே தெரிவித்தாள்.

முரண்டும், அறியாமையும், அசூயையும், கொண்ட விடாக் குணமுமுள்ள சில பாட்டிகள்தான் கிராமங்களின் அரசியல் வாதிகளாக இருப்பார்களோ என்று எண்ணினாள் வசந்தி. நிச்சயமான கல்யாணங்களைக் கலைப்பது, நெருங்கிப் பழகுகிறவர்களிடையே மனஸ்தாபங்களை உண்டாக்குவது, மறைமுகமாகப் பழி தீர்த்துக் கொள்வது, வதந்திகளைப் பரப்புவது, புறம் பேசுவது, கோள் மூட்டுவது இவையெல்லாம் ஒவ்வோர் கிராமத் திலும் சில பாட்டிகளின் செயல்களாக இருந்தன. இந்த மாதிரிக் கெட்ட குணமுள்ள பாட்டிகளின் செயல்களை எதிர்த்து எதுவும் செய்ய முடியாமல் நல்ல சுபாவமுள்ள சில பாட்டிகள் கூட ஒதுங்கி இருந்துவிடுவது வழக்கமாயிருந்தது. காமாட்சியம்மாளிடம் தான் பேசிப் பார்த்ததைப் பற்றிச் சர்மாவிடமும் தன் தந்தையிடமும் விவரங்களைத் தெரிவித்து விட்டாள் வசந்தி. தான் காமாட்சியம்மாளிடம் பேசியதைப் பற்றிக் கமலியிடமோ, ரவியிடமோ, வசந்தி எதையும் விவரிக்கவில்லை. வீணாக அவர்களைக் கலவரப் படுத்த வேண்டாமென்று விட்டிருந்தாள்.

வேணு மாமாவைப் பொறுத்தவரை வசந்தி காமாட்சியம்மாளைப் பார்த்து விட்டு வந்து கூறிய எதுவும் அவரது உற்சாகத்தைப் பாதிக்கவில்லை. கலியாண ஏற்பாடுகளைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார் அவர். அந்த வட்டாரத்திலேயே செல்வாக்குள்ள நாகஸ்வர வித்துவான் ஒருவரிடம் முன்பணம் கொடுத்து இரட்டை நாகஸ்வரத்துக்கு ஏற்பாடாகியிருந்தது. மற்ற ஏற்பாடுகளும் தடபுடலாக நடந்துகொண்டிருந்தன. கலியாணம் நெருங்கி வந்துகொண்டிருந்தது.

இவற்றால் சீமாவையரின் ஆத்திரமும் வயிற்றெரிச்சலும் அதிகமாகியிருந்தன. எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்க்கிறாற் போல நடுவில் இன்னொரு சம்பவமும் நடந்துவிட்டது. சீமாவையர் அதில் வகையாக மாட்டிக்கொண்டு அகப்பட்டிருந்தார்.

சங்கர மங்கலம் புனித அந்தோணியார் ஆரம்பப் பள்ளியின் ஆசிரியை மலர்க்கொடி பள்ளிக் கூடம் முடிந்து சீமாவையரின் மாந்தோப்பு வழியாக வீடு



திரும்பும் போது முன்பு பலமுறை அவளை வழி மறித்து வம்பு பண்ணியது போல் வம்பு பண்ணிக் கையைப் பிடித்து இழுத்திருக்கிறார் அவர். தோப்பில் அவருக்குத் துணையாக அவர் அடியாட்கள் இரண்டு பேரும் இருக்கவே சீமாவையருக்குத் துணிச்சல் அதிகமாகி விட்டது. அகமத் அலி பாயின் கடத்தல் சரக்குகளோடு உள்ளே வந்து, அவருக்குப் பிரியமாகக் கொண்டுவந்து தரப் பட்டிருந்த 'சீமைச் சரக்கு' வேறு உள்ளே போயிருந்தது. சீமாவையரின் தோப்பில் இறவைக் கிணற்றை ஒட்டிப் பம்ப் செட் மோட்டாருக்காக ஒரு சிறிய சிமெண்டுக் கட்டிடம் உண்டு. அவர் குடிப்பதற்காகவும் மற்ற வ்லா விநோதங்களுக்காகவும் இந்தக் கட்டிடம் பயன் பட்டு வந்தது. அவர் வீடு அக்கிரகாரத்துக்குள் நடுவாக இருந்ததனுல் அங்கே ஒருநாளும் இந்த விவகாரங்களை அவர் வைத்துக் கொள்வதில்லை. தோப்பு ஊரிலிருந்து ஒதுங்கி இருந்ததனுல் இதற்கெல்லாம் வசதியாயிருந்தது. நீண்ட நாள் நழுவி நழுவிப் போய்க் கொண்டிருந்த மலர்க் கொடியை அன்று எப்படியும் வசப் படுத்தியே தீருவது என்று சீமாவையர் கையைப் பிடித்து இழுத்தவுடன் அவள் கூப்பாடு போட்டிருக்கிறுள். பின்னலேயே அவளைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த இறைமுடி மணியின் இயக்கத்து ஆட்கள் ஓடிவந்து சீமாவையரைக் கையும் களவுமாகப் பிடித்துத் தோப்பிலிருந்த தென்னை மரத்தில் கட்டிப்போட்டு விட்டார்கள். இறைமுடி மணிக்குத் தகவல் அனுப்பி அவர் போலீஸுக்குச் சொல்லியனுப்பி விட்டு வந்தார். சீமாவையரின் அடியாட்கள் எண்ணிக்கையில் அதிகமாயிருந்த பகுத்தறிவுப் படிப்பக இளைஞர்களை எதிர்க்க முடியாமல் உடனே போய் அகமத் அலி பாய்க்குத் தகவல் தெரிவித்தார்கள். பணம் விளையாடியது. போலீஸ் எதிர்பார்த்தபடி உடனே தோப்புக்கு வரவில்லை. ஆனுல் சீமாவையரைத் தப்பச் செய்வதற்காக அகமத் அலிபாய் ஒரு கூலிப் பட்டாளத்தை அனுப்பியிருந்தார். இருட்டியதும் தோப்பில் புகுந்த அந்தக் கூலிப் பட்டாளம் முதல் வேலையாகச் சீமாவையரைத் தென்னை மரத்திலிருந்து அவிழ்த்து விட்டுத் தப்பச் செய்து விட்டது. அப்புறம் நடந்த கலகத்தில் பகுத்தறிவுப் படிப்பக ஆட்களில் சிலருக்கும், அவர்களைத் தேடி அங்கு வந்திருந்த இறைமுடி மணிக்கும் அரிவாள் வெட்டுக் காயங்கள் ஏற்பட்டன. போலீஸ் வருவதற்குள் கூலிப் பட்டாளம் தப்பி ஓடி விட்டது. அங்கே வந்துசேரப் போலீஸார் வேண்டுமென்றே அதிக நேரமாக்கினுற் போலப் பட்டது.

அவசர அவசரமாகத் தப்பி ஓடிய சீமாவையர் தான் எந்த நேரத்தில் மாந்தோப்பில் அந்தப் பெண்ணைக் கையைப் பிடித்து இழுத்ததாக அவர்கள் போலீஸில் புகார் செய்திருந்தார்களோ அதே நேரத்தில் சிவன் கோவிலில் குடும்பத்தோடு சென்று அர்ச்சனை செய்து தரிசனம் பண்ணிக் கொண்டிருந்ததாகச் சாட்சிகளும், அலிபியும்ஜோடனை செய்தார்.

போலீஸார், சீமாவையரின் தோப்பில் அத்து மீறிப் புகுந்து கலகம் விளைவிக்க முயன்றதாகப் பகுத்தறிவுப் படிப்பக ஆட்கள் மீதும் இறைமுடி மணி மீதும் வழக்குப் பதிவு செய்திருந்தார்கள்.

இறை முடி மணிக்கு இடது தோள் பட்டையில் சரியான அரிவாள் வெட்டு. சங்கர மங்கலம் லோகல் பண்டு ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் அவரைச்சேர்த்திருந்தார்கள். ஆஸ்பத்திரியில் சேர்க்க அதிக நேரமாகி விட்டதால் நிறைய இரத்தம் வீணுகி இருந்தது. தகவல் தெரிந்து, சர்மா, ரவி, கமலி, எல்லாரும் பதறிப் போய் ஆஸ்பத்திரிக்கு



விரைந்திருந்தார்கள். ஏற்கெனவே இறைமுடி மணியின் மருமகன் குருசாமியும் மனைவி மக்களும், குடும்ப நண்பர்களும், இயக்க நண்பர்களுமாக ஆஸ்பத்திரியில் கவலையோடு குழுமியிருந்தனர். இறைமுடி மணிக்கு நிறைய இரத்த இழப்பு ஏற்பட்டிருந்ததனால் புது இரத்தம் செலுத்த வேண்டியிருந்தது. அவரது இயக்கத் தோழர்கள் போட்டி போட்டுக் கொண்டு இரத்தம் கொடுக்க முன் வந்தனர். ஆனால் சோதனை செய்து பார்த்ததில் ஒருவரது இரத்தமும் அவரது 'குரூப்' இரத்தமாக இல்லை.

டாக்டர் சர்மாவைப் பார்த்தார். அவரைக் கேட்கலாமா, வேண்டாமா என்று தயங்கினார்.

''என் இரத்தம் சேர்ரதான்னு பாருங்கோ, எனக்கு ஆட்சேபணை இல்லே'' — என்று மகிழ்ச்சியோடு டாக்டரைப் பின் தொடர்ந்தார் சர்மா.

என்ன ஆச்சரியம்? சர்மாவின் இரத்தம் கச்சிதமாகச் சேர்ந்தது. சர்மா இறைமுடி மணிக்காக இரத்தம் கொடுத்தார். மறு நாள் காலை இறை முடி மணி நல்ல பிரக்ஞையோடு பேச முடிந்த நிலையில் இருந்த போது தன்னைப் பார்ப்பதற்காக ஹார்லிக்ஸ் பழம் எல்லாம் வாங்கிக்கொண்டு வந்திருந்த சர்மாவிடம், ''எங்க ஆளுங்கள்ளாம் நான் பொழைச்சு எந்திரிச்சப்புறம் ஒருவேளை ஆஸ்திகனா மாறிடுவேனோன்னு கூடப் பயப்படறாங்கப்பா! நீ யில்ல எனக்கு இரத்தம் குடுத்தியாம்?'' — என்று வேடிக்கையாகச் சிரித்துக் கொண்டே சர்மாவைக் கேட்டார். அப்போது அருகே இருந்த படிப்பக ஆள் ஒருவர், ''ஒரு ஐயரு ரத்த வெறி பிடிச்சுப் போய் அதைச் சிந்த வச்சாரு. இன்னொருத்தரு அதைக் குடுத்துச் சரிப் படுத்தினாரு''— என்று சொன்னார். இறை முடிமணி அந்த ஆளை உறுத்துப் பார்த்தார். ''இந்தா! நீ கொஞ்சம் வெளியிலே இரு சொல்றேன். நானே பெறவு கூப்பிடுதேன்'' — என்று சொல்லி அந்த ஆளைப் போகச் சொன்னார் இறை முடிமணி. உடனே சர்மா, ''அவரை ஏன் கோபிச்சுக்கறே தேசிகாமணி! அவர் உள்ளதைத் தானே சொல்றார்?'' — என்றார். ஆனால் அந்த ஆள் இறைமுடி மணியின் வார்த்தைக்குக் கட்டுப் பட்டு உடனே வெளியேறி விட்டார். அவர் வெளியேறியதும் இறைமுடி மணி சர்மாவிடம் கூறினார்:

''செய்யிற அக்கிரமத்தையும் செஞ்சுப் போட்டு நானும் என் ஆளுங்களும் அவரு தோப்பிலே அத்து மீறி நுழைஞ்சி கலகம் பண்ணிச் சொத்துக்குச் சேதம் விளைவிச்சிருக்கோம்னு போலீஸிலே புகார் பண்ணியிருக்காரு சீமாவையரு. அந்த நேரத்திலே அவரு சிவன் கோய்யில்ல குடும்பத்தோட அர்ச்சனையில்லே பண்ணிக் கிட்டிருந்தாராம்? தனக்கு ஆபத்துன்னச் சாமியைக் கூடப் பொய்ச் சாட்சிக்கு இழுக்கிறானுவ.'' —

''யாரைச் சாட்சிக்கு இழுத்தா என்ன? அக்கிரமம் பண்றவா அழிஞ்சு தான் போயிடுவா...''

''அழிஞ்சி போகலியே விசுவேசுவரன்! நேர்மாறு அக்கிரமத்தை எதிர்க்கப் போன





ஓர் அமெரிக்க நடனக் குழுவினரின் நிகழ்ச்சி அண்மையில் சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்றது. சத்தியமாக அதில் ஒன்றும் புரியவில்லை. ஆயினும் ஒரு பிரமிப்புடன் கண்கொட்டாமல் கடைசி விநாடிவரை பார்த்துக் கொண்டிருக்கச் செய்தனர். நன்கு புரிகிற ஒன்றை இறுதிவரை இருந்து பார்ப்பது பிரமாதமில்லை. புரியாத ஒன்றைக் கடைசிவரை இருந்து பார்க்கவேண்டுமென்றால் அதற்குக் காரணம் புதுமை என்பது மட்டுமல்ல, கலைஞர்களின் திறமையும்தான். சம்பிரதாயத்தை உடைத்தெறிவதே இத்தகைய நவீன அமெரிக்க நடனக் குழுவின் நோக்கமாம். அந்த லட்சியத்தில் முழு வெற்றி பெற்றுள்ளார்கள்.

பின்னனி இசை ஸ்பேஸ் ஏஜ் இசையாக இருந்தது. சில நடனங்களுக்கு நிசப்தமே பின்னணி இசை! நடனங்களில் ஜிம்னஸ்டிக்ஸ் என்ற தேகப் பயிற்சி முறையும் பாலே நடனத்தின் நளினமும் சர்க்கஸ் பாணி கோமாளித்தனமும் கலந்து தோன்றின.

நடமாடும் மாடர்ன் ஆர்ட் என்று வர்ணிக்கத்தக்க இந்நடனக் குழு பிலோபோலஸ் என்ற ஒருவகை காளானின் பெயரையே தனதாக்கிக் கொண்டிருக்கிறது. விஷக் காளானும் உண்டு; ஔடதக் காளானும் உண்டு. இது எந்த வகையோ? அதுதான் புரியவில்லை என்று ஆரம்பத்திலேயே சொல்லியாகி விட்டதே!

# பெல்பூரி

**வாடகை ஐம்பது பைசா!**

ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்துக்காக ஆஸ்திரிய நாட்டுத் தலைநகரான வியன்னாவில் மிகப் பெரிய அளவில் ஒரு கட்டிடத்தைக் கட்டி முடிக்க இருக்கிறார்கள்.

இதற்கு வருட வாடகை எவ்வளவு தெரியுமா? ஐம்பதே பைசா!

ஆமாம். ஓர் அடையாள வாடகைதான் இது.

ஆதாரம்: இந்துஸ்தான் டைம்ஸ்
தகவல்: வி. ந. ஸ்ரீதரன்





இது நான்கு நெருப்புக் குச்சிகளை உபயோகித்துச் செய்யக் கூடிய பெரிய சதுரம்.



இந்த நான்கு குச்சிகளை உபயோகித்து மிகச்சிறிய சதுரம் போடுவது எப்படி?

இப்படி:



ஈவ்ஸ் வீக்லி.
கே. ஆர்.

நூறு ரூபாய் நோட்டுகள் கொண்ட புத்தம் புதிய ஒரு ரூபாய் நோட்டு கட்டு ஒன்றை என் தாயாரிடம் கொடுத்தேன். ''ஏன் கடங்காரன் இப்பிடி பின் அடிச்சு வைச்சிருக்கான்?'' என்று அவள் கேட்ட போது நான் திடுக்கிட்டேன்.

''பின்னை நெம்பி நிமிர்த்தி வைத்துக் கொண்டால் செலவுக்குத் தகுந்தாற் போல ஒவ்வொன்றாக எடுத்துக் கொடுக்கலாம்; மற்ற நோட்டுகள் சிதறிப் போகாது'' என்று பதில் சொன்னேன்.

''அதைத்தான் சொல்கிறேன்'' என்று அம்மா சொன்னாள்: ''பின் வாயைக் கீழே, கடைசி நூறாவது நோட்டை அணைத்தபடி வைத்து அடிக்கக் கூடாதோ? கடைசி நோட்டிலிருந்து செலவழித்துக் கொண்டு வந்தால், மீதி எவ்வளவு இருக்கிறது என்று நோட்டு நம்பரைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம் இல்லையா?''

சரியான யோசனையாகவே எனக்குப்பட்டது!

- பிரபு



# காதலிக்கத் தகாதவர்கள்!

காதலித்துத் திருமணம் செய்து கொள்வது நல்லதுதான். ஆனால் அப்படிச் செய்யும் போது இப்படிப் பட்டவர்களைத் திருமணம் செய்து கொள்ளுமுன் ஒருதடவைக்கு இரண்டு தடவை யோசிக்க வேண்டும். இது ஆண் பெண் இருவருக்குமே பொருந்தும்.—

- தான் வாழ்வில் துரதிருஷ்டசாலி, அதிர்ஷ்டமில்லை என்று சோகக் கதைகளைச் சொல்பவர்.
- வழக்கமாகத் தப்பு செய்து விட்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டே இருப்பவர்.
- மற்றவர்களைக் குறை கூறுபவர்.
- தெரிந்தே பச்சையாகப் பொய் பேசுபவர்.
- சுலபமாக வாக்குறுதிகளை அள்ளி வீசுபவர்.
- மற்றவர்களோடு கலகலப்பாகப் பழகத் தெரியாதவர்.
- தன் தோற்றத்தைப் பற்றிக் கவலைப் படாதவர்.
- தீயப் பழக்க வழக்கங்களைப் 'பரவா யில்லை' என்று கூறுபவர்.
- தன் குடும்பத்தோடு நீங்கள் பழக முடியாமல் தடுப்பவர்.
- தன் பெற்றோரோடு நல்லமுறை யில் சுமுகமாகப் பழகாதவர்.

'யுவர் ஹெல்த்'
பாலி

ஆகிவந்த வெள்ளித் தாம்பாளத்தை உள்ளேயிருந்து எடுத்துத் துலக்கி அதில் ஆரத்திக்கு மஞ்சள்நீர் கரைத்து வைத்தாள். வாசலில் தெளித்துக் கோலம் போட்டாள்.

பார்வதி கண் விழித்துபோது அம்மாவே எழுந்து நீராடிய கூந்தல் ஈரம் புலராமல் கூடத்திலிருந்து விளக்கு ஏற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனுள்.

''இந்த உடம்போட உன்னை யாரும்மா எழுந்திருக்கச் சொன்னது? ஐயையோ... பச்சைத் தண்ணியிலே குளிக்க வேறே செஞ்சிருக்கியா? ஏம்மா இதெல்லாம் பண்ணினே? அதான் இதெல்லாம் கவனிக்கிறதுக்குன்னு நான் வந்திருக்கேனே?''

''சரிதான் போடீ... நீ பெரிய மனுஷி! உனக்கென்ன தெரியும்டீ இதெல்லாம்... போ... நீயும் போய்ச் சீக்கிரமாகக் குளிச்சிட்டு வா...''

—அம்மாவின் இந்தத் திடீர் மாறுதலும் உற்சாகமும் பார்வதியால் உடனே நம்ப முடியாதபடி இருந்தன. பல நாட்களாகச் சரியான உணவு இன்றி வெறும் கஞ்சியும், பழங்களுமே சாப்பிட்டுக் கொண்டிருந்த அம்மாவின் குரலிலோ, செயல்களிலோ மிடுக்கு இல்லை என்றுலும் தானே ஏற்படுத்திக் கொண்ட உற்சாகத்திஞலும் நலிந்திருந்தும் வலிந்து பெறுவதற்கு முயன்ற சக்தியிஞலும், காமாட்சியம்மாள் அந்த அதிகாலையில் அவ்வீட்டின் சுமங்கலியாகவும் கிருஹ லட்சுமியாகவும் பொலிவுடன் நடமாடிக் கொண்டிருந்தாள்.

கிராமத்துக்கே உரிய சோபையுடன் கிழக்குத் திசை வெளுத்துக் கொண்டிருந்த போது தெருக் கோடியிலிருந்து மேளம் நாகஸ்வர இசையுடன் கூட்டமாக மனிதர்கள் வரும் ஒலியரவங்கள் கேட்டன. காமாட்சியம்மாள் தெருத் திண்ணைக்கு வந்து எட்டிப் பார்த்துக் கமலியும் ரவியும் மற்றவர்களும் தான் வடக்குத் தெருவில் கல்யாண வீட்டிலிருந்து புறப்பட்டுக் கிருஹப் பிரவேசத்துக்காக ஊர்வலமாக வருகிருர்கள் என்று புரிந்து கொண்டாள். மகிழ்ச்சியாலும், வலிந்து ஏற்படுத்திக் கொண்ட உற்சாகத்திஞலும் தனது உடல்நிலைக்கு மீறிய செயல்களை அப்போது அவள் செய்து கொண்டிருந்தாள். தலைசுற்றிக் கீழே மயங்கி விழுந்து விடாமல் திண்ணைத் தூணை இறுகப் பற்றிக் கொண்டாள்.

அக்கம் பக்கத்திலும் எதிர் வரிசையிலும் வீடுகளில் எழுந்து வந்து சிலர் எட்டிப் பார்த்தார்கள். பாருவை ஆரத்திக்காக உஷார்ப்படுத்த முன்கூட்டியே ஒட்டமும் நடையுமாக எதிர்கொண்டு வந்த வசந்தி திண்ணையில் காமாட்சி மாமியைப் பார்த்து வியப்பும் திகைப்பும் அடைந்தாள்.

''என்ன மாமீ இது? இந்த உடம்போட நீங்க எதுக்கு இதெல்லாம் வந்து அலட்டிக்கறேள்..? போய்ப் படுத்துக்குங்கோ...''

''எனக்கு ஒடம்புக்கு ஒண்ணும் இல்லேடீ... வெள்ளிக் கிழமையும் அதுவுமாப் படுக்கையிலே விழுப்போடப் படுத்திண்டிருக்கப் பிடிக்கலே... வா... இப்பிடி உட்கார்ந்துக்கோ. ஆரத்தியை எடுத்துண்டு வரப் பாரு உள்ளே போயிருக்கா...''

உள்ளேயிருந்து பார்வதி மஞ்சள்நீர்த் தாம்பாளத்தோடு வந்தாள். காமாட்சியம்மாளை வாசலில் பார்த்ததும் எடுத்த எடுப்பில் 'கலியாணப் பெண்ணையும் பிள்ளையையும் வீட்டுக்குள் விடமாட்டேன்' என்று சண்டை போட்டுத் தடுக்கத்தான் அந்த உடல்நிலையையும் பொருட்படுத்தாமல் எழுந்து வந்து உட்கார்ந்திருக்கிருளோ என்று முதலில் எண்ணித் தயங்கிய வசந்தி சிறிது பேச்சுக் கொடுத்துப் பார்த்த பின்பே மாமிக்கு இடைஞ்சல் செய்யும் எண்ணம் எதுவும் இல்லை என்பதையும் அவள் தானுகவே கொஞ்சம் மனம் மாறிச் சுமுகமான நிலைமையில்தான் வந்து உட்கார்ந்திருக்கிருள் என்பதையும் புரிந்துகொண்டாள். காமாட்சியம்மாளின் இந்தச் சிறிதளவு மனமாற்றம்கூட வசந்திக்குப் பெரிய ஆச்சரியத்தை அளித்தது. எதிர்பாராத திருப்பமாகவும் இருந்தது.

ஊர்வலமும், மனிதர்களும் வீட்டை நெருங்கி வந்திருந்தனர்.

சர்மா, ரவி, கமலி, வேணுமாமா எல்லாருக்குமே காமாட்சியம்மாளை ஆரத்தித் தட்டுடன் வாசலில் பார்த்தது பெரிய ஆச்சரியமாயிருந்தது. ஆரத்தி சுற்றிக் கொட்டும் போது பாடும் பாட்டுக்காக மேளமும் நாகஸ்வரமும் சகல வாத்யங்களும் சில நிமிஷங்கள் ஒலிப்பது தவிர்ந்து நின்றன. காமாட்சியம்மாளும் வசந்தியும்தான் ஆரத்திச் சுற்றிக் கொட்டினர்கள். காமாட்சியம்மாளே பாட்டும் பாடிஞள்.

''பத்திரம்! வலது காலை எடுத்து முன்னே வச்சு



### சேப்பாக்கமும் விசுவநாதனும்:

விசுவநாதன் பாட்டிங்கில் சோபிப்பதற்குச் சேப்பாக்கம் மைதானம் பெருமளவு உதவியிருக்கிறது. முதன் முதலில் நிலீப் கோப்பைப் பந்தயத்தில் 1969ல் சேப்பாக்கம் மைதானத்திலேதான் பிரசித்தி பெற்றுர். லாயிட் கோஷ்டிக்கெதிராக - 1974-75ல் உன்னதமாக ஆடி, ஆட்டமிழக்காமல் 97 எடுத்துத் திரும்பிஞர். சேப்பாக்கம் இவரது செஞ்சுரியை இன்னும் காணவில்லை. அப்படியே தான் மச்சினன் காவஸ்கரும். இவரும் இங்கு செஞ்சுரி காணவில்லை. இந்த ஆண்டு இவர்கள் இருவருமே செஞ்சுரிப் போட்டால் சேப்பாக்கம் ஓர் அதிசய ரிகார்டைக்காணும்.

- 'ராஜா'

உள்ளே வா'' — என்று காமாட்சியம்மாளே கமலிக்குச் சொல்லி அழைத்துக் கொண்டு போனது இன்னும் நம்ப முடியாததாக இருந்தது. யாரும் கவனிக்காமல் பேசாமல் கொள்ளாமல் விட்டுவிட்ட தனிமையில் தனக்குத் தானே நினைந்து நினைந்து காமு மெல்ல மனம் மாறியிருக்க வேண்டும் என்று நினைத்தார் சர்மா. காமாட்சியம்மாளே, ''ரெண்டு பேரும் இப்பிடி என் பின்னடி வாங்கோ'' — என்று மணமக்களைத் தன் படுக்கையருகே அழைத்துச் சென்றாள். அதுதான் நல்ல சமயமென்று வேணுமாமா, ''இந்தாடா ரவி! அம்மாவை ஆசீர்வாதம் பண்ணச் சொல்லு!'' —என்று அட்சதை நிரம்பிய வெள்ளிக் கிண்ணத்தை அவனிடம் நீட்டினார்.

ரவி அட்சதையை அம்மா கையில் கொடுத்து விட்டுக் கமலியோடு அவளை நமஸ்காரம் செய்தான். ''தீர்க்காயுஸா இருக்கணும்'' — என்று அம்மாவின் மெல்லிய குரல் சாதகமாக ஒலித்ததுமே அவர்கள் மனத்தில் பாலை வார்த்தாற்போல இருந்தது.

தான் கறந்து வைத்திருந்த பாலில் தன் படுக்கையருகே வைத்திருந்த மலைப்பழங்களில் இரண்டு மூன்றை உரித்து விண்டு போட்டுக் கொஞ்சம் சர்க்கரையும் சேர்த்த பின், ''கல்யாணத்திலே பொண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும் பாலும் பழமும் கொடுக்கணும்னு சாஸ்திரம்டா! நான் அங்கேதான் வரமுடியலே. ...இந்தா! முதல்லே இரண்டு பேருமா இதைக் கொஞ்சம் சாப்பிடுங்கோ... சொல்றேன்'' — என்று கமலிக்கும், ரவிக்கும் பாலும் பழமும் கொடுத்தாள் காமாட்சியம்மாள். அந்தப் பரிவு — ஒன்றுமே வித்தியாசமாக நடந்து விடாதது போன்ற காமாட்சியம்மாளின் அந்த அன்பு எல்லாம் ரவியையும், கமலியையும், மற்றவர்களையும் திணற அடித்தது.

திடீரென்று நின்று கொண்டிருக்கும் போதே தலைசுற்றி மயங்கி விழுவதுபோல் தள்ளாடும் அம்மாவை ரவி பாய்ந்து தாங்கிக் கொண்டான்.

''நீ சித்தே புருஷா பக்கம் போய் இருடாப்பா. இப்போ எனக்கு என் மாட்டுப் பொண்ணோடத் தனியா ரெண்டு வார்த்தை பேசணும்'' —

ரவி விலகிப்போய் மற்றவர்களோடு சேர்ந்து கொண்டான். தள்ளி நின்று கொண்டிருந்த கமலியை ஜாடை செய்து அருகே அழைத்தாள் காமாட்சியம்மாள். அப்படி அழைத்தபோது அவள் முகமும் பார்வையும் நிஷ்களங்கமாக இருந்தன. அதிகாலையில் தானே தொடுத்துத் தனக்கு வைத்துக்கொண்டது போக மீதியிருந்த பூவைப் பாருவிடம் எடுத்துக் கொண்டு வரச் சொல்லித் தன் கையாலேயே கமலிக்குச் சூட்டி விட்டாள்.

''நீ ரொம்பக் கெட்டிக்காரி... எல்லாம் உன் மனசு போலவே நடந்திருக்கு. எனக்கும் இப்போ இந்த நிமிஷம் உன் மேலேயோ அவன் மேலேயோ எந்த மனஸ்தாபமும் இல்லே. ஆனா மனஸ்தாபம் இருந்துதுங்கறது நிஜம். ஆனா இப்போ மனசு திருப்தியா நெறைஞ்சு இருக்கு. நீயும், என் புள்ளையும் தீர்க்காயுஸா — பகு சௌக்யமா இருப்பேள்' — அதிலே சந்தேகமில்லே. என்னமோ என் அக்ஞானம்... நான் முரண்டு பிடிச்சேன். குறுக்கே நின்னேன். இப்போ அதை நானே மறந்துட்டேன். நீயும் மறந்துடணும். மன்னிச்சிடணும்னு கூடச் சொல்வேன்.'' —

''ஐயையோ! நீங்கள் அப்படியெல்லாம் சொல்லக்



கூடாது; நான் ரொம்பச் சிறியவள். உங்களிடம் நிறையக் கற்றுக்கொள்ள வேண்டியவள். நான் யாரு உங்களை மன்னிக்க?''

''நீ அகந்தையில்லாதவள்... நிஜமான படிப்பாளி. அதுனாலேதான் நான் இத்தனை கடுமையாச் சோதனை பண்ணினப்புறமும் நீ பவ்யமா இப்பிடிச் சொல்றே. பரவாயில்லே... இப்போ உங்கிட்ட ஒண்ணே ஒண்ணு மட்டும் நான் வேண்டிக்கிறதுக்கு மீதம் இருக்கு.''...

''நீங்கள் வேண்டிக் கொள்ளக் கூடாது. உங்கள் மருமகளுக்கு நீங்கள் உத்தரவிட வேண்டும்.'' —

''நான் வேண்டுதல்னுதான் சொல்லுவேன்ம்மா.! நீ உத்தரவுன்னு எடுத்துண்டா அதைப்பத்திச் சந்தோஷப் படறேன். என் ஆசையெல்லாம் வேறொண்ணுமில்லே. என் பிள்ளையோட நீ இங்கேயே கிருஹ லட்சுமியா இருந்து இந்தாத்துலே பெற்றுப் பெருக்கி விளக்கேத்தணும்கறதுதான். இது கலப்புக் கல்யாணம். இங்கே இருக்கறவா — பார்க்கறவா — கொறை சொல்லிண்டே இருப்பான்னு தயங்கியோ பயந்தோ வேற தேசத்திலேயே நிரந்தரமா இருந்துடலாம்னு நீ நெனைக்கப் படாது. இங்கேயே இருந்து இந்தாத்திலே விளக்கேத்திண்டு வரணும். புருஷா அக்னி சந்தானம் ஔபாசனம்னு பண்ணி நெருப்பு அணையாமக் காத்துண்டு வரமாதிரி இந்தக் குடும்பத்திலே பொண்டுகளும் தலைமுறை தலைமுறையா ஒரே வித்திலேருந்து வளர்ற துளசியைச் சம்ரட்சணம் செஞ்சு பூஜை பண்ணிண்டு வரோம். பூஜை பண்ண மனுஷா இல்லாம இந்தாத்துத் துளசிமாடம் ஒருகாலத்திலேயும் வாடப்பிடாது. அதிலே நாள் கிழமைகளில் மட்டுமில்லாமே எல்லா நாளேயும் தீபம் பிரகாசிக்கணும்.

''இங்கே இந்தக் குடும்பத்தோட சௌபாக்கியங்களும், லட்சுமி கடாட்சங்களும், விருத்தியும் நாங்க பரம்பரையாச் சரீர சுத்தத் தோடேயும் அந்தரங்க சுத்தத்தோடேயும் பண்ணிண்டு வர துளசி பூஜையாலேன்னுதான் எங்களுக்கு நம்பிக்கை. நாங்க நல்ல நாள் தவறாமே விரத நியமம் தப்பாமே துளசி மாடத்திலே ஏத்தற விளக்குத்தான் இதுவரை இந்தக் குடும்பத்தைப் பிரகாசப்படுத்திக் காப்பாத்திண்டு வரது. எத்தனையோ தலைமுறைக்கு மின்னே ராணி மங்கம்மா காலத்திலே விரத நியமம் தப்பாத ஒரு பிராம்மண சுமங்கலிக்குத் தானம் பண்ணணும்னு தைவெள்ளிக் கிழமையும் அதுவுமா சொக்கத் தங்கத்திலே பண்ணின சொர்ண விளக்கு ஒண்ணை வச்சுண்டு அந்த ராணி கிராமம் கிராமமாத் தேடிப் பார்த்தாளாம். கடைசியா அந்தச் சொர்ண தீபத்தை இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண் ஒருத்திதான் தானம் வாங்கிண்டாளாம். அன்னியிலே யிருந்து இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண்கள் ஒவ்வொருத்தரா அந்தச் சொர்ண தீபத்தையும் துளசி பூஜை பண்ற உரிமையையும் முந்தின தலைமுறைப் பெரியவா கிட்டேருந்து பரம்பரை பரம்பரையா அடைஞ்சிண்டு வரோம். இன்னிக்கும், நானையும் தைவெள்ளிக் கிழமை தவறாமே நான் அந்தத் தங்க விளக்கைத் துளசி மாடத்திலே ஏத்தி வைக்கிறதுண்டு! இந்தா! இப்போ அதை நீ வாங்கிக்கோ. இனிமே நீ அந்தப் பூஜையைத் தொடர்ந்து பண்ணிண்டு வா'' — என்று காமாட்சியம்மாள் எழுந்திருந்து பெட்டியிலிருந்து அந்தத் தங்க விளக்கை எடுத்துத் திரியிட்டு ஏற்றிக் கமலியிடம் நீட்டினாள்.

''உங்கள் கட்டளைப்படியே இந்த வீட்டின் கிருகதீபம் அணையாமல் — துளசிமாடம் வாடாமல் இங்கிருந்து குடும்பம் நடத்தறேன். ஆனால் தயவுசெய்து நானும் 'இவரு'மாக ஒரே ஒருதடவை என் பெற்றோரைப் பார்த்து வருவதற்காகப் போய்வர மட்டும் அனுமதி தாருங்கள் அம்மா'' — என்று கூறி வணங்கி அந்தத் தீபத்தை இரண்டு கைகளாலும் அணையாமல் பயபக்தியோடு வாங்கிக் கொண்டாள் கமலி. காமாட்சியம்மாள் கமலியின் கோரிக்கைக்கு இணங்கினாள். அப்போது அவளுடைய கண்களில் நீர் நெகிழ்ந்தது. அவள் தளர்ச்சியோடு படுக்கையில் சாய்ந்து கொண்டாள். சிறிது தொலைவிலிருந்து வசந்தியும், ரவியும் இதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சர்மா, வேணுமாமா முதலியோர் புரோகிதருடன் கிருஹப் பிரவேசத்துக்கான வைதிக காரியங்களை ஆயத்தம் செய்து கொண்டிருந்தனர். பார்வதி அவர்களுக்கு ஒத்தாசை செய்து கொண்டிருந்தாள். குமார் அப்போது தான் தூங்கி எழுந்திருந்து தோட்டத்துக் கிணற்றுக்கு நீராடப் போயிருந்தான். பலபல வென்று விடிந்து ஒளிபரவிக் கொண்டிருந்தது.

காமாட்சியம்மாள் ஏற்றிக் கொடுத்த தீபத்தை அப்படியே கைகளில் ஏந்தியபடி பின்புறம் கிணற்றடியில் துளசி மாடத்துக்குச் சென்றாள் கமலி. அடுத்த சில விநாடிகளில், துளசி மாடத்தருகே இருந்து,

**''துளஸி! ஸ்ரீசகி சுபே பாபஹாரிணி புண்யதே**
**நமஸ்தே நாரத நுதே நாராயண நம:**
**ப்ரியே...''** — என்ற கமலியின் இனிய குரல் ஒலிக்கத் தொடங்கியது. அவள் துளசி பூஜையை முடித்துக்கொண்டு உட்பக்கம் திரும்பியபோது கூடத்தில் இயல்பை மீறிய அமைதி நிலவியது. ரவி, சர்மா, வேணுமாமா வசந்தி, பார்வதி குமார் எல்லாரும் காமாட்சியம்மாளின் படுக்கையருகே கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். கமலியும் அங்கே விரைந்தாள். காமாட்சியம்மாள் மயங்கினாற் போலப் படுக்கையில் சாய்ந்து துவண்டு கிடந்தாள்.

''மறுபடியும் காமெண்டரி கேட்க ஆரம்பிச்சுட்டியா மஞ்சு?''
''இல்லே சார்!''
''என்ன இல்லே... ''டியர் சார்! தேங்க் யூ பார் யுவர் லெட்டர் டேட்டட் டு டுவேல் பார்த் த்ரீ...ன்னு டைப் அடிச்சிருக்கியே...''
- தோ

சர்மா காமாட்சியம்மாளின் பொன்நிற உள்ளங்காலில் சூடுபறக்கத்தேய்த்துக்கொண்டிருந்தார். எல்லார் முகத்திலும் கவலையும் பரபரப்பும் தெரிந்தன. ரவி அம்மாவின் கையைப் பிடித்து 'பல்ஸ்' பார்த்துக் கொண்டிருந்தான். வேணுமாமா குமாரைக் கூப்பிட்டு, ''டாக்டரைக் கூப்பிட்டிண்டுவா! ஓடு! வாசல்லே கார் நிக்கறது. உங்கம்மாவுக்கு இங்கிலீஷ் டாக்டர்னுப் பிடிக்காது. ஆனாலும் பரவாயில்லே. வடக்குத் தெருவுக்குப் போய் எங்காத்துக்கு நாலு வீடு தள்ளி இருக்கற டாக்டரைக் கூட்டிண்டு ஓடிவா'' – என்று அவனை அவசர அவசரமாகத் துரத்தினார். குமார் ஓடினான். பார்வதி அதற்குள்ளேயே பயந்து அழத் தொடங்கியிருந்தாள். சர்மா காலைத் தேய்ப்பதை நிறுத்தி விட்டு வேணுமாமாவையும் ரவியையும் நோக்கி உதட்டைப் பிதுக்கினார். நேரே பூஜை அறைக்குப்போய் இது மாதிரிச் சந்தர்ப்பங்களில் பயன்படுத்துவதற்கென்று காசிச் செம்பில் சேமித்து வைக்கப் பட்டிருந்த கங்காத் தீர்த்தத்தைக் கொண்டு வந்து காமாட்சியம்மாளின் வாயில் இரண்டு உத்திரகிண்ணி சேர்த்தார். தீர்த்தம் கடைவாயிலும் கன்னங்களிலும் வழிந்தது.

அதுவரை அமைதியாகப் பொறுத்துக் கொண்டிருந்த சர்மா சிறுகுழந்தை போல் கோவென்று கதறியழுதார்.

''கொடுத்துவச்ச மகராசி! வெள்ளிக் கிழமையும் அதுவுமாப் பார்த்துப் பூவும் குங்குமமுமாப் போய்ச் சேர்ந்துட்டா'' – என்று கிருஹப் பிரவேசத்துக்கு வந்திருந்த பட்டினத்து வாத்தியார் தம் உதவியாளரின் காதருகே மெல்ல முணுமுணுத்துக் கொண்டிருந்தார். ரவிக்குக் கண் கலங்கியது. கமலி, வசந்தி, எல்லாருமே வாய்விட்டு அழுது விட்டார்கள்.

துளசி மாடத்தில் அந்தக் குடும்பத்தின் குலவிளக்கான புராதனமான சொர்ணதீபம் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த போது கிருஹ தீபமாக விளங்கிய காமாட்சியம்மாள் ஏதோ வீட்டுக்கு மருமகள் வந்ததும் அவளிடம் சொல்லிக் கொண்டுபோவதற்காகவே காத்திருந்ததுபோல் போய்ச் சேர்ந்திருந்தாள். வசந்தி கமலியின் காதருகே மெல்லச் சொன்னாள்: – ''மாமி உங்களை ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போகணும்னே காத்துண்டு இருந்த மாதிரின்னு இருந்துட்டுப் போயிட்டா...?'' –

கமலியால் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. மேலும் வாய்விட்டு விசும்பி அழத் தொடங்கி விட்டாள் அவள்.

''அழாதேடீ கமலி! நீ ரவியைக் கல்யாணம் பண்ணிண்டு உங்க நாட்டோடப் போயிடுவியோங்கறதுதான் சதா மாமியோட கவலையா இருந்துது. உங்கிட்ட என்ன சொன்னா மாமீ?''

''நான் இங்கேயே இருந்து குடும்பம் நடத்தி இந்தத் துளசி பூஜையை விடாமப் பண்ணணும்னு என்னிடம் வாக்கு வாங்கிக் கொண்டு அந்தத் தங்க விளக்கை எடுத்துக் கொடுத்தாள்.'' –

''பின்னே என்ன? மாமிக்குக் குடுத்த வாக்கைக் காப்பாத்து! அந்தத் துளசிச் செடி வாடாமயும், விளக்கு அணையாமயும் பார்த்துக்கோ'' – என்று உணர்ச்சி பொங்கும் குரலில் கமலிக்குப் பதில் சொன்னாள் வசந்தி.

சங்கர மங்கலத்தில் பொழுது நன்றாக விடிந்து சூரியனின் கதிரொளி கோவில் கோபுரகலசங்களில் பட்டு மின்னத் தொடங்கியிருந்தது.

கிரிக்கெட்டில் 'கிங் பேர்' என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா?

இரண்டு இன்னிங்ஸிலும் முதல் பந்திலேயே அவுட்டாகி விட்டால் அதை 'கிங் பேர்' என்கிறார்கள்.

—ஸண்டே.
—முத்து.



### முடிவுரை :

நம்மைச்சுற்றி உலகெங்கும் 'Transfer of values' (மதிப்பீடுகளின் மாறுதல்) மதங்களையும், சமய நம்பிக்கைகளையும் பூர்வீகமான கலாசாரப் பழக்க வழக்கங்களையும் மெல்ல அசைத்துக் கொண்டு இருந்தாலும் ஏதோ ஒருவகையில் ஓரிடத்திலிருந்து பாயும் நீர்ப்பெருக்கு மற்றோரிடத்தில் சென்று தவிர்க்க முடியாதபடி நனைத்துப் பாய்ந்து பரவுவது போல் கலாசாரப் பரிமாற்றம் (Cultural Exchange) அல்லது கலாசார மடைமாற்றங்கள் (Cultural transformation) நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கின்றன. அதை யாராலும் அழித்துவிட முடியாது.

இக்கதையில் கமலியும், ரவியும், அந்தக் கலாசாரப் பரிமாற்றங்களின் சின்னங்களே. ஆயிரம் வேறுபாடு இருந்தாலும் பாசமும் அரவணைத்து ஏற்றுக் கொள்வதுமே முடிவாக இந்தியத் தாய்மார்களின் நிறைவான பண்பு என்பதைத் தன் வாழ்விலும், மரணத்திலும் ஒருசேர நிரூபிக்கிறாள் காமாட்சியம்மாள்.

பண்பாடு என்பது பரவலாகும்போது வெறும் தேசிய அடையாளப் புள்ளி நீங்கி 'மானிடம்' என்ற சர்வ தேசிய அடையாளம் உடனே வருகிறது. இந்தக் கதை 'சங்கர மங்கலம்' என்ற ஒரு சின்ன கிராமத்தில் நடந்தாலும் இதில் வரும் மனிதர்கள் அந்தக் கிராமத்தை விடப் பரந்த உலகத்தைப் பாதிப்பவர்கள், பாதித்தவர்கள், பாதிக்கப்போகிறவர்கள்.

# உழவர்களின் நட்பே எங்கள் உயர்வுக்கு அடிப்படை

உழவர் திருநாளான பொங்கல் திருநாளை உழவர்களுடன் கொண்டாடுவதில்
MFL இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறது.

பயிர்களின் செழுமையான வளர்ச்சிக்கு சூரிய ஒளி எவ்வளவு முக்கியமோ, அதைப் போலவே MFL நிறுவனமும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. உழவர்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவதில் MFL அளவில்லாத பெருமிதம் கொள்கிறது. உழவர்களின் வாழ்க்கையோடு தன்னைப பிணைத்துக் கொண்டுள்ள MFL அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்ற தனது நீண்ட நாள் திட்டத்தை செயல்படுத்துகிறது.

எல்லாத் துறைகளிலும் வேகமாக முன்னேறி வரும் நாம் உழவுத்துறையில் சாதிக்க வேண்டியவை எத்தனையோ? அதற்காகவே தன்னை அற்பணித்துக் கொண்டு, கிராம முன்னேற்றமே தன் குறிக்கோளாய்க் கொண்டு பாடுபட்டு வரும் MFL, இனிவரும் ஒவ்வொரு பொங்கல் திருநாளையும் உழவர்கள் தன்னிறைவுடன் குதூகலத்துடன் கொண்டாட உதவுவதென உறுதி கொண்டிருக்கிறது. இந்த உறுதியை இந்த வருடம் பொங்கல் பரிசாக உழவர்களுக்குத் தருவதில் MFL பெருமிதம் அடைகிறது.

**உழவுக்கு கை கொடுப்போம்-**
**நம் உயர்வுக்கு வழி வகுப்போம்**



மதராஸ்
பர்டிலைசர்ஸ்
லிமிடெட்
மணலி சென்னை 600 068




Interpub MFL





செய்யாமல் செய்த உதவிக்கு, வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

— செய்நன்றி அறிதல் - திருக்குறள்

வான் பொய்த்தால் வையகமும் வாழாது. ஆதலால் மழை கண்டு நாட்டில் வளம் கண்ட உழவர் பெருமக்கள் நன்றி கூறும் திருநாள் இப்பொங்கல் திருநாள். நன்றி சொல்லும் உழவர் பெருமக்களுக்கு

# ஸ்பிக் கூறும் இனிய பொங்கல் வாழ்த்துக்கள்

ஸ்பிக் உரங்கள் அளிப்பது வளமை, செழுமை. ஸ்பிக் உரங்கள் நாட்டின் மிகப் பெரிய உரத் தொழிற்சாலையில் தயாராகின்றன.




**சதர்ன் பெட்ரோ கெமிக்கல்
இண்டஸ்ட்ரீஸ்
கார்ப்பொரேஷன் லிமிடெட்**

ஸ்பிக் சென்டர்,
97, மவுண்ட் ரோடு,
சென்னை-32.

ADWAVE SPIC

# தனி அறை

## மி.வி.ஆர்

**வீ**ரம்மாவின் துக்கம் கடந்த மூன்று தைகளில் சிதைந்து போயிருந்தது. முதல் சில மாதங்கள் தூங்காமலே இரவெல்லாம் புலம்பி, மனம் நொந்து, கண் கலங்கிக் கடைசியில் கோவை ஆஸ்பத்திரியில் ஒருமாதம் படுத்தவள், திரும்பிச் சங்கரிதுர்க்கம் வந்த பிறகும் நெஞ்சில் ஏற்பட்ட வலியில் துவண்டுபோய், இரவின் இருளில் கண்ணைத் திறந்து கிடந்தாள். நாள் செல்லச் செல்ல, நெஞ்சின் வலி குறையவில்லை என்றாலும் உடலில் அசதியின் தாக்கலால் கண்கள் அவ்வப்போது தாமாக மூடிக்கொண்டு, வலியைப் போர்வையால் போர்த்துவது போலப் போர்த்திவிடும். ஆனால் இந்தப் போர்வைகளும் ஓரிரு மணி நேரங்களுக்குத்தான். கண் திறந்தால் நெஞ்சில் குத்திய அம்பின் வேதனை. மார்பை அழுத்திய சுமை. அவளுடைய வசந்தத்தைப் பறித்த கை, கழுத்தை நெரிக்க வருவது போன்ற பிரமை.

இது அவளுடைய வெள்ளி விழாப் பொங்கல். வெள்ளிவிழா என்றால் கொண்டாடித்தான் ஆக வேண்டுமா? நான்காவது பொங்கலைக் கொண்டாட அம்மா விடவில்லை. அதன் பிறகு அப்பாவின் தூரத்து உறவுக்காரி ஒருத்தி அவளைக் கவனித்துக் கொள்ள, அப்பா இரவு நேரங்களைச் சேலத்திலும் ஈரோட்டிலுமாகக் கழித்தார். கோட்டை போன்ற மூன்றுமாடிக் கருங்கல் வீடு. ஒரு மைல் தூரத்துக்கு வீடு ஏதும் இல்லை. முன்னால் சிறு குன்றுகள். பின்னால் ஈரமற்றவனின் நெஞ்சு போன்ற நிலம். அப்பா தம் லீலைகளை நடத்தச் சேலம் ஈரோடு என்று ஓடியிருக்க வேண்டாம். வீரம்மாவைப் பங்களாவின் கீழ்ப்பகுதியில் உறவுக்காரரின் பாதுகாப்பில் வைத்துவிட்டு, மூன்றாவது மாடியில் அவருடைய தினசரி விழாக்களைக் கொண்டாடியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை.

அவளுடைய தாத்தா — அப்பாவின் அப்பா —வெள்ளைக்காரன் காலத்தில் ரயில்வே காண்ட்ராக்ட் எடுத்துக் கற்களைப் பணமாகப் பண்ணியவர். மூன்றுமாடி வீட்டைக் கிராமத்திலேயே கட்டினார். ரயில் தண்டவாளங்களுக்கு அவர் பரப்பிய கற்கள் பணமாகிப் பங்களா உருவில் வந்தபோது ஒரு சாம்ராஜ்யத்தையே உருவாக்கிய பெருமிதம் அவருக்கு ஏற்பட்டது.

முடிவு வீரம்மா இப்போது இருக்கும் கருங்கல் கட்டிடம்.

தாத்தா போய், அப்பா தலையெடுத்து அவரும் ரயில்வே காண்ட்ராக்ட்டுகளில் ஈடுபட்டு மேலும் சம்பாதித்து 'குளிர்' அறை 'குளிர்ப்' பெட்டி என்று குளிர் குளிராக வாழ்ந்து விட்டு ஒருநாள் ஒரு திவிபத்தில் கருகிப் போனார். ஆனால் அவர் அப்படி, நான்கு தைகளுக்கு முன் கரியாகப் போவதற்கு முன் ஒரு சிறிய தவற்றைச் செய்தார். அதுதான் வீரம்மாவின் கலியாணம்.

நல்லசாமி பார்ப்பதற்கு 'நல்ல' சாமியாகவே இருந்தான். நல்ல உடற்கட்டும், முகத்தில் மீசையும் இருந்தபோதிலும் கண்கள் அவனுடைய சாதுத்தனத்தைப் பிரதிபலித்தன. வீரம்மாவின் தந்தையிடம், தப்பு செய்த நல்ல மாணவன் தலைமை ஆசிரியர் முன் நிற்பதுபோல நடந்து கொண்டான்.

இயற்கை தூண்டி விடுகிற, விடக்கூடிய ஆசைகள் வீரம்மாவை விட்டுவிடவில்லை. செழிப்பான உடற்கட்டு. தனிமையைத் தவிர வேறு எதையும் அறியாத வாழ்க்கை. தன்மேல் அன்பைப் பொழியவும், பகலுக்குக் குடையாகவும், இரவுக்குத் துணையாகவும் இருக்க அவளுடைய சுழித்தோடும் இரத்தத்தின் பெண்மை, இயற்கையின் விசித்திரப்படி

ஃபிரட் பிரைஸ் ஏழு காட்சுகளைப் பிடித்தார். ஒரு பெண்மணி பிரைஸிடம் வந்து, "நீங்கள் காட்சு பிடித்த அழகு என்னை அப்படியே அந்தரத்தில் மிதக்க வைத்து விட்டது. பால்கனியிலிருந்து கீழே குதிக்க வேண்டும் என்றுகூடத் தோன்றியது" என்றாள். அதற்கு பிரைஸ் "நான் இன்று இருந்த ஜோரில் உங்களைக் கூடக் காட்ச் பிடித்திருப்பேன்" என்றார்.

ருக்மிணி ராமச்சந்திரன்.

ஆண்மையை நாடியது. மனத்தின் தராசுத் தட்டுக்களில் தன்னையும் நல்லசாமியையும் வைத்து எடை போட்டுப் பார்த்தாள்.

அம்மா அப்பா இல்லாத நல்லசாமியும் சாதுவாகக் காணப்பட்டான். யாரையுமே எளிதில் நம்பாத அப்பாவே நல்லசாமியை நல்லவன் என்று கூறி, சர்ட்டிபிகேட்டும் வழங்கி விட்டார். இனிமேல் என்ன?

மூன்று மாடி பங்களாவில் கலியாணம் விமரிசையாக நடந்தது

பெண்ணின் கலியாணம் இவ்வளவு ஆரவாரமாக நடந்த சந்தோஷ மயக்கத்தில், தந்தை சேலம், ஈரோடு என்று மாறி மாறி ஓடி விளையாடினர்.

நான்கு தைகளுக்கு முன் ஒருநாள் அதிகாலை வேளையில் வீரம்மாவின் தந்தை ஈரோட்டிலிருந்து வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு திரும்பினர். வீட்டிலிருந்து புறப்பட்டுச் செல்ல அவர் அவசரப் பட்டால் அதில் நியாயம் இருக்கும், அர்த்தம் இருக்கும். வீடு திரும்ப அப்படி என்ன அவசரம்? ஆனல் விதி அவசரப்பட்டது.

தூங்கிக் கொண்டிருக்கும் வண்டிக்காரனை எழுப்ப மனமில்லாமல், மௌனமாக ஊர்ந்து கொண்டிருக்கும் இரு காளைகள், ஒரு பெரிய செல்வந்தர் பின்னல் காரில் வேகமாக வந்து கொண்டிருக்கிறர் என்பதை உணரவில்லை. தம் இயல்பில் அவை ஊர்ந்து கொண்டிருந்தன.

வீரம்மாவின் தந்தை 'கடைசி' நிமிஷத்தில்தான் அந்தப் பார வண்டியைப் பார்த்தார். ஸ்டியரிங்கையும் ஒடித்து, அதேசமயத்தில் பிரேக்கைப் போடக் காலையும் அழுத்தி வைத்தார்.

காலின் ஆணையைக் கார் கேட்க மறுத்தது. ஆனல் ஸ்டியரிங்கின் ஆசையை நிறைவேற்றியது. கார் வேகமாகத் திரும்பி, சாலையின் பள்ளத்தில் சென்று மேட்டில் ஏறி, பாறை மேல் மோதியது. அதிகாலை நேரத்தில் ஒரு பெரும் ஜோதி மூண்டது. மூண்ட ஜோதியில் வீரம்மாவின் தந்தை கலந்து, கரைந்து, மறைந்து போனர்.

வீரம்மா நான்கு நாட்கள் அழுதாள் என்றல் அவளுடைய கணவன் நல்லசாமி நாற்பது நாட்கள் அழுதான்.

நல்லசாமிக்குப் புதிதாக ரயில்வே கண்ட்ராக்டுகள் கிடைக்கவில்லை. இதைப்பற்றி அவன் கவலைப்படவில்லை என்றல், வீரம்மா பெரும் மகிழ்ச்சியே அடைந்தாள். அவ்வளவு பெரிய வீட்டில் அவர்கள் இருவர்தான் இருந்தார்கள். தொழில் சம்பந்தமாக அவனும் வெளியேறி விட்டால், பிடுங்கித் தின்னும் தனிமையை வீரம்மா எப்படிச் சகித்துக் கொள்வாள்?

திடீரென்று நல்லசாமி செய்திகள் கொண்டு வந்தான்.

மகுடஞ்சாவடியில் ஒரு பணக்காரக் கவுண்டர் வீட்டில் கொள்ளை. லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள தங்க நகைகளும் வெள்ளிப் பாத்திரங்களும் கொள்ளை அடிக்கப் பட்டனவாம். தண்ணீர்ப் பந்தல் பாளையத்தில் ஒரு வீட்டில் கொள்ளை. இருபதாயிரம் ரூபாயை, துப்பாக்கி முனையில் பறித்தார்களாம். வேம்படித்தாளம் கிராமத்தில் முக்கால் லட்சம் களவு.

''ஏன் இதையெல்லாம் பேப்பரிலே போடலே?'' என்று கேட்டாள் வீரம்மா.

''போட்டா ஜனங்க பயப்படுவாங்களேன்னுதான்'' என்றன் நல்லசாமி.

''நம்ம வீட்டிலே, ஏராளமா நகையும் வெள்ளிப் பாத்திரமும் இருக்கு...ஏன், அப்பாவோட பணமும் இரும்புப் பெட்டியிலே இருக்கு'' என்றள் வீரம்மா.

''நாம ஜாக்கிரதையா இருக்கணும்...''

''என்ன செய்யலாம்?''



''சேலமோ ஈரோடோ போய், பாங்கியிலே, ஸேஃப்டி லாக்கர்லே வைச்சுப்புடுவோம். நீயும் வா.''

''நான் எதுக்கு?''

''பணமும் நகையும் உன்னுடையது தானே?''

''பிரிச்சுப் பேசறீங்களா?''

''என் பேர்லே எதுக்கு இருக்கணும்?'' என்முன் நல்லசாமி.

''பணத்தைப் பாங்கியிலே கட்டி, நகைப் பாத்திரங்களை லாக்கர்லே வைக்கலாம்னு சொல்றீங்களா?''

''இங்கே வீட்லே இருக்கிற பணம் கணக்கிலே வராதது... அதனலே, அதையும் லாக்கர்லேதான் வைக்கணும்...''

''ஜாயிண்ட்டா வைச்சுட்டா எப்படி?'' என்முள் வீரம்மா.

''நம்ம ரெண்டு பேர்லே யார் வேணும்னாலும் ரூபாய் எடுத்துக்கலாம், பார்த்துக்கலாம். ஆனா அதுக்கு ரெண்டு பேரும் எழுதிக் கொடுக்கணும்.''

''அப்படியே செய்வோம். ஆனா கணக்கிலே வராத பணம் வீட்டிலேயே இருக்கட்டும்'' என்முள் வீரம்மா.

''உன் இஷ்டம்.''

''என் இஷ்டத்துக்கு இல்லே. கணக்கிலே வராத பணத்தைக், கணக்கிலே கொண்டு வந்து, கட்ட வேண்டிய வரி பாக்கியைக் கட்டிடலாம். நாம ஏன் சர்க்காரை ஏமாத்தணும்? கணக்கிலே வந்த பணமே நிறைய இருக்கே!''

''சரி'' என்முன் நல்லசாமி.

மூன்று தைகளுக்கு முன்னல் வந்த ஒரு மார்கழி.

''ஒரு நல்ல நியூஸ்!'' என்று பதற்றமில்லாமல் சொல்லிக் கொண்டே வந்தான் நல்லசாமி.

''சொல்லுங்க.''

''புதுசாக் காண்ட்ராக்ட் வர வாய்ப்பு இருக்கு.''

''சந்தோஷம்... ஆனா அப்புறம் நீங்க இப்ப இருக்கற மாதிரி வீட்டிலே இருக்க மாட்டீங்க!''

''உன் புருஷன் உழைச்சுச் சம்பாதிக்கறதிலே உனக்குப் பெருமை இல்லையா!''

''அப்படிச் சொன்னேனா?''

''நான் இப்ப முதல்லே மெட்ராஸ் போறேன்... அப்புறம் டில்லி போறேன்... ரயில்வே போர்டு அங்கேதானே இருக்கு!''

''நான் டில்லி பார்த்தது இல்லீங்க!''

''இப்ப என்கூட வந்தா, நீ ஓட்டல் ரூம்லே இருப்பே... நான் தொழில் வேலையா அலைஞ்சுண்டிருப்பேன்... காண்ட்ராக்ட் கிடைக்கட்டும். உடனே ரெண்டு பேரும் பெரிய டூராப் போவோம்.''

''சரிங்க.''

''வீரம்மா.''

''என்னங்க?''

''கொஞ்சம் பணம் வேணும்.''

''ஏன் என்கிட்டே கேட்கறீங்க?''

''உன் பணம்தானே!''

''இப்படிப் பிரிச்சுப் பிரிச்சுப் பேசி ஏன் என்னை வதைக்கறீங்க... பெட்டியைத் திறந்து எவ்வளவு வேணுமோ அவ்வளவு எடுத்துக்குங்க?''

அந்த டிசம்பர் மாதம் பதினெட்டாம் தேதி அவன் புறப்பட்டான். சென்னையில் மூன்று நாட்கள் இருந்து விட்டு, டில்லிக்குச் செல்லப் போவதாகக் கூறினன். எப்போது திரும்புவான் என்று அவனுக்கே தெரியாதாம்.

ஜனவரி பிறந்தது.

நல்லசாமியைக் காணோம். சென்னையிலிருந்தும் கடிதம் இல்லை. டில்லியிலிருந்தும் கடிதம் இல்லை.

ஜனவரி ஐந்தாம் தேதி அவள் இரும்புப் பெட்டியைத் திறந்தாள். கணக்கில் வராத லட்சம் ரூபாய் அதில்தான் இருந்தது. அவள் பார்த்தபோது அதைக் காணவில்லை.

''எவ்வளவு பணம் வேணுமோ அவ்வளவு எடுத்துக்குங்க.''

அவன் அவ்வளவையும் எடுத்திருக்கிறுன்.

அவள் பெட்டியைக் குடைந்தாள். பாங்க் லாக்கர் சாவியை அவள் ஒரு சிறு அட்டைப் பெட்டியில் வைத்திருந்தாள். அட்டைப் பெட்டி இருந்தது. திறந்தபோது காற்றைத் தான் உணர்ந்தாள்.

முதன் முறையாகச் சந்தேகம் அவளுடைய மனத்தில் ஒரு முள்ளாகக் குத்தியது.

அன்றே சேலம் போனுள்.

அவளுடைய லாக்கரில் வேறு யாரோ தங்களுடைய பொருள்களை வைத்திருந்தார்கள்.

லட்சம் ரூபாய் ரொக்கம்.

**ஆள் குள்ளம் கீர்த்தி பெரிது:**

48-49ல் இங்கு வந்த மேற்கிந்தியத் தீவுக்குழுவில் இரு டபிள்யூக்களில் வால்காட் வாட்ட சாட்டமான உயரமான ஆள். ஆனல் வீக்ஸோ குள்ளமானவர். இரண்டு பேர் 'ஷாட்'களும் கையைப் பிய்த்துக் கொண்டு போகும். வீக்ஸ் ஐந்து டெஸ்ட்களிலும் 779 ரன் எடுத்தார். முதல் மூன்று டெஸ்ட்களில் நாலு சதங்கள் எடுத்தது ஒரு பெரிய ரிகார்டு. 1953ல் இந்தியா மேற்கிந்தியத் தீவுக்கு விஜயம் செய்தபோது வீக்ஸ் மூன்று சதங்களும் 716 ரன்களும் எடுத்தது அரிய சாதனை.




ஐம்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள நகைகள், பாத்திரங்கள்! அவை எங்கே? எங்கே நல்லசாமி இருக்கிருனே, அங்கே!

கணக்கில் வந்த பணம் பத்திரமாக இருந்தது. எழுபத்தெட்டாயிரத்து சொச்சம்.

அன்று ஏற்பட்ட நெஞ்சுவலி இன்னும் நிற்கவில்லை.

நல்லசாமி வருவானு?

அவன் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்?

அவள் தகப்பனர் அவனை நல்லவன் என்று நம்பினரே?

அவள் அவனைச் சாது என்று நம்பி, தலையையே அவனுக்கு அளித்து அவனுடைய நிழலில் தங்கினளே? அவன் ஏன் இப்படிச் செய்திருக்க வேண்டும்?

கேள்விகள் தூக்கத்தைச் சிதைத்தன. அவ்வளவு பெரிய வீட்டில் கிடைத்த ஒரே துணையும் அவளுக்குப் போனபின், அவள் ஒரு நடைப் பிணமானுள்.

ஆனல் ஒரு நம்பிக்கை அறுபடாமல் ஊசலாடிக் கொண்டேயிருந்தது.

ஒருநாள் மனம் வருந்தி, திருந்தி அவன் வருவான். அவள் காலில் விழாத தோஷமாக மன்னிப்புக் கேட்பான்.

ஏதோ ஒரு பெரிய நிகழ்ச்சி நடக்க இருக்கிறது என்று அவளுடைய உள்ளுணர்வு அவளை அன்று இரவு திடீரென்று தட்டி எழுப்பியது. அவள் கிலேசத்துடன் படுக்கையில் உட்கார்ந்து தலைமாட்டு ஸ்விட்ச்சைப் போட்டாள். இரண்டு பத்து. ஏதோ ஒரு ரயில் ஊளையிட்டுக் கொண்டே விரைவது காதில் விழுந்தது.

அறையை விட்டு வெளியே வந்தாள். கூடத்திலிருந்து ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். முப்பது ஆண்டுகளாக வீட்டைக் காவல் காக்கும் செங்கோடன், டிராக்டர் டிரைவர் சின்னப்பனுடன் பேசிக் கொண்டிருந்தான்.

போர்ட்டிகோவில் ஓர் ஆள் உட்கார்ந்திருப்பதையும் கண்டாள். இருட்டில் உருவம் தான் தெரிந்தது. பக்கத்தில் ஒரு பெட்டி இருப்பதும் தெரிந்தது.

அவள் விளக்கை ஏற்றினுள். கதவைத் திறந்தாள்.

செங்கோடன் ஓடோடி வந்தான்.

''அம்மா!'' அதற்குமேல் நா ஒலியைக் கிளப்பவில்லை.

இப்போது வெளிச்சத்தில் அவனை அவள் பார்த்தாள். அவளுடைய நம்பிக்கை வீண் போகவில்லை.

நல்லசாமி தயங்கித் தயங்கி முன்னேறி வந்தான்.

''ஐயா அப்பவே வந்துட்டாரு அம்மா... ஆனு உங்க தூக்கத்தைக் கெடுக்கக் கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லிட்டாரு... பாவம், குளிர்லேயே உக்கார்ந்திருந்தாரு!''

வீரம்மா பதில் சொல்லவில்லை.

''என்னை மன்னிச்சுடு வீரம்மா!'' என்ற நல்லசாமி ''இனி நான் வாழறதும் அழியறதும் உன் கையிலேதான் இருக்கு !'' என்ருன்.

செங்கோடன் திண்ணைக்குத் திரும்ப, அவள் கேட்டாள்: ''என் கையில் என்ருல்?'' என்று.

''ஒரு மோசடி வழக்கில் மாட்டிட்டேன்... கான்பூர் போலீஸ் பெரிய வலையா விரிச்சிருக்காங்க! காலையிலே எல்லாம் விவரமாச் சொல்றேன்.''

வீரம்மா செங்கோடனை அழைத்தாள்.

''ஐயாவுக்கு மூணும் மாடியிலே அந்த மூலை ரூமைத் தயார் பண்ணு.''

''பொட்டல் காட்டைப் பார்க்கிற ஒரே ஜன்னல்தாம்மா அதிலே இருக்கு... காத்து கூட வராது... ஃபேன் கூட இல்லை. உங்க தாத்தா அதிலே காட்டிலே பிடிச்ச சிறுத்தையை அடைச்சு வச்சிருந்தாரு!''

''அந்த ரூம்தான் இப்ப இவருக்குச் சரியான இடம். சீக்கிரம் பெருக்கிவை!''

பத்து நாட்களுக்குப் பிறகு ஒருநாள் நல்லசாமி, செங்கோடன் மூலமாக அவளைக் கூப்பிட்டான்.

''இந்த ரூமிலே என்னை எத்தனை நாட்கள் அடைக்கப் போறே, வீரம்மா... பாய் இல்லை. தலையணை இல்லை. உலகில் என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள்ளப் பத்திரிகை இல்லை. பொழுது போகப் புத்தகம் இல்லை. நீ கொடுக்கிற கேழ்வரகுக் கூழும் நீர் மோரும் என்னைக் கொல்றது!'''

வீரம்மா சிரித்தாள்.

''ஜெயில்லே கூட சில வசதிகள் இருக்கும்!'' என்ருன் அவன்.

''இப்ப நீங்க ஒரு லாக்கர்லே இருக்கீங்க... ஸேஃப்டி லாக்கர். சாவி எங்கிட்டே இருக்கு.. ஜாயிண்ட் அகௌண்ட் இல்லை! தனி அகௌண்ட்...''

''வீரம்மா!''

''ஹங்... இன்னெரு விஷயம். செங்கோடனுடைய புள்ளை ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்டிலே இருக்கான்... சிறுத்தைக் குட்டி கிடைச்சிருக்காம்... பத்துநாள் குட்டி... என் தாத்தா சிறுத்தையை இந்த ரூம்லேதான் அடைச்சிருந்தார்...''

''அப்படியாவது எனக்கு விடுதலை கிடைக்கட்டும்... நாளைக்கே அதை இங்கே விட்டுட்டு என்னை வெளியேத்திடு... நான் ஊரை விட்டே ஓடிடறேன்...''

''பாவம், பத்துநாள் குட்டி. அதுக்கு நல்ல துணை வேண்டும்! இந்த ரூம் சிறுத்தைக்கு நல்ல ராசியான ரூம்! நீங்க அதோட தினம் தினம் பேசிட்டிருக்கலாம்!''

''வீரம்மா!''

வீரம்மா போய்க் கொண்டேயிருந்தாள்.



# அமிர்தாஞ்சன்

**தலைவலி, ஜலதோஷம், உடல்வலி
இவை அனைத்தையும் போக்க இல்லந்தோறும்
இருக்கவேண்டிய நல்ல மருந்து**

தலைவலி, ஜலதோஷம், உடல்வலி ஆகியவற்றுக்கு சிறிதளவு அமிர்தாஞ்சன் தடவுங்கள், அதிலுள்ள அருமையான பத்து மருந்துப் பொருள்களின் கலவை, வியக்கத்தக்க் வகையில் மிக விரைவில் நிவாரணம் அளிக்கும். சிக்கனமான ஜாடி, சிறிய பாட்டில் மற்றும் கைக்கு அடக்கமான சிறிய டப்பா — மூன்று அளவுகளில் கிடைக்கிறது அமிர்தாஞ்சன்.




*அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கு மேலாக குடும்பங்களில் பயன்பட்டு வரும் நம்பகமான மருந்து.*

அமிர்தாஞ்சன் லிமிடெட்

AM 1912




புதிதாகக் கட்டப்பட்ட அந்தச் சில வீடுகள் தெருவிலிருந்து சென்றதொரு சந்துக்குள் அடங்கியிருந்தன. தெரு முகப்பில்தான் ஒரு விளக்கு. அதனால் இரவில் சந்துக்குள் ஒரே இருட்டு. எல்லா வீட்டார்களும் சேர்ந்து கூட்டு முயற்சியாகப் பாதையைச் செப்பனிட்டுக் கொள்ளவேண்டும். முயற்சி வெற்றி பெறாததினால் சந்தின் பாதை குண்டும் குழியுமாக இருந்தது. அதுவும் மூன்று நாட்களாக விடாது பெய்து கொண்டிருந்த பேய் மழையால் தண்ணீர் முழங்காலுக்கு மேல் தெருவில் நின்று கொண்டிருந்தது.

ஷைலாவுக்கு இதெல்லாம் வேடிக்கையாகத்தானிருந்தது. அவர்கள் வீட்டு வராந்தாவில் நின்றபடி எதிரே தெரிந்த தெருவிலிருந்த அலுவலகத்தின் மதில் சுவரை வெறித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சுவரில் ஒட்டியிருந்த போஸ்டர்களை அவள் ஒருவிதத்தில் மிகவும் ரஸித்துக் கொண்டிருந்தாள்.

''அவளோட ராவுகள்'' கிழிந்து தொங்கிக் கொண்டிருப்பது புலப்பட்டது. ''வாடகைக்கு ஒரு இதயம்'' போஸ்டரின்மீது யாரோ சேற்றை வாரி வீசி விட்டிருந்தார்கள். ''ரதிநிர் வேதமும்'' 'சத்திரத்தில் ஒரு ராத்திரியும்' அருகருகே போட்டியிடுவதுபோல் புத்தம் புதியதாகக் காணப்பட்டன.

லேசாக இன்னமும் தூறிக் கொண்டிருந்தது. மழையில் மனைவி வெளியே புறப்பட்டுப் போயிருக்கிறாளே என்று கவலைப்பட்டவண்ணம் மகாலிங்கம் வெளியே வந்து எட்டிப் பார்த்தார்.

பேத்தி பார்த்து ரஸித்துக் கொண்டிருந்த சுவரொட்டிகள் அவரது கண்களிலும் பட்டன.

''இதெல்லாம் பார்த்துண்டு ஏன் இங்கே நிக்கிறே?...'' எரிச்சலுடன் அதட்டினார்.

பெல்பாட்டம் – டாப்ஸ் அணிந்த பேத்தி ஷைலா. டெல்லி வாசி. தாற்காலிகமாக மூன்று ஆண்டுகளுக்கு அவள் தந்தை வேலையை ஒப்புக் கொண்டு மனைவியுடன் ஜாம்பியா நாட்டுக்குப் போயிருந்தார். டெல்லிக் குடித்தனம் கலைக்கப்பட்டு ஒரே பெண்ணான ஷைலா படிப்பை மேலே தொடரச் சென்னைக்கு – கோடம்பாக்கத்திலிருந்த தாத்தா வீட்டிற்கு வந்திருந்தாள்.

''பார்த்தால் என்ன தப்பு தாத்தா? சாதாரண விஷயம்?''

அவளுக்குப் பதில் சொல்ல அவரால் ஆகவில்லை. இடையே அப்படி ஒருதலைமுறைப் பிளவு – அவர்களைப் பிரித்துக் கொண்டு நின்றது. மிகவும் செல்லமாக அவள் போன போக்கில் வளர்க்கப் பட்ட பெண் அவள். டெல்லி நாகரீகத்தின் உயர்மட்டத்திலே உட்கார்ந்திருந்தாள்.

அவள் என்னென்னவோ புத்தகங்களைப் படித்தாள். தொலைபேசியில் தெரிந்த சென்னைத் தோழிகளுடன் நகத்தைக் கடித்துக் கொண்டு அவள் என்னென்னவோ விஷயங்களைக் கூச்சமின்றி, பயப்படாமல் அவர் காது பட இரைந்து மணிக்கணக்கில் பேசிய போது – அவர் மூக்கும் முகமும் சிவந்து – நெஞ்சு படபடக்கத் தமது அறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொள்ளத்தான் முடிந்தது. பதினேழு வயது குமரிப்பெண் ஷைலா – பொதுபொதுவென்று வாழைப் போத்து போல வளர்ந்து நிற்கிறாள். பாட்டி தாத்தாவிடம் என்ன பேசுவது என்ற விதரணையே கிடையாது. எதற்கெடுத்தாலும் சிரிப்பு – வேடிக்கை, பேசத்தான் தெரியவில்லை – ஒழியட்டும் ஒ[illegible] புடவை கூட[illegible]



கட்டிக் கொள்ளத் தெரியாது? எப்போது பார்த்தாலும் பெல்பாட்டம் — மாக்ஸி, கராரா — இந்தக் கண்ணராவிகள்தானு?

''பார்வதி மத்தியானம் வெளியே போனவள். போன வாரம் முழுவதும் அவளுக்கு இருமலும் ஜுரமுமாக இருந்தது... இந்தப் பிசுபிசு மழையிலே பிடிவாதமா போயிருக்கா'' தாத்தா ஒரு பெருமூச்சு விட்டபோது... தெருவிலிருந்து ஒரு ரிக்ஷா சந்துக்குள் நுழைவது தெரிந்தது. ரிக்ஷாவுக்குள் பிளாஸ்டிக் தடுப்புக்குமேல் தெரிந்த பார்வதியின் தலையைக் கண்டதும்தான் அவருக்கு நிம்மதி. உள்ளே திரும்பினுர்.

பார்வதி வண்டியிலிருந்து இறங்கினுள். சன்னமாகப் பெய்து கொண்டிருந்த மழை இப்போது முற்றிலும் நின்று விட்டிருந்தது. ரிக்ஷாக்காரனுக்குச் சில்லறையை எண்ணிக் கொடுத்து விட்டுக் கனமான துணிப்பையை ஒரு கையிலும் மற்ருெரு கையில் புடவை பார்சலுமாக உள்ளே வந்தாள். இதெல்லாம் நான் வாங்கிண்டு வர மாட்டேனு'? கடிந்து கொண்ட மகாலிங்கம் பையைச் சட்டென்று அவள் கரத்திலிருந்து வாங்கிக் கொண்டார்.

விரலைக் கடித்துக் கொண்டிருந்த பேத்தி அவசரமாக அருகில் ஓடி வந்தாள். குனிந்து பைக்குள் இருப்பதை நோட்டம் விட்டாள்.

''ஒரு வாழைப்பழம் நான் எடுத்துச் சாப்பிடலாமா பாட்டி?''

அவள் கேட்டு முடிக்குமுன் அரண்டு போன பார்வதி கணவன் கையிலிருந்த பையை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு சாமான் அறைக்குள் மறைந்து விட்டாள்.

''ஒண்ணு எடுத்துச் சாப்பிட்டா என்னவாம்? பாட்டி ஏன் இப்படி பயப்படறு?'' வேடிக்கையாகக் கேட்ட ஷைலா சிரித்தாள்.

''அதெல்லாம் நாளை நடக்கப் போகும் சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வச்சிருக்கு — எச்சக்கையோட தொடறது தப்பு..''

''தாத்தா நீங்க இதை எல்லாம் நம்பறேளா?..'' பேத்தி ஏளனமாகக் கேட்டாள்.

''நம்பறேன் அம்மா. பல வருஷங்களாகச் செய்து கொண்டு வருகிற ஒரு பிரார்த்தனை. இறந்தவங்களை மறக்காம நன்றியோட நினைக்க முடிகிறதே என்று எண்ணும்போதே மனசில் ஒரு தெம்பு ஏற்படறது. அவ்வளவுதான்...''

அதற்குமேல் அவளுக்கு விளக்கம் கொடுக்கப் பிரியமில்லை. மௌனமானுர்.

அன்று இரவு ஷைலா முன்னதாகவே உறங்கப்போய்விட்டாள். பார்வதிதான் வாங்கிவந்த புடவையைக் கணவரிடம் பிரித்துக் காட்டினுள். ஒவ்வோராண்டும் கல்யாணமானவுடன் சின்ன வயதிலேயே காலமாகி விட்ட தனது மூத்தாளுக்கு அவள் சுமங்கலிப் பிரார்த்தனை செய்வது வழக்கம். ஒவ்வொரு ஆண்டும் அந்தப் புடவையைத் தன் ஒன்று விட்ட நாத்தனுர் சியாமளிக்குத்தான் கொடுப்பதும் வழக்கம். இரண்டு ஆண்டுகளாகச் சியாமளி பிரார்த்தனைக்கு வர ரொம்பவும் பிகு செய்தாள். அவள் கணவனுக்குத் திடீர் என்று யோகம் அடித்து விட்டிருந்தது. தூரத்து உறவு மாமா ஒருத்தர் மண்டையைப் போட்டுத் தமது சொத்து அனைத்துக்கும் அவனே வாரிசு என்று நியமித்து விட்டுப் போயிருந்தார். திடீர் பணம் அவர்களுக்குக் கௌரவத்தை உண்டாக்கி விட்டிருந்தது.

முன்னறையில் தான் பிரார்த்தனை செய்வதாக ஏற்பாடு — அதைப் பெருக்கிக் கழுவித் துடைத்துக் கோலமிட்டுத் தயாரித்தாள். மணையைக் கழுவி மாக்கோலம் போட்டு ஒரு பக்கம் வைத்தாள். வாங்கி வந்த பழம் பாக்கு வெற்றிலை — குங்குமம் — மஞ்சள் இத்யாதிகளை எடுத்து ஒரு பெரிய தட்டில் தயாராகக் கொண்டு வந்து முன்னறை மேஜைமீது வைத்தாள். சுவரிலே தொங்கிய தன் மூத்தாளது படத்தைத் துடைத்துப்பொட்டிட்டு வாங்கிவந்த பூமாலையை அதற்குச் சூட்டினுள். குத்து விளக்கில் எண்ணெயை



விட்டுத் திரிபோட்டுப் பாட்டி — தயாராகப் படத்தின் கீழே மணைக்கு அருகில் வைத்தாள்.

மனைவிக்குத் துணையாக முன்னறையிலே பத்திரிகையுடன் உட்கார்ந்திருந்த மகாலிங்கம் மனம் கனிந்து போனார்.

பார்வதிக்குத் தங்கமான மனம். மூத்தவள் என்று இறந்துபோன மங்களத்தின் மீது அவளுக்குத் துளிக்கூடப் பொறாமையே கிடையாது. சிறுவயதிலே பூவும் பொட்டுமாகப் போய் விட்ட அந்த மகராசி தெய்வமாக நின்று அந்தக் குடும்பத்தைக் காத்து வருகிறாள் என்று அகற்ற முடியாத ஆழமான ஒரு நம்பிக்கை, பக்தி...

புடவையை அவரிடம் காட்ட அருகில் வந்த பார்வதி தயக்கத்துடன் நின்றாள்.

'அக்கா ரெண்டு நாளா என் ஸ்வப்பனத்திலே வந்துண்டு இருக்கா. பிரார்த்தனையைப் பற்றி நினைவுபடுத்தறாப் போல் தோணித்து. அதனாலே வழக்கம்போல் தை முதல் வெள்ளிக்கிழமையே பண்ணிடலாம்னு முடிவு செஞ்சுட்டேன். ஆனால் எப்பவும் போலப் பட்டுப் புடவைதான் இந்த வருஷம் வாங்க முடியலே. அதனால்... இந்தக் கைத்தறி நூல் புடவையை வாங்கிண்டு வந்தேன்.'' பிரித்துப் புடவையைக் கணவரிடம் காட்டினாள்.

''சிகப்புப் புடவை. பச்சைக்கறை. நன்றாக இருக்கே!''

பார்வதி பெருமூச்சு விட்டாள். முன்போல் இப்போது அவர்களிடம் பணவசதி இருக்கவில்லை. வேலையிலிருந்து அவள் கணவர் ஓய்வடைந்ததும் பல விஷயங்களில் அவள் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க நேர்ந்தது.

''நேரே போய்ச் சியாமளியைக் கூப்பிட்டு விட்டு வந்தேன். அவ என்ன கிட்டக்கவா இருக்கா? அண்ணாநகர். பஸ்ஸில் போய் வர்றதுக்குள்ளே ஒரு யுகம்போல் இருந்தது.''

அவள் முடிக்குமுன் தொலைபேசி கிணுகிணுத்தது. எழுந்து சென்று மகாலிங்கம் எடுத்தார். மறுமுனையில் சியாமளி பேசினாள்.

அவசரமாக அவள் பார்வதியை அழைத்தாள். ''அத்தை நீங்க என்னை ரொம்ப மன்னிக்கணும். மழை இந்தப் பக்கம் கொட்டோ கொட்டுனு கொட்டறது. எனக்கும் ஒரே தலைவலி. ஜுரம் கூட லேசா அடிக்கிறது. அதனாலே என்னால நாளைக்கு வரமுடியாது போலத் தோணறது. வேறே யாரையாவது வச்சு எல்லாத்தையும் முடிச்சுக்கோங்க...''

''சியாமளி இப்படிக் கடைசி நிமிஷத்துல காலைவாரி விட்டுட்டாளே. ஒரே ஒரு சுமங்கலிதானே வச்சுப் பூஜை பண்றேன். இப்பக் கடைசி நிமிஷத்துல யாரைக் கூப்பிடுவேன்?''

மகாலிங்கம் பதிலுக்கு உரக்கச் சிரித்தார். ''போகட்டும். அந்தத் திடீர்ப் பணக்காரி கௌரவம் பாக்கறா. விடியற்காலையிலேயே நான் வெளியே போய், முன்னே நம்மகிட்ட வேலை பார்த்தாளே விசாலம், அவளைக் கூட்டிண்டு வரேன்.''

பார்வதியால் சட்டென்று அமைதியடைய முடியவில்லை. வெகுநேரம் புரண்டு புரண்டு படுத்தவள், தன்னையுமீறிய அலுப்பில் அயர்ந்து விட்டாள்.



எல்லோருக்கும் முன்னே தூங்கப் போனவள் ஷைலா. முன்னறை கடிகாரம் நான்குமுறை அடித்ததும் அவளுக்கு விழிப்பேற்பட்டு விட்டது. படுக்கையறையினின்று எழாமல் சிறிது சோம்பலுடன் விழித்தபடி படுத்துக் கிடந்தாள்.

தாத்தாவின் அறையிலிருந்து பலத்த குறட்டை. பாட்டி பெஞ்சியின் மீது சுருண்டு உறங்கிக் கொண்டிருந்தாள். அவள் மெல்ல முன்னறைக்கு வந்து சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நின்றாள். திடீரென அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒரு பெண்ணின் அலறல்...! திடுக்கிட்டு ஜன்னலைத் திறந்து வெளியே பார்த்தாள்.

யாரோ ஓர் இளம்பெண். மழையில் நனைந்திருந்தாள். அவளைத் தொடர்ந்து வந்த ஒரு முரடன் அவள் சேலையைப் பிடித்து இழுக்க, அவள் அலறுவது மட்டும், காற்றிலே லேசாகக் கேட்டது. கண்கள் அந்தப் பயங்கரக் காட்சியைக் கண்டன. உடல் கிடுகிடுவென ஆட நெஞ்சு படபடத்தது அவளுக்கு. இரக்கத்தில் உள்ளம் கரைந்தது. அவளையுமறியாத துணிச்சல் உந்த, சட்டென வாயிற் தாழ்ப்பாளை

பாஸ்கர்: கிரிக்கட் பற்றி நினைத்தாலே எனக்கு ராமசாமி ஞாபகந்தான் வரும்!

குமார்: அவர் என்ன பெரிய ப்ளேயரா?

பாஸ்கர்: அவரிடம் கிரிக்கட் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். ''காலால் தட்டிக் கொண்டே ஓடுவார்களே அந்த விளையாட்டைப் பற்றித்தானே சொல்லுகிறீர்கள்'' என்று கேட்டவராக்கும் அவர்!

ரா. ஜெயராமன்.

நீக்கிக் கதவைத் திறந்துகொண்டு வராந்தாவிலே வந்து நின்ருள். தயங்கியபடி மேலே என்ன செய்வது என்று அவள் யோசிக்குமுன் அந்தப் பெண் ஒரே ஓட்டமாக அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு அந்த வீட்டின் முன்னறைக்கு வேகமாக வந்து நின்ருள். மின்னல்போல் கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு அதன்மீது சாய்ந்துகொண்டு அழுதாள்.

அதிர்ந்து போன ஷைலா விழிப்புற்று அவளைக் கவனித்தபோது துணுக்குற்ருள். அந்தப் பெண்ணின் நனைந்த உள் பாவாடையும் கிழிந்த ரவிக்கையுமாக அரை நிர்வாண நிலையில் அலங்கோலமாக நின்ருள்.

''பாவி! என்னை ரொம்ப நேரமா துரத்திட்டு வரான். எலெக்ட்ரிக் டிரயினு முதல் வண்டி பிடிச்சு, தாம்பரத்திலே இறங்கிப் போகணும்னு புறப்பட்டேன். எங்க வீட்டுக்காரர் அங்கேதான் கட்டட வேலை செய்யருரு. வீட்டுக்குப் போய்ட்டு ஒருநடை பாத்திட்டு விடியற்காலையிலே வான்னு அனுப்பினுரு. இந்தப்பய அங்கே சித்தாளு. குடிச்சிருப்பான் போல இருக்குது. என்னே, என்னை இப்படி... சேலையைப் பிடிச்சு... மானம் போகாம தப்பி ஓடிவந்திட்டேன். காப்பாத்துங்கம்மா.''

ஷைலாவுக்கு என்னவோ செய்தது. 'ஏழைமையில் வாழும் பெண். அவளுக்கும் இப்படி ஒரு ஆபத்து வெளி உலகில்? பிரமிப்புடன் தன்னை அறியாத இரக்க உணர்ச்சியுடன் மேஜைமீது வைத்திருந்த நூல் சேலையை எடுத்து அவளிடம் நீட்டினுள். பரபரப்புடன் அந்தப் பெண் அதை உடுத்திக் கொண்டு விட்டாள்.

பேச்சுக்குரல் கேட்டு விழிப்படைந்த தாத்தாவும், பாட்டியும் முன்னறைக்கு வந்தபோது பாட்டி 'வீல்' என்று கூவினுள்.

''அம்மா! உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன். நீங்க நல்லா இருக்கணும். உங்க குழந்தை கதவைத் திறந்து என்னை உள்ளே விட்டிருக்காட்டி இத்தனைநாழி நான் என்ன கதியாகியிருப்பேனே தெரியாது...''

''ஷைலா என்ன காரியம் பண்ணிட்டே? சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வாங்கியிருந்த புடவையை எடுத்து — அடகடவுளே...'' அதிர்ச்சி தாள முடியாது பார்வதி... உரக்கக் கத்திவிட்டாள், மாலையாக அவளது கன்னங்களில் கண்ணீர் வழிந்தது.

''உஸ் பார்வதி... கத்தாதே—அழாதே. அமைதியாகக் கேளு. பிரார்த்தனைக்கு ஒரு சுமங்கலி வேணும்னு சொன்னே இல்லையா?'' மகாலிங்கம் அதட்டினுர்.

''சொன்னேன். இவள் யார் தெரியுமா? கட்டிட வேலை செய்கிற சித்தாள். காளியப்பன் பெண்சாதி வள்ளி?...''

''வள்ளி ஒரு ஹரிஜனப் பெண். அவளுக்கு இந்தப் புடவையைக் கொடுத்துட்டாளே பேத்தின்னுதானே அதிர்ந்து போயிட்டே...? பார்வதி நீ தேடிக் கொண்டிருந்த அந்தச் சுமங்கலி இந்த உருவத்திலே தானே வந்து புடவையை எடுத்துண்டுட்டா... இது தெய்வச் செயல்... சந்தோஷப்படு. தட்டிலே வச்சிருக்கிற பழம்பாக்கு வெத்தலையை இவளுக்குக் கொடுத்து. வயிறு நிறைய டிபனைப் போட்டுக் கைச்செலவுக்குப் பத்து ரூபாயும் கொடுத்து அனுப்பு.''

கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் பார்வதி. அவள் நிமிர்ந்து பார்த்தபோது மங்களத்தின் போட்டோமீது சாத்தப்பட்டிருந்த பூமாலை தொப்பென்று மேஜையின்மேல் தானே நழுவி விழுந்தது.

''மங்களம் கூட உத்தரவு கொடுத்துட்டா. என்ன முழிக்கிறே?'' கணவர் அதட்டல் போட்டதும் அவள் சட்டென்று பீரோவைத் திறந்து பத்து ரூபாயை எடுத்துத் தட்டின் மீது வைத்து வள்ளியிடம் நீட்டினுள்.

''எடுத்துக்கோம்மா வள்ளி. வெள்ளிக்கிழமை காலை — வாசலைத் தாண்டி வந்திருக்கும் சுமங்கலி நீ — நாங்கள்ளாம் க்ஷேமமாக இருக்கணும்னு வாழ்த்து...'' தழுதழுத்தது அவள் குரல்.

''தாத்தா.. உங்களுக்கு இப்படி ஒரு புரட்சிகரமான சிந்தனையா?'' ஆச்சர்யப்பட்டாள் ஷைலா.

''பேச்சில்தான் அம்மா உன் புரட்சி! அலங்கோலமான படங்களைப் பார்த்து அச்சமும் அருவருப்பும் ஏற்படாத உன் மனம் ஒரு பெண்ணுக்கு உண்மையிலே ஏற்பட்ட அலங்கோலத்தைப் பார்த்ததும் எப்படிப் பதைபதைச்சுப் போய்விட்டது.? இதுதான் அம்மா... நாணம் எனும் உயர்ந்த உணர்வு. மனிதப் பிறவிக்குத் தேவையான முக்கியமான உணர்வு... நல்லவேளை இந்தச் சுமங்கலி வந்தாள். உன்னையும் நான் புரிந்துகொள்ள முடிஞ்சுது. இப்போ என் மனசில் நிம்மதி...'' தாத்தா பேத்தியை அளவற்ற பெருமையோடு பார்த்தார்.




பத்திரிகையில் வாராவாரம் விருவிருப்போடு, வாசகர்களின் ஆவலைத் தூண்டும்படி தொடர்ந்த ப்ரியாவுக்கும் திரைப்படமாக மாறி இருக்கும் ப்ரியாவுக்கும் நிறைய வித்தியாசமுண்டு. பத்திரிகையில் ப்ரியா காதலனை அடையப் போனது லண்டனுக்கு — படத்தில் வரும் ப்ரியா போவது சிங்கப்பூருக்கு. மூலக்கதையில் துப்பறியும் கணேஷ், ஸ்காட்லண்ட் யார்ட் ஆகியோரின் அறிவுத் திறனுக்கு வேலை கொடுத்திருந்தார் சுஜாதா. படக்கதையில் உடல் வலிமையைப் பிரதானமாக்கி 'குங்ஃபூ' சண்டைக்கு முக்கியத்துவம் கொடுத்து விட்டார்கள் பஞ்சு அருணாசலமும், எஸ். பி. முத்துராமனும்.

மூலக்கதையைப் படிக்கும்போது வாசகர்களை — தன் அபாரமான வர்ணனையினால் இங்கிலாந்திலுள்ள கிராமங்களின் புல்வெளிகளில் பவனி வரச் செய்தார் சுஜாதா.

படக்கதையிலே டைரக்டர் முத்துராமன் திரைப்பட ரசிகர்களை, சிங்கப்பூருக்கும், ஹாங்காங்குக்கும் கோலாலம்பூருக்கும் — அங்கிருக்கும் ஒவ்வொரு முக்கியமான காண வேண்டிய பகுதிகளுக்கெல்லாம் காமிரா மூலம் அழைத்துப் போகிறார்.

மூலக்கதையிலிருந்து மாறுபட்டு வக்கீல் கணேஷுக்குக் கல்யாணமே செய்து வைத்து விடுகிறார் டைரக்டர். அது மட்டுமா? கால் ஷீட் தராத நடிகனுக்குப்பதிலாக வேஷம் போட்டுக் கொண்டு கனவுக் காட்சியில் ராஜகுமாரன் உடையில் காதல் டூயட்டுப் பாடி நடிக்கவும் செய்கிறார் துப்பறியும் கணேஷ்.

ஆக, மூலக்கதையை மறந்துவிட்டு எஸ்.பி.டி. பிலிம்ஸின் ப்ரியாவை மட்டுமே பார்த்தால் படம் பிரமாதம்! டைட்டிலில் நெகடிவில் (வண்ணத்தில்) ஆக்‌ஷன் காட்சிகளாகக் காட்டி ஆரம்பித்திருப்பதே படம் நல்ல விறுவிறுப்போடு இருக்கப் போகிறது என்பதை உணர்த்தி விடுகிறது.

ஏண்டர் தி டிராகன் வந்தாலும் வந்தது — எந்தப் படத்திலும் சண்டைக் காட்சிகள், குங்ஃபூ உதைகள், கராத்தே அடிகள் சர்வ சாதாரணமாகி விட்டன. ப்ரியாவோ சிங்கப்பூருக்கே போயிருக்கிறாள். சும்மாவிட முடியுமா? சிங்கப்பூர் காதலியின் கரம் பற்ற கணேஷுக்கு குங்ஃபூ பயிற்சி. அதில் சண்டை. ஜமாயித்திருக்கிறார் ரஜனி. மோதலில் மட்டுமல்ல, காதலிலும்தான். ரஜனிக்கு ப்ரியா படம் நல்ல வாய்ப்பு.

ஸ்ரீ தேவிதான் ப்ரியாவாக வருகிறார். நல்ல ஓட்டம்! ஆரம்பத்தில் நாட்டுப் புறத்துப் பெண்ணாக நடிப்பது ரொம்ப இயற்கை.

டைரக்டர் பாத்திரத்தில் வருகிறார் தேங்காய். பேச்சும் நடிப்பும் ஏ ஒன்! பாராட்டும்படி செய்திருக்கிறார்.

ப்ரியாவின் மாமனாக வருபவரின் காட்டுக் கத்தல், பொருந்தாத ஒரு சவ ஊர்வலம் இதெல்லாம் திருஷ்டி பரிகாரங்கள்.

ரம்யமான கலரில், ஸ்டீரியோஃபோனிக் ஒலிமுறையில் படப்பிடிப்பும் காட்சிகள் அமைப்பும் அற்புதமாக இருக்கின்றன. 'கார் சேஸிங்' காட்சிகள் வெளிநாட்டவர்களுக்கு இணையாக உள்ளன. சிங்கப்பூர், ஹாங்காங், கோலாலம்பூர் ஆகிய இடங்களுக்குப் போய்ப் படமெடுத்ததை முழுதாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். டால்ஃபின், கிளி ஆகியவைகளின் சர்க்கஸ் காட்சிகள் 'அப்ளாஸ்' பெறும். அதோடு பணவசூலையும் தரும்.

டைரக்டர் முத்துராமனுக்கு ஒரு குறையுண்டு. தம் படங்கள் எதுவும் நூறுநாட்கள் ஓடவில்லையே என்று. அதை 'ப்ரியா' தீர்த்து வைப்பாளா?

— கௌசிகன்

ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருந்த அந்த 'டிராவலர்ஸ் பங்களா'வில் தங்கியிருந்தான் சந்திரன். ஒரு கம்பெனியின் பிரதிநிதியாகத் தன் பெயரைப் பதிவு செய்து கொண்டிருந்த அவன் உண்மையில் ஒரு நாகரிகத் திருடன். அவனுடைய 'ஏரியா' — பாரதம் முழுவதும். பெங்களூரில் தேட்டை போட்ட நகைகளின் பெரும்பகுதியை ரகசியமாக ஓரிடத்தில் விற்று ரொக்கமாகப் பெரிய தொகையைப் பெற்று வந்திருந்தான். மறுநாள் இன்னொரு கோஷ்டி பாக்கி நகைகளை வாங்கிக் கொள்வதாகச் சொல்லி இருந்ததால் இரவு இங்கு தங்கும்படி நேர்ந்துவிட்டது.

இரண்டே அறைகள் இருந்த அந்தப் பங்களாவில் மற்றோர் அறை காலியாக இருந்தது. வேறு வேலையில்லாத சந்திரன் அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தான். பக்கத்தில் சினிமாத் தியேட்டர் இருந்தாலாவது போய் வரலாம். திடீரென்று அவன் மனத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. தேசிய நெடுஞ்சாலையில் இருந்த அந்தப் பங்களா எந்த இரவும் காலியாக இருந்ததாக அவன் கையெழுத்திட்ட பதிவுப் புஸ்தகம் காட்டவில்லை. இந்த 'வாட்ச்மேனை' ஏதாவது சாக்கு சொல்லி வெளியே அனுப்பி வைத்துவிட்டால், தங்கும் பிரயாணிகளிடமிருந்து ஏதாவது தட்டிப் பறிக்கலாம். பக்கத்தில் உள்ள நகரத்துக்கு வரும் வியாபாரிகள் இரவு மட்டும் தங்க வரலாமே! இரண்டு மூன்று வாரங்களாகத் 'தொழில்' செய்யாத கையில் நமைச்சல் பரவத்தொடங்கியிருந்தது.

''வாட்ச்மேன்'' இருந்த குடிசைப்பக்கம் போய் அவனை அழைத்தான். கூப்பிட்ட குரலுக்கு வந்தவன் இளைஞன். வயது முப்பது இருக்கும். வந்தவன் முகத்தில் அலுப்புத் தெரிந்தது. இந்த இரவில் எந்தக் கடைக்கு எதற்காக விரட்டப் போகிறானோ என்ற எரிச்சல்.

''என்ன 'வாட்ச்மேன்!' தனியாக இருக்கிறீங்களே', ...போர்' அடிக்கல்லியா?'' என்று கேட்டான் சந்திரன்.

''என்னங்க செய்யறது?... பொழைப்பு இதாப்போச்சு... அலட்டிக்கிட்டா முடியுங்களா?'' என்று உண்மையில் அவன் அலட்டிக் கொண்டான்.

''ஒரு சினிமா... ஒரு நாடகம்... எதற்குமே போக முடியாதே!''...

''நீங்க ஒண்ணு... எங்க ஆயா காயலாக் கிடக்குது... இப்பவோ, அப்பவோவா இருக்குதுன்னு ஆள் மேலே ஆளா வருது... நகர முடியல்லே... இன்ஜினீயர் ஐயா பதில் ஆள் புடிச்சு அனுப்பறதுக்குள்ளே நான் தவிச்சுப் போயிட்டேன்... நான் போய்ச் சேரறதுக்குள்ளே ஆயா போய்ச் சேர்ந்திட்டுது.''

''அட பாவமே!... என்னால் தனியாக ஒரு நாள்கூட இருக்க முடியாது... பைத்தியமே பிடித்துவிடும்...''

# பயணியர் விடுதியிலே..

## 'அன்னம்'

''எனக்கும் முதல்லே அப்படித்தானுங்க இருந்தது... ஆனால் போகப் போகச் சரியாயிட்டுதுங்க...''

சந்திரன் தன் பையிலிருந்து சிகரெட் பாக்கெட் ஒன்றை உருவினான். திறந்து அதில் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான் ''பாக்''கெட்டை அப்படியே ''வாட்ச்மென்''னிடம் நீட்டினான்.

''வேண்டாமுங்க!'' என்று சொல்லிய படியே வாட்ச்மேன் ஒரு சிகரெட்டை எடுத்தும் பற்ற வைத்துக்கொண்டு வலித்துப் பார்த்தான். ஆகாசத்தில் மிதப்பது போல் இருந்தது.

''உன்னைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. நீ வேண்டுமானால் இன்று டவுனுக்குப் போய் ஒரு சினிமா பார்த்துவிட்டு வா. ... உனக்குப் பதிலாக நான் கவனித்துக் கொள்கிறேன்...''

''இன்ஜினீயர் வந்தால்?''

''இந்த இரவில் அவர் எங்கே வரப் போகிறார்? வரமாட்டார்.. அப்படியே வந்தாலும் உனக்கு எந்தத் தொந்தரவும் இல்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்.''

சந்திரன் தன் மணிபர்ஸைத் திறந்து ஒரு ஐந்து ரூபாயை நீட்டினான். 'வாட்ச்மேன்' கண்களுக்கு அந்த நோட்டுப் பெரிய பொக்கிஷமாகத் தெரிந்தது. சினிமா என்ன சினிமா?

---

### கேப்டனைப் பற்றி...

ஆர். பி. மெஹரா: காப்டனாகக் காவஸ்கர் பொறுப்பு வகித்தால் அவரது பாட்டிங் திறமை குறையலாம் என்று பல நிபுணர்கள் கருதுகிறார்கள். ஆனால் பிராட்மனைப் போல் காப்டன் காவஸ்கரும் மிளிர்வார்.

அஜித் வாடேகர்: நான் எப்பொழுதுமே பாட்ஸ்மேன்தான் காப்டனாக வேண்டும்' என்று விரும்புபவன். காவஸ்கர் சாய்ஸ் ஏ ஒன்!

பட்டோடி நவாப்: ஒரு பௌலர் காப்டனாக இருந்து நிர்வகிப்பது சிரமம். இந்தப் புதிய பொறுப்பினால் காவஸ்கரின் பாட்டிங் தரம் குன்றி விடாது.

அப்பாஸ் அலிபெய்க்: சுனில் கிரிக்கெட்டுக்கே தம் முழு மனத்தையும் ஈடுபடுத்தியவர். இவரை விட ஏகாக்ர சித்த ஆட்டக்காரர், கலைஞரைக் காணுவது அரிது.

(ஸ்போர்ட்ஸ் வர்ல்ட்)



ஐந்து ரூபாய்க்கு ஸ்வர்க்கத்தையே காட்டக்கூடிய இடம் அவனுக்குத் தெரியும். நோட்டைத் தன் பையில் திணித்துக்கொண்டு லாட்ஜ் ரிஜிஸ்தரைச் சந்திரன் கையில் கொடுத்துவிட்டு ''சீட்டி'' அடித்தபடி 'வாட்ச்மேன்' வெளியே , போனான்.

சந்திரன் தன் அறையை இழுத்து மூடினான். மிகச்சாதாரணமான ஒரு சட்டையைப் போட்டுக் கொண்டு, ஒரு துண்டைத் தன் தலையில் முண்டாசாகக் கட்டிக்கொண்டு பங்களாவின் வாசலில் காத்திருந்தான்.

சந்திரனுக்கு அவன் அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை உண்டு. இதுவரை அவன் எதிலும் தோற்றதில்லை. அவன் மதிப்பிட்டதும் பிசகியதில்லை.

'வாட்ச்மேன்' திரும்பும்போது இரவு இரண்டு மணி ஆகிவிடும். அதற்குள் யாராவது வராமலா போகிறார்கள்? வந்து தங்குபவர் மறுநாள் காலை விழித்துப் பார்ப்பதற்குள் சந்திரன் எவ்வளவோ தூரம் போயிருப்பான்.

இரவு மணி ஒன்பதும் அடித்து விட்டது. சந்திரனுக்குத் தூக்கம் தூக்கமாக வந்தது. இனி யார் வரப் போகிறார்கள்?.... உட்புறமாகத் தாளிட்டுப் படுக்க வேண்டியதுதான்.

''வாட்ச்மேன்! வாட்ச்மேன்!'' இனிமையான பெண் குரல் கேட்டது.

''இதோ வந்து விட்டேன் அம்மா!'' எனக் கூறியபடி பாய்ந்து வெளியே போனான் சந்திரன்.

அங்கே கறுப்பு நிறக்கார் ஒன்று நின்று கொண்டிருந்தது. அதிலிருந்து தளதளவென்று ஒருபெண் பளபளவென்று உடை தரித்து இறங்கினாள். அவள் ஒப்பனையிலிருந்தே சந்திரன் அவள் ஒரு பசையுள்ள பெண் எனப்புரிந்து கொண்டான். கையில் வைத்திருந்த சிறு பெட்டியை அவள் கீழே வைக்கவில்லை... அதில் என்ன இருக்கும்? நகைகள்? பணம்? சந்திரன் போட்ட கணக்கு மனக்கணக்கு திருப்திகரமாக அமைந்தது.

காக்கி உடை அணிந்த டிரைவர் பக்கத்தில் பணிவுடன் நின்றான்.

''ரூம் இருக்கா வாட்ச்மேன்''! — வந்தவள் கேட்டாள்.

''இருக்குதுங்க அம்மா!'' — என்று காத்திருந்த சந்திரன் சொன்னான்.

வாட்ச்மேன் கொடுத்துப் போயிருந்த சாவியைக் கொண்டு பக்கத்து அறைக் கதவைத் திறந்தான். விளக்குகளைப் பொருத்தினான். டிரைவர் ஒரு சிறு பெட்டியையும் கூடையையும் எடுத்து உள்ளே கொண்டு வைத்தான். பதிய வேண்டிய புஸ்தகத்தைச் சந்திரன் பணிவுடன் நீட்டினான்.

தன் 'ஜாக்கெட்டில்' செருகியிருந்த பேனாவை அவள் எடுத்தாள். சந்திரன் கண் கொட்டாமல் பார்த்தபடி நின்றான். ''மிஸ் ரஞ்சனா – சினிமா ஆர்டிஸ்ட், 82– , ஸ்வப்னா நகர் முதல் கிராஸ் தெரு, சென்னை-94'' என எழுதித் திருப்பிக் கொடுத்தாள். படித்துப் பார்த்த சந்திரன், 'நட்சத்திரம் அல்லவா?... ஜொலிக்கிறது...'' என் நினைத்துக் கொண்டான்.

''பக்கத்து ரூமிலே யார் மேன் இருக்காங்க?'' எனக் கேட்டாள் வந்தவள்.

''யாரோ சின்னப்புள்ளே ... மெட்ராஸிலேருந்து வந்திருக்குதுங்க...'' என்றான் சந்திரன்.

மிஸ் ரஞ்சனா தன் கைப்பையைத் திறந்து ஒரு பத்து ரூபாய்த் தாளை நீட்டினாள்.

''ஊருக்குள்ளே போய் இரண்டு செட் டிபனோ காப்பியோ வாங்கிவா!... நீயும் சாப்பிட்டுக்க... பசி வயிற்றைக் கொல்லுது!'' என்று சந்திரனிடம் கூறியவள் டிரைவரிடம் திரும்பினாள். ''இந்தாப்பா டிரைவர்... நாளைக்கு ஒருமணிக்கு வாஹினியில் 'ஷூட்டிங்' இருக்குது... காரிலே ஏதோ சத்தம் வருது... பார்த்து வை! அப்புறம் தலையைச் சொறிஞ்சுக்கிட்டு நின்னே... சீட்டைக் கிழித்து விடுவேன்...''

கையில் டிபன் காரியருடன் சீட்டி அடித்தபடி தன் அறையை விட்டுப் புறப்பட்டான் சந்திரன். ''சாப்பாடா கொண்டு வரச் சொல்கிறாய்?... நாளைக்கான உன் நாஸ்தாவுக்குப் பிறகு யாரிடமாவது பிச்சைதான் கேட்க வேண்டும்! அத்தனையும் துடைத்து எடுத்துக் கொண்டு போக மாட்டேன்!'' என நினைத்தபடி அவன் நடந்தான். ஞாபகமாகத் தன் அறையைப் பூட்டிவிட்டுப் புறப்பட்டான்.

அந்த நேரத்தில் ஊரில் எங்கும் சாப்பாடு கிடைக்கவில்லை. தோசைக்கடை ஒன்றுதான் திறந்திருந்தது. மிட்டாய்க்கடை ஒன்று மூடப்படும் நேரம். நாலைந்து பொட்டலங்கள் வாங்கிக்கொண்டு சந்திரன் திரும்பினான்.

அவன் மீண்டும் விடுதியில் நுழையும்போது கார் ஏதும் அங்கு இல்லை. டிரைவர் காரைச் சரி பார்த்துவர எடுத்துப் போயிருப்பான் என நினைத்தான்.

கிட்ட நெருங்கியவனுக்கு விடுதியின் இரு அறைகளும் திறந்து கிடப்பது தெரிந்தது. கையிலிருந்த பொட்டலங்களையும் டிபன் காரியரையும் அப்படியேவைத்துவிட்டு விரைந்தான். இரண்டு அறைகளிலும் ஒரு சாமான் கூட இல்லை. துப்புரவாகத் துடைத்து விட்டுப் போயிருந்தார்கள். சந்திரன் உடுத்தியிருந்த உடையும் அந்தப் பெண் கொடுத்த பத்து ரூபாயில் மீதி சில்லறையும் தவிர வேறு ஏதும் இல்லை.

தலைசுற்ற அப்படியே உட்கார்ந்தான் சந்திரன். வல்லவனுக்கு வல்லவன் என்று கேட்டிருக்கிறான். இப்போது வல்லவனைப் பார்த்தே விட்டான்!

# கிண்டல் கிட்டா!












# பிறப்பதோ புத்தாண்டு!

# கிடைப்பதோ சிறப்புத் தள்ளுபடி!

# கொடுப்பதோ நரசுஸ் காபி!

# கிலோவுக்கு 1 ரூபாய்

'79 ஜனவரியில் வாங்கும் காபியோடு சிறப்புத் தள்ளுபடி கூப்பன்களைக் கேட்டு வாங்குங்கள். பெற்ற கூப்பன்கள் அத்தனையும் '79 பிப்ரவரி, மார்ச்சில் கொடுத்து, பலன் அனைத்தும் அடையுங்கள். விபரங்களுக்கு அருகில் உள்ள எமது கிளையை அணுகவும்.

**ஜீவனுள்ள ஒரே காபி**

# நரசுஸ்

**"தெர்மலோ" காபி**





**நரசுஸ் காபி கம்பெனி**
**சேலம் 636 007**

கிளைகள் : பாண்டிச்சேரி &
தமிழகமெங்கும்

ADWAVE/NCC/967



# குடிக்காத போதை

**சு. சமுத்திரம்**

ஊருக்குச் சற்றுத் தொலைவில், ஹிப்பி மாதிரி ஒதுங்கிய இடம். சுற்றிலும் கருவேல மரங்கள் இரும்புக் கம்பிகள் மாதிரியும், அவற்றிற்கு இடையே இருந்த வேலிக்காத்தான் செடிகள், முட்கம்பி வலைகள் மாதிரியும் இருந்த இடம். மொத்தத்தில், அது ஒரு 'மாதிரி' இடமல்ல. 'ஒருமாதிரியான' இடம். இந்த இடத்தைச் சுற்றி, கரைவரை மணல் புரளும் ஓடை 'அகழி' மாதிரி மூன்று பக்கமும் சுற்றி இருந்தது. கிட்டத்தட்ட காடு, தலைகீழ் பரிணமத்தால் தோப்பானது போலவும், தோப்பு காடாகப் பரிணமமாகிக் கொண்டிருப்பது போன்றும் தோன்றும் பகுதி.

இந்தப் பகுதியில் ஓர் ஓரத்தில், பாழடைந்த கட்டிடம், அந்தச் செங்கல் கட்டிடத்தில், இன்னும் இடியாமலே விழுந்து கொண்டிருந்த ஒரு சுவருக்குப்பக்கத்தில், இரும்பு அடுப்பிற்கு மேலே, பத்து 'பிளாடர்' அளவுக்கு அதாவது ஐம்பது லிட்டர் கொள்ளளவு கொண்ட டிரம். டிரம்மிற்கு மேலே, பதினைந்து லிட்டர் 'சரக்கைப்' பிடிக்கும் 'தவலைப்' பாத்திரம். அதற்கு மேலே 'டேங்கா' – அதாவது ஒரு சின்னப் பாத்திரம். இந்த மூன்று உபகரணங்களும் காற்றுப் புகாதபடி, எதையோ வைத்துக் கட்டப்பட்டிருந்தன; உச்சியில் இருந்த பாத்திரம், அலுமினியத் தகட்டால் மூடப்பட்டு, பிரிக்க முடியாத பிராண சிநேகிதர்கள் போல், இறுக்கப்பட்டிருந்தது.

மேலே இருந்த 'டேங்கா'வில் முழுக்க முழுக்கத் தண்ணீர் இருக்கிறதாம். அதற்குக் கீழே இருந்த 'டிரம்மில்' ஊறப்போட்ட வெல்லமும், பட்டைகளும் கொட்டைகளும், கொஞ்சம் சல்போட்டா வகைகளும், இன்னும் பல 'கிக்' வகையறுக்களும் இருக்கின்றனவாம். இரும்படுப்பில் எரியும் செந்தீ அனலைக் கக்கியதால், டிரம்மிற்குள் இருப்பவை பொங்கி எழுந்து, 'ஆவியாகி' 'டேங்காவில்' பட்டுக் குளிர்ச்சியாகி, ஜீவாத்மாவான அந்த ஆவி, 'பரமாத்மாவாகி,' நடுவில் இருந்த தவலைப் பாத்திரத்திற்குள், சொட்டோ சொட்டென்று சொட்டிக் கொண்டிருப்பதாகக் கேள்வி.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால், ஜில்லா கலெக்டரைவிட, பலமடங்கு சர்வ வல்லமையுள்ள, மாவட்ட காய்ச்சும் அதிகாரியிடம், தாலுகா சப்ளை அதிகாரியாக இருந்தவன் காளிமுத்து. அவருடைய பல கார்களில் ஒரு கார், இவனிடமே எப்போதும் இருக்கும். அந்த அளவுக்கு, மா. கா. அதிகாரியிடம், தா. ச. அதிகாரியாகப் பணி புரிந்தவன், சொந்தத்தில் 'தொழில்' செய்ய நினைத்து, கொஞ்ச காலத்திற்கு முன்புதான், இந்தக் காய்ச்சும் தொழிலில் இறங்கினான். சப்ளை அதிகாரியாக இருந்தபோது, தெரிந்து




கொண்ட, தொழில் நுட்ப விவரங்களை வைத்து, இந்தக் குடிசைத் தொழிலைத் துவக்கியபோது, பல கார்களையும், பல அரசியல் தலைவர்களையும், பல அதிகாரிகளையும் கைக்குள் போட்டுக்கொண்டிருந்த மாவட்ட காய்ச்சும் அதிகாரி, அவனைச் சொந்தத் தொழில் வேண்டாம் என்று கெஞ்சினார். அதற்கு அவன் மசியாததால், அடியாட்களை வைத்து மிஞ்சிப் பார்த்தார். 'மாமூல்' ஆட்களை வைத்து மடக்கப் பார்த்தார். ஆனால் எதற்கும் காளிமுத்து கலங்கவில்லை.

மாவட்ட காய்ச்சும் அதிகாரியும், புரொடெக்ஷன் மானேஜர், சப்ளை அதிகாரிகள் முதலிய முக்கியப் புள்ளிகளும், அவனை புள்ளி வைக்க முடியாது எனத் தெரிந்துகொண்டு, சமாதான — சாராய — சக வாழ்வுக் கொள்கையை, நேசக் கரத்தோடு நீட்டினார்கள். நீட்டிய கரத்தைப் பிடித்துக் கொண்ட காளிமுத்து, அவர்களிடமிருந்து 'ஏரியா எல்லையை' வரையறுத்துக் கொண்டதுடன், ஆக்கிரமிப்புத் தவிர்ப்பு ஒப்பந்தத்தையும், பரஸ்பர ரகசிய பாதுகாப்பு உடன்பாட்டையும் செய்து கொண்டான்.

இப்படிப்பட்ட காளிமுத்துவை, அடியாளுக்கு அடியாளாக, அடியார்க்கும் அடியானாக விளங்கும் இதோ இந்த காளிமுத்துவை — ஒரு பொடிப்பயல் மிரட்டுகிறான் என்றால், அதுவும் 'கிக்' கொடுக்கும் இவனையே 'கிக்' பண்ணப் பார்க்கிறான் என்றால்...

அதே ஊரைச் சேர்ந்த மூர்த்தி கொஞ்சம் வசதியான வாலிபன். கல்லூரியில் முழுதும் கால் வைத்துவிட்டு, மழை இல்லாத சமயத்தில்கூட, அங்கே ஒதுங்கிய திருப்தியில், அதற்கு அத்தாட்சியாக, ஒரு சர்ட்டிஃபிகேட்டையும் வாங்கிக்கொண்டு, சமீபத்தில் ஊருக்குள் நிரந்தரமாக இருக்கிறான். கல்லூரிப் பேச்சுப்போட்டிகளில் பல கோப்பைகளை வாங்கியிருக்கிறான். வாங்கட்டும், அதுக்காக, அந்த ஊரில் வழக்கமாக நடக்கும் மதுவிலக்குப் பொதுக்கூட்டம் ஒன்றில், பல தாலுகா அதிகாரிகளும், போலீஸ் இன்ஸ்பெக்டரும் கலந்து கொண்ட, பலர் குடித்துப் புரண்ட அந்தக் கூட்டத்தில், காளிமுத்துவை வாங்கு வாங்குன்னு வாங்க வேண்டுமா?

கூடாது தான். காளிமுத்து யோசித்தான். இவனை — இந்தக் கிறுக்குப் பயல் மூர்த்தியை, மாறுகால், மாறுகை வாங்கினால் என்ன?

வாங்க முடியாது. ஏனென்றால், மூர்த்தி வசதியானவன். பங்காளி பலங்கொண்டவன். பெரும்பாலும் குடியர்களாக இருந்தாலும், அவனைத் திட்டினாலே பொறுத்துக்கொள்ளாத ஊரார்கள், தீர்த்துக் கட்டினால் பொறுப்பார்களா? மாட்டார்கள். ஊரில் முக்கால் வாசிப் பேர் எதிரியாவார்கள். சமயத்தை எதிர்நோக்கி நிற்கும் மாவட்ட காய்ச்சும் அதிகாரி, இவனைக் கொக்குபோல் கெத்தி விடுவார். 'தொழில்' லாபத்தால், மோட்டார் பைக்கிலிருந்து, மோட்டார்கார் வாங்கும் அளவுக்கு முன்னேறிக்கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில், இந்தப் பயலை எப்படி மடக்கலாம் என்று காளிமுத்து தீவிரமாகச் சிந்திக்கலானான். ஓசி குடிக்கு யோசனை கூறும் சிலர் ஒன்று கூடினார்கள். ஒரு பெரிய வியூகம் வகுக்கப்பட்டது. மூர்த்திப்பயல் எப்படியும் விழுந்துதான் ஆகவேண்டும்! தனக்கு எல்லா வகையிலும் பரிச்சயமான ஓர் இளம் பெண்ணை, மூர்த்திமேல் ஏவினான். அவள் சிரித்துப் பார்த்தாள். கைகளை ஆட்டிப் பார்த்தாள். வாய்வலித்ததும், கை ஓய்ந்ததும்தான் மிச்சம். இது போதாதென்று காளிமுத்து தன் ஒரே பெண்ணான மங்காத்தாவை, நகை நட்டோடு, கட்டிக்கொடுப்பதாக, மூர்த்தியின் அப்பாவுக்கு முறைப்படி சொல்லியனுப்பினான். அப்பாக்காரர் சம்மதித்தார். ஆனால் மகன்காரன், ''மங்காத்தா... தங்காத்தா! தாராளமாய்க் கட்டிக்கிறேன். ... அதுக்கு முன்னால்... அவளுக்கும் குடிப்பழக்கம் உண்டான்னு தெரிஞ்சாகணும்'' என்று சொன்னான். இதைக் கேள்விப்பட்ட, ஏற்கெனவே



''நான் சின்ன வயசில் மூணு வேளை சாப்பாடுகூட இல்லாமே ரொம்பக் கஷ்டப் பட்டவன் சார்.''

இன்னொருவனைக் காதலிக்கும் மங்காத்தா இதைச் சாக்காக வைத்து, ''குடிகார அப்பனுக்கு... பிறந்ததுனால... என்னையும்... குடிகாரின்னு, மூர்த்தி தடியன் சொல்லிட்டான். எல்லாம் ஒங்களால... ஒங்களால...! கட்டுனால்... ராமதுரை மச்சானைத்தான் கட்டுவேன்... ஆம்... ஆமாம் கட்டுவேன்!'' என்று காளிமுத்து வெட்டிய திட்டக்கிணற்றுக்குள், ராமதுரை என்கிற பூதத்தைக் கிளப்பிவிட்டாள். எல்லா விதத்திலும் தன்னைப்போல் விளங்கும் ராமதுரைக்கு, மகளைக் கொடுக்க முடியாமல், காளிமுத்து மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திண்டாடினான்.

காளிமுத்துவுக்கு ஒன்றும் ஓடவில்லை. இந்தத் தொழிலைத் தவிர எந்தத் தொழிலையும் அவனால் செய்ய முடியாது. மாவட்டக் காய்ச்சும் 'அதிகாரியும்' அவனை, மீண்டும் தன் டிபார்ட்மெண்டுக்குள் எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார். இனிப் பொறுப்பதில் நியாயமில்லை. என்ன வந்தாலுஞ்சரி... மூர்த்திப்பயலை, தீர்த்துக்கட்டியாக வேண்டும்... ஒரே வெட்டாக வெட்டியாக வேண்டும்... தலைவேறு... முண்டம் வேறாக ஆக்கியாக வேண்டும்.

'வேலையை' முடிக்க, ஆட்களை அமர்த்துவதற்கு முன்னதாகவே, போலீஸ் நிலையத்தில் இருந்து, காளிமுத்துவுக்கு அழைப்பு வந்தது. போனான். சப் இன்ஸ்பெக்டர் எரிந்து விழுந்தார். காளிமுத்து, தன்னைக் கொலை செய்யத் திட்டமிட்டிருப்பதாகவும், தனக்குத் தக்க பாதுகாப்பு அளிக்கும்படியும், கலெக்டரிடம் 'கீரீவன்ஸ் டேயில் (மனுநீதி திட்டநாள்) மூர்த்தி கொடுத்திருந்த விண்ணப்ப மனுவை, அவனிடம் காட்டினார். ''மூர்த்தி மேல... ஒரு சின்னக்காயம் ஏற்பட்டாலுஞ்சரி... ஒன் முதுகிலே...பெரிய காயம் ஏற்படும்... ஜாக்கிரதை'' என்று சப்-இன்ஸ்பெக்டர், அவனைத் திட்டினார். லேசாகத் தட்டிக்கூடப் பார்த்தார். ''அவனை... எவன் தாக்கினாலும்... நீ தாக்கியதாய்க் கருதப்படும்'' என்று தாக்கீதும் கொடுத்தார்.

இப்போது, மூர்த்திக்கு, வேறு விரோதத்தில், வேறு எவனும் 'சின்னக்காயங்'கூட விளைவிக்காமல் இருப்பதைப் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்புக் காளிமுத்துவுக்கு வந்துவிட்டது. ஏற்கெனவே, மூர்த்தி மீது, இன்னொரு 'ஏரியா' ஆசாமிகள் குறி வைத்திருப்பது தெரிந்ததும், அவர்களின் காலில் விழாக்குறையாக விழுந்து, அழாக்குறையாக அழுது, அவர்களைத் தடுப்பதற்குள் காளிமுத்துவிற்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

இதற்கிடையே போலீஸ்காரர்கள், 'ரெய்ட்' பண்ண வரப்போவதாக, காளிமுத்துவுக்குத் தகவல் வந்தது. இந்தத் தொழிலை எப்படிவிட முடியும்? இந்தச் சண்டாளனை... எப்படிச் சமாளிக்க முடியும்? என்ன பண்ணலாம்... ஒரே ஒரு வழிதான்... காளிமுத்து வெளியூருக்குப் போய்விட்டு வந்தான். அங்கே... தொழில்சகாவின் காதைக்கடித்துவிட்டு, ஊருக்குத் திரும்பினான். இதிலாவது வெற்றி கிடைக்குமா?

காதலியை, கடைசி முறையாகப் பார்ப்பவன்போல், காளிமுத்து சாராயப் பானையைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, கையாட்கள் கிளாஸ்களை நிரப்பிக் கொண்டிருந்தார்கள். காளிமுத்துவின் பகுதிக்குள், தைரியமாக வரும் அந்த வாடிக்கைக்காரர்கள் இப்போது போலீஸ் எப்போது வேண்டுமானாலும் வரலாம் என்கிற பயத்தில், அவசர அவசரமாகக் குடித்துக் கொண்டிருந்தார்கள். நாளையிலிருந்து தொழிலை நிறுத்தப் போகும் வேதனைச் செயலை நினைத்து, வெம்பிக்கொண்டே காளிமுத்து இருந்தபோது, ஒருவர் தலையில் முக்காடு போட்டுக் கொண்டு உள்ளே வந்தார் காளிமுத்து, அவரைக் கோபமாகப் பார்த்தான். அது, வெட்டிக் கோபமல்ல, வெற்றிக்கோபம்.

''என்ன ராமு மச்சான்! ஏது இந்தப் பக்கம்?''

''அத ஏண்டாக் கேக்குற... சட்டாம் பட்டிக்காரன்... கொடுக்க மாட்டேன்னு சொல்லிட்டான்... கேட்டால் காரணமும் சொல்ல மாட்டாக்கான்... சரி... ஒன் கிட்டேயே... இனிமேல்... பத்து வச்சுக்கதா... தீர்மானம் பண்ணிட்டேன்... நாலு கிளாஸ் கொடு... சரக்கு நல்லா இருக்கணும்.''

காளிமுத்து கோபமாகப் பேசினான்.

''தொட்டிலையும் ஆட்டி... குழந்தையையும்... கிள்ளி விட்டால் என்ன மச்சான் அர்த்தம்?''

''என்னடா சொல்றே?''

''பின்ன என்ன மச்சான்? முளைச்சி... மூணு இல்லே விடல... இந்த மூர்த்திப் பயலோட அட்டகாசம் தாங்க முடியல... அவனை... கண்டிச்சுப்பேச... முடியாத ஒங்க... வாய்க்கு... சாராயம் எதுக்கு... எதுக்குன்னேன்?...''

''அந்தக் கதையை... அப்புறமா பேசலாம்... இப்போ ... கிளாஸ் எடு''

''முடியாது... முடியவே முடியாது...? மூர்த்திய... அடக்க முடியாத ஒங்க கையால கிளாஸை... பிடிக்க முடியாது.''

# வளரும் பருவம் கால்ஷியம்-ஸாண்டோஸ்® பருவம்.







பிஞ்சுப் பருவம் முதல் வளர்ச்சிக் காலம் முழுவதும் குழந்தைக்குக் கால்ஷியம் இன்றிமையாதது. இந்த வளர்ச்சிக் காலத்தில் உங்கள் குழந்தை போதிய 'கால்ஷியம்' பெறத் தவறினுல், பின்னர் அதை ஈடு செய்ய-இயலாது. இன்றே அவனுக்கு 'கால்ஷியம் ஸாண்டோஸ்' கொடுக்க ஆரம்பியுங்கள். உறுதியான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்பு வளர்ச்சிக்கும் தேவை.

தினசரி நான்கு கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகளே! குழந்தைகள் ஆவலுடன் விரும்பும் வனில்லா மணம் கூட்டி, வைட்டமின்கள் C, D மற்றும் $B_{12}$ சேர்த்து உரம் ஊட்டப்பட்டவை, கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகள்.

**கால்ஷியம் ஸாண்டோஸ்- உலகிலேயே உன்னதமான கால்ஷியம் ஸ்விட்ஸர்லாந்தில் ஸாண்டோஸால் உருவாக்கப்பட்டது.**



## கால்ஷியம்-ஸாண்டோஸ்®

**வலுவுள்ள பற்களுக்கும் உறுதியான எலும்புகளுக்கும்**




daCunha CS 27 TAM

# கிரிக்கெட் கற்கலாம்!

18

கோச்: கே. சந்திரசேகர்

படம்: ராஜூ.. தயாரிப்பு: குண்டுமணி

## ஹூக் ஷாட்

ஹூக் ஷாட்டுக்கு சரியான பாத அசைவு தேவை. பந்தின் அடித்தளத்தைத் தாக்குவதால் பந்து மேலே பறந்து செல்ல நேரிடும். விக்கெட்டின் வேகத்தையும், பந்து எம்பும் விதத்தையும் நன்கு 'எடை' போட்டு அறிந்த பிறகே ஹூக் ஷாட் முயல வேண்டும்.



வலது பாதம் நன்கு பின்னால் சென்று, உடலை 'ஆப்சைட்' பக்கம் நகர்த்தி, பந்து பறந்து வரும் கோணத்துக்கேற்ப அசைந்து ஆட வேண்டும்.



தலை நேராக ஆடாமல், அசையாமல் இருக்க வேண்டும். தோளும் கைகளும் இந்த 'ஷாட்' அடிக்க இயங்க வேண்டும். வேகப்பந்தை அதன் விரைவுக்கொப்பத் திசை மாற்றித் திருப்ப வேண்டும். இந்த ஹூக் ஷாட் அடிப்பதில் பந்து 'டீப் பைன் லெக்' திசையில் 'காட்ச்' ஆகும் படியும் நேரலாம்.



சரியான கண்ணோட்டமே இந்த ஹூக் ஷாட்டுக்கு மிக அவசியம். வலது பாதத்தை வளைத்து, உடலை வளைத்து, பந்து முகத்தில் தாக்காமல் பாதுகாக்க வேண்டும்.

''அவனை... அடக்குறதுக்கு நானுச்சு... கிளாஸ்ல ... ஊத்துடா...''

''முடியாது... அடக்கிட்டு வாரும்... அப்புறமா... இந்தப் பானையையே ஒங்ககிட்டத் தந்துடுறேன்...''

''ஒரே ஒரு கிளாஸாவது ஊத்துடா...''

''முடியாது...''

''சரி... ஒரு அரை கிளாஸாவது ஊத்துடா...''

''இந்த ஊர்ல மூர்த்தி இருக்கற வரைக்கும், ஒரு சொட்டுக்கூட கிடையாது... மாரியாத்தா சத்தியமா... கிடையாது... ஆமாம் ராமு மச்சான்,.. நீங்க... இங்க இருக்கறதுல.. அர்த்தமில்ல...''

ராமு மச்சான், வாசனை வீசும் பானையைப் பார்த்தார். வாடிக்கைக்காரர்களைப்பார்த்தார். ஒரு பயலாவது... குடிக்கச் சொல்றுை... இருக்கட்டும்... இருக்கட்டும்... கவனிக்கிறவிதமா... கவனிச்சுக்கறேன்.

ராமுவுக்கு, குடித்தால்கூட, அவ்வளவு போதை இருந்திருக்காது. குடிக்காத போதை, முகத்தை, சிவப்பாக்க, குடிக்க முடியாதநிலை, அவனர நிலை குலையச் செய்ய, ''டேய் மூர்த்தி... ஒன்னை... என்ன பண்றேன் பாருடா'' என்று உளறிக்கொண்டே வெளியேறினர்.

இரண்டே இரண்டு நாட்கள்தான்.

காளிமுத்து வெற்றிக் களிப்புடன், மாமூலான வாடிக்கைக்காரர்கள் வயிறுர வாழ்த்த, தக்காரும் மிக்காருமின்றி, தொழிலை 'ஒஹோ'ன்னு செய்து வருகிறுன். விரைவில் காரும் வாங்கப் போகிறுன்.

குடிக்க முடியாமல் போன கோபத்தில், வீட்டுக்குத் திரும்பிய, மூர்த்தியின் தந்தையான ராமுவும், இதேபோல் திட்டமிட்டபடி வெளியூரில் குடிக்கக் கொடுக்காமல் திருப்பி அனுப்பப்பட்ட அவன் அண்ணனும், ''ஊர்ல... ஆயிரம் நடக்கும்... ஒனக்கென்னடா வந்தது? பெட்டிஷன் எழுதினியாக்கும்... பெட்டிஷன்... நம்ம குடும்ப கௌரவத்தைக் காற்றுல விட்டுட்டியேடா... காவாலிப்பயலே'' என்று சொல்லிக்கொண்டு ஒருவர், பெட்டிஷன் எழுதிய மூர்த்தியின் கைகளைச் சாராயக் கிளாஸைப் பிடிப்பது போல் பிடித்துக்கொள்ள, இன்னொருவர் அவனை அடிஅடியென்று அடித்து நொறுக்கினர். இதுநாள் வரைக்கும், தன்னை 'ஏடா' என்றுகூடக் கூப்பிடாத தந்தையும், தமையனும், இப்போது அடித்ததால் ஏற்பட்ட நெஞ்சுவலி பொறுக்க முடியாமல், மூர்த்தி எங்கேயோ ஓடிப்போய் விட்டான். அநேகமாக, சென்னையில் வசிக்கும் அக்காள் வீட்டில் தங்கி வேலை தேடிக்கொண்டிருப்பதாகக் கேள்வி.

எப்படியோ, பல்லோர் அறிய, பகிரங்க ரகசியமாகக் காளிமுத்துவின் பானைக்குள், இப்போதும் 'சொர்க்க' மழை பெய்து கொண்டிருக்கிறது!

# அர்த்தநாரி

## செம்பியன்



முழு நீள நாவல்



"நீங்கள் இருவரும் கணவன்-மனைவியாகிவிட்டீர்கள். உங்களுக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்'' என்று அழகாகச் சொல்லித் திருமணமானதற்கான அத்தாட்சிப் பத்திரத்தை அர்த்தநாரியிடம் தந்தார் திருமணப்பதிவு அதிகாரி. அவர் ஆங்கிலக் கலப்பின்றிப் பேசியதால் அர்த்த நாரியும் ''ரொம்ப தாங்க்ஸ் ஸார்'' என்று சொல்வதற்குப் பதில் ''மிக்க நன்றி அன்பரே'' என்று கூற மட்டும் தாமதித்தான். அடுத்த விஞடி அவன் புஷ்பாவின் வலக்கரத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடிஞன். அந்த வேகத்தில் முதலில் தடுமாறிப் போன புஷ்பா, பிறகு சமாளித்துக் கொண்டு அவனுடன் சேர்ந்து விரைந்தாள். அவனுக்கு இணையாக ஓடுவது புஷ்பாவுக்கு மிகவும் சிரமமாக இருந்தது. அவஞே சற்றும் நிதானம் காட்டாமல் அவசரப் பட்டான். திருமண தினம் என்பதால் அன்றைக்குப் புஷ்பா அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள். நகை நட்டு என்று பிரமாதமாக ஏதுமில்லாது போஞலும் இருப்பதற்குள் அழகான புடைவை ஒன்றை அவள் தேர்ந்தெடுத்து உடுத்தியிருந்தாள். ஒரே ஒரு ஒற்றை வடம் சங்கிலி கழுத்தில் தொங்கியது. அத்துடன் மஞ்சள் கயிறும் தாலியின் கனத்தால் அவள் நெஞ்சு மீது தவழ்ந்தது. காதிலே ஸ்டட்ஸ், ரிஸ்ட் வாட்ச், வலக்கரத்தில் ஒரே ஒரு தங்க வளை.

'எல்லாம் சரிதான் ஆஞல் இந்த ஹைஹீலும் கொலுசும் அணியாமல் இருந்திருக்கலாம்' என்று எண்ணிஞள் புஷ்பா. அர்த்த நாரியுடன் ஓடும்போது ஹைஹீல் உபத்திரவமாக இருந்தது. ஒய்யார நடையெனில் கொலுசு இனிய ஒலி எழுப்பும். ஓடும்போது அது எழுப்பிய கலகல சத்தம் அடக்கமின்மையைச் சுட்டுவது போலிருந்தது.

தெருவில் போவோர், வருவோர் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். எதையும் யாரையும் லட்சியம் பண்ணுமல் அர்த்தநாரி மறுபக்கம் போய்க் கொண்டிருந்த டாக்ஸியைக் கூவி அழைத்தான்: வண்டி வாகனங்களைக் கவனியாமல் சாலையைக் கடந்தான். கார் ஒன்று பிரேக் போட்டு நின்றபோது டயர்கள் 'கிறீச்' சிட்டன. டிரைவர் சபித்தான். ஒரு சைக்கிள் ஓட்டி நிலை தடுமாறி விழுந்தான். எதையுமே காணுதது போல் அர்த்தநாரி டாக்ஸியின் பின்புறக் கதவைத் திறந்தான். புஷ்பாவை உள்ளே தள்ளி விட்டுத் தானும் ஏறிக் கொண்டான். ''மயிலாப்பூர் சித்திரக் குளத்துக்குப் போ; அப்புறம் வழி சொல்கிறேன்'' என்ருன்.

டாக்ஸி புறப்பட்டதுமே அவன் கரங்கள் புஷ்பாவிடம் விளையாட ஆரம்பித்துவிட்டன. யாராவது பார்த்து ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிருர்களே என்று அவள் தவித்தாள். ''கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போய்விடப் போகிறது? என்ன அவசரம்?'' என்ருள் மெல்லிய குரலில்.

''வெள்ளம் கொண்டு போகாது, வடியவும் செய்யாது!'' என்ருன் அர்த்தநாரி. ''கிணற்றைச் சுற்றிச் சுழித்துக் கொண்டு ஓடிய படியே இருக்கும்!''

புஷ்பா அனுதாபத்துடன் தடை விதிக்காதிருந்தாள். காதலன் தன்னிடம் இவ்வளவு

ஆசை காட்டியது அவளுக்குப் பெருமையாக வும் இருந்தது. 'ஒரு புயல் அல்லது வெள்ளம் போல்தான் இவர் காதலும்; ஒரே ஆவேசம் தான்' என எண்ணினாள்.

''எத்தனை நாட்களாகப் பொறுமையுடன் காத்திருக்கிறேன் நான்'' என்று கூறியவாறே புஷ்பாவின் கரத்தைத் தன் கரத்தில் ஒற்றிக் கொண்டான், முத்தமிட்டான் அர்த்தநாரி.

முதன் முதலாக அவனைச் சந்தித்த தினம் புஷ்பாவுக்கு நினைவு வந்தது. கொடைக் கானலுக்கு அவள் தன் குடும்பத் தாருடன் விடுமுறையில் சென்றிருந்த போது தான் பரிச்சயம் ஏற்பட்டது. 'கோக்கர்ஸ் வாக்' என்ற குறுகலான பாதை வழியே நடந்து தொலைவில் தெரிந்த மலைகளையும் பள்ளத்தாக்குகளையும் வைகை அணையையும் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார்கள். இதற்கு எதிர்ப் புறம் செங்குத்தான நிலப் பகுதியில் உயரே சில அழகிய மஞ்சள் நிறப் பூக்கள் மலர்ந்திருக்கக் கண்டாள் புஷ்பா. அவற்றைப் பறித்துப் போய் டூரிஸ்ட் பங்க ளாவில் தங்கள் அறையில் ஒரு கோப்பையில் நீர் நிரப்பி வைத்தால் அந்த அறைக்கே சௌந்தர்யம் கூடிவிடுமே என்று அவளுக்குத் தோன்றியது. இந்தக் குளிருக்கு ஒரு நாளென்ன இரண்டு நாட்கள் கூட வாடாம லிருந்து எழில் சேர்க்கும்.

அவற்றைப் பறிக்க முயன்றாள் புஷ்பா. எட்டவில்லை. மற்றவர்கள் இயற்கைக் காட்சி களை ரசித்த படியே முன்னால் சென்று பாதை யின் ஒரு திருப்பத்தில் மறைந்துவிட்டார்கள். இவள் மட்டும் அந்தச் செங்குத்தான பகுதி யில் வெளியே துருத்திக் கொண்டிருந்த ஒரு பாறைமேல் கால் வைத்து எம்பிப் பூவைப் பறிக்கப் பிரயாசைப் பட்டுக் கொண்டிருந் தாள். ''லெட் மி ஹெல்ப் யூ'' என்று குரல் கேட்டது. வெட்கப்பட்டுச் சரேலென்று இறங்கப் போன புஷ்பா, தடுமாறினாள். அவளை விழாமல் அணைத்துத் தாங்கின இரு கரங்கள். அடுத்த அரை நிமிஷத்துக்குள் நீண்ட காம்புகளுடன் கூடிய மலர்கள் அவள் கரத்தில் இருந்தன.

''தாங்க்ஸ்'' என்றாள். கொடைக்கான லின் சீதோஷ்ண நிலையில் சிவந்திருந்த அவள் முகம் மேலும் கன்றியது.

''யூ ஆர் வெல்கம்'' என்றான்.

''வருகிறேன்.''

''ஒரு நிமிஷம். நான் யாருக்கு இன்று உதவி யிருக்கிறேன்? பெயரையாவது தெரிந்து கொள்ள வேண்டாமா? இன்ன வயதில் பாய் ஸ்கௌட்டில் சேர்ந்து இன்று இன்னாருக்கு இன்ன உதவி செய்தேன் என்று டயரி எழுதிய பழக்கம் இன்னும் விடமாட் டேனென்கிறது!''

அவன் துணிச்சல் அவளுக்கு வியப்பளித்தது. அதே சமயம் அவன் கேள்விக்குத் தான் அளிக்கப் போகும் பதிலில் உள்ள பொருத் தத்தை எண்ணிய போது அவளுக்கு உடம்பு சிலிர்த்தது. ''புஷ்பா'' என்றாள், கரங்களில் இருந்த மலர்களை நெஞ்சோடு அணைத்து.

''அதுதானே பார்த்தேன்! ஒற்றைக்காலில் நின்று எம்பியாவது மலர்களைப் பறிப்பதில் உள்ள மோகம் இப்போது தான் புரிகிறது... ஆமாம், எங்கே தங்கியிருக்கிறீர்கள்?''

''ஏன் அதையும் டைரியில் எழுதணுமா? சாரணன் கடமையா?'' என்றாள். பிறகு அவன் மனம் புண்படக் கூடாதே என்று புன்னகை புரிந்து கூறினாள்: ''டி. டி. டி. ஸி. பங்களாதான்!''

''ஓ! நான் டவுன்ஷிப் ரெஸ்ட் ஹவுஸ். எத்தனை நாள் இருப்பீங்க? நாளைக்கு என்ன புரோக்கிராம்?''

''அப்பா அம்மாவெல்லாம் முன்னால் போயிட்டாங்க. என்னைத் தேடுவாங்க. நான் வரேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பி நடந்தாள்.

''சொல்லா விட்டால் வேண்டாமே'' என்றான் அர்த்த நாரி அவள் முதுகு நோக்கி. ''கையகலமுள்ள இந்த ஊரில் மறுபடியும் சந் திக்காமலா இருந்து விடப் போகிறோம்? திரும்பத் திரும்ப ஏரி, அருவி, பூங்கா இங்கே தானே சுற்றி வரப் போறீங்க?''

அவன் சொன்னதில் தவறில்லை என்றாலும் அடுத்தாற் போல் ஏற்பட்ட சந்திப்பு யதேச் சையானதல்ல, அவன் வேண்டுமென்றே தன்னைப் பின் தொடர்கிறான் என்பதைப் புரிந்து கொண்டாள் புஷ்பா. 'இப்படி ஓர் ஆடவனைக் கட்டிப் போடக்கூடிய சக்தி என் அழகுக்கு இருக்கிறதா?'' என்று இறுமாந் தாள்.

பிரயண்ட் பூங்காவில் அவள் ரோஜாக்களை ரசித்துக் கொண்டிருந்தபோது அவன் அருகே வந்து நின்று, ''இந்த மலர்களையும் பறித்து விடாதே. அதிகாரிகள் அமர்க்களப் படுத்தி விடுவார்கள்'' என்றான். புஷ்பா மெல்லச் சிரித்தாள். அவன் வேறு ஒரு ரோஜாச் செடியை ரசிப்பது போல் நடித்தவாறே, ''முகமலர் என்று சும்மாவா சொன்னார்கள்? இத்தனை ஆயிரம் பூக்கள் இங்கு இருந்தும் ஒன்று கூட உன் வதனத்துக்கு இணையாக வில்லையே'' என்றான்.

புஷ்பாவுக்கு உடம்பெல்லாம் ஜிவ்வென்று சூடேறியது. 'இத்தனை குறுகிய காலப் பழக் கத்தில் ஒருவனைத் தன்னால் இந்த அளவுக்கு வசீகரிக்க முடிகிறதே!' ''இந்தக் குளிருக்கு இதமாகப் புஷ்பங்களெல்லாம் சூரிய ஒளியில் குளிக்கின்றன பார்த்தீர்களா!'' என்றாள் அவனை ஏறிட்டு நோக்கி. சூரியனை விட அவன் அதிக தேஜஸுடன் அவளுக்குத் தோன் றினான்.

அவளைக் கவர்வதில் வெற்றி பெற்று விட் டதை அறிந்ததும் ஏற்பட்ட கர்வத்துடன் புன் னகை செய்து விட்டு அர்த்த நாரி அப்பால் சென்றான். மலர்களை ரசிக்கும் பாவனையில் அங்கே ஒரு காதல் நாடகம் நடந்ததைப் புஷ்பாவின் பெற்றோர் கவனிக்கவில்லை.

மறுநாள் தேவராஜன் குடும்பம் படகில் பவனி வந்து கொண்டிருந்த போது அர்த்த நாரி வேறு ஒரு தனிப் படகைச் செலுத்திக் கொண்டு இவர்களை நோக்கியே வந்தான். இரு படகுகளும் ஒன்றை ஒன்று நெருங்கிக் கிட்டத்தட்ட மோதிக் கொள்ளும் நிலைக்கு வந்து விட்டன. ''அக்கா! அக்கா! மோதப் போகிறது'' என்றாள் புஷ்பாவின் தங்கை மாலா. ''ஐயோ'' என்று அலறினாள் புஷ்பா

வின் தாய். ''திருப்பு திருப்பு'' என்று அதட்டினர் தந்தை. ஆனல் புஷ்பாவுக்கு இலகுவாகத் திருப்ப வரவில்லை. படகோட்டுவதில் அவள் கற்றுக்குட்டி. அத்துடன் மற்றொரு படகைச் செலுத்தி வருபவன் யார் என்பதைப் புரிந்து கொண்ட மறுகணம் அவளுக்கு வெலவெலத்துப் போய் விட்டது. 'அவருக்கும் படகோட்டத் தெரியாதா? புது அனுபவம்தானே? இதோ மோதப் போகிறது, படகுகள் கவிழப் போகின்றன. எல்லாரும் இந்தப் பத்து ஆள் ஆழமுள்ள ஏரியில் இன்று விழுந்து மூழ்கத்தான் போகிறேம். அப்பாவுக்கு மட்டுமே நீந்தத் தெரியும். அவரால் எத்தனை பேர்களைக் காப்பாற்ற முடியும்? கண்களை இறுக மூடிக்கொண்டு விட்டாள் புஷ்பா.



அடுத்த வினடியில் தாக்குதலை எதிர் பார்த்தவள் பல நொடிகள் ஒன்றும் அதிர்ச்சி ஏதும் உணராததால் மெல்லக் கண் விழித்தாள். என்ன ஆச்சர்யம்! அர்த்தநாரியின் படகு வெகு லாகவமாகக் கடைசி வினடியில் திருப்பப் பட்டு அவர்கள் படக்குக்கு அருகே பக்க வாட்டில் மிதந்தது. 'பொல்லாதவர்! படகோட்டத் தெரியாதவர் போல் நடித்திருக்கிருர்!'

''வணக்கம் ஸார்! உங்க பொண்ணுக்குப் புது அனுபவம் போலிருக்கு'' என்று அவன் தன் தகப்பனருடன் பேச்சுக் கொடுப்பதைக் காணப் புஷ்பாவுக்கு வியப்பு மேலும் அதிகரித்தது.

''நல்ல வேளை உனக்காவது நல்லபடியாகப் படகோட்டத் தெரிந்திருக்கிறதே தம்பி !''

''பிரமாதம் ஒன்றுமில்லை ஸார்! நானும் இந்த ஒரு வாரமாகத்தான் பயிலுகிறேன்!''

அப்புறம் பேச்சை வளர்க்க அர்த்தநாரிக்குச் சொல்லித் தரவா வேண்டும்? தேவராஜன் மதுரையில் ஒரு மில் அதிபர் என்றும் புஷ்பா பி. ஏ. படிப்பை முடித்து விட்டாள் என்றும் கல்யாணத்துக்கு வரன் தேடுவதாகவும் இன்னும் அவர்கள் குடும்பச் சரித்திரத்தையே கூடச் சுருக்கமாகத் தெரிந்து கொண்டு விட்டான். தனக்கு இணையாக அவனும் நிதானமாகத் துடுப்பு வலித்துத் தன் தகப்பனருடன் உரையாடியவாறே தன் பக்கமும் அடிக்கடி கண் வீச்சு செலுத்துவதைக் காணச் சிரிப்பாயிருந்தது புஷ்பாவுக்கு. புன்னகைக்கு மேல் வளராமல் காத்தாள்.

தேவ ராஜனும் அர்த்தநாரி பற்றிச் சிறிதளவு தெரிந்து கொண்டார். அதுவே அவருக்குப் போதுமாகி விட்டது. அர்த்தநாரி சென்னையில் தனியார் நிறுவனமொன்றில் குமாஸ்தா. மாதம் இருநூறு ரூபாய் சம்பளம். லாட்டரியில் ஐந்நூறு ரூபாய் பரிசு விழுந்ததால் அதை எடுத்துக் கொண்டு லீவு போட்டு விட்டுக் கொடைக் கானல் வந்து விட்டான். படிப்பு எஸ். எஸ். எல். ஸி. வரைதான். அப்புறம் டைப் ரைட்டிங் — ஷார்ட் ஹாண்ட் லோயர் தேறினன். இவையும் மாமா ஒருவர் தயவினல்தான், அவனுக்காக அதற்குமேல் செலவழிக்கத் தம்மால் முடியாது என்று அவர் கூறி விட்டார். பெற்றேர் இல்லாத அனதையான தன்னை இவ்வளவு தூரம் அவர் வளர்த்ததே பெரிய காரியம் என்பது அர்த்த நாரிக்குப் புரிந்தது. எப்படியோ சிபாரிசு பிடித்து வேலை தேடிக் கொண்டான். நாட்களை ஓட்டிக் கொண்டும் இருந்தான்.

இதையெல்லாம் கேட்கத் தேவ ராஜனுக்கு எவ்வளவு அசுவாரஸ்யம் தட்டியதோ அவ்வளவுக்கு புஷ்பா அனுதாபமும் கனிவும் பரிவும் கொண்டாள். ஏற்கெனவே அவன் தன் அழகில் கட்டுண்டதாகக் காட்டிக் கொண்டதில் பெருமிதமும் துணிவுடன் அவன் தன்னை அணுகிய முறையில் ஒரு மயக்கமும் கொண்டிருந்த புஷ்பா, அவன் காதலை ஏற்பது என்றும் அவன் வாழ்வை மலர்வித்து மணம் பரவச் செய்வது என்றும் தீர்மானித்து விட்டாள்.

அதன் விளைவுதான் குடும்பத்தினரின் எதிர்ப்பையும் எச்சரிக்கையையும் அலட்சியம் செய்து, இதோ, அர்த்தநாரியைத் திருமணம் செய்து கொண்டு அவன் ஜாகை நோக்கி டாக்ஸியில் அவனுடன் சென்று கொண்டிருக்கிருள்.

ஜாகை நெருங்கி விட்டதால் அர்த்தநாரி சிறிது விலகிக்கொண்டான். புஷ்பா தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு இறங்கத் தயாராஞள். வீட்டின் எதிரே டாக்ஸி நின்றதும் அங்கே ஒண்டுக் குடித்தனம் இருந்த வேறு பலரும் வாசலில் வரவேற்கக் கூடினர்கள். ஆண் மக்கள் அவரவர் காரியாலயங்களுக்குச் சென்று விட்டிருந்தபடியால் பெரும்பாலும் பெண்களே காணப் பட்டனர். இருவர் ஆரத்தி சுற்றினர்.

டாக்ஸிக்குப் பணம் கொடுத்து அனுப்பி விட்டுப் புஷ்பாவின் வலக்கரம் பற்றி, இரண்டே அறைகள் கொண்ட தன் ஜாகைக்கு அழைத்துப் போஞன் அர்த்தநாரி. ''வலது கால்! வலது கால்!'' என்று ஒரு மாமி ஞாபகப் படுத்தினள்.

உள்ளே நுழைந்ததும் கதவைத் தாளிட்ட அர்த்தநாரி, புஷ்பாவைத் தன்பால் இழுத்துப் பரபரப்புடன் அணைத்தான்.

''ஒரு நல்லநாள் பார்க்க வேண்டாமா? கட்டிலை அலங்கரிக்க வேண்டாமா? இரவு வரையாவது காத்திருக்கக் கூடாதா?'' என்றெல்லாம் புஷ்பா எழுப்பிய கேள்விகள் அவன் செவிகளில் ஏறவேயில்லை.

வெளியே மாமிகள் கண் சிமிட்டிச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

## 2

மனமும் உடலும் திருப்தியுற்ற நிலையில் அர்த்தநாரி புரண்டு கொடுத்தான். இமைகள் மூடிக் கொள்ள, கண்கள் இருண்டன. சற்று

நேரத்தில் இலேசான குறட்டை ஒலி எழுந்தது. ஆனால் புஷ்பாவுக்குத் தூக்கம் வரவில்லை.

அவள் ஆடைகளைத் திரும்ப உடுத்திக் கொண்டாள். கட்டில் விளிம்பிலேயே சாய்ந்து யோசிக்கலானாள். 'அப்பாவிடம் தான் விரோதித்துக் கொண்டு வந்தது தவறோ?' என்ற இலேசான பயம் இப்போது அவளிடம் எட்டிப் பார்த்தது. அதை யொட்டிப் பழைய நினைவுகள் மீண்டும் தோன்றின.

மதுரையில் புஷ்பாவும் சென்னையில் அர்த்தநாரியுமாக இருந்தாலும் ஒருவரைப் பற்றி ஒருவர் தெரிந்து கொள்ள வாய்ப்புக்கள் ஏற்பட்டன. கொடைக் கானலில் சந்தித்த பிறகு புஷ்பா ஒருமுறை தன் தாயாருடன் சென்னைக்கு வர நேர்ந்த போது, சிநேகிதியைப் பார்க்கப் போவதாக அவளிடம் புளுகி விட்டு அர்த்தநாரியைக் காணச் சென்றாள். அதற்கப்புறம் கடிதப் போக்குவரத்து இருந்து வந்தது. தபால் பெட்டி ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டாள் புஷ்பா. அர்த்தநாரி எழுதிய கடிதங்கள் தபால் பெட்டி எண்ணை விலாசமாகக் கொண்டிருந்தன. ஆகவே வீட்டில் ஒருவருக்கும் தெரியவோ ஆட்சேபணை எழுப்பவோ வழியில்லாது போயிற்று. ஒவ்வொரு கடிதத்திலும் ''நான் இன்னும் எத்தனை காலம் காத்திருப்பது?'' என்று கேட்டுப்பறந்தான் அவன். இந்தக் கணமே அவளை முழுமையாகத் தன்னுடையவள் என்று கூறிக் கொள்ள உரிமைபெற வேண்டும் என்று பரபரத்தான். அவள் அழகு சதா தன்னைத் துன்புறுத்துவதாகவும் காரியாலயத்தில் வேலையே ஓடவில்லை என்றும் புலம்பினான். 'வாழ்க்கையில் விரும்பிய எதையுமே அடைய முடியாதுபோன அனாதை நான்; உன்னையாவது அடைய முடிந்தால் பேருவகை அடைவேன்' என்று எழுதினான். அவளும் தன் பதில்களில் அன்பையும் பரிவையும் கொட்டினாள்.

அவளுடைய கல்யாணப் பேச்சு அடிபட்டது. ஒரு வரன் பற்றிய விவரங்கள் அலசப்பட்டன. புஷ்பா இதுதான் சமயம் என்றும் இதற்குமேல் தாமதிக்கக் கூடாது என்றும் தீர்மானித்து அப்பாவிடம் மனம் விட்டுக் கூறினாள்: ''எனக்காக நீங்கள் சிரமப்பட வேண்டாம் அப்பா; நான் ஏற்கெனவே ஒருவரை வரித்து விட்டேன்.'' 'பளிச்' சென்று பெயர் விலாசம் எல்லாம் கொடுத்துக் கொடைக்கானல் சந்திப்பையும் நினைவூட்டினாள்.

அவனைப் பற்றிக் கொடைக்கானலில் தான் அசுவாரஸ்யமாக எண்ணியது தேவ ராஜனுக்கு நினைவு வந்தது. ஒரு தீர்மானத்துடன் ஆனால் அமைதியாகப் பேசினார்: ''ஒன்று அவனை மறந்து விடு; அல்லது எங்களை மறந்து விடு... இதோ பார்! நம் ஜாதி வேறு என்பது மட்டுமில்லை அந்தஸ்தை எண்ண வேண்டாமா? மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம்.''

''ஜாதியாவது அந்தஸ்தாவது அப்பா? எந்தக் காலத்தில் இருக்கிறீர்கள நீங்கள்? பணத்துக்கு இன்னும் மதிப்பு இருக்கிறது; ஆனால் மற்ற விஷயங்களில் மக்களுடைய மனப் பான்மையில் ஒரு பெரிய யுகப் புரட்சி நடந்திருக்கிறது.''

''அவன் இந்த வீட்டுக்கு மாப் பிள்ளையாக வருவது நடக்காத காரி



யம்: அவன் நம் செல்வத்தில் பங்கு பெற ஆசைப்பட்டு உன்னை மயக்கி இருக்கிறான் என்று கூட எனக்குத் தோன்றுகிறது.''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் படித்தவள்; சம்பாதிப்பேன். இருவர் சம்பளத்திலும் அடக்கமாகக் குடித்தனம் நடத்துவோம்.''

''நீ படித்தவள் என்பதால்தான் நானும் குரலை உயர்த்தாமல் பேசுகிறேன், புஷ்பா. நீயே யோசித்து முடிவெடுக்க வேண்டிய விஷயம் இது. அவனா அல்லது நாங்களா? அவனை நீ தேர்ந்தெடுத்தால் நான் கோபித்துக் கொள்ள மாட்டேன். உன்னை அவனிடம் ஆட்சேபணை இன்றி அனுப்பி விடுகிறேன். ஆனால் அதன் பிறகு உனக்கும் எனக்கும் இடையில் ஸ்நானப் பிராப்தி கூட இராது. என் சொத்தில் உனக்கு ஒரு சல்லிக் காசு கிடைக்காது. உன் கணவனுக்கோ அல்லது உனக்கோ எந்த விதத்திலும் உதவ மாட்டேன். உன் முடிவை நாளைக் காலையில் சொல்லு!''

மறுநாள் காலை அவள் ஒரே ஒரு ஸூட் கேஸை நிரப்பிக் கொண்டாள். ''இதில் நாலைந்து புடைவைகள் இருக்கின்றன. இந்தப் பெட்டியை நான் எடுத்துப் போக நீங்கள் அனுமதித்தால் போதும்!''

''சரி'' என்று துடைத்துப் போட்டாற் போல் சொல்லி விட்டார் தேவ ராஜன். ''இன்று அவனுக்குக் கடிதம் எழுதி விட்டு நாளை புறப்படு. பணம் காசு இல்லாமல் வருகிறாய் என்பது தெரிந்தால் அவன் உன்னை நிராகரித்து விட்டாலும் ஆச்சர்யமில்லை.''

ஆர்ப்பாட்டம் ஏதுமின்றித் தேவராஜன் மகளை அனுப்பி வைத்து விட்டார். அவருக்கு எப்போதுமே அது மாதிரி சுபாவம் தான் என்பது புஷ்பாவுக்குத் தெரியும். தம் இஷ்டப்படி நடந்தால் ஒட்டிக் கொள்வார். கருத்து மாறுபாடு இருந்தால் கத்தரித்து விடுவார். அவர் எதிர்பார்த்தது போல் அர்த்தநாரி புஷ்பாவை நிராகரித்து விட வில்லை. சென்னையில் ஸ்டேஷனுக்கு வந்து அவளை அழைத்துப் போனான். அன்று காரியாலயத்துக்கு லீவு போட்டு விட்டு அவளுடனேயே இருந்து ஆறுதல் சொன்னான். எதிர் காலம் பற்றி நிறையப் பேசினார்கள். ரிஜிஸ்தர்



ராமு (கோபுவிடம்): நாளைக்கு என்னால் வரமுடியாது. தலைக்குமேல் வேலை இருக்கிறது.

கோபு: ஏண்டா, அப்படி என்ன வேலை?

ராமு: கிராப் வெட்டிக் கொள்ள வேண்டுமடா.

—ப்ரியா.




மணம் செய்து கொள்வதுதான் நல்லது; அவள் முதல் காரியமாக வேலை தேடிக் கொள்ள வேண்டியது என்றெல்லாம் தீர்மானித்தார்கள். அன்றே நாளிதழ்களைப் புரட்டி வேலைவாய்ப்புக்களை ஆராய்ந்தார்கள். ஓரிரு விண்ணப்பங்களையும் தபாலில் சேர்த்தார்கள். ரிஜிஸ்தர் திருமணத்துக்குரிய சம்பிரதாயங்கள் முடிய மூன்றுமாத காலம் ஆகும் அதுவரை அவனுடன் சேர்ந்திருக்கத் தான் விரும்பவில்லை என்றாள் புஷ்பா. பக்கத்துப் போர்ஷனில் வசித்த வயதான தம்பதியுடன் இருந்து கொண்டாள்.

ஒரு வாரம் பத்து நாள், அவனுடன் பழகியதில், கொடைக் கானலில் அவள் அழகைப் புகழ்ந்து வாசாலகமாகப் பேசி, அவளை அடைந்தே தீருவேன் என்பது போல் தைரியமாக நடந்து கொண்ட அர்த்த நாரிக்கும், கடிதங்கள் மூலமாக அவளுக்காக ஏங்கி ஏங்கிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருப்பதாகக் காட்டிக் கொண்ட அர்த்தநாரிக்கும், இப்போது தான் நெருங்கிப் பழகுகிற அர்த்த நாரிக்கும் இடையில் நிரம்ப வித்தியாசம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டாள் புஷ்பா. கொடைக் கானலில் உல்லாச வேளையில் உற்சாகம் கொப்பளித்த போதும், கடிதங்களில் பக்கம் பக்கமாக வெளியான காதல் சல்லாபங்களைப் பார்த்த போதும் வெளியாகாத சில குணங்கள் அர்த்தநாரியிடம் இருப்பதைப் புஷ்பாவால் இப்போது புரிந்து கொள்ள முடிந்தது.

இருவரும் இரு சினிமாக்களுக்குப் போனார்கள். இரண்டையும் தேர்ந்தெடுத்தது அவன்தான். இரண்டுமே அவளுக்குப் பிடிக்காத ரகத்தைச் சேர்ந்தவை. கல்யாணம் என்று காரணம் சொல்லி ஆபீஸில் வாங்கியிருந்த கடனைக் கொண்டு தாலி செய்தான். ஒரே ஒரு புடைவையும் எடுத்தான். மலிவு விலைப்புடவை என்றாலும் அதிலும் பல ரகங்கள், மோஸ்தர்கள் உண்டோ? அவள் தனக்குப் பிடிக்கும் என்று சொன்னதை 'ஐயே, சகிக்கலை' என்று ஒதுக்கினான். இது தான் நன்றாயிருக்கும் உனக்கு என்று சொல்லி ஒன்றை எடுத்துக் கொடுத்தான். மறுப்புக் கூறாது அவள் ஏற்றாள் என்றாலும் மனத்துக்குள் ஓர் உறுத்தல். எனக்கென்று ஓர் அபிப்பிராயம் இருக்கக் கூடாதா? எல்லாம் இவர் இஷ்டம்தானா? ஹோட்டலில் டிபன் சாப்பிடும் போது கூட என்ன ஆர்டர் பண்ணலாம் என்று ஒரு வார்த்தை என்னைக் கேட்க மாட்டேனென்கிறாரே! செல்வக் குடும்பத்தில் பிறந்து தான் நினைத்ததையெல்லாம் சாதித்துக் கொண்ட புஷ்பாவுக்கு அவனுடைய இந்தப் போக்குப் பிடிக்கவில்லை.

கல்யாணத்தன்று மாலை கோயிலுக்குப் போகலாம் என்றால் அவன் முதல்நாள் இரவே கோயில் விவகாரத்தை முடித்து விடலாம் என்று அபிப்பிராயப் பட்டான். அப்போது அவள் பொறுக்க முடியாமல் கேட்டே விட்டாள்: ''உங்கள் கருத்துப்படி நான் நாலு தடவை நடந்து கொண்டால் என் அபிப்பிராயப்படி நீங்கள் ஒருதரம் நடந்து கொள்ளக் கூடாதா?'' அவனுடைய பதில் அவளைத் திகைக்க வைத்தது:

''நீ என்னுடைய மனைவியாகி விடப்போகிறாய். அப்புறம் உனக்கென்று எதுக்கு அபிப்பிராயம்? எல்லாவற்றையும் என் பொறுப்பில் விட்டுவிட்டு நீ நிம்மதியாக இருக்க வேண்டியதுதானே? என் இஷ்டம்தான் உன் இஷ்டம். என்னுடைய திருப்திதான் உனக்குத் திருப்தி. என் சுக துக்கங்களில் பங்கு கொள்வதிலேயே நிறைவு பெற வேண்டியவள்தானே நீ?''

''இதெல்லாம் பழங்காலத்தில் பத்தாம் பசலித் தனமான கொள்கைகள் என்பது உங்களுக்கு நிஜமாகவே தெரியவில்லையா?'' என்றாள் புஷ்பா வியப்புடன். இருபதாம் நூற்றாண்டில் முக்கால் பாகம் முடிந்து விட்ட காலம் இது.

''இன்னும் எத்தனை நூற்றாண்டுகள் ஆனாலும் சரி, நான் அன்று உயிர் வாழ்ந்தால் எனக்குப் பிடித்த கொள்கை இதுவாகத்தான் இருக்கும்'' என்றான் அர்த்தநாரி. ''என் பெயரையே எடுத்துக் கொள். அர்த்தநாரி என்பதற்கேற்ப நான் உன்னை என்னுடன் இணைத்துக் கொண்டு விடப் போகிறேன். நாளை அதற்கான சான்றிதழும் கிடைத்து விடும். என்னுள் ஒன்றாக என்னுடன் நீ இணைந்த பிறகு உனக்கென்று எதற்கு ஒரு தனி விருப்பம், யோசனை எல்லாம்?''

அவள் சிரித்தாள்: ''சக்தி இல்லையெனில் சிவன் இல்லை என்று நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? சக்திக்குத்தான் எப்போதும் முதலிடம். நீங்களோ அர்த்தநாரி என்ற பெயருக்கே புது அர்த்தம் கற்பிக்கிறீர்கள்!''

''எனக்குத் தெரிந்த பிடித்தமான அர்த்தம் நான் சற்றுமுன் சொன்னதுதான். அதன் படிதான் நான் நடந்து கொள்வேன்'' என்றான் அர்த்தநாரி தீர்மானமாக.

அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தது. தனக்கென்று வாய்க்கு ருசியாக ஒன்று சமைத்துக்

கொள்ள முடியாது. தான் இஷ்டப்பட்ட ஓரிடத்துக்குப் போய் வர முடியாது. தனக்குப் பிடித்தமானவர்களுடன் பேச முடியாது என்றெல்லாம் தான் இது வளர்ந்து உருப்பெறப் போகிறது என்பது அவளுக்குப் புரிந்தது. அது ஏறத்தாழ அடிமைத்தனம் போலல்லவா ஆகிவிடும்? ஏறத்தாழ என்ன, அதுவேதான்!

ஆனால் அது பற்றிய விவாதத்தை வளர்க்க அவள் விரும்பவில்லை. நாளை திருமணம். இன்று தர்க்கமா? அது விசுவ ரூபமெடுத்து மனக் கசப்பாகி விட்டால்? அதைத் தவிர்க்க விரும்பியவளுக்கு ஒரு நம்பிக்கையும் கூட. இப்போதைக்குத்தான் அவனுக்கு அடிமை போலிருந்தால்தான் என்ன? தன் அழகுக்கு அடிமையாகி விட்டிருக்கும் அவனை நல்ல வார்த்தை சொல்லி நாளடைவில் மனம் மாறச் செய்து விட முடியாதா என்ன?

நேற்று இருந்த அந்த நம்பிக்கையும் இன்று தகர்ந்து விட்டது. அவள் அழகினை ரசிக்கின்ற அடிமையல்ல அவன். அதனை ஆள நினைக்கும் ஆணவக் காரன். அவன் மட்டும் ரசிகனுயிருந்தால் புஷ்பா இப்படி மனநிறைவின்றிச் சஞ்சலப்பட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்க

அவள் சிறிது வெட்கத்தோடு தன் காதல் திருமணம் பற்றிக் கூறினாள். வேலைக்குப் போக வேண்டிய பொருளாதார நிர்ப்பந்தம் இருப்பதைச் சொன்னாள்.

''ஐ கன்கிராஜுலேட் யூ!'' என்றார் கங்காதரன். ''சொத்து சுதந்திரம், சுகபோக வாழ்க்கை, நகைநட்டு எல்லாவற்றையும் காதலுக்காகத் தியாகம் செய்வதென்பது இலேசுப்பட்ட காரியமில்லை.''

'சொத்து கிடக்கட்டும். சுதந்திரத்தைச் சொல்லுங்கள்!' என்று தனக்குள் கூறிக் கொண்டாள் புஷ்பா. 'எதை வேணுமானாலும் காதலுக்காகத் துறக்கலாம், சுதந்திரத்தைத் தவிர! நான் அதையும் இழந்து சாவி கொடுத்து முடுக்கி விடப்படும் பொம்மையாகி விட்டேன்! வெளிப்படையாக அவள் வேறு வார்த்தைகளைப் பேசினாள். ''காதலில் நான் உறுதியாக நின்றதற்கு என்னைக் கன்கிராஜுலேட் செய்வதைவிட அந்தக் காதல் அர்த்தமுள்ள இல்வாழ்க்கையாக மலர்வதற்கு எனக்கு வேலை கொடுத்து உதவினீர்களானால் எவ்வளவோ நன்றாக இருக்கும்.''










நேருமா? அழகை ஆண்டுவிட்ட திருப்தியில் குறட்டை விட்டுக் கொண்டிருக்கும் அர்த்தநாரியைப் பார்த்தாள் புஷ்பா.

அப்பாவிடம் விரோதித்துக் கொண்டுதான் புறப்பட்டு வந்தது தவறோ என்று அவளுக்கு மறுபடியும் தோன்றியது. தவறானாலும் இனி என்ன செய்வது? கணவனிடம் கோபித்துக் கொண்டு மறுபடியும் அப்பாவிடம் போக முடியுமா? எந்த முகத்தை வைத்துக் கொண்டு அவர் எதிரே நிற்பது? அப்படியே சென்றாலும் அவர் என்னைத் திரும்பக் கூடப் பார்க்கப் போவதில்லை. அவர் சுபாவம் அப்படி; இவர் சுபாவம் இப்படி! புஷ்பாவுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. ஓசைப்படாமல் கண்ணீர் உகுத்தாள்.

## 3

புஷ்பாவுக்கு வேலை கிடைத்து விட்டது. பத்திரிகை விளம்பரத்தைப் பார்த்து விட்டு மனுச் செய்தவளுக்கு நேர்முகத் தேர்வு நடந்தது. மானேஜர் கங்காதரனே பேட்டி கண்டார். அவள் தகப்பனாரைப் பற்றி அறிந்ததும் அவர் திறந்த வாய் மூடாமல் அவளை நீண்ட நேரம் பார்த்தார். மதுரை தேவராஜ் மில்ஸ் அதிபர் தேவராஜன் மகளா இங்கே ரிஸப்ஷனிஸ்ட் வேலைக்கு வந்திருப்பது?

''அதற்காகவும் கன்கிராஜுலேஷன்ஸ்!'' என்று வாழ்த்தினார் கங்காதரன், வேலை கொடுத்து விட்டதற்கு அடையாளமாக. ''ஆனால் ஒரு நிபந்தனை. ரிஸப்ஷனிஸ்ட் என்றால் அலங்காரமாக உட்கார்ந்திருந்து என்னைப் பார்க்க வருகிறவர்களை உபசரிப்பது மட்டுமல்ல. என் அந்தரங்கக் காரியதரிசியாகவும் பணியாற்ற வேண்டும். சீக்கிரமே டைப்ரைட்டிங் ஷார்ட் ஹாண்ட் தேற வேண்டும். இங்கே வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து அனுபவம் பெற வேண்டும்.''

''ஆகட்டும் ஸார்.''

''குட் லக்'' என்றார் கங்காதரன்.

வேலை கிடைத்து விட்டது என்று சொன்னால் ஆனந்தக் கூத்தாடுவான் அர்த்தநாரி என்று புஷ்பா எண்ணினாள்.

அவன் அசுவாரஸ்யத்துடன் ''ஓஹோ'' என்றான், சட்டையைக் கழற்றியவாறு.

காப்பி கொடுத்து விட்டு ''மாதம் முந்நூற்றைம்பது ரூபாய் சம்பளம்'' என்றாள், உவகையுடன்.

''ரொம்பப் பெருமையடித்துக் கொள்ளாதே! புருஷனை விட அதிகம் சம்பாதிக்கிறோம் என்பதில் கர்வம் தலைக்கேறி விடப்

போகிறது'' என்ருன். ஒரு வாரப் பத்திரிகையைப் பயன் படுத்தி மேஜையைத் தூசு தட்டினுன். ''இதையெல்லாம் கொஞ்சம் துடைத்து வைக்கக் கூடாதா?''

அவளுக்குச் 'சீ' யென்று போய் விட்டது. ''நாம் சிரமமின்றிக் குடும்பம் நடத்தலாம் என்பதால்தான் சந்தோஷப் படுகிறேன்; எனக்கு அதிகச் சம்பளம் என்பதற்காக அல்ல.''

''கவலைப் படாதே. உனக்கு வேலையே இல்லை என்ருலும் உன்னைக் காப்பாற்ருமல் விட மாட்டேன். என் சம்பளத்தில் கூழோ கஞ்சியோ எது கிடைக்குமோ அதில் உனக்கும் பங்கு உண்டு.''

''ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? நான் அதிகம் படித்திருப்பதால் அதிக சம்பளம் தருகிருர்கள். அவ்வளவு தான். நீங்களும் படித்துப் பட்டம் பெற்றிருந்தால் இன்று ஐந்நூற்றுக்குக் குறையாமல் வாங்குவீர்கள்.''

''நான் படிக்காத முட்டாள் என்று வேறு சொல்லிக் காட்ட வேண்டுமா? அடுப்படியில் வேலை இல்லை? ராத்திரிக்கு வயிற்றில் ஈரத் துணிதானு?''

அவள் மௌனமாகத் திரும்பி விட்டாள். இப்படி ஓர் அர்த்தமற்ற பொருமை அவனிடம் உருவாகும் என்று அவள் எதிர் பார்க்கவேயில்லை. உலை கொதித்த போது அவள் நெஞ்சமும் கொதித்துக் கொண்டிருந்தது. கஞ்சி வடிந்தபோது கண்ணீரும் வடிந்தது.

கொடைக் கானலில் அவளைச் சந்தித்து மனம் கவரப் பேசியது, பிறகு ஏக்கத்தை வெளிப் படுத்தி, எழுதிய கடிதங்கள், அப்புறம் நடந்த ரிஜிஸ்தர் திருமணம் எல்லாமே அவள் அழகை ஆளுவதற்கு அவன் போட்ட அஸ்திவாரம்தான். காதல் அல்ல. அவன் தன்னைக் காதலிப்பதாக எண்ணி ஏமாந்தது தன் குற்றம். காதல் என்ருல் இப்படியா நடந்து கொள்வார்கள்? நான் காதலுக்காக எவ்வளவு தியாகம் செய்து விட்டு வந்திருக்கிறேன்! அது ஏன் இவருக்குப் புரியவில்லை? ஏன் இப்படிப் பொருமைப் பட்டுப் புழுங்குகிருர்?'

அன்றிரவு அவன் அவளை அணைத்த போது அவளுக்கு வெறுப்பாயிருந்தது. முதுகைக் காட்டிக் கொண்டு கட்டிலின் விளிம்புக்கு ஒதுங்கினுள். 'பகவானே! இன்று ஒரு நாளைக்காவது வேண்டாம்! ஆனுல் அவன் விடவில்லை. முரட்டுத்தனமாக அவளைத் தன் பக்கம் உருட்டி இழுத்துக் கொண்டான். அவள் அழுந்த அழுந்த பற்களைக் கடித்தாள். ஒத்துழைக்க மறுத்தாள். அவன் விடவில்லை. பலவந்தம் தலைகாட்டியது.

'இன்று மட்டுமென்ன என்றுமே இப்படித் தான் இருந்திருக்கிறது' என்று எண்ணினுள் அவள். நேற்றும் அதற்கு முன்பும் பலவந்தத் துக்கு அவசியமில்லாத அளவில் நான் ஒத்துழைத்திருக்கலாம். ஆனுல் என்றுதான் பரிவையும் பண்பையும் இவரிடம் நான் கண்டிருக்கிறேன்? இவர் ஆள்பவர்; நான் அடிமை; இவர் ஆள்பவர், நான் அடிமை; ஆள்பவர், அடிமை; ஆள்பவர், அடிமை; ஆள்பவர், அடிமை...

அவன் ஒரு பெருமூச்சுடன் புரண்டு கொடுத்தான். ''புஷ்பா!''

''உம்.''

''சம்பளம் வந்ததும் அதை அப்படியே என்னிடம் கொண்டு வந்து தந்து விடு! என்ன? அப்புறம் உன் செலவுக்கு வேண்டியதை என்னிடம் கேட்டு வாங்கிக் கொள்.''

''சரி.'' என்ருள்.

'இவருடன் ஒன்ருக மனமும் உடலும் இணைந்த பிறகு எனக்கென்று தனித் தன்மைகள், ஆசைகள், தேவைகள், உணர்ச்சிகள், சிந்தனைகள் ஏது! என் உணர்வுகள் அனைத்தும் இவருடன் இரண்டறக் கலந்து விட வேண்டியதுதானே? நான் அர்த்த நாரியாகி விட்டேன், நான் புஷ்பா இல்லை! இவருடைய இன்பம் எனக்கு இன்பம்; இவருடைய திருப்தி எனக்குத் திருப்தி; இவரது இன்பம் எனக்கு இன்பம்; இவரது திருப்தி எனக்குத் திருப்தி.' மந்திரம் போல் இதைத் திரும்பத் திரும்ப ஜபித்துக் கொண்டு இரவு நீண்ட நேரம் வரை கண் விழித்திருந்தாள் புஷ்பா.

**ப**ரிசுச் சீட்டு வாங்குவது மட்டுமல்ல, அர்த்தநாரி சீட்டாடுவதும் உண்டு. சிலசமயம் குதிரைப் பந்தயத்துக்குப் போவதும் உண்டு என்பது புஷ்பாவுக்குச் சீக்கிரமே தெரிய வந்தது. அவள் கொண்டு வரும் சம்பளம் பாதிக்கு மேல் இரண்டே நாட்களில் இருந்த இடம் தெரியாமல் கரைந்து போய்க் கொண்டிருந்தது. ''கவலைப் படாதே. என்ருவது ஒரு நாள் நான் ஜாக்பாட் அடிக்கத்தான் போகிறேன்'' என்ருன் அர்த்தநாரி.

'நாக் கூசாமல் இவ்விதம் பேச எப்படித் தான் மனம் வருகிறதோ?' என்று எண்ணிய புஷ்பா, ஒரு நாள் வேதனை தாங்காமல் சொன்னுள்: ''நீங்கள் லாட்டரிக் குலுக்கலில் ஐந்நூறு ரூபாய் பரிசு விழுந்தது; அதை எடுத்துக் கொண்டுதான் கொடைக்கானல் வந்தேன் என்று சொன்னீர்களே, அப்போதே நான் உங்களைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். விசாரித்தும் இருக்க வேண்டும். 'நல்ல காரியத்துக்குத்தானே லாட்டரிச் சீட்டுப் பணத்தை அரசாங்கத்தில் பயன் படுத்துகிருர்கள்' என்று என்னை நானே ஏமாற்றிக் கொண்டு வாய் திறக்காமல் இருந்து விட்டேன். ஆனுல் இப்போது புரிகிறது, அரசு நடத்தினுலும் தனியார் நடத்தினுலும் சிறு தொகையானுலும் பேரிழப்பானுலும் சீட்டாட்டமோ, குதிரைப் பந்தயமோ, லாட்டரியோ எதுவானுலும் சூதாட்டம் சூதாட்டம்தான். எல்லாவற்றையும் விட்டு விடுங்கள். ஐந்நூற்று ஐம்பது ரூபாயில் நாம் ஆனந்தமாக வாழலாம்.''

''நீ எனக்கு ஒரு சின்ன உதவி செய்தால் விட்டு விடுகிறேன், புஷ்பா!''

''கட்டளை இட்டுத்தானே உங்களுக்குப் பழக்கம்?''

''சரி கட்டளை என்றே வைத்துக்கொள்!''

''சொல்லுங்கள், நீங்கள் ஆணையிட்டு நான் மறுப்பதா? நான் மறுத்தால் நீங்கள் தான் விடப் போகிறீர்களா?''

''சொல்கிறேன். அதற்கு முன், நான் ஏன் இப்படி சூதாட்டத்தில் ஈடுபடுகிறேன் என்று உனக்குப் புரிகிறதா?''

''கொஞ்சம் கூடப் புரியவில்லை.''

''எனக்குச் சம்பளம் குறைவாக இருக்கிறது. பரிசு விழுந்தாலாவது நிரம்பப் பணம் கிடைக்காதா என்று பார்க்கிறேன்.''

''கிடைக்கிற வருவாயையும் தொலைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!''

''நான் பதவி உயர்வு பெற்று எனக்குச் சம்பளம் கூடக் கிடைத்தால் இந்தப் பழக்கத்தைச் சுலபமாக விட்டு விடுவேன் புஷ்பா. ஆனால் இப்போது எனக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை இருக்கிறது. அதை நீக்க என்னால் முடியவில்லை.''



''பெண்டாட்டி அதிகம் சம்பாதிக்கிறாளே, என்று?'' அவள் மெல்லச் சிரித்தாள்.

''இல்லை, உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்பிருந்தே எனக்கு அந்த மனப்பான்மை உண்டு. நான் கெட்டிக்காரன், அறிவாளி என்பது எனக்குத் தெரியும். என் ஒரே குறை நான் ஏழைக் குடும்பத்தில் பிறந்து அனாதையாகவும் ஆனதுதான். பெரிய படிப்புப் படித்திருந்தால் கைநிறைய சம்பளம் வாங்குவேன்.''

''இல்லாததை எண்ணிக் குறைப்பட்டு என்ன பயன்? வேணுமானால் மாலைக் கல்லூரியில் சேர்ந்து படிக்கலாமே?''

''பள்ளிப் படிப்பு முடிந்ததுமே கல்லூரியில் சேர்ந்திருந்தால் தேவலாம். இப்போது காரியாலயத்திலிருந்து களைத்துப் போய்த் திரும்பியதும் திரும்பாததுமாக மாலைக் கல்லூரிக்குப் போவதென்றால் அலுப்பாயிருக்கிறது.''

'உங்களுக்கு அலுக்காத விஷயம் ஒன்றுதான். அது என் அழகுதான், அதை ஆள்வதுதான்' என்று மனத்துக்குள் கூறிக் கொண்டாள் புஷ்பா. ''படித்துப் பட்டம் பெறவும் மாட்டீர்கள், பதவி உயர்வும் வேண்டும். கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்ற கதைதான். விளைவு, தொடர்ந்து குமாஸ்தா உத்தியோகம், குறைவான சம்பளம், தாழ்வு மனப்பான்மை, சூதாட்டம். உங்களை அறிவாளி என்றும் சாமர்த்தியசாலி என்றும் சொல்லிக் கொள்கிறீர்களே, அறிவாளி நடந்து கொள்கிற விதமா இது?''

''உன்னிடம் உபதேசம் பெற நான் பேச்சை ஆரம்பிக்கவில்லை. எனக்காக நீ ஒரு காரியம் செய்தாக வேண்டும். செய்வாயா, மாட்டாயா? அதைக் கேட்கப் போய்த்தான் இந்தப் பேச்சு வளர்ந்தது.''

''உங்களுக்காக நான் ஒரு காரியம் செய்தே ஆக வேண்டும் என்று கூறி விட்டுக் கூடவே, செய்வாயா மாட்டாயா என்ற கேள்வி எதற்கு?''

''ஆமாம் என் நலன்தான் உன் நலன் என்னும்போது நீ மறுப்பதற்கு நியாயம் இல்லைதான். செய்யத்தான் வேண்டும்!''

என்ன காரியத்தை அவள் செய்ய வேண்டும் என்று அவன் விவரித்த போது அவளுக்கு அருவருப்பினால் வயிற்றைக் குமட்டியது.

## 4

அர்த்தநாரி பணியாற்றிய காரியாலயத்தில் தலைமைக் குமாஸ்தா பதவி காலியாக இருந்தது. அதனை அடையத் தான் எல்லா வகையிலும் தகுதி உடையவன் என அர்த்தநாரி எண்ணினான். ஆனால் அவனுக்குப் பின்னால் வந்து சேர்ந்த ஒருவனும் அப்பதவிக்கு ஆசைப் பட்டான். அவனுக்கு அர்த்தநாரியை விட அதிகப் படியாக இருந்த ஒரே தகுதி, அவன் பட்டதாரி என்பது தான். எங்கே தன்னைத் தாண்டிக் கொண்டு அந்தப் பட்டதாரி அப்பதவியில் போய் உட்கார்ந்து விடுவானோ என்று இப்போது அர்த்தநாரிக்குக் கவலை. காரியாலய மானேஜர்தான் தலைமை அலுவலகத்துக்குச் சிபாரிசு செய்ய வேண்டும். அவர் அர்த்தநாரியைச் சிபாரிசு பண்ணலாம். அல்லது ஒரு வேளை அந்தப் பட்டதாரியைச் சிபாரிசு செய்து விடலாம். சொல்வதற்கில்லை.

''எப்படியோ பட்டம் வாங்கி விட்டானே யொழிய அந்தப் பயல் ஞான சூன்யம் புஷ்பா. ஒரு கடிதாசு ஒழுங்காக டிராஃப்ட் பண்ண வராது. மானேஜரே எதற்கெடுத்தாலும் என்னைத்தான் கூப்பிட்டு அனுப்புவார்.''

''அப்படியானால் எதற்குக் கவலைப் படுகிறீர்கள்? உங்கள் தகுதி மானேஜருக்குத் தெரிந்திருக்கிறதே.''

''ஆனால் இந்தப் பயலும் அவரிடம் போய்ப் பல்லை இளித்திருக்கிறான். இறுதி முடிவு எடுக்க வேண்டியது பம்பாய்த் தலைமைக் காரியாலயம்தான். அவர்கள் மானேஜரின் ரிப்போர்ட்டைப் பார்த்துத் தீர்மானிப்பார்கள். பட்டதாரி ஒருவன் இருக்கிறான் என்னும் போது ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள அவர்களுக்கு அவனைத்தான் தேர்ந்தெடுக்கத் தோன்றும். மானேஜர், உறுதியாக, 'அர்த்தநாரிதான் இந்தப் பதவிக்கு ஏற்றவன்' என்று அழுத்தம் திருத்தமாக எழுதினால்தானே? இவனும் தேவலாம், அவனும் மோசமில்லை என்பது போல் ஏதாவது வழ வழா கொழ கொழா என்று எழுதித் தொலைத்தால்?''

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டுமென்கிறீர்கள்?''

''நீ என் மானேஜரை ஒரு தடவை போய்ப் பார்த்து என் சார்பில் பேசி விட்டு வா!''

''என்ன?'' அவள் திடுக்கிட்டாள். அவளுக்குப் புரிவது போலிருந்தது. ஆனால் அருவருப்புக் காரணமாகப் புரிந்து கொள்ள விரும்பவுமில்லை. ''நான் போய்ச் சொல்லி என்ன பிரயோஜனம்? என் சிபாரிசு என்ன பயன் தரப் போகிறது?''

''பிரமாதமான பலன் கிடைக்கும். என் மானேஜர் மதனன் இருக்கிறானே, அவன் உண்மையிலேயே தன்னை மன்மதன் என்றும் எல்லாப் பெண்களும் தன்னை ஒரு முறை பார்த்ததுமே மயங்கி விடுவார்கள் என்றும்

எவ்வளவு
தாழ்ந்த வேலையா
யிருந்தாலும் சரி உண்மை
யாக வேலை செய்து
கொண்டிருக்கும் ஒவ்வொரு
மனிதனும் மேதாவிதான்.
— எமர்சன்
— சக்திகமலே



எண்ணிக் கொண்டிருக்கிறான். வெறும் அசடு. எவளாவது ஒருத்தி கொஞ்சம் அவனைப் பார்த்துச் சிரித்தால் போதும். தலைகால் புரியாது. அப்புறம் பம்பரமாக அவனை அவள் ஆட்டி வைத்து விடலாம்.''

இனி புரியாமலிருக்க ஒன்றுமேயில்லை. இதை விட அப்பட்டமாக அர்த்தநாரி விளக்க வேண்டுமா என்ன? ''சீச்சீச்சீச்சீ'' என்றாள் புஷ்பா. ''இப்படி ஒரு கேவலமான காரியத்திலா என்னை இறங்கச் சொல்கிறீர்கள்? வெட்கமாயில்லை?''

''பெரிதாக என்ன தப்புக் காரியம் பண்ணச் சொல்லி விட்டேன்? மதனனைச் சந்திக்க வேண்டும்; அறிமுகம் செய்து கொள்ள வேண்டும்; என்னைப் பற்றி நல்லபடியாக நாலு வார்த்தை பேச வேண்டும். 'பிரமோஷனுக்கு இடமிருப்பதாகத் தெரிகிறதே? என் கணவருக்குக் கிடைத்து விடுமல்லவா?' என்று புன்னகையுடன் ஒரு கேள்வி எழுப்ப வேண்டும். இவ்வளவுதானே? இதற்குப் போய்ப் பிரமாதப் படுத்துகிறாயே!''

''சேச்சே! உங்களைப் பெரிய சுயநலக்காரர் என்றுதான் எண்ணியிருந்தேன்; இது வரை. தற்குறி என்றுதான் எடை போட்டிருந்தேன். ஆணவம் மிக்கவர், பிடிவாதக்காரர் என்றெல்லாம் கூட நினைத்தேன். ஆனால் இவ்வளவையும் மீறி உங்களிடம் எனக்கு ஏற்பட்ட அன்பு நிலைத்தது. உங்களுக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை இருந்து வந்ததாக நீங்களே சற்றுமுன் மனம் விட்டு ஒப்புக் கொண்டது உங்கள் மீது நான் கொண்ட பரிவை, பாசத்தை, அனுதாபத்தை அதிகரித்தது. ஆனால் இவ்வளவு மட்டமான காரியத்தில் நீங்கள் மனமறிந்து இறங்குவீர்கள் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை!''

''புஷ்பா!'' என்று அதட்டினான் அர்த்தநாரி. ''என்ன பெரிய மட்டமான காரியத்தைக் கண்டு விட்டாய் இதில்?''

''அதை நான் சொல்லித்தான் ஆக வேண்டுமா? சொல்கிறேன். கூட்டிக் கொடுக்கிற வேலை! இல்லை, அதைவிட மோசம்! கூட்டிக் கொடுப்பவன் கூட சொந்தப் பெண்டாட்டிக்கு விலை பேச மாட்டான்!''

'பளார்' என்று அறைந்தான் அர்த்தநாரி. ''நாயே! என்னவென்று நினைத்தாய் நீ! ஒவ்வொரு பெண்கள் கணவன் மாருக்காக என்னவெல்லாம் தியாகங்கள் செய்திருக்கிறார்கள்! வாழ்க்கையில் கண்டதில்லையா? புராணங்களில் படித்ததில்லையா?''

''நான் புராணப் பெண் இல்லை!'' விம்மலுக்கிடையில் வெடித்தன வார்த்தைகள். ''இது தியாகமுமில்லை.''

''ஆமாம், நீ புராணப் பெண் இல்லைதான்; பணக்காரப் பெண்! பணத்திமிர் இன்னும் உன் உடம்பை விட்டுப் போகாத போது தியாகத்தின் தன்மை பற்றி உன்னால் எப்படி உணர முடியும்?''

''எனக்கா தெரியாது தியாகத்தைப் பற்றி? சொத்து சுதந்திரம் சுகவாழ்வு எல்லாவற்றையும் துறந்து விட்டு உங்களிடம் வந்து சேர்ந்தேனே, அது தியாகமில்லை?''

''அதிலென்ன தியாகமிருக்கிறது? ஒன்றுமில்லாமல் வந்தவளை, பிறந்த வீட்டை விட்டு ஓடிப் போனவளை, கஷ்ட நஷ்டங்களைப் பொருட்படுத்தாமல், அவதூறுகளை லட்சியம் பண்ணாமல் நான் ஏற்றுக் கொண்டேனே, அதுவல்லவா தியாகம்!''

அவள் வாயடைத்துப் போனாள். 'அடேயப்பா! எப்படித் தலைகிழாக நிலைமையை மாற்றி விட்டார் இவர்.! இவருடைய கர்வத்துக்கு உச்ச வரம்பே கிடையாதா?'

''உன் அப்பன் பணக்காரன் நீயும் கணவனை விட அதிகம் சம்பாதிக்கிறாய். நீ ஏன் திமிரெடுத்துப் பேச மாட்டாய்!'' என்று மீண்டும் சொல்லம்பு தொடுத்தான் அர்த்தநாரி. ''எனக்குப் புரிகிறது. உன்னைவிட நான் அதிகம் சம்பாதிப்பதை நீ விரும்பவில்லை. இதே இருநூறு ரூபாய் சம்பளத்தில் நான் வாழ் நாளெல்லாம் உழன்று கொண்டிருக்க வேண்டும். பெண்டாட்டி சம்பாத்தியத்தில் சாப்பிடுகிறவன் என்று பெயரெடுக்க வேண்டும். இதைத்தானே நீ விரும்புகிறாய்?''

''இல்லாததையும் பொல்லாததையும் கூறி என்னைக் கஷ்டப் படுத்தாதீர்கள்!'' நாத்தழுதழுக்கச் சொன்னாள் புஷ்பா.

அர்த்தநாரி கருணை காட்டவில்லை. ''நீ என்னைக் காதலிக்கவே இல்லை'' என்று குற்றம்சாட்டினான். ''நீ என்னை மெய்யாகவே காதலிப்பதானால் என் நலன்தானே உன் நலனாக இருக்க முடியும்? ஆனால் என் நலன் உனக்கு இப்போது வேம்பாகக் கசப்பது புரிகிறது. நான் உன்னிடம் ஏமாந்து போய் விட்டேன். நீ உன் அப்பாவிடமே திரும்பி விடு! நீயும் நானும் இனி சேர்ந்து வாழ முடியாது!''

''நான் அப்பாவிடம் எப்படித் திரும்புவேன்? அவர் என்னிடம் முகம் கொடுத்துக் கூடப் பேச மாட்டாரே? அவரை விரோதித்துக் கொண்டு வந்து விட்டேனே?'' மீண்டும் புஷ்பா விம்மி விம்மி அழுதாள்.

''அப்படியானால் நான் சொல்கிறபடி கேட்டு நடக்கக் கற்றுக் கொள்! என் நலனை உன் நலனாக எண்ணப் பழகிக் கொள்!''

''சரி'' என்றாள் புஷ்பா, ஈன சுரத்தில். ''நான் என்ன செய்ய வேண்டுமென்கிறீர்கள்?''

அர்த்தநாரி சட்டென்று கோபத்தை ஒதுக்கி நயமாகப் பேசினான். ''நான் உன்னைத்

தகாத காரியம் ஏதாவது பண்ணச் சொல்வேனு புஷ்பா? பெரிதாக என்ன கேட்டு விட்டேன்? ஒரு சந்திப்பு, ஒரு புன்னகை, ஒரு சிபாரிசு இவ்வளவுதானே? அவனுக்கு வைப்பாட்டியாக இருக்குமாறு சொல்லி விட்டேன்?''

''உடலைக் கொடுத்துப் பணம் பெறுவதற்கும் அதைக் காட்சிப் பொருளாக்கிக் காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்கும் இடையில் என்ன பெரிய வித்தியாசம்?'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் புஷ்பா.

''எங்கே, இதோ பார்!'' அவள் முகவாயைத் தொட்டு வதனத்தை நிமிர்த்தினன். ''கொஞ்சம் சிரி!''

அவள் சோகமாகச் சிரித்தாள்.

''இந்த எழில் உருவத்தை ஒரு தடவை அவன் பார்த்தால் போதும்; தலை கிறு கிறுத்துப் போகும் அவனுக்கு!''

''அதெப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள் புஷ்பா.

''ஆ! நான் அவனைக் கவனித்து வந்திருக்கிறேன். ஒரு சமயம் ஒரு பார்ட்டியில் ஆபீஸிலிருந்த சிலர் கலந்து கொண்டோம். அங்கே அவன் பெண் பிள்ளைகள் இருந்த பக்கமாகவே சுற்றிச் சுற்றி வந்து அடித்த கூத்து!... சொக்க வைக்கிறனும் அவர்களை! இவன்தான் அசடு வழிந்து கொண்டிருந்தான்! அவர்களெல்லாம் இவனைப் பார்த்துச்சிரித்தார்கள். ஏளனமாய்ச் சிரிக்கிறர்கள் என்றே இவனுக்குத் தெரியவில்லை! தன் பேச்சு அவ்வளவு சுவாரஸ்யமாக இருப்பதாக எண்ணிக் கொண்டான். அப்புறம் அவனை நிறுத்துவது எங்கே?''

''உண்மையிலேயே அவர் 'பாப்புலரா'க விளங்கும் ஆற்றல் உள்ளவரோ என்னமோ?''

''பெண்களிடம் பிரபலமாவது ஓர் ஆற்றலா? பலவீனம்! தொட்டுத் தொட்டுப் பேசுவதும், அவர்களைத் திருப்திப் படுத்த முயல்வதும்... சே! அன்றைக்கு ஒரு மணி நேரத்தில் எத்தனை ஐஸ்கிரீம்களை இவனே தன் கைப்படப் பெண்கள் பகுதியில் 'ஸர்வ்' பண்ணியிருக்கிறன் - தெரியுமா? 'ஸர்வர்' தட்டிலே வைத்து எடுத்து வந்தாலும் அந்தப் பெண்கள் தாமாகவே எடுத்துக் கொள்ள இவன் அனுமதிப்பதில்லை! 'இருங்க இருங்க!' என்று சொல்லி இவனே கோப்பைகளை ஒவ்வொன்ருக எடுத்து அவர்கள் கையில் வைப்பான். அந்தச் சாக்கில் அவர்கள் விரல்களைத் தீண்டுகிறது! ஹே! எனக்குத் தெரியாதா என்ன?''

''இப்படிப் பட்டவரிடம் போய் என்னை அனுப்புகிறீர்களே?'' என்றுள் புஷ்பா கலவரத்துடன்.

''எனக்கு நம்பிக்கை இருக்கிறது, புஷ்பா! அவன் உன் அழகைப் பார்த்த பிறகு உன் கோரிக்கையை மறுதளிக்க மாட்டான் என்ற நம்பிக்கை. அப்புறம் உன்னிடமும் எனக்கு நம்பிக்கை! சும்மா அப்படி ஒயிலாக நின்று இரண்டு தரம் கண்களைச் சிமிட்டு. அப்புறம் உன்னை அணைக்கக் காத்திருக்கும் என் கரங்களுக்குத் திரும்பி ஓடி வந்து விடு! என்ன சரி தானு?''

'முடியாது' என்ருல் மறுபடியும் அடி விழும்; அல்லது வீட்டை விட்டு வெளியேற வேண்டி யிருக்கும். வெளியேறி எங்கே போவது? அப்பாவிடம் திரும்ப முடியாது. கல்யாணமான பெண் தழையத் தழையத் தாலியைக் கட்டிக் கொண்டு தனித்திருக்கவும் முடியாது.

''எனக்குப் பயமாயிருக்கிறது'' என்றுள் புஷ்பா.

''பயப்பட ஒன்றுமே இல்லை. பிடிவாதம் பிடிக்காதே. இஷ்டமில்லை யென்ருல் 'பளிச்' சென்று சொல்லி விடு!'' அர்த்த நாரியின் குரல் மறுபடியும் உயர்ந்தது.

''அவரை எங்கே சந்திப்பது?''

''நாளை ஆபீஸிலேயே போய்ப் பார். என் காரியாலய நண்பர்கள் பலருக்கு உன்னை அடையாளம் தெரியும். கல்யாணத்தன்று மாலை இங்கே வந்து வாழ்த்தி விட்டுப் போயிருக்கிறர்கள், இல்லையா? ஆகவே, எதற்கு இவள் வருகிறள் என்ற கேள்வி பிறக்கும். எனக்குத் திடீரென்று ஜுரம், தலைவலி வந்ததாகவும் லீவு சொல்லிப் போக வந்ததாகவும் அவர்களிடம் கூறி மானேஜரின் தனி அறைக்குள் நுழைந்து விடு. அப்புறம் உன் சாமர்த்தியம்!''

'புஷ்பா 'சரி' என்று வாய் திறந்து கூறவில்லை. அதற்கு அவளுக்கு மனம் வரவில்லை. 'முடியாது' என்றும் சொல்லவில்லை. ''சாப்பிட வாருங்கள்'' என்றுள்.

'சம்மதத்துக்கு அறிகுறி' என்றெண்ணி உற்சாகத்துடன் போய்த் தட்டெடுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்தான் அர்த்தநாரி.

சுவரில் ஆணி அடித்துப் பொருத்திய ஸ்டாண்டில் ரேடியோ வைத்திருந்தார்கள். 'ஆன்' செய்தபோது ஒரு நாடகம் ஆரம்பமாயிற்று.

''என்னங்க, ரொம்ப நேரமா யாரை எதிர் பார்த்துக்கிட்டிருக்கீங்க வாசல்லே?''

''என் ப்ரண்டு, குண்டா இருப்பானே அந்த ராமலிங்கத்தைத்தான்!''

''அதோ வர்றார்!''

''வா ராமலிங்கம்... இந்தச் சேர்ல உட்கார்...''

சேரை நகர்த்தும் சத்தம். 'அப்பாடா!' என்ற ராமலிங்கத்தின் குரல், அவர் உட்காருவதை உணர்த்துகிறது. மறு கணம்—

ரேடியோவும் அதைத் தாங்கியிருந்த ஸ்டாண்டும் கீழே விழுந்தன!

- மு. திருஞானம்



## 5

"உங்களைப் பார்க்க ஒரு அம்மா வந்திருக்காங்க'' என்றான் பியூன், மதனனிடம்.

''அம்மாவா?'' — ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட தனி அறையில், எக்ஸிக்யூடிவ் நாற்காலியில் விசாலமான பளபளக்கும்மேஜைக்கு முன் அமர்ந்திருந்த மதனன் கேட்டான். குரலில் அசுவாரஸ்யம் தொனித்தது. ''வயசான வங்களா?''—பெண்கள் இளம் வயதினராளுலும் பெரியவர்களானுலும் தாய்மார்களாகப் பாவிப்பது நமது பண்பு என்பதை அறிந்திருந்தும் அந்தப் பண்பைக் கடைப் பிடிக்காததால் மதனன் எழுப்பிய கேள்வி இது.

''இல்லீங்க. சின்ன வயசுப் பொண்ணுதாங்க'' என்றான் பியூன். ''அசப்பிலே பார்த்தால் நம்ம அர்த்தநாரி சாரோட சம்சாரம் போலிருக்குது. கல்யாணத்தன்றைக்கு ஐந்து நிமிஷம் பார்த்ததுதான். நிச்சயமாத் தெரியலே. கேட்கவும் சங்கோஜமாயிருக்கு. வாசல்லியே ரிஸப்ஷனிலே உட்கார்ந்திருக்காங்க.''

''அழைத்து வா!'' என்றான் மதனன். ஃபைலில் கவனம் செலுத்தினான். பெண்ணொருத்தி எதிரே வந்து நிற்கிறாள் என்பதை உணர்ந்தும் அவன் தலை நிமிரவில்லை. கவனியாதது போல் இருந்து, சற்று நேரம் சென்றதும் ஃபெல்ட் பேனாவை விட்டெறிவது போல் மேஜை மீது போட்டு விட்டு நாற்காலியில் பின்னுக்குச் சாய்ந்து பெருமூச்சு விட்டான். அப்போதுதான் அவளைக் கவனித்தவன் போல் நடித்து, ''ஓ! ப்ளீஸ் ஸிட் டௌன்'' என்றான் புன் சிரிப்பை மலரவிட்டு.

''இருக்கட்டும் ஸார், ஒரு நிமிஷம்தான் எனக்குக் காரியம்.''

''ஒரு நிமிஷம் தான் உட்காருங்களேன்!'' புன்சிரிப்பு இளநகையாக வளர்ந்தது.

அவள் தடுமாற்றத்துடன் அமர்ந்தாள். அவனுக்கு அவள் சங்கடம் ருசித்தது. ''என்ன விஷயம், சொல்லுங்கள். வாட் கேன் ஐ டு ஃபார் யூ?''

''வந்து... என் கணவர் அர்த்தநாரி இங்கே வேலை பார்க்கிறார்...''

''அடேடே! அர்த்தநாரி ஒய்ஃப்பா நீங்க! ஸோ ப்ளீஸ்ட் டு மீட் யூ!'' உடனே கைநீட்டினான் மதனன்.

'அவனுக்குக் கை கொடுப்பதா வேண்டாமா?' என்று ஒரு வினாடி நேரம் தயங்கினாள். இவள் கை நீட்டவில்லையானால் அவனே மேஜையைச் சுற்றி வந்து கையைப் பற்றிக் கொள்வான் போலிருந்தது. இப்போதே நின்று, மேஜைக்குக் குறுக்காக முக்கால் வாசி தூரம் சாய்ந்து விட்டான். அவள் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ள விரும்பாமல் கை நீட்டினாள். வலக்கரத்தில் பற்றியவன் இடக் கரத்தாலும் பொத்திக் கொண்டான். இரு கரங்களுக்கும் இடையில் துவண்டன அவள் விரல்கள். ''கல்யாணத்தன்றே மாலையில் வந்து பார்க்க வேண்டுமென்றிருந்தேன். அன்றைக் கென்று பார்த்து முக்கிய வேலை வந்து விட்டது. இந்த ஆபீஸிலிருந்து சில பேர் வந்தார்களே, ஒரு பரிசு கூடக் கொண்டு வந்திருப்பார்களே! அதற்கு நான்தான் அதிகமாகப் பணம் போட்டவன். ஐம்பது ரூபாய்'' இப்போதுதான் அவள் கரத்தை விடுவித்தான் அவன்.

''என் கணவரிடம் அவ்வளவு மதிப்பு வைச்சிருக்கிங்க, ரொம்ப தாங்க்ஸ்.''

''உன்னிடமும்தான், ஸாரி, உங்களிடமும் தான்.''

''உன்னிடம்னே சொல்லலாம் ஸார்.''

''தாங்க்யூ. பெரிய குடும்பத்துப் பெண் நீ. காதலுக்காக எல்லாவற்றையும் துறந்து விட்டு வந்தாயல்லவா? அதனுல் உன்னிடமும் எனக்கு ரொம்ப மதிப்பு உண்டு.''

'எந்தப் பெண்ணையுமே மதிப்பவனுகத் தெரியவில்லையே உன்னைப் பார்த்தால்' என்று எண்ணினாள் புஷ்பா. 'உன்னைப் பற்றி அர்த்தநாரியிடம் நான் கேள்விப் பட்டதும் அதைத்தானே வலியுறுத்துகிறது!'

''ஸாரி மறந்து விட்டது. உங்க பெயர்?''

''புஷ்பா.''

''புஷ்பா! வாட் எ பியூட்டிப்புல் நேம்?''

அவளுக்கு அச்சமாக இருந்தது. 'இவன் தன்னுடைய வசீகர வார்த்தைகளை ஆரம்பித்து விட்டான் போலிருக்கிறதே!'

''ஸார்! நான் உங்க நேரத்தை வீணுக்க விரும்பலே. நான் வந்த காரியம்...''

''சொல்லுங்க, சொல்லுங்க.''

''என் கணவருக்கு இன்று காலை திடீரென்று தலைவலி. இலேசாக ஜுரமும் இருக்கிறது. ஒருநாள் லீவு சொல்லிவிட்டுப் போகத்தான் வந்தேன். என் ஆபீஸில் ஒன் அவர் பர்மிஷன் வாங்கிக் கொண்டு வந்தேன்.''

''இவ்வளவுதானு? ஒருநாள் என்ன; மூன்று நாட்கள் வேணும்னாலும் லீவு போடட்டும். உடம்பு முக்கியம். அவன் ஆரோக்கியமாய் இருந்தால் தானே இந்த ஆபீஸுக்கும் அவனுல் லாபம்?''

''லீவ் லெட்டர்'' என்று கூறி ஹேண்ட் பேகிலிருந்து எடுத்துக் கொடுத்தாள். ''நாளைக்கே ஜுரம் குறைந்தால் வந்து விடுவார்.''

''சரி, இதைச் சொல்ல நீ நேரில் கூட வந்திருக்க வேண்டாம். சிரமமின்றி உன் ஆபீஸிலிருந்து ஒரு போன் பண்ணியிருந்தாலே போதும். லெட்டரை நாளைக்கு அவன் வரும் போது கொண்டு வந்திருக்கலாம்.''

''ஆமாம் ஸார்... இல்லை ஸார்... அதாவது நேரில் வரக் காரணம் இருக்கிறது... வந்து... அவர்... நீங்கள்...''

அவளுடைய தவிப்பை அவன் ரசித்தான். 'ஏது, இந்த மான் என் வலையில் சுலபமாக அகப்பட்டுக் கொள்ளும் போலிருக்கிறதே!' என நினைத்தவன், ''என்ன புஷ்பா? எதுவானுலும் தயங்காமல் சொல்லு. இந்த அறை ஸவுண்ட் ஃப்ரூப். வெளியே யாருக்கும் கேட்காது. அனுமதி பெருமல் யாரும் உள்ளே வரவும் மாட்டார்கள்'' என்றான்.

''ஸார், நான் கூறுவது தவருனுல் மன்னியுங்கள்'' என்று கூறும்போதே நாத் தழுதழுத்து விட்டது புஷ்பாவுக்கு. ''இங்கே ஹெட் கிளார்க் பதவிக்குப் போட்டி இருப்பதாகத் தெரிகிறது. நீங்கள் என் கணவரைப் பலமாகச் சிபாரிசு செய்ய வேண்டும்.'' எப்படியோ வாய்ப்பாடு ஒப்பிப்பது போல் கூறி முடித்தாள்.

மதனன் பெரிதாகச் சிரித்தான்.

அவள் விசும்பினுள். ''சிரிக்காதீங்க ஸார், அவர் அந்தப் பதவிக்கு எல்லா விதத்திலும் பொருத்தமானவர்.''

''அவன் அந்த வேலைக்குப் பொருத்தமானவன்தான். ஆனால் நீதான் இந்த வேலைக்குத் துளிக்கூடப் பொருத்தமற்றவள்!'' அவன் மறுபடியும் சிரித்தான். ''இப்படியா தட்டுத் தடுமாறுவது? செல்லமாக என் கன்னத்தைத் தட்டிப் புன்னகை தவழ மேல் தலைப்பு நழுவப் பேச வேண்டாமா? அப்போதுதானே காரியம் நடக்கும்?''



புஷ்பாவுக்குத் தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகியது. கைக் குட்டைக்காகக் கைப்பையைத் திறந்தாள். அதற்கு முன்பாக சானல் ஸெண்ட் மணத்துடன் கூடிய மதனனின் கைக்குட்டை அவள் கண்களை ஒற்றியது. அதை அவளிடமே தந்தான்.

''அர்த்தநாரி ஒரு 'கால் கேர்'லுக்குப் பணம் கொடுத்து அவளை என்னிடம் அனுப்பியிருக்கலாம். சொந்த மனைவியையா இந்த வேலையைப் பண்ணுமாறு அனுப்புவது? சே! இடியட்!''

அவமானம் பிடுங்கித் தின்றது. கோபமும் வந்தது. அர்த்த நாரியிடம் மட்டுமில்லை, மதனனிடமும் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது அவளுக்கு. ''அவரைப் பற்றி மட்டமாகப் பேசாதீங்க ஸார். இருநூறு ரூபாய் சம்பளக்காரர். 'கால் கேர்'லை அமர்த்தப் பணத்துக்கு எங்கே போவார்!''

''நீயும் சம்பாதிக்கிறாய் அல்லவா?''

''அதையும் அவரேதான் வாங்கிக் கொண்டு விடுகிறார். பெரும் பகுதி பணம் சூதாட்டத்தில் போய் விடுகிறது. அவருக்கு இந்தப் பதவி உயர்வும் சம்பள உயர்வும் கிடைத்தால் சூதாட்டத்தை அடியோடு தொலைத்துத் தலை முழுகி விடுவார், ஸார், எனக்கு வாக்குறுதி அளித்திருக்கிறார். அப்புறம் நாங்கள் சந்தோஷமாக இருப்போம்.'' இப்படிக் கூறும் போதே துக்கம் தாளாமல் அழுதாள் புஷ்பா.

''இதோ பார், பெண்கள் அழுதால் என்னால் தாங்கவே முடியாது. கண்ணீர் விடுவதை நிறுத்து. நான் உனக்காக அவனுக்குப் பதவி உயர்வு தரத் தயாராயிருக்கிறேன். ஆனால் உன்னை நினைத்தால் எனக்கு வியப்பாயிருக்கிறது. அந்த இடியட்தான் உன்னை அனுப்பினுனென்றால் நீ எப்படிச் சம்மதித்தாய், இந்தக் காரியத்துக்கு?''

''நான் மாட்டேன் என்றுதான் சொன்னேன். வற்புறுத்தினர்.''

''வற்புறுத்தினரு? கட்டாயப் படுத்தினரு?''

''இரண்டும்தான்.''

''என்ன அநியாயம் பார், புஷ்பா. பெண்களின் சம உரிமைகள் பற்றி எவ்வளவெல்லாம் பேசப் படுகிற காலம் இது? இந்த நாளில் போய் இப்படி ஒரு மனுஷன்... பெண்டாட்டியை அடிமையாகப் பாவிக்கிற ஆசாமி. சேச்சே! உன்னைப் போன்ற படித்த பெண்களே இதற்கெல்லாம் இடம் தரலாமா?''

''நான் என்ன செய்ய முடியும் ஸார்?''

''புரட்சிகரமாக நடந்து கொள்ள வேண்டும். அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெற வேண்டும்.''

''வீட்டை விட்டு வெளியேறி எங்கே போவேன்?''

''சேச்சே! வீட்டை விட்டு நீ ஏன் வெளியேற வேண்டும்? அந்த வீட்டில் இருக்க அவனுக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அதே அளவு உரிமை உனக்கும் உண்டு. அவனுடன் இருந்து கொண்டே நீ சுதந்திரமாகவும் இருக்கலாமே?''

அவள் தன் முகத்தில் புதிரைத் தேக்கி அவனைப் பார்த்தாள்.

''புரியவில்லையா, புஷ்பா? பாவம், நீ ரொம்ப சாது. அதனுல்தான் புரியலை. இதோ பார், உன் கணவன் உன்னைப் பாதிக் கிணறு தாண்டச் சொல்கிறான். அப்படித் தாண்டினுல் நீ அடிமைத்தனம் என்னும் பாழுங் கிணற்றுக்குள் விழுந்து விடப் போகிருய். எனவே அவன் பாதிக் கிணறு தாண்டு என்று சொல்லும் போது நீ முழுக் கிணறுமே தாண்டி விடு. உனக்குச் சுதந்திரம் கிடைக்கும். அவனையும் வஞ்சம் தீர்த்துக் கொண்டதாகும்.''

கூசிக் குறுகிப் போனுள் புஷ்பா. முகத்தை மூடிக் கொண்டாள். ''போதும் ஸார், போதும்! நான் இங்கே வந்ததே பிசகு. போய் வருகிறேன்.'' அவள் எழுந்தாள்.

மதனன் அவள் தோள்களைப் பற்றினுன். புஷ்பா நடுங்கினுள். 'இந்தத் துணிவை இவனுக்குக் கொடுத்தது யார்? சந்தேகமில்லாமல் அர்த்த நாரிதான்.' கணவன் மீது ஆத்திரம் பொங்கியது அவளுக்கு.

''புஷ்பா! நன்றாக யோசித்துப் பார்!'' என்றான் மதனன். ''உனக்குச் சுதந்திரம், பழி வாங்கிய திருப்தி — இவை வேண்டுமா? அல்லது தொடர்ந்து அவனுக்கு அடிமையாக இருக்கப் போகிறாயா? என் விருப்பத்துக்கு நீ பணியவில்லையானல் அர்த்தநாரிக்கு நிச்சயம் உத்தியோக உயர்வு கிடைக்காது. நீ வேண்டுமென்றே தான் என்னிடம் சாமர்த்தியமாக நடந்து கொள்ளாமலிருந்து விட்டாய், அதனுல் தான் தனக்குப் பதவி உயர்வு கிடைக்கவில்லை என்று அவன் எண்ணுவான். உன்னைக் கரித்துக் கொட்டுவான், வைவான், அடிப்பான். எது தேவலாம்.? இரண்டில் ஒன்று தேர்ந்தெடுப்பது உன் பொறுப்பு.''

''ஸார்! அவர் பல விதத்திலும் மோசமானவர்தான், ஒப்புக் கொள்கிறேன். சூதாடுகிறார், கோபக்காரர், தன் முன்னேற்றத்துக்காக என் அழகையே காட்சிப் பொருளாக்கத் தயங்காத தற்குறி — எல்லாம் சரிதான். என்றாலும் அவர் என் கணவர். அவருக்கு நான் துரோகம் பண்ணலாமா? கல்யாணத்துக்கு முன் பெண்கள் விஷயத்தில் அவர்



அவன்: ''இனி சனிக்கிழமை மட்டும் தான் டி. வி. பார்ப்பது என்று முடிவு செய்துட்டேன்!''

இவன்: ''ஏன்?''

அவன்: ''தினசரி பக்கத்து வீட்டுக்குப் போகக் கூச்சமா இருக்கு!''

உ. ராஜாஜி.

எப்படியோ, எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு மனைவி என்ற ஸ்தானத்தை அளித்த பிறகு அவர் ஒருமுறை கூட எனக்குத் துரோகம் செய்ததில்லை. அதை நான் மறக்கலாமா?''

''வீட்டிலேயே ஓர் அழகுக் குவியலை வைத்துக் கொண்டு அவன் எதற்கு அவலட்சணங்களைத் தேடி அலைய வேண்டும்? அவன் உனக்குத் துரோகம் பண்ணுததில் வியப்பே இல்லை. ஆனால் நீ அவனுக்குத் தொடர்ந்து அடிமையாக இருக்கப் போகிறாயா என்பது தான் கேள்வி. இப்போது நீ பதில் சொல்ல வேண்டாம், புஷ்பா. கொஞ்ச நாட்கள் போகட்டும், நீயே நான் சொல்வதில் உள்ள நியாயத்தை உணர்வாய். போய் வா!''

மெல்ல அவள் கரத்திலிருந்து தன் கைக்குட்டையை உருவிக் கொண்டான் மதனன்.

''இதை மறந்து போய் வீட்டுக்குக் கொண்டு போனால் வேண்டாத வம்பு எழும்'' என்றான் புன்னகையுடன், அவள் கண்களை ஒருமுறை அக் கைக்குட்டையால் ஒற்றி விட்டு, ''அழுதது தெரியவில்லை'' என்றான்.

''வரேன் ஸார்.''

''குட் லக்!'' அவள் வெளியேறக் கதவைத் திறந்து பிடித்துப் பணிவுடன் குனிந்தான் ஒரு கனவான் போல!''

## 6

அன்றிரவு.

''உங்கள் மானேஜர் ஒரு மட்டமான பேர்வழி'' என்றாள் புஷ்பா.

''அதுதான் தெரிந்த கதையாயிற்றே. நீ போன காரியம் காயா பழமா அதைச் சொல்லு!'' என்றான் அர்த்தநாரி.

''காய்தான். அவன் உங்கள் பதவி உயர்வுக்குப் பரிசாக என் உடலைக் கேட்கிறான்.''

அர்த்தநாரி அதிர்ச்சி அடையவில்லை. ''அந்த அளவுக்குப் போகாமலேயே நீ இந்தக் காரியத்தை எனக்குச் சாதித்துக் கொடுத்திருக்கலாமே? நீ கெட்டிக் காரத் தனமாக நடந்து கொண்டிருக்க மாட்டாய். போனதுமே என்னைப் பற்றிக் குறைகூறிக் கண்ணீரும் விட்டுத் தொலைத்தாயாக்கும்!''

''நான் என்ன செய்வேன்? அழுகையை என்னால் அடக்க முடியவில்லை.''

''சீச்சீ! இப்படி நடந்து கொண்டால் எப்படிக் காரியம் நிறைவேறும்? நீ வேண்டுமென்றே இப்படிச் செய்கிறாய்? நான் பதவி உயர்வு பெறுவதும் உன்னைவிட அதிகச் சம்பளம் வாங்குவதும் உனக்குப் பிடிக்கவில்லை. அதைத் தெளிவாகவே சொல்லி விடலாமே!''

''அப்படியொன்றுமில்லை.''

''நீ சாமர்த்திய சாலி. வெற்றி பெற வேண்டும் என்று விரும்பியிருந்தால் நிச்சயம் இதில் ஜெயித்திருப்பாய். அரைகுறை மனசுடன் போனதினால்தான் காரியம் கெட்டுக் குட்டிச் சுவராகி விட்டது. உனக்கு என்னைப் பிடிக்கவில்லையானால் சொல்லு. நாளைக்கே டைவர்ஸுக்கு விண்ணப்பிக்கலாம்.''

அவள் மனம் கசந்துபோயிற்று. ''மறுபடியும் வேணுமானால் முயன்று பார்க்கிறேன்... அதாவது அதை நீங்களே விரும்புவீர்களேயானால்.''

''விரும்புவதாவது, உத்தரவு போடுஇறேன்'' என்றான் அர்த்தநாரி. ''அழுது புலம்பாமல் சிரித்த முகமாகப் பேசு. அவனுக்கு ஆசை வளர்ந்தால் என்ன? அதைப் பூர்த்தி செய்யவா போகிறாய் நீ? ஒரு கண் வீச்சில், ஒரு மோகனப் புன்னகையில் மயங்கி விடக் கூடியவன் அவன் என்றுதான் சொல்கிறேனே. காரியம் பூர்த்தியாகி விடும். எவ்வளவோ கற்றுக் கொடுத்து அனுப்பியும் நீ கண்ணீர் விட்டுக் கெடுத்து விட்டாய்.''

''இந்த முறை கெட்டிக்காரத் தனமாக நடந்து கொள்கிறேன்.''

''அதுதான் சமர்த்து'' என்றான் அர்த்தநாரி, அவளை அணைத்த படியே. அவனுடைய ஆலிங்கனமே அவளுக்கு இப்போதெல்லாம் பிடிப்பதில்லை. ஏதோ ஒருவித இயந்திர கதியில் அவள் நடந்து கொண்டாள். தன் இன்பம்தான் அவளுடைய இன்பமும் என்று அர்த்தநாரி கருதியதால் அவன் தவறாக எண்ணி விடக் கூடாதே என்பதற்காகத்தான் தானும் இன்பமுற்றவள் போல் அவள் நடிக்கக் கூடச் செய்தாள்!

இப்படியே தன் வாழ்க்கை நாடகமாகவே வளருமோ என்று அவளுக்குத் தோன்றியது. அவனிடம் ஏமாந்து விட்டோம் என்று புஷ்பா எண்ணினாள். அவன் தன்னைக் காதலிக்கவேயில்லை. தன் உடலை ஆள்வதற்குத் தான் அவசரப் பட்டிருக்கிறான். தான் மட்டும் பிடிவாதமாக இல்லாமல் இருந்திருந்தால் கல்யாணப் பேச்சை எடுக்காமலேயே தன்னை அடையக் கூட அவன் முயன்றிருப்பான்!

ஏமாற்றங்களும் மனக் கசப்புக்களும் வளர்ந்து விட்ட நிலையில் புஷ்பாவுக்கு மீண்டும் ஒருமுறை மதனன் முன் போய் நிற்பது சிரமமாகத் தென் படவில்லை. இம்முறை அவனுடைய வீட்டுக்குப் போகச் சொன்னான் அர்த்தநாரி. மறுபடியும் காரியாலயத்துக்குப் போனால் வீண் வம்பு கிளம்பும்! இரு தினங்களுக்குப் பிறகு மதனனின் குழந்தைகளுக்கு ஒரு பாக்கெட் பிஸ்கட் வாங்கிக் கொண்டு போனாள் புஷ்பா. பெரிய பங்களா இல்லை என்றாலும் வசதியான வீடுதான். ஆபீஸி

லேயே வாடகை கொடுத்து விடுவார்கள் போலும். மணி அடிக்கப் பித்தானை அழுத்தினுள்.

''யாரு?'' என்று கேட்டது, கதவைத் திறந்து பார்த்த ஒரு பெண் உருவம். 'மனைவியோ?'

''மிஸ்டர் மதனன் இருக்கிருரா?''

''என்ன விஷயம்?'' குரலில் சந்தேகம் மிதந்தது.

''நான் பாபுலர் டிரேடர்ஸில் வேலையிலிருக்கிறேன். ஒரு முக்கிய காரியமாகப் பேச வேண்டியிருக்கிறது.'' — 'இது நிஜம் இல்லை, ஆனுல் பொய்யும் இல்லைதானே?' ''புஷ்பா என்று சொன்னுல் அவருக்குத் தெரியும்.''

''நாளைக்கு ஆபீஸில் போய்ப் பாருங்களேன்? வீட்டில் தொந்தரவு பண்ணுவானேன்? கொஞ்சம் கூட அவருக்கு நிம்மதியே இல்லாமல் போய் விடுகிறது.''

'நிம்மதி இன்றித் தவிப்பது நீயா, அவரா?' என்று எண்ணினுள் புஷ்பா. ''இது அவசரமான ஒரு பிஸினஸ் டீல். இல்லாமல் போனுல் வீட்டுக்கு வந்து தொந்தரவு கொடுப்பேனு?''

''உள்ளே வாருங்கள்'' என்று சொல்லி வரவேற்பறையில் அமர வைத்தாள். ஒரு குழந்தை, ''அம்மா!'' என்று அழைத்தபடி வந்தது. ''இந்தா பாப்பா!'' என்று பிஸ்கட் பொட்டலத்தைத் தந்தாள் புஷ்பா. ''ஸே தாங்க் யூ'' என்ருள் தாய். குழந்தை சொல்லிற்று.

உள்ளே போய் ''யாரோ புஷ்பாவாம். உங்களைப் பார்க்கத்தான் வந்திருக்கிருள்'' என்ருள் மனைவி.

சிறிதுகூட வியப்பை வெளிப் படுத்தாமல் அறைக்குள் நுழைந்தான் மதனன். ''என்ன விஷயம்? இரண்டு நாட்கள் முன் பேசி விட்டுப் போனீர்களே அந்தச் சமாசாரம் தானே?''

''ஆமாம் ஸார், காலம் கடந்து விடப் போகிறதே என்ற பயத்தால் தான் வீட்டுக்கே நேரில் வந்தேன். தப்பாக எடுத்துக் கொள்ளாதீர்கள்.''

''நோ... நோ... இதில் குற்றமொன்றுமில்லை. நான் ஃபைலைக் கால் ஃபார் பண்ணிக் கவனிக்கிறேன். எதற்கும் நாளைக்கு நீங்க உங்க ஆபிஸுக்குப் போனதும் எனக்கு ஒரு ஃபோன் தட்டுங்க. ஞாபகப் படுத்தியதாயிருக்கும். நான் ஒன்பது, ஒன்பதரைக்கெல்லாம் என் அறையில் இருப்பேன். என் நெம்பர், நினைவு வைத்துக் கொள்வது சுலபம். டிரிபிள் எய்ட் டிரிபிள் ஃபோர். பிரைவேட் லைன். ஸ்விட்ச் போர்டுக்குப் போகாது. இது கான்ஃபிடன்ஷியல் மாட்டர் ஆனதால் என் பர்ஸனல் லைன்லேயே கூப்பிடுங்க. விஷயம் வெளியே 'லீக்' ஆனுல் போட்டி ஜாஸ்தியாயிடும்.''

''ரொம்ப சரி, ஸார், அப்படியே செய்யறேன். பாபுலர் டிரேடர்ஸை மறக்காதீங்க.''

''ஸர்ட்டன்லி நாட். சுனில் பிரதர்ஸ் வில் டு தேர் பெஸ்ட் ஃபார் யூ, இதெல்லாம் மியூச்சுவல்தானே?'' — தப்பித் தவறி மதனனின் மனைவி இவர்கள் பேச்சை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாலும் அவள் எதையும் சந்தேகிக்க முடியாது.''




''தாங்க்யூ ஸார், வரட்டுமா?''

''போய் வாங்க.''

மறுநாள் அவள் சீக்கிரமே காரியாலயம் சென்று அவன் சொன்னபடியே ஃபோன் பண்ணினுள். ஸ்விட்ச் போர்டுக்குப் போகாத கங்காதரனின் பிரைவேட் லைனில் டயல் செய்தாள். அவள் குரலைக் கேட்டதுமே மதனன், மகிழ்ச்சியுடன் கூறினுன்: ''அடுத்த வாரம் அர்த்தநாரியை பம்பாய்க்கு அனுப்புகிறேன். அங்கே ஹெட் ஆஃபீஸில் அவன் நடந்து கொள்கிற விதமும் அவன் பிரமோஷனுக்கு உதவும். சில பிஸினஸ் நுணுக்கங்களைச் சொல்லிக் கொடுத்து அனுப்புகிறேன். அவற்றை முடித்துக் கொண்டு வரட்டும். ஏற்கெனவே நான் ஏற்பாடு செய்து வைத்திருப்பவைதாம். ஆனுல் அர்த்தநாரி மூலம் காரியம் நடந்ததாக ஹெட் ஆபீஸ் எண்ணும்படி செய்கிறேன். அதோடு என் சிபாரிசும் சேர்ந்து கொள்ளும். இரண்டையும் இணைத்துப் பார்க்கும் போது அவன் பட்டதாரி இல்லை என்கிற விஷயத்தை மறந்தே விடுவார்கள்.''

''ரொம்ப நன்றி ஸார்.''

''ஆனுல் இதற்கெல்லாம் ஒரு நிபந்தனை உண்டு!''

புஷ்பாவுக்கு உடலே ஒரு கணம் சில்லிட்டுப் போய் விட்டது!

''என்ன, லைனில் இருக்கிருயா, இல்லை வைத்து விட்டாயா?''

''இருக்கிறேன் ஸார்.'' தொண்டை அடைத்துக் கொள்ளச் செருமினுள்.

''அர்த்தநாரி பம்பாயிலிருநது திரும்பக் குறைந்த பட்சம் எட்டு நாட்கள் ஆகும். நீ அதே தேதிகளில் உன் ஆபீசில் ஒரு வாரம் லீவு போடு. நானும் இங்கே லீவு எழுதி வைத்து விடுகிறேன். வீட்டில் ஆபீஸ் காரியமாக வெளியூர் போவதாகக் கூறி விடுகிறேன். இருவரும் பெங்களூருக்குப் போகலாம். ஆனந்தமாக விடுமுறையைக் கழித்து விட்டுத் திரும்பலாம்.''

அவள் பதில் கூறவில்லை.

''மௌனம் சம்மதத்தின் அறிகுறி'' என்றான் மதனன். ''உன் கணவன் காலையில் கிளம்பினால் அன்று மாலையே நாம் புறப்படுகிறோம். ஸென்ட்ரலில் ஃபஸ்ட் கிளாஸ் கம்பார்ட் மெண்டில் சந்திப்போம். ரயில், ஹோட்டல் ரிஸர்வேஷன்ஸ் என் பொறுப்பு. தேதியை அர்த்த நாரியிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஓகே? வீ வில் மீட் அட் ஸென்ட்ரல். ஆனால் ஒன்று. நீ என் காலை வாரி விட்டால் நானும் உனக்கு ஏமாற்றமளிக்க நேரிடும்! குட்பை!''

மதனன் ஃபோனை வைத்து விட்டான், ஒரு 'பிஸினஸ் டீல்' போனிலேயே வெற்றிகரமாகப் பேசி முடித்து விட்ட திருப்தியுடன்.

## 7

ஹோட்டலிலேயே அடைந்து கிடக்காமல் உல்லாசமாக பெங்களூரில் பல இடங்களுக்கும் அழைத்துப் போனான் மதனன். புஷ்பாவுக்குத்தான் உல்லாசமாகவோ உற்சாகமாகவோ இருக்கவில்லை. ''கம் ஆன், சீர் அப்'' என்றான் மதனன். முதல் நாள் அவளை அவன் தொடக் கூட இல்லை! அவளுடன் பேசிப் பேசி அவளைச் சிரிக்க வைக்க முயல்வதிலேயே நேரத்தைக் கழித்தான். அன்று மாலை, பெங்களூர் நகரை ஸ்தாபித்த மன்னன் கெம்ப கௌடாவின் சிலையைக் காண்பித்த போது, ''ம. பொ. சிக்கு ராஜ பார்ட் வேஷம் போட்டாற் போல் இல்லை?'' என்று கேட்டான் மதனன்! அப்போது தன்னையுமறியாமல் சிரித்து விட்டாள் புஷ்பா. ''ஆஹா! சிரிக்க வைத்து விட்டேன். இனிமேல் எல்லாம் சரியாகப் போய் விடும். சுபாவமாக இருப்பாய், சுலபமாக என்னுடன் பழகுவாய்'' என்று கூறி மகிழ்ந்தான், மதனன்.

ஒரு பாரில் அமர்ந்து அவன் மது அருந்திய போது அவளை, ''மாதிரி பார்க்கிறாயா?'' என்று கேட்டானேயொழிய, அவள் முகத்தைச் சுளித்ததும், ''எனக்குத் தெரியாதா? சும்மா பயமுறுத்தினேன்'' என்று கூறிச் சிரித்தான். அவளும் மன நிம்மதியுற்று நகைத்தாள். அவள் கருத்தறிந்து அவனும் அளவோடு நிறுத்திக் கொண்டான். ''நான் ஒன்றும் குடிகாரனில்லை. 'அபிடைஸர்' என்கிற அளவோடு சரி; அதுவும் இந்த 'ஹாலிடே மூ'டையொட்டித்தான்'' என்றான். காமத் ஹோட்டலுக்கு அழைத்துப் போய், கிரீன் பீஸ் மஸாலா, வெஜிடபிள் புலாவ் முதலியவற்றுக்கு ஆர்டர் கொடுத்தான்.

''பணம் இருந்து பயன் இல்லை. அதை நன்றாக வாழ்க்கையை ரசிக்கப் பயன்படுத்த வேண்டும். பெங்களூர் வந்தால் சிலர், ஒரே நாளில் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்து விட்டு, இங்கே என்ன இருக்கிறது? ஊர் திரும்பலாம் என்பார்கள். ஏழைகள் வேணுமானால் அப்படிச் செய்யலாம். ஓரளவு வசதி படைத்தவர்கள் ஓரிரு இடங்களைத்தான் ஒரு நாளைக்குப் பார்க்க வேண்டும். வீ மஸ்ட் டேக் இட் ஈஸி. நாளை நாம் திப்பு அரண்மனைக்கும் விசுவேசுவரய்யா மியூஸியத்துக்கும் போகலாம்'' என்ற மதனன், புலாவைச் சப்புக் கொட்டி ரசித்து, ''நன்றாக இருக்கிறது, பேஷாயிருக்கிறது'' என்று சொல்லிச் சொல்லிச் சாப்பிட்டான். 'இப்படி ஒரு நாள் கூடத் தன் சமையலை ருசித்துப் பாராட்டியதில்லையே, அர்த்தநாரி' என்று எண்ணினாள் புஷ்பா. 'நன்றாயிருக்கிறது என்றால் எனக்குக் கர்வம் தலைக்கேறி விடுமென்றா?' மதனனின் உற்சாகம் அவளிடமும் இலேசாகத் தொற்றிக் கொண்டது. மத்தியானம், யாராவது தெரிந்தவர்கள் நம்மைப் பார்த்து விடுவார்களோ என்ற பயத்திலேயே சரியாகச் சாப்பிடவில்லை அவள். இப்போது மனம் சற்று இலேசாகிவிட ஒரு கை பார்த்தாள்.

ஐஸ்கிரீம் ஆர்டர் செய்தான் மதனன். அதைப் புஷ்பா ருசித்த போது அவள் இடக்கரம் மேஜை மீதிருந்தது. மதனன் தன் வலக் கரத்தால் அதைப் பொத்திக் கொண்டு இடக் கரத்தால் சாப்பிட்டான். ''அடடா! இப்போதுதான் ஐஸ்கிரீம் ருசியாக இருக்கிறது'' என்றான். ரயிலில் ஏறவும் இறங்கவும் கையைப் பிடித்து உதவியது தவிர இப்போதுதான் தன்னைத் தொடுகிறான் என்பதை அவள் நினைத்துப் பார்த்தாள். ஏனோ அவன் ஸ்பரிசம் அருவருப்பாய்த் தோன்றவில்லை. இனிய வார்த்தைகளுடன் இணைந்து இதமாகவே இருந்தது!

உணவருந்தி முடிந்து ஹோட்டலுக்குத் திரும்பிய போது அவளுக்குத் 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. மதனன் பாத்ரூம் போய் வந்து நைட் டிரஸ் அணிந்து கொண்டான். ''சீக்கிரம் படுத்துக் கொள் புஷ்பா. ரொம்பக் களைப்பாக இருக்கும். ரயில் பிரயாணம், அப்புறம் இன்றைக்கு ரொம்ப அலைச்சல்.'' அவளுடைய இரு கரங்களின் பத்து விரல்களையும் தன் இருகைகளாலும் பற்றிக் கொண்டு நெற்றியில் முத்தமிட்டான். ''குட்நைட்! ஸ்வீட் டிரீம்ஸ்!''

புஷ்பா உடை மாற்றிக் கொண்டு வந்து படுப்பதற்கு முன் அவன் தூங்கிப் போய்விட்டிருந்தான். 'தூங்குகிறானா? அல்லது தூங்குவது போல் நடிக்கிறானா? கொஞ்ச நேரம் கழித்து எழுப்புவானோ? அப்படித் தோன்றவில்லை. ஆழ்ந்த உறக்கம்தான். அவன் ஊகித்துக் கூறியது போல் அவளுக்குக் களைப்பாகத்தான் இருந்தது. கண்களைச் செருகியது. 'அர்த்த நாரியின் பேராசை, சுயநலனுக்கும் இவனுடைய விட்டுக் கொடுக்கும் பான்மைக்கும் எவ்வளவு வித்தியாசம்? அவனுடைய முரட்டுத் தனத்துக்கும் இவனுடைய இங்கிதமான அணுகு முறைக்கும் அவனுடைய கோப தாபத்துக்கும் இவனுடைய இனிய, சிரிக்கச் சிரிக்கப் பேசும் சுபாவத்துக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமையல்லவா இருக்கிறது! அவளால் ஒப்பு நோக்காமல் இருக்க முடியவில்லை. இருக்கிற ஐந்தாறு நாட்களை — மறுபடியும் அடிமைத் தனத்தில் உழலும் வேளை வரும் வரை இந்தச் சுதந்திரத்தைத் திருப்தியாக, மனமார அனுபவித்து விட்டுத்தான் போகலாமே' என்று எண்ணினாள். தூக்கம் அவளை ஆட்கொண்ட போது, ஒரு கனவுத் தோற்றத்தில் அவளுக்கும் அவள் அப்பாவுக்கும் தெரிந்த ஒருவர் அவளைப் பெங்களூரில் சந்திக்கிறார். ''அடேடே, புஷ்பா! நீ இங்கேயா இருக்கிறாய்? மெட்ராஸில்

இருப்பதாகப் பேச்சு வாக்கில் உன் அப்பா சொல்லக் கேட்டேனே'' என்கிருர்.

''மெட்ராஸில் தான் ஜாகை. இங்கே ஹாலிடேயில் வந்தோம்'' என்கிருள் புஷ்பா. ''மீட்மை ஹஸ்பண்ட் அர்த்த நாரி'' என்று மதனனை அவருக்கு அறிமுகப் படுத்தி வைக்கிருள்!



கனவு அத்துடன் முடிந்து மறைந்தும் விட்டது. அதன் பிறகு ஆழ்ந்த நிம்மதியான நித்திரைதான்.

கூடவே மதனனின் கிண்டல்கள், அவளுடைய பதிலடிகள். இருவரும் இணை சேர்ந்து எழுப்பிய சிரிப்பொலி.

இரவு அவர்கள் அறைக்குத் திரும்பியபோது அவள் இருதயம் மறுபடியும் திக்திக்கென்று அடித்துக் கொண்டது. ஆனல் இது பயம், குற்ற உணர்வு ஆகியவற்ருல் ஏற்பட்ட படபடப்பு அல்ல. எதிர்பார்ப்பினுல் உண்டான துடிப்பு. அவன் ஏமாற்றமளிக்கவில்லை. பெயருக்கேற்ப அவன் அந்தக்கலையில் மன்னனுக இருந்தான். இன்பத்தை அவளிடம் பிடுங்கிக் கொண்டு அவளை நிர்க்கதியாய் விட்டு விடவில்லை. மகிழ்ச்சியைக் கொடுத்துப் பெற்றுக் கொண்டான். அவளுக்கு எல்லாமே புதுமையாக இருந்தது. பிடித்தும் இருந்தது. 'இத்தனை இன்பத்தை இறைவன் இதிலே வைத்திருக்கிருனு? தெரியாமல் போயிற்றே' என்று ஆண்டவனைத் துணைக்கு அழைத்துக் கொண்டாள். பெரும் துயரத்தை மட்டுமின்றி அளப்பரிய இன்பத்தைத் தாங்கவும் அவன் துணைதான் வேண்டியிருக்கிறது!

ஹோவென்ற பேரிரைச்சலுடன் அருவி விழுந்தது. நாலு திசைகளிலும் மலர்கள் பூத்துக் குலுங்கின. தென்றல் வீசியது. நிலவு காய்ந்தது. ஆற்றுப் பெருக்குச் சுழித்தோடியது. வானவில்லின் வண்ணங்கள் தோன்றின.

மதனனைத் திட்ட வேண்டும் என்று புஷ்பாவுக்கு ஒரு வேகம் பிறந்தது. அவன் தலையைக் கலைத்துக் கேசத்தைப் பற்றி இழுத்து வைதாள். அவள் வசை பாடப் பாட அவனுடைய உற்சாகம் அதிகமாயிற்று!

அலைகள் ஓய அங்கே நீண்ட நேரமாயிற்று. ஆனல் அவை ஓய்ந்த பிறகு ஏற்பட்ட மயக்க அமைதிதான் எவ்வளவு சுகமாக இருந்தது! 'எங்கே மிதக்கிறேன் நான்?' என்று யோசித்தாள் புஷ்பா. 'காற்றிலா விண்வெளியிலா? அல்லது நிலவொளியிலா?' நீண்டதொரு பெருமூச்சுப் பிறந்தது அவளிடம். இருள் கவியத் தொடங்கியது.

''புஷ்பா!''

''ம்... ம்... ம்...''

''தாங்க்யூ!''

'அப்பப்பா! எவ்வளவு இங்கிதம்! எத்தனை உயர் பண்பு, கரிசனம்?'' அவன் கரத்தைப் பற்றித் தன் கன்னத்தோடு ஒற்றிகொண்டு ஆழ்ந்த நித்திரையில் புகுந்தாள் புஷ்பா.

மறுநாள் உற்சாகத்தோடு புஷ்பா தன்னுடன் புறப்பட்டுத் திப்பு அரண்மனைக்கு வருவதைப் பார்க்க மதனன் மகிழ்ந்தான். 'உன் கணிப்பு சரிதான்' என்று தன்னைத் தானே தட்டிக் கொடுத்துக் கொண்டான். 'ஒருநாள் ஆறப்போட்டது நல்லதாயிற்று...!'

திப்புவின் தர்பார் மண்டபத்தில் அவன் ஒரு ஜோக் அடித்த போது புஷ்பா அதைவிட ஒருபடி மேலே சென்று மற்ருெரு ஜோக் சொன்னுள். மதனன் வேண்டுமென்றே சிரிக்காமலிருந்து விட்டு, ''ஜோக்கா? முன்னுடியே சொல்லியிருக்கக் கூடாது?'' என்று கேட்ட போது அவன் தோளில் விளையாட்டுக் கோபத்துடன் குத்தினுள். அவளை அப்படியே இழுத்து அணைத்துக் கொண்டு இடிஇடியென்று இப்போது நகைத்தான். ''போதுமா சிரித்தது?'' என்று கேட்டவன், மூன்ருவது நபர் பார்த்து அவளுக்கு மனச் சங்கடம் உண்டாவதற்கு முன் சட்டென்று அவளை விடுவித்தும் கொண்டான்.

அவளும் உற்சாகம் பீறிட, ''போதாது'' என்ருள்.

''எது போதாது? சிரிப்பா, அரவணைப்பா?''

''இரண்டும்தான்!''

அவளுக்கே தன் துணிச்சல் வியப்பை அளித்தது. மதனன் மறுபடியும் சிரித்து, அவள் மூக்கில் ஆள் காட்டி விரலை வைத்து அழுத்தி உலுக்கினுன். ''போக்கிரி! பட் ஐ லைக் தட் ஸ்பிரிட்!''

''ஸ்பிரிட்டெல்லாம் ஏழு மணிக்கு அப்புறம்தான்'' என்ருள் சிலேடையாக.

''உனக்கு உடம்பிலேயே இருக்கிறது; எனக்கு ஊற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது'' என்ருன்.

'அவன் கூறியதென்னவோ வாஸ்தவம் தான். சுலபமாகவே கலகலப்பான பெண்ணுகிய நான், கல்யாணமான பிறகு எப்படி மாறிப் போய் விட்டேன்! ஒரே ஏக்கமும் சோகமும் வருத்தமுமாக ஆகிவிட்டது என் வாழ்க்கை. இப்போதுதான் மறுபடியும் சுபாவம் திரும்பி இருக்கிறது' — ஒரு பெருமூச்சுடன் இப்படி எண்ணினுள் புஷ்பா.

விசுவேசுவரய்யா மியூஸியத்தில் பல்வேறு கண் காட்சிகளிலும் விசைகளை இயக்கி, நடக்கும் மாறுதல்களைப் பார்த்து ரொம்ப சந்தோஷப் பட்டாள். பல விஞ்ஞான விஷயங்கள் அவளுக்கு ஏற்கெனவே தெரிந்தவைதாம். என்ருலும் விசைகளை இயக்கி வேடிக்கை பார்ப்பதில் ரொம்ப சுவாரஸ்யம் இருந்தது.

## 8

மறுநாள் காலையில் அவள் எழுந்த போது மதனன் இன்னும் கண் விழித்திருக்கவில்லை. புஷ்பாவுக்கு அவன் முகத்தைப் பார்க்கவே வெட்கமாயிருந்தது. எழுந்து குளியலறைக்குள் சென்ருள். அங்கு கண்ணுடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொள்ளவே அவளுக்குப் பிடிக்கவில்லை. அவசரம் அவசரமாக எல்லாக் காரியங்களையும் முடித்துக் கொண்டு அவள் வெளியே வந்தபோது மதனன் காப்பிக்கு ஆர்டர் கொடுத்துக்கொண்டிருந்தான். அவளைப் பார்த்துப் புன்னகையுடன், ''நல்ல தூக்கம் போலிருக்கிறதே'' என்ருன்.

''ஆமாம்.''

''புஷ்பா! ஏன் ஒரு மாதிரி இருக்கிருய்?''

''ஒன்றுமில்லே.''

''எனக்குப் புரிகிறது புஷ்பா. நடந்தது என்னமோ நடந்து விட்டது. நாம் சந்தோஷமாக இருந்தோம். இன்னும் சில நாட்கள் இந்த மகிழ்ச்சி நீடிக்கட்டும். அனுவசியமாக மனசை அலட்டிக் கொள்ளாதே! சுய வெறுப்பை அண்ட விடாதே! அது ரொம்ப ஆபத்து. அப்புறம் வாழ்நாள் முழுவதும் நிம்மதி, மகிழ்ச்சி, எதுவுமே எட்டிப் பாராது.''

அவள் கதறி அழுது விட்டாள்.

மதனன் அன்புடன் அவளை நெருங்கினுன். முகவாயைப் பற்றி உயர்த்தினுன். கண்ணீரைத் துடைத்தான். ''இதோ பார், பதிவிரதைத் தன்மையை இனி நீ எதைக் கொடுத்துத் திரும்பப் பெற முடியும்! ஒரு முறை போனுல் போனதுதான் திரும்பி வராத விஷயம். அதைப் போய்ப் பெரிது படுத்திக் கொண்டு எதிர்காலம் முழுவதையும் பாழடித்துக் கொள்ளாதே!''

''என்னைச் சற்றுத் தனியே இருக்க விடுங்கள்!''

''கூடாது! இந்தச் சமயத்தில் நீ தனியே இருந்தால் உன்னை நீயே நிந்தித்துக் கொள்கிற காரியம்தான் நடக்கும். அதைத்தான் நான் தவிர்க்க விரும்புகிறேன். நாம் சீக்கிரம் வெளியே கிளம்பிப் போய்விட வேண்டும். லால் பாக்கில் காலாற நடந்து மலர்களைப் பார்த்து மகிழலாம். அப்புறம் ஒரு மாட்னி. பெங்களூர் சினிமாத் தியேட்டர்கள் பிரமாதமாயிருக்கும். நீ பார்த்ததில்லையே?''

அவள் தலையாட்டினுள், ''இல்லை'' என்று உணர்த்த.

''இதோ பத்தே நிமிஷத்தில் குளித்து விட்டு வந்து விடுகிறேன்'' என்ருன் மதனன். ''காப்பி வந்தால் ஆறுமல் சாப்பிட்டுவிடு. எனக்காகக் காத்திருக்காதே!''

அவள் அலங்காரம் பண்ணிக்கொண்டாள். இடையில் காப்பி வந்தது. அருந்தினுள். மதனன் ஆதரவாகப் பேசி விட்டுக் குளியலறைக்குச் சென்றது அவளுக்கு இதமாயிருந்தது. குற்ற உணர்வை மறக்க முடியும் போல் தோன்றியது. எத்தனை அழகாகப் பேசுகிருர்! நெஞ்சச் சுமையெல்லாம் குறைந்து விடுகிற மாதிரி!

லால்பாக்கில் ஒரு மரத்தடி ஆசனத்தில் கால்களுக்கு ஒய்வுதர அமர்ந்தார்கள். காற்று வீசிய போது மரத்தடி நிழல் சிலுசிலு வென்றிருந்தது. மதனன் அவளை இலேசாக அணைத்துக் கொண்டான் ''புஷ்பா! நீ எவ்வளவு அழகாய் இருக்கிருய் தெரியுமா?''

அவள் கலகலவென நகைத்தாள். ''இப்போதுதான் புரிந்ததா என்ன?''

''உனக்கு அர்த்தமாகவில்லை. நான் எதிர்பார்த்ததைவிட நீ அழகாயிருக்கிருய் என்கிறேன். நேற்றிரவுதானே எனக்குத் தெரிய வந்தது!''

அவளுக்கு முகம் சிவந்ததென்ருலும் பெருமையாகவும் இருந்தது. அந்த உணர்ச்சியை அவளால் கட்டுப் படுத்திக் கொள்ள முடியவில்லை. அதே நேரத்தில் மதனன் கூறியதன் தொடர்பாக வேறு ஒரு விஷயத்தையும் அவளால் அனுமானிக்க முடிந்தது. இவன் எதிர் பார்த்ததை விட நான் அழகாயிருக்கிறேன் என்ருல் இப்படி எத்தனை பேரை இவன் பார்த்திருக்க வேண்டும் ஒப்பு நோக்க!'

''ஒரு விஷயத்தை நான் தெளிவாக்கிவிட விரும்புகிறேன்'' என்ருள் புஷ்பா.

''என்ன?'' என்ருன்.

''நான் உங்களை விரும்பியோ உங்கள் கம்பீர எழிலில் கவரப் பட்டோ இங்கே வரவில்லை.''

''அது எனக்குத் தெரியும்.''

''விருப்பமின்றித்தான் இங்கு வரச் சம்மதித்தேன்.''

''அதுவும் தெரியும்.''

''என் கணவருக்கு ஒரு நன்மை பிறக்கும், பதவி உயர்வு கிட்டும் என்பதற்காகவும் வரவில்லை.''

''இது எனக்குத் தெரியாத புது விஷயம். பிறகு எதற்குத்தான் வந்தாய்?'' — வியப்புடன் வினவினுன் மதனன்.

''சொல்கிறேன். உண்மையில் என்னை இங்கே விரட்டியது என்ன தெரியுமா? என் கணவரின் சுய நலப் போக்கு, முரட்டுத்தனம், என் அழகையே தன் நலனுக்காகப் பயன் படுத்தத் தயங்காத அவருடைய தற்குறித்தனம். மூடப் பிடிவாதம், முன் கோபம், எல்லாம் சேர்ந்துதான் என்னைப் பெங்களூருக்குப் போ என்று துரத்தின. நான் அவரை மனமாரக் காதலித்தேன். இன்றும் காதலிக்கவில்லை என்று சொல்ல முடியாது. அவர் மட்டும் இன்னும் சற்று அனுசரணையாகவும் நியாய உணர்வுடனும் நடந்து கொண்டிருந்தால் இந்த நிலைமையே உருவாகி இருக்காது. திருமணத்துக்குப் பிறகுதான் அவருடைய உண்மைச் சுபாவம் எனக்குத் தெரிய வந்தது என்பது நான் செய்த துரதிர்ஷ்டம்.''

அவர்கள் சற்று நேரம் மௌனமாய் இருந்தார்கள்.

''என்னைத் தப்பாக எடுத்துக் கொள்ளாதீர்கள்'' என்று கெஞ்சுகிற குரலில் கூறினுள் புஷ்பா. ''உங்கள் இனிய பேச்சு, இங்கித சுபாவம், ரசனை எல்லாம் எனக்குப் பிடித்திருக்கிறது. என் கணவரிடம் நான் காணுதவை இவை என்பதாலோ என்னவோ எனக்கு வேண்டியும் இருக்கிறது.''

''புரிகிறது புஷ்பா.''

''எதைச் சொன்னுலும் புரிகிறது என்கிறீர்களே, நிஜமாகவே என் மனம் உங்களுக்குப் புரிகிறதா?''

அனுபவம் என்பது
நாம் நமது பொருள்கள்
அனைத்தையும்
இழந்துவிட்ட பிறகு
நம்மிடம் மிஞ்சி நிற்பது!
—பெர்னுட் ஷா
— சக்தி கமலே

''பேஷாகப் புரிகிறது!''

''அது எப்படி? எனக்கே என் மனம் புரியவில்லையே? தவிக்கிறேனே!''

''தவிப்புக்குக் காரணம், நாம் தவறு செய்கிறோமோ என்று நீ எண்ணுவதுதான். நீ செய்யும் தவறை நியாயப் படுத்திக் கொள்! 'மனைவியின் உணர்ச்சிகளுக்குச் சிறிதும் மதிப்புத் தராத மூடனாய் அர்த்தநாரி இருக்கும் போது, நாம் இப்படி நடந்து கொள்வதில் தவறென்ன' என்ற வாதத்தில் இறங்கு. அப்போது எல்லாம் சுலபமாகப் போகும். எவ்வளவு ஆசையோடு எத்தனை பெரிய தியாகத்தைச் செய்து அவனிடம் நீ வந்து உன்னை ஒப்படைத்துக் கொண்டாய்? அவன் தன் அதிர்ஷ்டத்தைச் சிறிதாவது எண்ணினானா? உன்னை அன்பாக நடத்தினானா? எவ்வளவு பெரிய ஏமாற்றம் உனக்கு? அவன் தான் தவறு செய்கிறோம் என்பதையே சற்றும் எண்ணாதபோது நீ மட்டும் குற்ற உணர்வால் ஏன் பாதிக்கப்பட வேண்டும்?''

''வக்கீலைப் போல வாதாடுகிறீர்கள். பிரயோஜனம் என்ன? கொலைக் குற்றம் பண்ணினவன் கூடத்தான் வக்கில் வைத்து வாதாடுகிறான்.''

சந்திக்க மாட்டேன் என்கிறாயே அதை என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. என் சிநேகம் உனக்குத் தேவை. உன் கணவனிடம் நீ எதையெல்லாம் எதிர் பார்த்து ஏமாறுகிறாயோ, அதையெல்லாம் தர வல்லவன் நான் என்பது உனக்குத் தெரியும்!''

''அன்பு, பரிவு, மகிழ்ச்சியான உரையாடல் விட்டுக் கொடுக்கும் போக்கு...''

''எதையும் கணவனிடம் நீ காணப் போவதில்லை. அதையெல்லாம் அனுபவிக்க ஆசை எழும்போது என்னை நாடித்தான் நீ வர வேண்டியிருக்கும். அது மட்டுமா? கட்டில் என்றாலே கசப்புணர்ச்சி மேலோங்கிய நிலை போக, அது கந்தர்வ லோகமாக மாறக் கூடும் என்பதையும் நீ இப்போது புரிந்து கொண்டிருக்கிறாய் அல்லவா? மறுக்கமுடியுமா உன்னால்?''

மறுக்க முடியாததால் அதற்குப் பதில் கூறாது விட்டாள், புஷ்பா. ''உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். பெங்களூருடன் நம் வாழ்க்கையின் இந்த அத்தியாயம் முடிந்து விடட்டும். சென்னை திரும்பிய பிறகும் இந்த உறவு நீடித்தால் அதை எத்தனை நாள் மறைத்து வைக்க முடியும்? ஆபத்தை நாமே

## பாவேயும் ஏமாந்தார்!

1959ல் வினோபா பாவே கர்நாடக மாநிலத்துக்கு வந்தபோது அவருக்கு 17 ஆயிரம் ஏக்கர் நிலம் பூதானமாகக் கொடுக்கப்பட்டது. இப்போது அதில் 12 லட்சம் ஏக்கர் நிலம் எங்கே இருக்கிறது என்றே தெரியவில்லை. வினோபா பாவேயை ஏமாற்றியிருக்கிறார்கள். இந்த விவரத்தை அந்த மாநில வருவாய்த் துறை அமைச்சரே கூறியிருக்கிறார். —ஸ்டேட்ஸ்மென் பாலி



''அந்த வக்கீல் கெட்டிக் காரனாயிருந்தால் கொலையாளி தப்பித்துக் கொள்ளவும் செய்கிறான். கொலை செய்தவர்கள் எல்லாரும் தூக்கிலே தொங்கி விடுவதில்லை. புஷ்பா உணர்ச்சி வசப் பட்டுக் கொலை செய்து விட ஆழ்ந்த காரணங்கள் இருப்பின் நீதி அனுதாபத்துடன் கொலைகாரனை அணுகுகிறது. பல சமயங்களில் அவனுக்கு விடுதலையே அளித்து விடுகிறது.''

''இப்படிப்பட்ட சமாதானங்களும் என் மனசுக்குத் தேவையாகத்தான் இருக்கிறது. நான் பாதை தவறியது இதுதான் முதல் தடவை, கடைசித் தடவையும் இதுதான்.''

''அதைப் பற்றி இப்போதென்ன?''

''இல்லை இப்போதே தீர்மானித்து விட வேண்டும்'' என்றாள் புஷ்பா. ''நான் உங்களைக் காதலிப்பதாக எண்ணிவிடாதீர்கள். எதிர் காலத்தில் நீங்கள் கூப்பிட்ட குரலுக்கு நான் ஓடி வருவேன் என்றும் நினைக்காதீர்கள்''

''நீ என்னைக் காதலிக்கவில்லை என்று நன்றாகத் தெரியும் புஷ்பா. அப்படி எண்ணிக் கொள்ள நான் ஒன்றும் அசடு இல்லை. ஆனால் சென்னை திரும்பிய பிறகு என்னை மறுபடியும்

வரவழைத்துக் கொண்டதாக ஆகும். மேலே மேலே பாவம் செய்து தெய்வத்தின் கோபத்துக்கு ஆளாவதா?''

''தெய்வம் கோபப் படுவதென்றால் அது முதலில் அர்த்தநாரியிடம் தன் கோபத்தைக் காட்ட வேண்டும்.''

''ஐயோ வேண்டாம்!''

''வேண்டாம். அவன் சௌக்கியமாய் இருக்கட்டும். நீயும் மகிழ்ச்சியோடு இரு.''

''இது எதில் போய் முடியப்போகிறதோ?''

''இப்போதைக்கு இந்தப் பேச்சு சினிமாத் தியேட்டரில் போய் முடியட்டும். அப்புறம் சென்னை திரும்பும் வரை நாம் அர்த்தநாரியை மறந்து விடுவோம், என்ன?''

அந்த யோசனையைக் கடைப் பிடிப்பது கஷ்டமாக இல்லை, புஷ்பாவுக்கு.

### 9

புஷ்பா சென்னை வந்து சேர்ந்ததற்கு மறுநாள் காலை அர்த்தநாரி பம்பாயிலிருந்து திரும்பினான், உற்சாகத் துள்ளல் நடையுடன், ''புஷ்பா! புஷ்பா!'' என்று மகிழ்ச்சியுடன் அழைத்தவாறே வீட்டுக்குள் நுழைந்தான்.

புஷ்பா சமையலறையிலிருந்த படியே, ''இதோ வரேன்'' என்று குரல் கொடுத்தாள். அவள் எழுந்து வரக் காத்திராமல் இவன் உள்ளே விரைந்தான். ''புஷ்பா! எனக்குக் கொடுத்திருந்த காரியத்தை முடித்து விட்டேன். ஐம்பதாயிரம் ரூபாய்க்கு ஆர்டர் பிடித்து விட்டேன். இப்படி உட்காருகிறேன் திருஷ்டி சுற்றிப் போடுகிறுயா?'' என்றுன்.

புஷ்பா புன்னகை புரிந்தாள், சோகமாக. அவனை ஏறிட்டுப் பார்க்கவே அவளுக்குக் கூச்சமாக இருந்தது. ''ரொம்ப சந்தோஷம்.''

''என்னது! நீ ரொம்ப சந்தோஷம் என்பது 'ஐயோ பாவம்' என்பது போல் தொனிக்கிறது!''

''அப்படி ஒன்றுமில்லையே'' என்றுள் புஷ்பா சற்று மிரண்டு போனவளாக.

''இதோ பார், புஷ்பா! நான் காலேஜில் படித்துப் பட்டம் பெருததால் என்ன குறை? என்னை மிஞ்ச யாருண்டு? காரியத்தை ஸக்ஸஸ்ஃபுல்லாக முடித்துக் கொண்டு வந்தேனே இல்லையா? இனிமேல் படிக்காதவனுக்குப் பிரமோஷன் இல்லை என்று சொல்ல மாட்டார்களே? பட்டப் படிப்பு முக்கியமா, புத்திசாலித்தனமும் செயல் திறனும் முக்கியமா என்பதை மதனனே தீர்மானித்துச் சிபாரிசு செய்யட்டும்.''

அவள் மனத்துக்குள் சிரித்துக் கொண்டாள். எல்லா ஏற்பாட்டையும் தானே செய்து வைத்து விட்டு ஒப்புக்குத் தானே இவரை அனுப்பினுர் மதனன். இவர் தம் சாமர்த்தியத்தைப் பற்றிப் பறை சாற்றிக் கொள்வது வேடிக்கைதான்! ''எல்லாம் நல்லபடியாக முடியும்'' என்றுள்.

''என்ன புஷ்பா இது? எதையோ பறி கொடுத்து விட்டவள் மாதிரி முகத்தை வைத்துக் கொண்டிருக்கிறுய்!''

'சுருக்'கென்று தைத்தது புஷ்பாவுக்கு. 'ஆமாம்! பறி கொடுத்து விட்டுத்தானே நிற்கிறேன்!' அவள் நெஞ்சு கனத்தது.

''எங்கே, மதனனிடம் என் சார்பில் எப்படிப் பேசி நடித்தாய்? அதைக் கொஞ்சம் காண்பி, பார்க்கலாம். கம் ஆன்! என் திறமைக்காக இல்லா விட்டாலும் உன்னுடைய கிளாமருக்காக அவன் நிச்சயம் எனக்குப் பிரமோஷன் கொடுத்துத் தான் ஆக வேண்டும்... கொஞ்சம் சிரித்துத்தான் வையேன்... கொஞ்சம்... கொஞ்சம்...''

அவன் கெஞ்சுவதைப் பார்த்து அவள் சிரித்தே விட்டாள், கலகலவென்று.

அர்த்தநாரி அவளுடன் சேர்ந்து, சிரித்து, அவளை அப்படியே கட்டி அணைத்து அவள் பாதங்கள் இரண்டும் தரையிலிருந்து இரண்டு அங்குலம் உயருமாறு தூக்கி, ஒரு சுற்றுச் சுற்றி இறக்கினுன்.

''புஷ்பா! ஹெட் ஆஃபீஸில் எனக்கு ரொம்ப நல்ல பெயர்! ஐம்பதாயிரம் ரூபாய் ஆர்டர் பிடித்து விட்டேன் என்று தெரிந்ததும் கைகுலுக்கி ரொம்ப பாராட்டினுர்கள். அப்புறம் கூட இரண்டு நாட்கள் இருந்து பம்பாயைச் சுற்றிப் பார்க்கலாமே என்றுர்கள். கம்பெனி செலவில் எனக்கு என்டர்டெய்ன்மெண்ட்! நைட் கிளப்புக்குக் கூடப் போவதாகப் புரோகிராம் இருந்தது. நான்தான் அதெல்லாம் வேண்டாம் என்று சொல்லி விட்டு இங்கே ஓடி வந்து விட்டேன். நைட் கிளப்பாவது, பகல் கிளப்பாவது என் புஷ்பா இங்கே எனக்காகக் காத்திருக்கும் போது எனக்கெதற்கு அந்த இழவெல்லாம்? பம்பாயிலுள்ள அத்தனை நைட்கிளப் அழகிகளும் ஒன்று சேர்ந்தாலும் உன் கால் தூசுக்குச் சமானமாக மாட்டார்கள் புஷ்பா. உன்னை நினைத்துக் கொண்டேன். அப்புறம் ஒரு நிமிஷம் கூட அனுவசியமாக அங்கு தங்க எனக்கு மனசு கேட்கவில்லை. ஒரே ஓட்டமாக ஓடி வந்து விட்டேன்!''

''பம்பாயிலிருந்து சென்னை வரையில் ஓடினீர்களா? அதுதான் இப்படி இரைக்கிறது!'' என்றுள் புஷ்பா நகைத்து.

''நோ, நோ! இப்போது எனக்கு இரைப்பதற்குக் காரணமே வேறு! உன்னைப் பிரிந்து எட்டு நாட்கள் ஆகி விட்டதே!'' அவளைத் தாவிப் பிடித்தான். அவன் கரங்கள் விஷமத்தில் இறங்கின.

''ஆபீஸுக்கு நேரமாகிவிடப்போகிறதே?'' என்றுள் புஷ்பா கவலையுடன்.

''அதெல்லாம் ஒன்றும் தாமதமாகாது'' என்றுன் தீர்மானமாக.

இந்தத் தன்னலப் பேராசையையும் நிர்ப்பந்தத்தையும் அவசரத்தையும் பெங்களூரின் நிதானம், விட்டுக் கொடுக்கும் பான்மை, இங்கிதம், பக்குவம் ஆகியவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை புஷ்பாவினுல்.

அங்கே மந்தமாருதம் வீசியதென்றுல் இங்கே புயல் அடித்தது. அங்கே உல்ஸூர் ஏரியில் சிற்றலைகள் சிரித்தன என்றுல் இங்கே கடலில் பேரலைகள் பொங்கி விழுந்தன. அங்கே மலர்கள் ரசித்து மகிழப் பட்டன, இங்கே புஷ்பங்கள் கசக்கி முகரப்பட்டன.

அர்த்தநாரி அன்று ஆபீஸுக்கு வேண்டுமென்றே பத்து நிமிஷம் தாமதமாகப் போனுன். பக்கத்திலிருந்த ஹோட்டலில் ஒரு கப் காப்பி சாப்பிடுவதில் அந்தப் பத்து நிமிஷத்தை வீணடித்தான். ஐம்பதாயிரம் ரூபாய்க்கு ஆர்டர் பிடித்து வந்திருக்கும் போது, பத்து நிமிஷம் கம்பெனி நேரத்தை வீணடித்தால் என்னவாம்? என்று தனக்குள் பெருமையுடன் எண்ணிக் கொண்டான். ஆபீஸுக்குள் அவன் நுழைந்த போது அவன் சகாக்கள் சிலர் தங்களுக்குள் ஏதோ கசமுசவென்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

''என்னய்யா இங்கே முணுமுணுப்பு?'' என்றுன் அர்த்தநாரி, நட்பு பாவத்தைக் குரலில் தேக்கிய அதிகாரக் கேள்வி!

''உமக்கென்னய்யா, நீர் பாட்டுக்கு எட்டு நாட்கள், பத்து நாட்கள் என்று பம்பாய் வாசம் பண்ணி விட்டு வருகிறீர். நீர் அந்தண்டை போனதும் மானேஜரும் ஒரு வாரம் லிவு போட்டு விட்டுப் போய் விட்டார். எங்களுக்கு என்ன தெரியும்? யார், எதைப்பற்றி இங்கே முடிவெடுப்பது? ஃபைல்கள் எதுவும் 'மூவ்' ஆகவில்லை. புது பிஸினஸ் ஏதும் நடக்கவில்லை. இன்று காலை வந்ததிலிருந்து மதனன் நெற்றிக் கண்களைத் திறந்து கொண்டு உட்கார்ந்திருக்கிறுர். 'உதவாக் கரைகள், உருப்படாத கேஸுகள்' என்று யார் போனுலும் எரிந்து விழுகிறுர்.''

''ஏன், ஹெட்கிளார்க் பதவிக்குப் போட்டி யிடுகிறுரே, மிஸ்டர் பட்டதாரி பட்டாபி, அவர் சொற்படி கேட்டு நடந்து கொள்வதுதானே?'' என்ருன் அர்த்தநாரி.

''அவனு! முதலில் என்னை ஹெட் கிளார்க்காக நியமித்து, ஆபீஸ் ஆர்டரைக் கையிலே கொடுக்கட்டும், அப்புறம் டெஸிஷன் எடுக்கிறேன்' என்று தட்டிக் கழித்து விட்டான். ஹெட் கிளார்க்காக நியமித்த பிறகும் ஃபுட் கிளார்க்காகத்தான் இருப்பான் போலிருக்கு!''



''அழகுதான்! இரண்டு நாட்கள் நான் இல்லேன்னு ஆபீஸே ஸ்தம்பித்துப் போயிடறதே'' என்று கர்வத்துடன் அலுத்துக் கொண்டு மானேஜர் அறைக்குப் போனுன் அர்த்தநாரி.

''கம் இன்'' என்று நாய் குரைப்பது போல் அதட்டினுன் மதனன். அர்த்தநாரி எனக் கண்டதும், உடனே அவன் தொனி மாறியது. ''கங்கிராஜுலேஷன்ஸ் அர்த்தநாரி'' என்ருன், மகிழ்ச்சியை முகத்தில் தேக்கி.

''தாங்க்யூ ஸார்!''

''காலமெ டெலக்ஸ் மெஸேஜ் வந்தது. உன் டிரிப் ரொம்ப ஸக்ஸஸ்ஃபுல் போலிருக்கே?''

''எல்லாம் நீங்க வழி காட்டி விட்டதால் தான்'' என்ருன் அர்த்தநாரி.

''நைஸ் ஆஃப் யூ டு ஸே ஸோ'' என்ருன் மதனன். பிறகு, ''உன்னை பம்பாய்க்கு அனுப்பிய மறுநாள் நானும் ஒரு பர்ஸனல் மேட்டரா வெளியூர் போக நேர்ந்தது. இங்கே ஒரு வேலையும் நடக்கல்லே. அவனவன் காலேத் தட்டிண்டு உட்கார்ந்துட்டான் போலிருக்கு'' என்ருன்.

''நான் கவனிக்கிறேன், ஸார்.''

''ப்ளீஸ். கொஞ்சம் ஸ்பீட் அப் பண்ணு பார்க்கலாம்.''

''எஸ் ஸார்.''

மத்தியானம் டிஃபனுக்குப் போய் வந்த பிறகு, மானேஜர் கூப்பிடுவதாகப் பியூன் வந்து சொல்லவே மறுபடியும் மதனன் அறைக்குச் சென்ருன் அர்த்தநாரி. ''உன்னை இன்ஞெரு தடவை கன்கிராஜுலேட் பண்ண வேண்டியிருக்கு, அர்த்தநாரி! உனக்குப் பிரமோஷன் கிடைச்சுப் போச்சு!'' என்று கூறிக் கைகுலுக்கினுன் மதனன். பிறகு டெலக்ஸ் செய்தியை அவன் கரத்தில் வைத்தான். ''விஷ் யூ எ குளோரியஸ் ஃபியூட்சர்!''

''ரொம்ப தாங்க்ஸ் ஸார்'' என்ற போது அர்த்த நாரியின் கண்கள் பனித்தன. தொண்டை கரகரத்தது. அவன் வெளியே வந்தான். டெலெக்ஸ் செய்தி அடங்கிய தாளே உயரத் தூக்கி அசைத்த படியே சந்தோஷம் கொப்பளிக்க வரும் அவனேப் பார்த்து விட்டு அனைவரும் சூழ்ந்து கொண்டார்கள். விஷயம் புரிந்ததும் எல்லாரும் பாராட்டினுர்கள். நன்றி கூறிய அர்த்தநாரி, ''பாராட்டினுல் போதாது: உங்கள் அனைவரது ஒத்துழைப்பும் வேண்டும்'' என்ருன். ''ஷியூர், நிச்சயமா, பேஷா'' என்றெல்லாம் வாக்குறுதிகள் பிறந்தன. பட்டதாரி பட்டாபி மட்டும் இருந்த இடத்தைவிட்டு அசையவில்லே. அவனிடம் அர்த்தநாரி நெருங்கினுன். டெலக்ஸ் செய்தியை அவனெதிரே வைத்து, ''நோ ஹார்டு ஃபீலிங்ஸ்'' என்று சொல்லித் தோளேத் தட்டி விட்டு வந்தான். பட்டாபி பற்களை நறநறவென்று கடிப்பது கேட்டது.

சற்று நேரத்தில் டெலக்ஸ் செய்தி அடங்கிய தாள், பியூன் மூலம் அர்த்தநாரி மேஜைக்கே வந்து சேர்ந்தது. அதை எடுத்து மடித்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான் அர்த்தநாரி. சாயந்திரம் புஷ்பாவிடம் காட்டி சந்தோஷப்பட வேண்டாமா? 'கம், லெட் அஸ் ஸெலிபரேட்' என்று சொல்லி அவளேச் சினிமாவுக்கு அழைத்துப் போக வேண்டும்.

எவ்வளவு பெருமையுடனும் ஆனந்தத் துடனும் ஆபீஸை விட்டுக் கிளம்பினுனே, அவ்வளவுக்கு முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான் அர்த்தநாரி. பஸ்ஸை விட்டுக் குதித்த போது வேறெரு பஸ்ஸிலிருந்து சிவசாம்பன் இறங்குவதைப் பார்த்தான். அர்த்தநாரி வசித்த அதே வீட்டில் இன்னெரு போர்ஷனில் குடியிருப்பவன் சிவசாம்பன். இருவரும் சேர்ந்தே நடந்தார்கள். 'என்னப்பா பம்பாய்க்குப் போன காரியமெல்லாம் வெற்றிகரமாக முடிந்ததா?''

''ஓயெஸ்! வெரி ஸக்ஸஸ்ஃபுல்'' என்ருன் அர்த்தநாரி. ''அதற்குக் கைமேல் பலனும் கிடைச்சுது. முதல் தேதியிலிருந்து நான் ஹெட் கிளார்க்.''

''அடி சக்கை!'' என்ருன் சிவசாம்பன். ''நீ புறப்பட்ட மறுநாளே உன் ஒய்ஃபும் வெளியூர் போனுளே, அந்தக் காரியமும் ஸக்ஸஸ்தானு? அவளுக்கும் ஒரு பிரமோஷன் கிடைச்சுடுமா?''

அர்த்த நாரியின் அடிவயிறு முதுகுத் தண்டைத் தொட்டு விட்டுத் திரும்பியது. ''என்ன சொன்னீங்க?''

''என்னப்பா ஹெட் கிளார்க் ஆனதும் ஆபீஸ் ஞாபகமாகவே இருக்கியா? நான் பேசறது காதில் ஏறலேயா?''

''ஸாரி, என் ஒய்ஃப் ஊருக்குப்போனதைப் பற்றிக் கேட்டீங்க, இல்லே? நானே இன்னும் அவளிடம் சரியாப் பேசலே. காலே ஊரிலிருந்து திரும்பியதுமே அவசர அவசரமாக ஆஃபீஸுக்குக் கிளம்பிட்டேன். இப்ப வீடு போய்ச் சேர்ந்துதான் விசாரிக்கணும்.''

''உங்களுக்கு என்னப்பா, ஹஸ்பண்ட், ஒய்ஃப் இரண்டு பேரும் சம்பாதிக்கிறீங்க. குழந்தை குட்டிக்கு அவசரப் படலே. ஜாலியா இருக்கீங்க. எங்களேப் போலவா?'' என்று அலுத்துக் கொண்டார் சிவசாம்பன். ''பொழுது விடிந்தால் கடன்காரன் முகத்தில் தான் விழிக்க வேண்டியிருக்கிறது!''

அர்த்தநாரி பதில் கூறவில்லே. அவன் இதயத்தில் குரல்கள் மாறி மாறி ஒலித்துக்

## அமைச்சர் செய்த ஆபரேஷன்!

மகாராஷ்டிர சுகாதார அமைச்சர் திருமதி பிரமீளா டாப்லே தேசிய குடும்பக் கட்டுப்பாடு இரு வார விழா வைத் துவக்கி வைத்தார். எப்படி? அவரே இரண்டு பெண்களுக்குக் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் களைச் செய்தார்.
— ஃபெமினு
கே.ஆர்

கொண்டிருந்தன. ஒன்று ஆஃபீஸில் நாரா யணன் முறையிட்டது:

''நீ அந்தண்டை போனதும் மானேஜரும் ஒரு வாரம் லீவு போட்டு விட்டுப் போய் விட்டான். எதைப் பற்றி இங்கே யார் என்ன முடிவெடுப்பது?'' மற்றொன்று பக்கத்துப் போர்ஷன் சிவசாம்பனின் கேள்வி:

''உன் ஒய்ஃப் வெளியூர் போனுளே, அந்தக் காரியமும் ஸக்ஸஸ்ஃபுல்தானு?''

அவன் நெஞ்சு கொதிக்க வீட்டுக்குள் அடியெடுத்து வைத்த போது, புஷ்பா ஏற் கெனவே ஆபீஸிலிருந்து திரும்பி வந்து விட் டிருப்பதைப் பார்த்தான். மன உளைச்சல் காரணமாக ஏற்பட்ட சோர்வுடன் வாசல் கதவைச் சாத்திவிட்டுச் சாய்வு நாற்காலியில் விழுந்தான்.

''பிரமோஷன் கிடைத்ததா?'' புஷ்பாவின் குரல் அடுத்த அறையிலிருந்து கேட்டது.

''உம்...''

''கிடைச்சுடுத்தா! குரலில் உற்சாகத் தையே காணுமே?''

''களைப்பா இருக்கு; ரயில் பயண அலுப்பு. ஆபீஸில் ஒரு வாரமா ஒரு வேலேயும் நடக் கலே. எல்லா ஃபைலும் நான் திரும்பி வரக் காத்திருந்திருக்கு,''

''காப்பி ரெடியாறது.'' அவள் ஒரு தட்டில் அல்வாவும் பக்கோடாவும் வைத்துக் கொண்டு வந்தாள். ''நல்ல சேதியுடன் வீடு திரும்புவீங்கன்னு நிச்சயம் நம்பினேன். அதனுல் வரும்போதே சாந்தா பவனில் ஸ்வீட் காரம் வாங்கி வந்தேன்.''

அவன் எதிரே தட்டை வைத்து விட்டுத் திரும்பினுள். ஓரிரு கணங்களுக்கு மேல் அவன் முகத்தில் அவள் கண்கள் நிலைக்கவில்லே. 'காலேயிலிருந்தே இப்படித்தான் இருக்கிருள் இவள்' என்று அவனுக்குப் பட்டது. டிஃபனே அவன் தொடவில்லே.

''புஷ்பா!''

''ஏன்?''

''நான் பம்பாய் போனதும் நீயும் வெளி யூர் கிளம்பிட்டியாமே, எங்கே போனே?''

சமையலறையில் டம்ளரைக் கைநழுவ விட் டாள் புஷ்பா. 'டணுர்' என்று பெரிதாகச் சத்தமிட்டுக் கொண்டு விழுந்தது அது. தலேயில் இடி விழுந்தது போல் இருந்தது புஷ்பாவுக்கு!

### 10

நல்ல வேளே, புஷ்பாவின் முகத்தை அர்த்த நாரியினுல் பார்க்க முடியவில்லே. இல்லாத போனுல் அதில் தோன்றிய பீதியும் அதன் விளேவான விகாரத் தோற்றமும் அவனே ஒரு கலக்குக் கலக்கியிருக்கும். அப் புறம் புஷ்பா என்னதான் சமாதானம் சொல்லியிருந்தாலும் அது எடுபட்டிருக்காது.

ஆனுல் இப்போது சமையலறையில் இருந்த புஷ்பா, ஒருவாறு ஒரு சில கணங்களில் சமா ளித்துக்கொண்டாள். ''சனியன், கைதவறி விழுந்து ஏகச் சத்தத்தைக் கிளப்புகிறது'' என்று டம்ளரை வைதவள், கணவனுக்கு ஒரு ''ஸாரி''யும் சொன்னுள். இதற்குள் அவள் உள்ளம் பரபரப்புடன் யோசித்து ஒரு கதையை உருவாக்கியது.

''நீங்கள் கிளம்பிய மறுநாள் எனக்கு ஆபீஸ் விலாசத்துக்குத் தந்தி வந்தது. 'அப்பா வுக்கு ஹார்ட் அட்டாக்; உடனே கிளம்பி வா'ன்னு தம்பி தந்தி கொடுத்திருந்தான். அதைப் பார்த்ததும் பதறிப் போச்சு, சாயந் திரம் வீடு திரும்பியதும் அவசரம் அவசரமா ஒரு ஸூட்கேஸை நிரப்பிண்டு ஸ்டேஷனுக்குப் போனேன். நான் எத்தனே சீக்கிரம் போனுல் தான் என்ன, ரயில் கிளம்பற நேரத்துக்குத் தானே புறப்படும்.? அது கூடத் தோணலே. ஒரே பரபரப்பு, குழப்பம். இங்கே பக்கத்துப் போர்ஷன்லே கூட யார்கிட்டேயும் எங்கே போறேன் எதுக்கு என்று சொல்லவேயில்லே. நேற்றுதான் திரும்பினேன்.''

''ஓஹோ!'' என்றுன்.

''உங்களுக்கு நான் மதுரை போனது பிடிக்கலே இல்லேயா?''

''மதுரைக்குப் போனதும் பிடிக்கலே; நான் பம்பாயிலிருந்து காலமெ திரும்பி வந்த தும் என்னிடம் சொல்லாமல் மறைத்ததும் பிடிக்கலே. மூணுவது மனுஷன் கூறித்தானே நீ ஊருக்குப் போய் வந்ததை நான் தெரிஞ் சுக்க வேண்டியிருந்தது?''

''நானே சொல்லியிருக்கலாம், சொல்லி யிருக்கணும். ஆனு நீங்க காரியத்தையெல் லாம் வெற்றிகரமாய் முடிச்சுக்கிட்டு எவ் வளவோ சந்தோஷமா பம்பாயிலிருந்து வந்திருக்கீங்க, 'அப்பா ஸீரியஸ்ஸா இருந் தார்'னு சொல்லி அந்த மகிழ்ச்சியைக் குலேப் பானேன் என்றுதான் யோசித்தேன். மேலும் நீங்களே இப்போ சொல்லவில்லேயா, நான் மதுரை போய் அப்பாவைப் பார்த்து விட்டு வந்தது உங்களுக்குப் பிடிக்கலேன்னு? வந்த தும் வராததுமாக அதைச் சொல்லி உங்க 'மூட்' கெட்டுப் போகச் செய்வானேன் என்றுதான் பேசாமல் இருந்தேன்.''

''அதுதான் அப்படிச் சோகமாய் இருந்தி யாக்கும்?''

''ஆமாம், நீங்க கூடக் கேட்கலியா? குடிமுழுகிப் போன மாதிரி எதுக்கு முகத்தை வைச்சுக்கிட்டிருக்கேன்னு?''

''நீ உன் அப்பாவைப் பார்க்கப் போனது நிஜமாகவே எனக்குப் பிடிக்கலே புஷ்பா! அவர் நம்மை மதிக்காத போது நாம் மட்டும் எதற்காக அவருக்காக உருகணும்? நமக்கும் சுய கௌரவம் இருக்கணுமா இல்லியா?''

''வாஸ்தவம்தான். எனக்குப் புரியறது.? என்ன டிஃபனைத் தொடவேயில்லே? எவ்வளவு ஆசையா பாதாம் அல்வா வாங்கி வந்தேன். சூடு ஆறுமல் முதலில் காப்பியைச் சாப்பிட்டுடுங்க.''

காப்பியை உறிஞ்சிய படியே அவன் கேட்டான்: ''அவருக்கு இப்போ எப்படி இருக்கு?''

''யாருக்கு?... ஓ! அப்பாவைக் கேட்கிறீங்களா? சரியாத்தான் இருக்கார்... இல்லே சுமாராத்தான் இருக்கார். இப்பப் பாதகமில்லே, தேவலாம்... முதல் ஹார்ட் அட்டாக்கிலிருந்து தப்பிச்சுட்டார். இனிமே ரொம்ப ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். இரண்டாவது, மூன்றுவது அட்டாக் வந்தால் ரொம்பக் கஷ்டம். பிழைக்கிறது துர்லபம் தான்!''

''உன்னே, 'எதுக்கு வந்தே'ன்னு கேட்டு அவமானப் படுத்தினுரா?''

''இல்லே, வீட்டை விட்டு முன்பு என்னைத் துரத்தி அடிச்சவர்தான் என்றுலும், இப்போ பெரிய கண்டத்திலிருந்து அவர் தப்பிப் பிழைச்சிருந்தார் இல்லியா? என்னை மட்டம் தட்ட அவருக்கு மனசு வரலேயோ என்னமோ. 'தான் ஆடாவிட்டாலும் தன் தசை ஆடும்' என்பார்களே, அந்தக் கேஸ்!''

''சரி விட்டுத் தள்ளு. மறுபடியும் தந்தியோ தபாலோ, அவர் தவறிட்டார்னு வந்தாலொழியப் போகாதே! அவ்வளவுதான்'' என்ற அர்த்தநாரி பாதாம் அல்வாவை இரண்டே விள்ளல்களில் வாயில் போட்டு விழுங்கினுன். ''நீ சாப்பிட்டியா?''

''இல்லே'' என்றுள் புஷ்பா. ''அதனுல் என்ன, நீங்க சாப்பிட்டா நான் சாப்பிட்ட மாதிரிதான்!''

அவள் எரிச்சலும் ஏளனமுமாகக் கூறுவதைப் புரிந்து கொள்ளாது, திருப்தியுடன் பகோடாவைப் பிட்டு வாயில் போட்டுக் கொண்டான் அர்த்தநாரி.

* * *

**ம**றுநாள் வழக்கத்துக்குச் சற்று முன்பாகவே கிளம்பி, சிவ சாம்பனுக்காக பஸ் ஸ்டாண்டில் காத்திருந்தான் அர்த்தநாரி. அவன் வந்து சேர்ந்ததும் ஏதோ அன்றைய செய்திகளை விவாதிப்பவன் போல் தொடங்கி, ''முதலமைச்சர் மதுரையில் பேசியிருக்கிறுர் பார்த்தீர்களா'' என்று கேட்டு, ''மதுரை என்றதும் நினைவு வருகிறது. நேற்று புஷ்பாவைப் பற்றிக் கேட்டீங்களே, பாவம், அவள் அப்பாவுக்கு 'ஹார்ட் அட்டாக்' என்று ஆபீஸ் விலாசத்துக்குத் தந்தி வந்திருக்கிறது. ஒரேயடியாகப் பதறிப் போய் ஒருத்தரிடமும் சொல்லிக் கொள்ளக் கூடத் தோன்றுமல் ஓடியிருக்கிறுள். அப்பாவைப் பார்க்கப் போனதற்காக நான் கோபிக்கப் போகிறேனே என்று பயம் வேறே'' என்று கூறினுன்.

''ஐயோ பாவம்!'' என்று அனுதாபப் பட்டார் சிவசாம்பன். ''எதுக்குப்பா இவ்வளவு தூரம் பெண்டாட்டியை மிரட்டி வைச்சிருக்கே? என்னதான் மன வேற்றுமை என்றுலும் அப்பாவுக்கு ஓர் ஆபத்துன்னு மனசு கிடந்து பதறுதா அவளுக்கு?''

''இதைத்தான் நானும் அவளிடம் சொன்னேன்'' என்று புளுகினுன் அர்த்தநாரி. ''உன் அப்பா நம்மிடம் சரியா நடந்துக்கலேங்கிறது வேறே. அவர் நம்மை மதிக்காத போது நாமும் அவரை ஒதுக்கறதில் தப்பு இல்லே. ஆனு அதுக்காக உயிராபத்து என்கிற போது போய்ப் பார்க்காமல் இருக்க முடியுமா? அதற்காக நான் கோபித்துக் கொள்வேனு? என்றேன்!''



கல்கத்தாவில் ஒரு ரயில் பிரயாணி இன்னெருவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்: ''பாருங்க அதிசயத்தை! முதல்நாள் ஓட்டு எண்ணும்போது இந்திராகாந்திக்கு 20,000 ஓட்டு அதிகம். அடுத்த நாளில் 77,000 அதிகம். இன்னும் மூணு, நாலுநாள் எண்ணியிருந்தா என்ன ஆகியிருக்கும்!''

—ஸண்டே.
—ராமு.

''அதுதான் சரி'' என்று கூறச் சிவசாம்பன் வாய் திறந்தார். அதற்கு முன் அவர் ஏற வேண்டிய பஸ் வந்து விடவே கூறுமலேயே பஸ்ஸில் பாய்ந்து ஏறத் தயாரானுர்.

* * *

**ஓ**ர் இக்கட்டான நிலைமையைச் சாமர்த்தியமாகச் சமாளித்து விட்ட திருப்தியுடன் புஷ்பா பஸ்ஸில் ஏறினுள். தலைக்கு வந்தது தலைப் பாகையோடு போயிற்று என்பார்களே, அது போலல்லவா இருக்கிறது? அப்பட்டமான பொய் சொல்லத் தனக்கு எங்கிருந்து அவ்வளவு துணிவு வந்தது? கண நேரத்தில் ஒரு கற்பனைக் காரணம் தன் மனத்தில் எவ்வாறு உதித்தது? கதை எழுதிப் பேர் வாங்கலாம் போலிருக்கிறதே!

காரியாலயத்தருகே உள்ள பஸ் ஸ்டாப்பில் இறங்கியபோது அவளையும் அறியாமல் ஒரு புன்னகை முகத்தில் அரும்பியிருக்க வேண்டும். ''என்ன இன்றைக்கு ரொம்ப உற்சாகமாய் இருக்கிறாய் போலிருக்கே?'' என்று சக ஊழியர் ஒருவர் கேட்டதும் புஷ்பா திடுக்கிட்டாள். "சீச்சீ! கணவனை ஏமாற்றி விட்டோம் என்பதில் எனக்குப் பெருமையா? அதனால் உற்சாகமடைய அது வெளிப்படையாக என் முகத்தில் தெரியவும் செய்கிறதா? எவ்வளவு கேவலம் இது!' குற்ற உணர்வினால் பாதிக்கப்பட்டு அவள் கூசிக் குறுகினாள். குனிந்த தலை நிமிராமல் காரியாலய வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

மேஜை மீது ஃபோன் அடித்தது.

''குட்மார்னிங். பாபுலர் டிரேடர்ஸ். ஜெனரல் மானேஜர் கங்காதரன்ஸ் ஆபீஸ்!''

''புஷ்பா!''

''யாரு?''

''நான்தான்.'' அவள் அடி உதட்டைக் கடித்துக் கொண்டாள். இதயம் படபடத்தது. மதனன் எதற்குப் போன் செய்கிறான்? இனிமேல் என்னிடம் பேசுவதற்கு என்ன இருக்கிறது?'

''என்ன விஷயம்?'' கடுமை தொனிக்கக் கேட்டாள்.

''என்ன புஷ்பா இது? இப்படிக் கத்தரித்து விட்டாற் போலப் பேசினா எப்படி? ஹௌ ஆர் யூ? ஹௌ ஆர். திங்ஸ்?''

கங்காதரன் நிமிர்ந்து பார்ப்பதைப் பார்த்தாள் புஷ்பா. ''கெட்டிங் ஆன்'' என்றாள்.

''என்ன புஷ்பா இது?'' — மதனன் குறைப்பட்டுக் கொண்டான். இப்படி ஒரு வார்த்தைப் பதிலாகவே சொன்னால் என்ன அர்த்தம்? நான் எவ்வளவு ஆசையோடு ஃபோன் பண்ணறேன்.... உன் ஹஸ்பண்டுக்குப் பிரமோஷன் கொடுத்துட்டேன், சொன்னானா?... இல்லே.... நான் கொடுக்கலே... நீதான் என் மூலமா உன் கணவனுக்குப் பிரமோஷன் கொடுத்தே. சந்தோஷப்பட்டானா? அவன் சந்தோஷம் இருக்கட்டும். நீ சந்தோஷப் படறியா?''

''யெஸ், தாங்க்யூ.''

வேறு இரு தலைகளும் நிமிர்ந்தன, ஆவல் குறுகுறுப்புடன். புஷ்பா ஒருவித தடுமாற்றத்துடன் பேசுவது அவர்களுக்குப் புரிந்தது. ஒரு வார்த்தை பதில்கள் விநோதமாய்த் தொனித்தன.

பாபுலர் டிரேடர்ஸ் காரியாலயத்தில் தனி அறை என்று தமக்கு ஏற்படுத்திக் கொள்ளவில்லை ஜெனரல் மானேஜர் கங்காதரன். நீண்ட கூடத்தின் ஒரு பக்கத்தில் ஜி. எம்.மின் தனி அலுவலகம் இயங்கியதே யொழிய, தனியே தடுப்பு மறைப்பு ஏற்பாடு ஏதும் கிடையாது. நவீன சிந்தனையின் அடிப்படையில் இப்படி ஏற்பாடு செய்திருந்தான் கங்காதரன். தனக்குத் தனி அந்தஸ்தை ஏற்படுத்திக் கொள்ளாமல் சகோதரப் பான்மையுடன் தனக்குக் கீழ் பணியாற்றுவோரில் ஒருவனாக விளங்கினான். அதே சமயம் யாரும் அரட்டை அடித்துக் கொண்டோ கதைப் புத்தகம் படித்துக் கொண்டோ நேரத்தை வீணாக்காமல் இருக்கிறார்களா என்று அவனால் கவனித்துக் கொள்ள முடிந்தது. யாரேனும் சும்மா இருப்பதாகத் தென் பட்டால் அவனுக்குப் புதிய வேலைகளை ஒதுக்க முடிந்தது. கங்காதரனுடைய சுருசுருப்பைப் பார்த்து மற்றவர்களும் கடமையுணர்வு புதுப்பிக்கப் பெற்றார்கள்.

புஷ்பா மதனனிடம் ஃபோனில் மனம் விட்டுப் பேச முடியவில்லை. அவள் பேசுவதைக் கவனிக்கச் சுற்றி இருபது கண்களும் கேட்க இருபது காதுகளும் இருந்தன.

ஒரு வார்த்தை பதிலாகவே இரண்டு மூன்று தடவை கிடைத்ததும் மதனன் புரிந்து கொண்டான், புஷ்பாவுக்கு உள்ள சங்கடத்தை. ''ஓ! ஸாரி, புஷ்பா! நான் இங்கே தனி அறையிலிருந்தபடியே பிரைவேட் லைனில் பேசுகிறேன். இது மாதிரியே அங்கும் ஜி. எம். ஆஃபீஸும் அதுக்குப் பக்கத்தில் அவனுடைய ரிஸப்ஷனிஸ்ட் — கம் — பிரைவேட் ஸெக்ரட்டரிக்குத் தனியே ஒரு குட்டி அறையும் இருக்கும்னு நினைச்சுட்டேன். நீ ஒரு வார்த்தை பதிலாகவே சொல்வதிலிருந்து அப்படி இல்லேன்னு புரிகிறது...''

''மங்களா! ஐ ஆம் பிஸி. ஆபீஸ் அவர்ஸிலே ஃபோன் பண்ணாதேன்னு சொல்லியிருக்கேனில்லே! வைக்கட்டுமா?''

''ஓஹோஹோ! என்னை மங்களாவாக்கிட்டியா! பேஷ், பேஷ்! ஒன் ஸெகண்ட். ஃபோனை வைச்சுடாதே! ஒரே ஒரு விஷயம் கேட்டுக்கோ ஐந்து மணிக்கு ஆஃபீஸ் விட்டதும் வெளியே போய் பப்ளிக் ஃபோன் பூத்திலேருந்து எனக்கு டயல் பண்ணு. நான் ஃபைவ் தர்ட்டி வரைக்கும் இங்கே உன் காலை எதிர் பார்த்துக் காத்திருப்பேன்.''

''முயற்சி பண்ணறேன்'', புஷ்பா ஃபோனை வைத்து விட்டாள். அவள் கரம் நடுங்கியது. சுதாரித்துக் கொள்ளச் சற்று நேரம் ஆகியது.

''புஷ்பா! ஆஃபீஸ் நேரத்தில் சிநேகிதிகளோட ஃபோனில் அரட்டை அடிச்சுண்டிருக்கக் கூடாதுங்கற உங்க நல்ல எண்ணத்தை நான் வரவேற்கிறேன். ஆனா அதுக்காக இவ்வளவு கண்டிப்புடன் பேச வேண்டாம். யூ கேன் பி மோர் பொலைட்'' என்றான் கங்காதரன் புன்சிரிப்புடன்.

''எஸ் ஸார்'' என்றாள் புஷ்பா. அவளுக்குக்'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. கர்சிப்பை எடுத்து ஒற்றிக் கொண்டாள்.

''ஆர் யூ ஆல் ரைட்?'' என்றான் கங்காதரன் பரிவுடன். ''உங்க ஹஸ்பண்டுக்கு என்னமோ உடம்பு சரியில்லே அடெண்ட் பண்ணணும்னு ஒரு வாரம் லீவு போட்டீங்களே? இஸ் ஹி ஓகே?''

''எஸ் ஸார், சொஸ்தமாயிடுச்சு, தாங்க் யூ.''

அடுத்த விநாடி கங்காதரனும் மற்றவர்களும் அவரவர் காரியத்தில் ஆழ்ந்தனர். புஷ்பாவுக்கு மட்டும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு வேலையில் லயிக்க ஐந்து நிமிஷங்கள் ஆயின. அது வரை ஏதோ ஃபைலைக் கூர்ந்து ஆராய்வது போல் நடித்துக் கொண்டிருந்தாள்.

மாலை ஐந்து மணிக்கு பஸ் ஸ்டாப்பில் நின்ற புஷ்பாவின் கண்களை பப்ளிக் ஃபோன் பூத் கவர்ந்தது. மதனனுக்கு ஃபோன் பண்ணக் கூடாது என்றுதான் முடிவு செய்திருந்தாள் அவள். ஆனால் இப்போது ஃபோன்

செய்து அவனுக்கும் தனக்கு மிடையில் இனி எந்த விதமான தொடர்பும் இருக்க முடியாது என்று கூறி உறவை வெட்டிக் கொண்டு விடுவது மேல் என்று தோன்றியது. ''மறுபடி அவன் நாளை ஆபீஸ் நேரத்தில் கூப்பிடுவான். அதைத் தவிர்க்க வேண்டும்.'

தன் வாழ்க்கையே மீளமுடியாத சுழலில் சிக்கியிருப்பதை அறியாமல் புஷ்பா, விரலால் எண்களைச் சுழற்றினுள்.



## 11

ஒரு தடவை மணி அடித்து ஓயு முன்னரே மறுபக்கம் டெலிஃபோன் எடுக்கப்பட்டது. புஷ்பா காசை உள்ளே செலுத்துவதற்குள் இரண்டு தடவை ''ஹல்லோ, ஹல்லோ,'' என்று பொறுமை இழந்தவனுக அழைத்தான் மதனவ். புஷ்பாவின் குரல் கேட்டதும், ''நீதானே! நல்லவேளை எங்கே ஃபோன் பண்ணுமலேயே இருந்து விடுவாயோ என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். நீ இப்போ கூப்பிட்டிருக்க வில்லையானுல் நாளை நான் மறுபடியும் உன் ஆபீஸுக்கு ஃபோன் பண்ணும்படி இருந்திருக்கும். அது உனக்குப் பிடிக்காது, இல்லையா?'' என்ருன்.

''கொஞ்சம் கூடப் பிடிக்காது. வானமே இடிந்து விழுவதானுலும் எனக்கு மறுபடியும் மறுபடியும் ஆபீஸுக்கு ஃபோன் பண்ணுதீங்க. அங்கே எல்லோர் கண்களும் என்னை மொய்க்கின்றன. எல்லோருடைய செவிகளும் நான் என்ன பேசுகிறேன் என்பதையே கூர்ந்து கவனிக்கின்றன.''

''சரி, நான் கூப்பிடவில்லை: நீயே ரெகுலரா எனக்கு ஃபோன் பண்ணிக் கொண்டிரு. புஷ்பா! உன் குரலைக் கேட்கவே எவ்வளவு இதமாயிருக்கிறது தெரியுமா?''

''இதோ பாருங்கள், மதனன். நான் உங்களுடன் சல்லாபித்துக் கொண்டிருப்பதற்காக இப்போது ஃபோன் பண்ணவில்லை. உங்களுக்கும் எனக்கும் இடையில் இனி எந்த உறவும் இல்லை, இருக்க முடியாது என்று சொல்லத்தான் கூப்பிட்டேன். ஏதோ ஒரு பலவீனமான சந்தர்ப்பத்தில் நான் தவறிழைத்து விட்டேன். மறுபடியும் அதே குற்றத்தை நான் புரிய மாட்டேன். உங்களைப் பார்க்கவோ: போனில் பேசவோ கூட நான் விரும்பவில்லை, புரிந்ததா?''

''புரிகிறது புஷ்பா. உன் விருப்பம் என்ன என்பது எனக்கு நன்ருகப் புரிகிறது. நானும் ஒன்றும் தப்பான எண்ணத்துடன் போன் செய்யவில்லை. ஒரு வாரம் ஊரில் இல்லாமல் இருந்தாயே, அது விஷயமாக ஏதாவது தொந்தரவு இருந்ததா? அர்த்தநாரி ஏதாவது கேட்டானு? சந்தேகித்தானு? என்று தெரிந்து கொள்ளத்தான். ஏனென்ருல் நான் இங்கே அவனுடன் பழகும் போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமில்லையா? ஃபோர் வார்ன்ட் இஸ் ஃபோர் ஆர்ம்ட் என்று உனக்குத் தெரியுமே!'' — நயமாகப் பேசினுன் மதனன்.

''இல்லை இல்லை! ஒரு தொந்தரவும் இல்லை. அவர் ஒன்றுமே சந்தேகிக்கவில்லை.''

''அப்பாடா! நீ இப்படிக் கூறுவதைக் கேட்க எவ்வளவு நிம்மதியாய் இருக்கிறது தெரியுமா? ஒருவேளை நீ ஊருக்குப் புறப்பட்டுப் போனுய் என்பதே அவனுக்குத் தெரியாதோ? அப்படியானுல் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று!''

''இல்லை, அவருக்குத் தெரியும். பக்கத்துப் போர்ஷன் காரர் பேச்சு வாக்கில் சொல்லி விட்டார்.''

''அட கடவுளே! அப்போ அர்த்தநாரி உன்னைக் கேட்டிருப்பானே, எங்கே போனே என்று? நல்ல காரணமா ஏதாவது கற்பனை செய்து சொன்னுயா, இல்லையா? சட்டென்று பதில் பிறந்ததா உன்னிடம்? இங்கே, தயங்கித் தடுமாறி எதையாவது உளறி வைத்தாயா?''

''இல்லை, நல்ல விதமாய்ச் சமாளிச்சுட்டேன்!'' என்று இலேசாகப் பெருமிதம் எட்டிப் பார்க்கப் பேசினுள் புஷ்பா. அர்த்தநாரியிடம் தான் கூறிய பொய்யை விவரித்தாள். ''தம்பிக்கு மட்டும் என் ஆஃபீஸ் விலாசம் தெரியும், அவனுக்கு நான் எப்பவாவது, க்ஷேம லாபம் விசாரித்துக் கடிதம் எழுதுவதுண்டு' என்று சொல்லித் தப்பிச் சுட்டேன்.''

''அடி சக்கை! ரொம்பக் கெட்டிக் காரத்தனமாகத்தான் நடந்துண்டிருக்கே, கங்கிராஜுலேஷன்ஸ்!''

''தாங்க்யூ!'' என்ருள் புஷ்பா. திடுமெனப் பெருமித உணர்வு மறைந்து அவமானம் அவளைக் கவ்வியது. 'இதிலென்ன சாமர்த்தியம்? இதற்கு ஒரு பாராட்டு வேறு? ஒழுக்கம், நேர்மை சத்தியம் இவற்றை எத்தனை கஷ்டம் வந்தாலும் கைவிடாமலிருப்பவர் அல்லவா பெருமைப்பட வேண்டும்? அப்படி இருப்பவர்களுக்குப் பெருமைப் படவே தெரிவதில்லை!

''அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக்! பேஷ்! பேஷ்! அதை அந்த மக்கு நம்பித்தா? பாவம் சரியான டியூப்லைட்?''

''ஷட் அப்'' என்று புஷ்பா சீறினுள். ''என் கணவரைப் பற்றி இழிவாக நீங்கள் பேசுவதை என்னுல் சகிக்கவே முடியாது!'' அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. அர்த்த நாரி பற்றி இவ்வளவு கேவலமாக மதனன் பேசக் காரணம் யார், நான்தானே! ஆத்திரத்தோடு 'ணங்' கென்று ஃபோனை வைத்தாள். இன்னும் சற்று வேகம் காட்டியிருந்தால் ஃபோன் உடைந்தே போயிருக்கும்.

மறுநாள் காரியாலயத்தில் ஃபோன் மணி அடிக்க, அதை எடுக்கப் போன போதெல்லாம் புஷ்பாவின் மனம் 'பக்பக்'கென்று அடித்துக் கொண்டது. ஆனுல் ஐந்தாறு தடவை ஃபோனில் ஆபீஸ் விஷயங்களைப் பேசிய பிறகு அந்தப் படபடப்பு குறைந்தது. அவள் மனம் சகஜ நிலைக்குத் திரும்பக் காத்

நீ
ஆகாயத்தில்,
நட்சத்திரங்கள், ☆
கிரகங்கள்
சந்திரன்
சூரியன்
இவைகள்
கொடியில்லாமல்
ஆணியில்லாமல்
தொ
ங்
கு
வ
தைப் பார்க்கும் போது
'கடவுளை'
நினை!! ஒரு ஆங்கிலே புதுக் கவிதை

—கே.ஜி.எஸ்.விசுவநாதன்

திருந்தவன் போல் அவ்வளவு அவகாசம் கொடுத்த பின்னர்தான் மதனன் போன் செய்தான். ''ராங் நெம்பர்'' என்று கூறி 'டக்' கென்று வைத்து விட்டாள். மறுபடியும் அடித்தது. ''யெஸ் பாபுலர் டிரேடர்ஸ், ஜெனரல் மானேஜர்ஸ் ஆஃபீஸ்; குட் ஆப்டர் நூன்!''

''புஷ்பா! மறுபடியும் அவசரப் பட்டு 'ராங் நெம்பர்' என்று கூறி வைக்காதே. சுற்றி உள்ள எல்லாரும் தப்பர்த்தம் பண்ணிக் கொள்வார்கள் உன்னை!''

மதனன் கூறுவது உண்மை என்பது அவளுக்குப் புரிந்தது. இரண்டு மூன்று தடவை 'ராங் நெம்பர்' என்று கூறி வைத்தால் பிறகு கங்காதரன், ''ஹூ இஸ் தட் ஃபெல்லோ பெஸ்டரிங் யூ'' என்று கேட்டுத் தாமே ஃபோனை எடுப்பார். வம்பு வளரும்.

புஷ்பா அதை எண்ணிப் பேசாதிருந்தாள். மதனன் குரல் தொலைபேசியில் ஒலித்தது: ''புஷ்பா! பிளீஸ் இன்று சாயந்திரம் மட்டும் ஒரே ஒரு தடவை பப்ளிக் ஃபோனிலிருந்து பேசிவிடு. அப்புறம் சத்தியமா உனக்கு நான் ஃபோனே பண்ண மாட்டேன். சரிதானா? ஆனால் நீ என்னை இன்றுமாலை கூப்பிடவில்லையானால் நானே மறுபடியும் ஆஃபீஸுக்கு ஃபோன் செய்து தொல்லை கொடுப்பேன்.''

''ஓகே'' என்றாள் புஷ்பா. ரிஸீவரை வைத்துவிட்டு ஒன்றும் நடவாதது போல் காரியத்தில் ஆழ்ந்துவிட முயன்றாள். அப்படி நடிக்கத்தான் முடிந்தது. மாலையில் வேண்டா வெறுப்பாக மதனனை டெலிஃபோன் பூத்திலிருந்து கூப்பிட்டாள்.

''தாங்க்ஸ் பார் காலிங்'' என்றான்.

''நீ ஃபோன் பண்ணாமலிருந்தால் நான் நன்றியுடையவளாய் இருப்பேன்'' என்றாள் புஷ்பா.

''நான் நிச்சயம் இனி ஃபோன் பண்ணவே மாட்டேன். ஆனால் புஷ்பா, உன்னை என்னால் மறக்க முடியவில்லை. உன்னை நான் மறுபடியும் பார்க்க வேண்டும்; உன்னுடன் பேச வேண்டும்.''

''முடியவே முடியாது; நடக்கவே நடக்காது!''

''இரு, இரு, ஃபோனை வைத்துவிடாதே! கொஞ்சம் யோசித்துப் பார். நீ உன் அப்பாவைப் பார்க்கப் போகவே இல்லை என்பதாக அர்த்தநாரிக்குத் தெரிய வந்தால் எப்படி இருக்கும்? அப்போது உன் நிலைமை என்ன? எஸ். டி. டி.யில் அவன் உன் அப்பாவை அழைத்துப் பேசினால் போதுமே, தெரிந்து போகுமே? அவன் மனத்தில் சந்தேக விதையை நாசூக்காக ஊன்ற எவ்வளவு நேரம் பிடிக்கும்?''

''இதென்ன பிளாக்மெய்லா?''

''என்ன புஷ்பா, அவ்வளவு பெரிய வார்த்தையெல்லாம் பயன்படுத்தறே? உன் கிட்ட இருக்கிற ஆசையால்தானே பேசறேன்.''

''என்ன பண்ணணும்கிறே?''

''அப்படிக் கேளு, இப்பத்தான் நீ சமர்த்து. நாளை காஷுவல் லீவோ ஸிக் லீவோ போடு. ஆபீஸில் லெட்டர் கொடுத்துட்டு நேரே ஹோட்டல் ஜ்வாலாவுக்குப் போ. அங்கே ரூம் நெம்பர் இருநூற்று அறுபத்தி ஒன்றுக்குச் சாவி கேளு. கொடுப்பாங்க. வாங்கிக்கிட்டு மேலே போய் உட்கார்ந்திரு. அல்லது படுத்துத் தூங்கு. நான் அவசர ஃபைல்களைக் கொஞ்சம் பார்த்து விட்டு எவ்வளவு சீக்கிரம் முடியுமோ வந்து உன்னை எழுப்பறேன்! அர்த்தநாரி நீ வழக்கம்போல் ஆபீஸுக்குக் கிளம்பிப் போயிருப்பதாகவே நினைச்சுக்கட்டும். மறக்காதே ரூம் நெம்பர் இருநூற்றி அறுபத்தி ஒன்று. எனக்கு ஏமாற்றம் அளிக்க மாட்டியே?''

மௌனம்.

''என்ன பதிலே காணோம் புஷ்பா. நான் நினைச்சதை முடிப்பவன். எனக்கு ஏமாற்றம் ஏற்பட்டால் நான் பொல்லாதவன் ஆயிடுவேன்.''

''நீ நாசமாய்ப் போக!''

அவன் சிரித்தான். ''ஐ லைக் தட். கொஞ்சம் நீ ரோஷத்தோடு சீறினால்தான் சுவாரஸ்யமாயிருக்கும். முரட்டுக் குதிரையைத்தான் அடக்கலாம். சோனிக் குதிரைக்குச் சாட்டை எதுக்கு? ஸீ யூ டுமாரோ, ஓகே?''

புஷ்பா ஃபோனை வைத்து விட்டு அதன் மீதே தலைசாய்த்து விசும்பி விசும்பி அழுதாள். வெளியேயிருந்து யாரோ கதவைத் தட்டினார்கள். எவ்வளவு நேரமாய்க் காத்திருக்கிறாரோ? அழுதது தெரியாமல் கைக்குட்டையால் முகத்தை மறைத்துக் கொண்டு வெளியே வந்த புஷ்பா, ''ஸாரி'' என்றாள்.

'இவனுக்கு ஸாரி சொல்லி மன்னிப்புப் பெறலாம். அர்த்தநாரிக்கு ஸாரி சொல்லிப் பழி, பாவத்தைத் துடைத்துவிட முடியுமா? அவள் இதயம் கனத்தது.

மறுநாள் பதினொரு மணிக்கு ஹோட்டல் ஜ்வாலாவில் இருந்தாள். ''ரூம், டூ ஸிக்ஸ்டி ஒன்'' என்று சொன்னதுமே சாவி அவள் கரத்துக்கு வந்து சேர்ந்தது. அறைக்குச் சென்று, கட்டிலில் சாய்ந்து நாவல் ஒன்றை, அதில் மனம் லயிக்காமலேயே படித்துக் கொண்டிருந்தாள், மதனன் வரும் வரை.

''எங்கே நீ வராமலிருந்து விடுவாயோ என்று எனக்கு ஒரே கவலை'' என்றான் மதனன்.

''உனக்குத் துன்பம், கஷ்டம் கொடுக்கிற தென்றால் என் மனசு படாதபாடுபடும். அதனால் நீ சமர்த்தாக நடந்து கொண்டதே உனக்கு, எனக்கு இரண்டு பேருக்கும் நல்லது.''

''யூ டர்ட்டி பிக்! பிளாக்மெய்லர்! யூ ஸ்கவுண்ட்ரல்! யூ ரோக்! வில்லன்!''

''அப்புறம்? அப்புறம்!'' என்று சிரித்தான் மதனன். ''இவ்வளவுதான் தெரியுமா? நான் சொல்லித் தரட்டுமா? யூ டெவில்! யூ ஸேடன்! யூ பாஸ்டர்ட்! சொல்லு, புஷ்பா, சொல்லு! நீ என்னைத் திட்டுவதைக் கேட்க எனக்கு ரொம்பப் பிடிக்கும்.''

''ஐ ஹேட் யூ'' என்றாள் புஷ்பா.

''நீ என்னை வெறுக்கிறாய் என்பதும் தெரியும். நீ என்னை வெறுக்கிற விதமும் பிடிக்கும்! உன் கண்களில் அனல் பறக்கிறது. அது பார்க்க எவ்வளவு அழகாயிருக்கிறது தெரியுமா? பளபளவென்று ... பிரகாசமாய்... என் நெஞ்சை ஊடுருவி... லாஸர் ஒளிக்கதிர் மாதிரி... உன் கண்களின் ஒளி... நீ நம்பினால் நம்பு நம்பாவிட்டால் போ!... இட்கேன் கட் ஒப்பன் மை ஹார்ட்!'' பேசியபடியே அவளை நெருங்கித் தோளைகளைப் பற்றினான் மதனன்.

அவள் கையாலாகாத்தனம் விளைவித்த தாங்க முடியாத துக்கத்துடன் அழுதாள். அழுகையை விளைவித்தவன் நெஞ்சிலேயே ஆறுதல் காணவும் முகம் புதைத்தாள்.

''புஷ்பா! நீ என்னை எவ்வளவு தூரம் வெறுப்பாய் என்பது எனக்குத் தெரியும். என்னை நன்றாகத் திட்டு! அப்போதுதான் உன் மனசு கொஞ்சமாவது சாந்தி அடையும். எந்த அடிமைதான் எஜமானனைச் சபிக்காமல் இருப்பான்? ஆனால் எவ்வளவுதான் என்னை நீ தூற்றினாலும் சரி, என் சொற்படியெல்லாம் கேட்டு நடக்க வேண்டிய அடிமைதான் நீ!''

''டாம் யூ'' என்றாள் புஷ்பா. ''டாம்யூ!'' கரங்களை முஷ்டியாக்கி அவன் நெஞ்சைக் குத்தினாள்.

''தாங்க்யூ'' என்றான் மதனன் அமைதியாக. மன்மதக் கலையில் அவன் ஒரு நிபுணன் என்பதை அவன் சொற்கள் மட்டுமல்ல, விரல்களும் நிரூபித்துக் கொண்டிருந்தன. ''புஷ்பா! நீ என் அடிமை'' என்றேன். வாஸ்தவம்தான். ஆனால் இந்தக் கலையைப் பயிலத் தொடங்கும்போது நீ மகாராணி! நான் உன் காலடியில் விழுந்து கிடக்கும் அடிமை. நிலைமை எப்படி மாறி விடுகிறது பார்த்தாயா புஷ்பா? நீ என்னை வெறுக்கலாம், சபிக்கலாம். ஆனால் என் கலைத் திறனை நீ வெறுக்கவோ தயிக்கவோ மாட்டாய், மெச்சுவாய்!''

புஷ்பாவினால் இதை மறுக்க முடியவில்லை.

ஐந்தாறுநாட்கள் இடைவெளிக்குப் பிறகு அவள் இதே ஹோட்டலில் இதே அறைக்கு வந்துசேர வேண்டிய தேதியை இன்றைக்கே குறிப்பிட்டு விட்டு ''மறக்காதே'' என்றான் மதனன். தொடர்ந்து, ''ஃபோன் பண்ணி உனக்குச் சங்கடம் விளைவிப்பதில்லை என்று வாக்குறுதி தந்தேன். அதை மீறமாட்டேன். அதனால்தான் இன்றே தேதி குறிப்பிட்டு விட்டேன், சரிதானே?'' என்று கரிசனத்தோடு கேட்டு அவள் முகவாயை ஒரு விரலால் தட்டிவிட்டுப் பிரிந்து சென்றான்.

## 12

ஹோட்டல் ஜ்வாலாவில் ரூம் நெம்பர் இருநூற்றி அறுபத்து ஒன்றின் சாவியை முதல் நாளன்று மரியாதையுடன் கரத்தில் வைத்த 'ரிஸப்ஷனிஸ்ட்,' அடுத்த முறை அவள் வந்து கேட்டபோது மேஜைமீது வைத்தான். மூன்றாவது தடவை புஷ்பாவை அவன் பார்த்ததுமே அவள் கேட்கக் காத்திராமலேயே சாவியை எடுத்து மேஜையின் மீது விட்டெறிவது போல் போட்டான். நான்காவது தடவை அவள் வந்தபோது அந்த ரிஸப்ஷனிஸ்ட் அவளைப் பாராதது போல் இருந்தான். வேண்டுமென்றே இரண்டு மூன்று தடவை கேட்க வைத்தான். அப்புறம் ''இதென்னடா பெரிய தொல்லையாப் போச்சு'' என்று அலுப்புடன் முணுமுணுத்தபடியே சாவியை எடுத்து அவள் பக்கம் தன் முகத்தைத் திருப்பாமலேயே மேஜைமீது எறிந்தான். ஐந்தாவது தடவை அவள் சாவியை வாங்கிக் கொண்டு நடக்கும்போது அவன் தன் சகாவிடம், ''சே! இந்த மாத்திரை ஒன்று மார்க்கெட்டில் வந்தாலும் வந்தது; ஊர் உலகமே கெட்டுப் போச்சுப்பா'' என்று அவள் காது படக் கூறினான். இருவரும் சேர்ந்து சிரித்தனர்.

தன்னிடம் அவர்களுக்குப் படிப்படியாக மரியாதை குறைவதைக் கண்டு துடித்தாள் புஷ்பா. 'இன்னும் எத்தனை காலம் எத்தனை விதமான அவமானங்களைத் தாங்க வேண்டுமோ' என்று எண்ணிய போது அவள் சரீரம் நடுங்கியது. ஒருவித அடிமைத்தனத்திலிருந்து தப்புவதாக எண்ணி, அதையே சமாதானமாகவும் கற்பித்துக் கொண்டு தவறு செய்யப்போக, இன்னொரு விதமான, முன்னதைவிடக் கேவலமான அடிமைத்தனத்தில் தான் அகப்பட்டுக் கொண்டு விட்டதை அவள் உணர்ந்தாள்.





போலீஸ்காரர்: ஸ்கூட்டர்ல இவ்வளவு பெரிய கண்ணாடி வெக்கறது தப்புன்னு தெரியாதா உங்களுக்கு!
ஸ்கூட்டர்காரர்: என்ன செய்யறது? சின்னக் கண்ணாடியில் முகம் சரியாகத் தெரியலேயாம் இவளுக்கு! - வெ. சீதாராமன்

✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣

'பகவானே இதற்கு முடிவே இல்லையா? என் மனம் நிம்மதி காணப் போவதே இல்லையா?'

மதனன் அவளிடம் நடந்துகொண்ட விதத்தில் சிற்சில மாறுதல்கள் தோன்றின. அவளைச் சந்திப்பதில்; அவளுடன் உரையாடுவதில் முன்போல் அவ்வளவு ஆர்வம் காட்டவில்லை அவன். தேதி கொடுப்பதும் அவளை வரச்சொல்லித் தானும் வருவதும் பின்னர் அடுத்த தேதியைக் குறிப்பிட்டு விட்டுப் பிரிவதும் ஒரு யந்திர கதியில் நடக்க ஆரம்பித்தன. இடைவெளியும் அதிகரித்தது. அவன் அவளிடம் சுவாரஸ்யம் இழந்து விட்டிருந்தான்.

ஒருநாள் அவள் உடையணிந்து புறப்படத் தயாரான பிறகும் 'அடுத்த தேதியை மதனன் இன்னும் குறிப்பிடக் காணுமே' என்று தயங்கிக் காத்திருந்தாள். அவன் இரு உள்ளங்கைகளாலும் முகத்தை மேலும் கீழும் தேய்த்துத் துடைத்துக் கொண்டு பேசினன்: ''நீ என்னுடைய அடிமைதானே?''

''ஆமாம்.''

''விடுதலை பெற விரும்புகிருயா, அடிமையே?''

அவளால் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. ''நிஜமாகவா? உண்மையாகவே என்னை விடுவித்து விடப் போகிருயா? இல்லை, இது உன்னுடைய ஏமாற்றுவித்தைகளில் இன்னென்ரு? வேறு ஒரு விதமான பிளாக் மெய்லுக்கு அடிப்போடுகிருயா?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. மெய்யாலுமே உனக்கு விடுதலை; பூரண சுதந்திரம்!''

அவள் ஆனந்தத்துக்கு அணைபோட முடியாமல் தவித்தாள். கூடவே, ஐயப்பாடுகள், சந்தேகங்கள். ''ஏன் இந்தத் திடீர் மாற்றம்?''

''ஏனு? அதைச் சொல்லித்தான் ஆக வேண்டுமா? உன் மனசைப் புண்படுத்த வேண்டாம் என்று பார்த்தேன். விடமாட்டாய் போலிருக்கிறது. சரி, சொல்கிறேன். கேட்டுக் கொள். உன்னை எனக்கு அலுத்து விட்டது.''

அவன் முகத்தை அப்போது பார்க்கவே பயங்கரமா யிருந்தது. சேற்றிலே புரண்டு அழுக்கைத் தின்று விட்டுவரும் பன்றியை அருவருப்புடன் பார்ப்பதுபோல் அவளைப் பார்த்தான். ''உன்னைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. வயிற்றைக் குமட்டுகிறது.''

அவள் பிரமித்தாள். இவ்வளவு குரூரமான மனிதர்கள்கூட உலகில் இருக்க முடியுமா? ''இப்போது நீங்கள் வெறுக்கும் இதே உடலை அடைவதற்காக என் காலில் சிரம் படிய விழுந்து கும்பிடவும் தயாராயிருந்தீர்கள். மறந்துவிட்டதா?'' என்ருள் ரோஷத்துடன். ''எத்தனை விதமான பசப்பு வார்த்தைகள், எத்தனை கெஞ்சல்கள்?''

''அதையெல்லாம் ஒன்றும் நான் மறக்கவில்லை'' என்ருன் மதனன். ''அதற்காக நான் வெட்கப்படவும் இல்லை. அது நான் பொழுது போக்காகப் பயிலும் வசீகரக்கலை. அதில் நான் பெற்ற வெற்றிகள் என் ஆற்றலுக்கு அத்தாட்சி. ஆனல் நீ...? உன் நிலை இப்போது என்ன?''

அவள் நடுங்கினுள். மதனனே இரக்கமின்றி வெறுப்பை உமிழ்ந்து தொடர்ந்தான்: ''நீ விலைமாது ஒருத்தியைவிட மோசமானவள், தெரு நாயை விடக் கேடு கெட்டவள்!''

புஷ்பா நிலைகுலைந்தாள், தடுமாறிச் சுவரில் கரம் ஊன்றி நின்ருள். ''எனக்கு வேண்டியது தான் இது. இன்னும் ஏதாவது பாக்கியிருந்தால் அதையும் சொல்லுங்கள். கேட்டுக் கொள்கிறேன்.''

சுவாரசியமடைந்தவனுகக் கட்டிலில் மண்டியிட்டு அமர்ந்தான் மதனன். விளிம்பைப் பற்றிக் கொண்டு வார்த்தைகளை ரசித்துச் சுவைத்து மொழிந்தான்: ''நீ ஒரு வேசியைவிடக் கேவலமானவள்தான்! உனக்கு ஒரு கணவன் வேண்டும்; வெளிப்பார்வைக்கு நீ கௌரவமானவளாக விளங்க வேண்டும்; உன் கணவன் உன்னைப் பதிவிரதை என்று எண்ணிக் கொள்ள வேண்டும்; ஆனல் அதேநேரத்தில் உனக்கு என்னுடன் தொடர்பு இருக்க வேண்டும்; நான் உன்னை பிளாக் மெய்ல் செய்வதால்தான் நீ வருகிருய் என்பதாக நான் எண்ணிக் கொள்ளவும் வேண்டும்; அதுவே உனக்கும் சமாதானமாக அமைய வேண்டும்! ஆனல் உண்மை என்ன? அதை யாரிடமிருந்து மறைத்தாலும் உன் மனச்சாட்சியிடம் அதை மறைக்கமுடியுமா? நீ என்னிடம் தொடர்பு கொள்வதை விரும்புகிருய். அதற்காக ஆசைப்படுகிருய் என்பது தானே உண்மை? ஆக மொத்தம் நீ ஒரு தாசியைவிடக் கீழ்த்தரமானவள்தானே! சொல்லு!''

வெறுப்பும் ஏளனமும் கலந்து கொந்தளித்தன விஷமயமான வார்த்தைகளில். அவள் கேவிக் கேவி அழுதபடியே, ''நான் இருந்த நிலையில் வேறு என்ன தான் செய்திருக்க முடியும்?'' என்று முறையிட்டாள்.

''என்ன செய்வதா? கடலில் விழுந்து சாகிறது; இல்லே தூக்கு மாட்டிக் கொண்டு தொங்குகிறது; அதுவும் முடியலேன்னு விஷ மருந்திப் பிராணனை விடுகிறது! இதைக் கூடவா சொல்லித்தரணும்?''

''ஐயோ! ஆண்டவனே'' என்று தலையைச் சுவரில் மோதிக் கொண்டாள் புஷ்பா, அவமானம் தாங்காமல்,''

''ஆண்டவனை எதுக்குடி துணைக்கு அழைக்கிறே?'' என்று இளக்காரமாகக் கேட்டான் மதனன். ''கணவன் என்னிடம் வந்து புன்னகையை விரிக்கச் சொன்னால் நீ மஞ்சத்தையே விரிச்சுட்டே. அது யார் தப்பு? ஆண்டவன் தப்பா?''



''எனக்கு வேண்டியதுதான். இந்தக் குத்தல் மொழிகளையெல்லாம் நான் கேட்டுக் கொள்ளத்தான் வேண்டும். இதெல்லாம் இப்படித்தான் முடியப் போகிறது என்பதை நான் முன்பே யோசித்திருக்க வேண்டும்! தவறிவிட்டேன்!''

''நீ ஒரு பொம்மை. உன்னை வைச்சு நான் நிறைய விளையாடியாச்சு. நீ இப்போ கந்தலா போயிட்டே. உன்னைத் தூர எறிஞ்சுட்டுப் புதுப் பொம்மையா வாங்கிக்க நினைக்கிறேன்.''

''நான் போகலாமா?'' என்றாள் அவள் உணர்ச்சியற்ற மரக்கட்டையாக. துயரத்தின் எல்லைக் கோட்டுக்கே அவ்ள் சென்று அதற்கு மேலும் அது அதிகரிக்க முடியாதபோது ஏற்படுகிற ஒரு தாற்காலிகமான மரத்துப்போன நிலை. மறுபடியும் துயரம் சற்று குறையும் போது மீண்டும் அழுகை வெடிக்கும், உடல் நடுங்கும், உள்ளம் துடிக்கும். அதற்கு முன் இங்கிருந்து, இந்தக் கயவன் முன்னிலையிலிருந்து சென்றுவிட வேண்டும்.

''பேஷாகப் போகலாம்'' என்றான் மதனன். ''அடுத்த தேதி நான் குறிப்பிடப் போறதில்லே. டெலிஃபோன் பண்ணவும் மாட்டேன். உனக்கு விடுதலை.''

அவள் தன் கைப்பையை 'விசுக்' கென்று எடுத்துக் கொண்டு 'விருட்'டென்று வெளியேறினாள்.

கால் போன போக்கில் அவள் சுயபிரக்ஞை இன்றி வேகமாக நடந்தாள். எவ்வளவு நேரம், எவ்வளவு தூரம் நடந்தாளோ அவளுக்கே தெரியாது. கால் வலிக்க அவள் நின்ற போது மறுபடியும் கதறி அழுது விடுவோம் என்று அவளுக்குத் தோன்றியது. நடுத்தெருவில் நின்று எப்படி அழுவது? ஒரு சினிமா தியேட்டர் கண்ணில் தென்பட்டது. மாட்னி ஷோ நடந்து கொண்டிருக்கும். உயர் வகுப்பு டிக்கெட் அதிகம்பேர் வாங்கியிருக்க மாட்டார்கள். பாதிப்படம் ஓடியிருக்கும்போது டிக்கெட் வாங்கிக் கொண்டு நுழையும் அவளைச் சிப்பந்திகள் வியப்புடன் பார்த்தனர். இருள் அளித்த பாதுகாப்பில் சுற்றிலும் யாருமில்லை என்ற தைரியத்தில் அவள் கண்ணீர் பெருக்கினாள். உடலிலும் உள்ளத்திலும் படிந்திருந்த கறையெல்லாம் இந்தக் கண்ணீருடன் கரைந்து வெளிப்பட்டு விட முடியுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்? ஆனால் அது நடக்காது. வாழ்நாள் முழுதும் இந்தக் கறையோடுதான் வாழ்ந்தாக வேண்டும். பிறர் கண்களுக்குத் தென்படாமல் இருக்கலாம். ஆனால் தன் மனக்கண் பார்த்துப் பார்த்து அசிங்கமடையும் இந்தக் கறையை நீக்க எந்தச் சக்தி வாய்ந்த டெடர்ஜண்டாலும் முடியாது!''

''வணக்கம்'' என்ற வார்த்தை திரையில் தோன்றியது. கதவுகள் திறக்க, பளிச்சென்று வெளிச்சம் உள்ளே பரவியது. புஷ்பா, ஏற்கெனவே ஈரமாகி விட்டிருந்த கைக்குட்டையை இடுப்பில் செருகிக் கொண்டு புடைவைத் தலைப்பால் முகத்தை ஒற்றியபடி வெளியே வந்தாள். என்ன சினிமா பார்த்தோம், நடிகர்கள் யார், என்ன கதை என்பதொன்றும் அவளுக்குத் தெரியாது. தன் வாழ்க்கையே ஒரு சினிமாக்கதை மாதிரி ஆகி விட்டதென்று எண்ணியவளாக பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தாள். அங்கிருந்து பார்த்த போது ஒரு கோயில் கோபுரம் தென்பட்டது.

'ஒருவேளை சுவாமி தரிசனம் செய்தால் மனச்சாந்தி பிறக்குமோ!' விடுவிடுவென்று நடந்தாள் புஷ்பா. கோபுரவாசலில், ''அம்மா செருப்புக் கழற்றுங்க; பத்துப் பைசாவுக்குப் பார்த்துக்கறேன்'' என்று கூறி டோக்கனை நீட்டினான் பையன். புஷ்பா ஸாண்டல்களைக் கழற்றி விட்டு வாசலைத் தாண்டப் போனவள் தயங்கினாள். சட்டென்று காலைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள்.

'நான் எங்கிருந்து வருகிறேன்? ஹோட்டல் ஜ்வாலா ரூம் நெம்பர் இருநூற்றி அறுபத்தி ஒன்றிலிருந்து. அங்கிருந்து சினிமாத் தியேட்டர் போய்விட்டுப் பிறகு நேரே இங்கு வருகிறேன். உள்ளே போகலாமா, இந்த அழுக்கு உடலைச் சுமந்து கொண்டு? குற்றக் கறை மறையாமல் வாழ்நாள் முழுதும் உள்ளத்தில் உடனிருந்து துன்புறுத்தப் போகிற ஒன்றுதான். என்றாலும் மதனனுடன் சேர்ந்திருந்து விட்டு அப்படியே கோயிலுக்குள் நுழைவது மகாபாவம். முதலில் உடலைக் கழுவிச் சுத்தப் படுத்திக் கொள்ள வாவது வேண்டும்.'

வயதான சுமங்கலி ஒருத்தி, ''ஏம்மா தயங்கறே?'' என்று கேட்டுக் கொண்டே கோயிலுக்குள் சென்றாள். ''பகவான் சந்நிதிக்கு வர என்ன யோசனை?''

''இல்லே மாமி! நான் இன்னிக்குச் சுத்தமா இல்லேயோன்னு சந்தேகம் வந்துடுத்து.''

''அப்ப வேண்டாம்மா. என்ன அவசரம்? குளிச்ச பிறகு வாயேன்.'' அவள் போய் விட்டாள்.

கோபுரத்தைக் கும்பிட்டாள் புஷ்பா, 'இறைவா! எனக்குக் கருணை காட்டுவது உனக்குச் சாத்தியமென்றால் மெய்யாலுமே நீ கிருபாகரன்தான்!' சப்டலைப் போட்டுக் கொண்டு பஸ் பிடித்து வீடு திரும்பினாள்.

அவர்கள் ஜாகை மாறி இருந்தார்கள், அர்த்தநாரிக்குப் பிரமோஷன் கிடைத்தபிறகு முன்பிருந்ததைவிடக் கொஞ்சம் வாடகை கூடுதலான, சற்று விசாலமான இடம். இரண்டு அறைகள், சமையலறை, தனி பாத்ரூம். 'அறைகள் இருக்கட்டும்,

சிறிதோ, பெரிதோ எப்படியாளுலும் பாதகமில்லே. தனி பாத்ரூம் கிடைத்ததே?' என்று மகிழ்ந்தாள் புஷ்பா. ஆலே யில்லா ஊருக்கு 'இலுப்பைப்பூ சர்க்கரை. எத்தனேயோ வசதிகளேத் துறந்து இப்போதும் வீடு திரும்பியதும் முதல் காரியமாக ஷவரைத் திருப்பி விட்டுத் தலேக்கு ஸ்நானம் பண்ணினுள் புஷ்பா. ஷாம்பூவும் உடம்பில் நெற்றிமுதல் உள்ளங்கால் வரை சோப்பும் போட்டு ஒரு முறைக்கு இரு முறையாகக் குளித்தாள். மதனனுடைய ஸ்பரிசத்தின் நினேவை நீக்க முடியுமானல் மூன்ருவது தடவைகூடக் குளிக்கலாம் போலிருந்தது அவளுக்கு.

வெளியே இருந்தபடி அர்த்தநாரி கதவைத் தட்டுகிற ஓசை கேட்டது. அவசரமாக மாற்றுப் புடவையைச் சுற்றிக் கொண்டு வெளியே வநதாள். அவன்தான் என்று உறுதிப் படுத்திக் கொண்டு திறந்தாள்.

''அப்பா! சோப்பு மணம் பிச்சுண்டு போறதே! பாதிக் கட்டியாவது கரைஞ்சிருக்கும் போலிருக்கே!'' என்ருன்.

''இன்றைக்கென்னவோ நீங்க ஆபீஸிலேருந்து திரும்பும்போது குளிச்சுட்டுச் சுத்தமா இருக்கலாமேன்னு தோணிச்சு. ஆபீஸில் தலேக்கு மேலே வேலே. அப்புறம் பஸ்ஸில் வேறு நெருக்கியடித்துக் கொண்டு வரவேண்டும். உடம்பெல்லாம் கசகசவென்ருகி விடுகிறது.''

''ஆமாம்!. வெய்யில் வேறு ஏறிண்டே போறதே'' என்ருன் அர்த்தநாரி. ''ஆனு இப்போ யூ ஆர் ஸ்வீட் ஸ்பெல்லிங்!'' என்ருன் பின்புறமாக வந்து அவள் தோளே முகர்ந்து, அவள் பயம் இதயத்தைக் கவ்வச் சிலிர்த்தாள். அவன் அதற்குத் தப்பர்த்தம் செய்து கொண்டான். பின்னுலிருந்து நீண்டு அவளேச் சுற்றி வளேத்தன அவன் கரங்கள். அந்த அரவணேப்பு அவளுக்கு அப்போது தேவையாயிருந்தது, ஆறுதலா, பாதுகாப்பாய் இருந்தது. நடந்து முடிந்ததையெல்லாம் தன்னுல் மறப்பது சாத்தியமே இல்லே என்ருலும் அர்த்தநாரியிடமிருந்து மறைத்து விடலாம் என்ற நம்பிக்கை பிறந்தது. மதனனிடம் அவள் அடிமையாகிக் கிடந்ததை அர்த்தநாரி அறியப் போவதில்லே என்பதுடன் இப்போது

---

ஹிப்பித் தலே ஆசாமி: முடி வெட்டணும். எவ்வளவுப்பா சார்ஜ்...?

சலூன்காரர்: ஒரு மணி நேரத்துக்கு நாலு ரூபாய்!

—உ. ராஜாஜி.



அந்த அடிமைத்தனே தெறித்து விழுந்து அவளுக்கு விடுதலேயும் கிட்டியிருந்தது, எனவே எதிர்காலம் பிரச்னேகளற்றதாய், நிம்மதி நிறைந்ததாய் இருக்க முடியும் என அவளுக்கு உறுதி பிறந்தது.

கணவனின் கரங்கள் அளித்த பாதுகாப்பை அவள் மேலும் நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்புகிறவள்போல் இறுக்கிக் கொண்டாள். பிறகு அந்த வட்டத்துக்குள்ளேயே திரும்பித் தன் கரங்களே அவன் கழுத்தைச் சுற்றி மாலேயாக்கினுள். அவன் நெஞ்சிலே கண்மூடி மயங்கிச் சாய்ந்தாள்.

''என்ன இன்றைக்கு ஏதோ உன்னிடம் மாறுதலாகத் தெரிகிறதே'' என்ருன் அர்த்தநாரி.

''ஆமாம், என்னிடம் ஏதோ புதுமை விகசிப்பதாக எனக்கே தோன்றுகிறது'' என்ருள் புஷ்பா. ''ஏதோ திடீரென்று ஒரு சுதந்திரம் கிடைத்து விட்டது போலவும் நான் ஆகாயத்திலே ஆனந்தமாகப் பாடியபடி சிறகடித்துப் பறப்பது போலவும் ஒரு பிரமை! ஒரே சந்தோஷமாயிருக்கு!''

அவன் சிரித்தான். ''இதோ நானும் வந்து விட்டேன். இரண்டு பேரும் சேர்ந்து பறப்போம்!'' என்ருன்.

## 13

அந்தக் கோயில் பிராகாரத்தைச் சுற்றி வந்தபோது அர்த்தநாரி சிலே ஒன்று புஷ்பாவின் கண்களுக்குத் தட்டுப்பட்டது. வெள்ளிக்கிழமை தவருமல் கோயிலுக்குப் போகிறவள் அல்ல அவள். சென்னே வந்த பிறகு மூன்று, நாலுதடவை போயிருப்பாள். அதுவும் இந்தக் கோயிலுக்கு அல்ல. வீட்டுக்குப் பக்கத்திலேயே அங்காளம்மன் கோயில் ஒன்றுண்டு. அங்கே சென்று வருவாள். இந்தக் கோயில் கோபுரம் நேற்றுத்தான் அவள் கண்ணில் பட்டு அவளே ஈர்த்தது. ஆனுல் உள்ளே போக மனசு இடம் தரவில்லே. இன்று உள்ளத்தாலும் உடலாலும் தான் தூய்மை அடைந்துவிட்டதுபோல் அவளுக்குப்பட்டது. தைரியமாகக் கோபுர வாசலேத் தாண்டிச் சென்ருள்.

கர்ப்பக்கிருஹதத்தின் சுவரில் வெளிப்புறம் அமைந்திருந்த மாடத்துக்குள் அர்த்தநாரிசிலே மிக அழகாகத் தோற்றமளித்தது. ஒருசில நிமிஷங்கள் ஆடாமல் அசையாமல் அதன் எழிலில் லயித்து நின்ருள். 'உமையொரு பாகன் என்ற இந்த சிருஷ்டி எத்தனே அற்புதமான ஒரு தத்துவம்! அந்தத் தத்துவத்துக்கு ஆற்றல்தான் விண்ணே முட்டுகிற அளவில் எவ்வளவு உயர்ந்தது! கலேஞனது கற்பனேக்குக் கல்லிலே அற்புதமாக வடிவம் தந்த சிற்பியின் திறமைதான் எத்துணே அசாதாரணமானது! பார்க்கப் பார்க்க, 'இந்தச் சிலேயின் தத்துவத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லேயே அர்த்தநாரி' என்ற ஏக்கம் அவளே வாட்டியது. ஒருநாள் எவ்வளவு நீண்ட வாக்குவாதம் நடத்திப் பார்த்திருக்கிருள் அவள்!

''அர்த்தநாரி என்பது சிருஷ்டி தத்துவம். ஜீவராசிகளே, உலகை, சூரிய மண்டலத்தை மட்டுமின்றி அண்ட சராசரத்தையே சிருஷ்டிக்க ஆதி முதல்வனும் ஆதி பராசக்தியும்

இணைந்திருக்கும் கோலமல்லவா அது உமையைத் தன்னுடன் இணைத்துக் கொண்ட போது அவளுக்குத் தனித்தன்மை இல்லாமல் செய்துவிட இறைவன் எண்ணியிருந்தால் பெண்ணுருவையே காட்டியிருக்க மாட்டானே, கலைஞன் ஆதிசிவன் மட்டும்தானே காட்சிதர வேண்டும்'' என்றாள் புஷ்பா.

''அது அப்படியல்ல, உடலால் வேறுபட்டு நின்றாலும் திருமணத்தால் இணைந்தபிறகு பார்வதிதேவி சிவனுடன் ஐக்கியப்பட்டு விடுகிறாள். அப்புறம் அவளுக்கென்று தனிக் கருத்துக்கள், அபிலாஷைகள் ஏது? சிவனுடைய விருப்பம்தான் சக்தியுடைய ஆசை. இதுதான் எனக்குத் தெரிந்த, புரிகின்ற அர்த்தம். அதுவே எனக்குப் போதும்.''

''சிவன்தான் பார்வதியைத் தன்னுடன் இணைத்துக் கொண்டார் என்பது என்ன நிச்சயம்? பார்வதி, சிவனைத் தன்னுடன் இரண்டறக் கலந்து போகுமாறு செய்திருக்கலாமில்லையா? அப்போது தனித்தன்மைகளை இழப்பது சிவனாகத்தானே இருக்க வேண்டும்?'

''இது விதண்டாவாதம்'' என்றான் அர்த்தநாரி.

''ஒப்புக் கொள்கிறேன். உங்களுடைய பிடிவாதம் தவறான தர்க்கத்தையே முன் வைக்கும்போது நானும் விதண்டாவாதம் செய்ய வேண்டியவளாகிறேன். இப்போது மறுபடியும் நியாய வாதத்துக்கே வருவோம். சக்தியும் சிவனும் இணைவது வார்த்தையும் அதன் அர்த்தமும் இணைந்திருப்பதுபோல, ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்தவும் முடியாது: ஒன்றைவிட மற்றொன்றுக்கு முக்கியத்துவம் அதிகரிக்கவும் முடியாது. அப்படித்தான் இல்வாழ்க்கையும் அமைய வேண்டும். ஒன்று பிரமாணம், மற்றது பிரமேயம். ஒன்று உண்மை அறிவுக்குச் சாதனம், மற்றது அந்தச் சாதனத்தில் அறியப்படும் பொருள்! ஒன்று சிந்தனை, மற்றது செயல். ஒன்று யதார்த்தம் அல்லது ரியாலிடி, மற்றது அந்த யதார்த்தத்தின் பரிமாணம்.''

''என்னுடன் தர்க்கம் பண்ணுவதற்காகவே லைப்ரரிக்குப் போய் அர்த்தநாரி பற்றிய தத்துவார்த்தங்களைத் தேடி எடுத்துப் படித்துவிட்டு வந்தாயாக்கும்!''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன், அதிலென்ன தப்பு?''

''கணவன் மனப்போக்குப்படியே சகலத்திலும் நடந்து கொண்ட, எல்லாக் காரியங்களையும் செய்த பதிவிரதா சிரோமணிகளைப் பற்றிய புராணப் புத்தகங்களை நாளைக்கு நூலகத்தில் கேட்டு வாங்கிப்படி. அவங்களெல்லாம் இப்படியா தர்க்கம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்? கணவன் ஒன்று சொன்னால், தப்போ சரியோ கண்ணை மூடிக்கொண்டு நிறைவேற்றவில்லை?''

அத்தகைய சில அசட்டுத்தனமான புராணக்கதைகள் இருக்கத்தான் செய்கின்றன என்பதை மறுக்க முடியவில்லை புஷ்பாவினால், அவற்றைப் படித்ததன் விளைவுதான் அர்த்தநாரி ஆண் மகன் என்றமுறையில் ஆணவம் கொண்டு மனைவிக்குச் சமஉரிமைகளையும் உணர்ச்சிகளையும் மறுக்கிறான். மஞ்சத்திலாகட்டும் மன்றத்திலாகட்டும் அடங்கிப் போக வேண்டியவள் பெண்தான் என்று அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறான். உணர்ச்சிகளை, ஆசைகளை, சிந்தனைகளையெல்லாம் மனைவி, கணவனிடத்தில் அடிமைப்படுத்திவிட வேண்டும்!

அவள் காரியாலயத்துக்குப் போய்ச் சேரும் வரையில் அர்த்தநாரி சிலை உருவம் அவள் மனக்கண் முன் தெரிந்துகொண்டே இருந்தது. ஆபீஸுக்குள் அவள் நுழைந்ததும் ஏற்பட்ட ஒரு கலகலப்பும் மகிழ்ச்சி நிரம்பிய பரபரப்பும் அசாதாரணமாகத் தோன்றியதால்தான் அவள் மனம் அர்த்தநாரி வடிவத்திலிருந்து விடுபட்டுத் திரும்பியது. ஒருவிதக் கிளர்ச்சியுடன் அவள் தன் மேஜையின்முன் அமரப் போனாள். மானேஜர் கங்காதரன் எழுந்து வந்தார். ''புஷ்பா. ஒன் மினிட், இப்படி வருகிறீர்களா?'' என்று கேட்டு அவளை அழைத்துச் சென்றார். அவரைப் பின் தொடர்ந்து அவள் நடந்தபோது எல்லாரும் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள், அப்போதுதான் அவள் கவனித்தாள், புதிதாகப் பளபளக்கும் ஒரு மேஜை, கண்ணாடி 'டாப்' புடன் காட்சி தருவதை. ஒரு டெலிஃபோன் இண்டர்காம், இன்–அவுட் டிரேக்கள், பஸ்ஸர், சுழலும் – பின்னுக்குச் சாயும் நாற்காலி எல்லாம் இருந்தன. அனைத்தும் புத்தம் புதியதாய் வாங்கப் பட்டனவை. அவள் உடம்பெல்லாம் கிளுகிளுத்தது. கண்கள் பனித்தன.

''புஷ்பா! ரிஸப்ஷனிஸ்டாக வந்து, என் பர்ஸனல் ஸெக்ரடரியாக உயர்ந்தாய். ஆனால் உன் திறமைக்கு இவையெல்லாம் சின்ன வேலைகள் என்று எனக்குப் பட்டது. உன்




ராஜாஜி அவர்களும் அண்ணாதுரை அவர்களும் சந்தித்துச் சுதந்திரா, தி. மு. க. தேர்தலில் உடன்பாடு காணுவதற்கான பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்டிருந்தனர். பேச்சு வார்த்தை காலை பத்து மணியிலிருந்து ஓர் அறையில் தொடர்ந்து இரண்டுமணிவரை நடந்து கொண்டிருந்தது. மாலைப் பத்திரிகை நிருபர்கள் ராஜாஜி — அண்ணா சந்திப்புப் பற்றியச் செய்திகளைச் சேகரித்து அன்று மாலைப் பத்திரிகைகளில் வெளியிடத் துடித்தனர். மாலைப் பத்திரிகை நிருபர்கள் ஒருசிறு துண்டுக் காகிதத்தில், ''மாலைப் பத்திரிகைகளுக்குத் தாங்கள் ஏதாவது செய்தி தருவீர்களா?'' என்று எழுதியனுப்பினார்கள். அந்தத் துண்டுக் காகிதத்தின் பின்புறத்தில் ராஜாஜியின் குறிப்புக் காணப்பட்டது. ''மாலைப் பத்திரிகைகளுக்கு உதவுவதற்காக மிக முக்கியமான அரசியல் முடிவுகளைத் துரிதப் படுத்த இயலாது!''

தகவல்: பார்த்தசாரதி



தகுதிக்கு ஏற்ற வேலைதர வேண்டும் என்பதால் உன்னை ஜூனியர் ஆபீஸராக்கி இருக்கிறேன். விஷ் யூ ஆல் தி பெஸ்ட்!''

''தாங்க்யூ ஸார்!'' என்று குரல் கம்ம மொழிந்தாள் புஷ்பா. ஒவ்வொருவராக வந்து,''கங்கிராட்ஸ் புஷ்பா!'' என்று கூறிப் போனார்கள். ஒருவராவது மனத்தாங்கல் அடைந்ததாகவோ தாபப் பட்டதாகவோ தெரியவில்லை. ஒரு பெண்ணின் தகுதியை அறிந்து அதை மதித்துப் போற்றும் இந்தக் காரியாலயச் சூழலுடன், பெண்ணைச் சிந்தனை சக்தியோ உணர்ச்சியோ அற்ற ஜடமாக நடத்துகிற வீட்டுச் சூழலுடன் ஒப்பிடாமல் இருக்க முடியவில்லை புஷ்பாவினால். அவள் கண்ணீர் உகுத்தபடியே, ''தாங்க்யூ, தாங்க்யூ'' என்று கூறினாள். அனைவரும் அவள் ஆனந்தக்கண்ணீர் விடுவதாகவே எண்ணினார்கள்.

உணவு வேளைக்குப் பிறகு அவள் கங்காதரனைப் போய்ப் பார்த்தாள். ''என் நன்றியை முழுமையாக வெளிப்படுத்த வார்த்தைகளே இல்லை ஸார், நான் எல்லாருடைய ஒத்துழைப்பையும் பெற்று, என் சக்திக்கு மீறியே உழைப்பதாக உறுதி கூறுகிறேன்.''

''ரொம்ப சந்தோஷம். இதை நீ சொல்லவே வேண்டாம். நீ எப்படி ? நடந்து கொள்வாய் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும், அதனால்தான் பிரமோஷன் கொடுத்ததே!''

''ஆனால்...''

''ஆனால்?'' மானேஜரின் புருவங்கள் உயர்ந்தன.

''சம்பளம்... அதாவது நான் சொல்ல வருவது என்னவென்றால்...''

கங்காதரன் சிரித்தார். ''புஷ்பா! என்ன இது, பிரமோஷன் தந்து விட்டுச் சம்பளத்தைக் கூட்டாமல் இருப்பேனா? என்னை என்ன வென்று நினைத்தாய் நீ? அல்லது இந்த ஸ்தாபனத்தைத்தான் எப்படி எடை போட்டிருக்கிறாய்? நீ பணத்துக்கு இவ்வளவு முக்கியத்துவம் தருவாய் என்பது தெரிந்திருந்தால் முதலிலேயே அதை விவரமாகச் சொல்லியிருப்பேன். ஹியர் யூ ஆர்!'' ஒரு தாளை எடுத்து நீட்டினார் கங்காதரன். ''அபாயிண்ட்மெண்ட் ஆர்டர் வித் கம்ப்ளீட் டீடேல்ஸ் ஆஃப் ஸாலரி, டி. ஏ. இன்கிரிமெண்ட்ஸ், போனஸ் அண்டு பெர்க்ஸ்.''

''ஸார், ஸார்! என்னைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டீங்க. பிளீஸ்! ஒருநிமிஷம் நான் சொல்றதைக் கேளுங்க. 'இத்தனை சம்பளம் எனக்கு வேண்டாம். நூறு ரூபாய் குறைத்துக் கொடுங்க''ன்னு கேட்கத்தான் வந்தேன்.''

''என்ன உளறுகிறாய்?''

''எனக்குச் சொல்லிக்கவே வெட்கமாயிருக்கு. பிளீஸ் ட்ரை டு அண்டர்ஸ்டாண்ட் அண்ட் ஹெல்ப். அதோடு நான் சொல்றதை நீங்க ரகசியமா காப்பாத்தணும். என் ஃபாமிலி லைஃப் நிம்மதியா இருக்கணும்னா நீங்க சம்பளத்தைக் குறைக்கிறதுதான் நல்லது. நான்... நான் என் கணவரை விட அதிகமா சம்பளம் வாங்க விரும்பலே. ஐம்பது ரூபாயாவது குறைச்சலா வாங்கத்தான் பிரியப் படறேன்.'

''இதென்ன அசட்டுத்தனம்?''

''அசடோ, பைத்தியமோ, எல்லாவற்றுக்குமே காரண காரியமுண்டு. என்னை நம்புங்கள், உதவுங்கள்.''

கங்காதரன் ஒரு பெருமூச்சு விட்டார். தோள்களைக் குலுக்கிக் கொண்டார். ''எனக்கொன்றும் நஷ்டமில்லை. உன் குடும்ப விவகாரத்தில் தலையிட எனக்கு உரிமையும் இல்லை. இதுதான் உன் விருப்பம்னா அப்படியே செய்துட்டுப் போறேன்.''

''ரொம்ப நன்றி ஸார்.''

கங்காதரன் நியமன உத்தரவைக் கோபத்துடன் கிழித்து எறிந்துவிட்டு, ''நீயே உனக்குப் பிடிச்ச மாதிரி வேறு அபாய்ண்ட்மெண்ட் ஆர்டர் டைப் டண்ணிக் கொண்டா, கையெழுத்துப் போடறேன்'' என்று புஷ்பாவிடம் உத்தரவிட்டார்.

மாலை வீடு திரும்பியதும் அர்த்தநாரியிடம், அதிகமாக சந்தோஷத்தை வெளிப்படுத்தாமல் விஷயத்தைச் சொன்னாள். ஆஃபீஸின் ஆர்டரையும் காண்பித்தாள். ''பிரமோஷன் வந்து என்ன பிரயோஜனம்? சம்பள உயர்வு ஒன்றும் அதிகமில்லை'' என்று சுள் கொட்டினாள். மனத்தாங்கல் உற்றவள் போல் நடித்தாள். பிரமோஷன் கிடைத்தும்கூட அவள் தன்னை விடக் குறைவாகத்தான் சம்பளம் வாங்குகிறாள் என்பதால் ஏற்பட்ட சந்தோஷத்தை மறைத்துக் கொண்டு அவன் அவளைச் சமாதானப்படுத்தினான்: ''கவலைப்படாதே, புஷ்பா! கடமையைச் செய் பேறாதும். நடப்பது நடக்கட்டும். அது சரி, உன் பதவி உயர்வை இன்றிரவு ஸெலிபரேட் டண்ணணுமே? சாப்பாடு இன்று ஹோட்டலில்தான். எங்கே போகலாம்? பூனமா? கோலமா? வேகாவா? சாரியட்டா?'' என்று கேட்டபடியே உற்சாகமாக அவளைக் கட்டி அணைத்தான். அவன் கரங்களின் இறுக்கத்தில் அவள் நெஞ்சிலே வேதனையை உணர்ந்தாள். மனத்தளவிலே அல்ல, சரீரத்திலேயே!

''ஸ்... ஸ்... ஸ்...'' என்று உறிஞ்சினாள் வலி பொறுக்காமல்.

அவள் முகம் கோணுவதைப் பார்த்து, முனகலைக் கேட்டு, ''என்ன புஷ்பா, என்ன?'' என்று பதறினான் அர்த்தநாரி.

## 14

''கொஞ்ச நாளாகவே வலது மார்பிலே இலேசாக ஒரு வலி '' என்றாள் புஷ்பா. ''பொறுக்க முடியாமலில்லே. இப்போ என்னை நீங்க நெஞ்சோடு இறுக்கியதும் சுரீர் என்று இருந்தது.''

''நெஞ்சிலே வலியா? ஏதாவது ஹார்ட் சம்பந்தப்பட்டதாய் இருக்கப் போறது?'' என்றான், அர்த்தநாரி. அவள் தன் அப்பா

வுக்கு ஹார்ட் அட்டாக் என்று கூறியது நினைவு வந்தவனாக. ''டாக்டரைப் பார்த்து விட்டு வருவோமா?'' என்று கேட்டான்.

''அவசியமானால் போய்க் கொள்ளலாம்'' என்றாள் புஷ்பா. ''நீங்க நினைக்கிற மாதிரியெல்லாம் ஒன்றுமில்லை. எப்படியானாலும் இன்றைக்கு வேண்டாம். என் பதவி உயர்வைக் கொண்டாட ஹோட்டலுக்குப் போகலாம் னீங்களே!''

''சரி, அப்ப கிளம்பு!''

அவள் வழக்கத்தை விடச் சிரத்தையுடன் தன்னை அலங்கரித்துக் கொண்டாள். பதவி உயர்வு அவளுக்கு உற்சாகத்தைத் தந்திருந்தது. ரெஸ்டாரண்டின் மங்கலான ஒலியுடன் ஒத்துப்போகிறாற்போல் புதிய பிரபல திரைப் படப்பாடல் ஒன்று அடங்கி ஒலித்தது. அவள் அழகை, அலங்காரத்தை அர்த்தநாரி வைத்த கண் வாங்காமல் பார்த்தான். ''இந்த பிலாவ் — கூர்மாவுக்குப் பதில் உன்னையே தின்று விடலாம் போலிருக்கிறது!'' என்றான். நடித்துக் காட்டினான்.

''அடகடவுளே!'' என்றாள் புஷ்பா. ''என்னதானிருந்தாலும் இவ்வளவு சுயநலம் ஒருவருக்கு இருக்கவே கூடாது!''

''நான் என்ன பண்றது? நீ அவ்வளவு அழகா இருக்கே. உன்னைப் பார்க்கும்போதெல்லாம் என் சுயநலம் தலைதூக்கறது.''

''அப்போ நீங்க உயர் பண்புகளைக் கடைப் பிடிக்கணும்னு நான் அவலட்சணமாய் மாறிடணும். அப்படித்தானே!''

''சீச்சீ! மறந்துபோய்க்கூட இப்படியெல்லாம் பேசாதே புஷ்பா! என்னால் தாங்கவே முடியாது! நீ அப்சரஸ் மாதிரி என்றென்றைக்கும் அழகு குறையாமல் இருக்கணும்.''

'நீங்களும் பொறுமை கோபதாபங்கள் சுயநலம் எல்லாம் கடுகளவும் குறையாதவராகக் காலத்தை ஓட்ட வேண்டுமாக்கும்!' என மனத்தாங்கலுடன் எண்ணினாள் புஷ்பா. 'வாழ்க்கையை, அதன் சுவைகளை, அழகுகளை ரசிக்கவே தெரியவில்லையே இவருக்கு? பிலாவ் எவ்வளவு நன்றாய் இருக்கிறது? நிதானமாக ருசித்துச் சாப்பிட்டால் என்னவாம்? அவசரம் அசவசரமாய் அள்ளிப் போட்டுக் கொண்டு... அதற்குள் முக்கால் பிளேட் காலி! ஹூம்.'

மறுநாள் அவன் நினைவுபடுத்தவே ஆபீஸுக்கு அரைமணி நேரம் முன்னதாகவே கிளம்பிப் புஷ்பா தனக்குத் தெரிந்த ஒரு லேடி டாக்டரிடம் போனாள். விஷயமறிந்ததும், ''வீக்கம் ஏதேனும் இருக்கா'' என்றாள் டாக்டர். ''நெல்லிக்காய் அளவு ஒரு கட்டி மாதிரி இருக்கிறது'' என்றாள் புஷ்பா. இரு நெஞ்சகங்களையும் பரிசோதித்த டாக்டர் ''இது கவலைப்பட ஒன்றுமில்லாமலும் இருக்கலாம். முன் ஜாக்கிரதையாக இருக்கவேண்டிய கேஸாகவும் இருக்கலாம். சில டெஸ்ட்களைச் செய்து பார்க்காமல் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. நான் சீட்டு எழுதித் தருகிறேன். நீ அடையாறில் 'கான்ஸர்' ஆஸ்பத்திரிக்குப் போ'' என்றாள்.

''கான்ஸரா!'' அதிர்ச்சியுற்றுத் திகைத்தாள் புஷ்பா.

''பயப்படாதே: புற்று நோய்தான் என்று தீர்மானமாகச் சொல்ல முடியாது. அப்படி இல்லாமல் இருந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. ஆனால் உறுதிப்படுத்திக் கொள்வது ரொம்ப அவசியம். ஒருவேளை புற்றுநோயாக இருந்தாலும் ஆரம்ப கட்டத்திலேயே கண்டுபிடித்துத் தாமதமின்றிச் சிகிச்சை செய்தால் குணப்படுத்த முடியும். அலட்சியம் பண்ணினால்தான் ஆபத்து.''

பிரமை பிடித்தவள் போல் அமர்ந்திருந்த புஷ்பா, 'சர்'ரென்று லெட்டர் பேடிலிருந்து ஒரு தாள் பிரிக்கப்படும் ஓசை கேட்டதும் துணுக்குற்றாள். மௌனமாகச் சீட்டை பர்ஸுக்குள் வைத்துக் கொண்டு பத்து ரூபாய் பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தாள்.

அன்றுமாலை அவள் அர்த்தநாரியிடம் செய்தியை உடைத்தாள். அப்போது அவளுக்கு அலாதியான ஒரு திருப்தி ஏற்பட்டது! அது அவளுக்கே ஆச்சர்யமாகவும் இருந்தது.

'கான்ஸர் என்னும்போது வருத்தமடைய வேண்டியவள் ஏன் இப்படி மனநிறைவு பெறுகிறேன்?' அலசிப் பார்த்தபோது சுய பச்சாதாபம் தன் இதயத்தில் கட்டுக்கடங்காமல் வளர்ந்து விட்டிருப்பதை அவள் புரிந்து கொண்டாள். கணவனிடம் ஏமாற்றம், மதனனிடம் அதைவிடப் பெரிய ஏமாற்றம். இரண்டுபேருமே தன்னைப் புரிந்து கொள்ளவில்லை. போதாக் குறைக்கு இப்போது புற்றுநோய் வேறு. அவள் தன்னிடமே பச்சாத்தாபத்தை வளர்த்துக் கொண்டதில் வியப்பென்ன? தான் நெறி தவறி நடந்து கொள்ள நேர்ந்ததற்கு மட்டுமின்றி, இப்போது புற்றுநோயினால் அவதிப்படப் போவதற்கும் அர்த்தநாரியையே காரணகர்த்தாவாக்கிப் பார்த்து அவள் திருப்தியுற்றாள்: 'பாருங்கள்! உங்கள் சுயநலம், தற்குறித்தனம், முன்கோபம், பொறுமை எல்லாம் சேர்ந்து எனக்குப் புற்றுநோயைக் கொடுத்து



விட்டன' என்று குற்றம் சாட்டுபவளைப் போன்று திருப்தியுடன் அவள் கூறினாள்: ''நீங்கள் சொன்னீங்களேன்னுதான் நான் டாக்டர் சுந்தரியிடம் போனேன். இல்லேன்னு இத்தனை நாள் லட்சியம் பண்ணுபல் இருந்தது போல் இருந்திருப்பேன். நீங்க கோவிக்கப் போறீங்களேன்னு பயந்து போய்த்தான் டாக்டரிடம் போய்த் தொலைச்சேன். இப்போ வீண் செலவும் வேண்டாத தொல்லையும் வந்து சேருது. அடையாறு புற்றுநோய் மருத்துவமனைக்குப் போகணுமாம், டெஸ்ட் பண்ணணுமாம். கான்ஸர்தான்னு தீர்மான மாகக் கண்டு பிடிச்சப்புறம் மறுபடியும் எத்தனை செலவோ, துன்பமோ, அலைச் சலோ? நீங்க டாக்டரைப் பற்றிப் பேச்சை எடுக்காமல் இருந்திருக்கலாம்.''

அவன் திக்பிரமை பிடித்தவன் போல் அமர்ந்திருந்தான். பிறகு, மெல்ல, ரகசியம் பேசும் குரலில், ''கான்ஸரா, புஷ்பா! அப்படி யெல்லாம் இருக்காது. அது ரொம்ப ரொம்பப் பணக்காரங்களுக்குத்தான் வரும். ராஜ வைத்தியம் தேவைப்படுகிற சமாசாரம். நம் போன்றவர்களைத் தாக்கினால் எப்படிச் சமா ளிப்பது?'' என்றான்.

''ஒருவேளை நான் பணக்கார வீட்டில் பிறந்தவளாச்சேன்னு வந்து தொலைச்சு டுத்தோ என்னமோ? இப்போதைய என் நிலைமை அதுக்குத் தெரியலை! வெறும் அசடு! தப்பு அட்ரஸுக்கு வந்து தொலைச்சிருக்கு!'' கசப்புணர்ச்சியை மறைக்காமல் பேசினாள் புஷ்பா.

ரொம்ப நேரம் யோசித்துக் கொண்டிருக்க வில்லை, அர்த்தநாரி. விரைவிலேயே ஒரு தீர் மானத்துக்கு வந்தவனாக, ''நாளைக்கு நான் லீவு போட்டுவிட்டு உன்னுடன் வருகிறேன்'' என்றான்.

''உங்களுக்கு எதுக்குச் சிரமம்?''

''ஒரு கஷ்டமுமில்லை, புஷ்பா! நீ என் னுடன் இணைந்தவள், உடலாலும் உள்ளத் தாலும் என்னுடன் ஐக்கியமானவள் என்று எத்தனை தரம் சொல்லியிருக்கிறேன்? இப் போது உனக்கு நெஞ்சகத்தில் வலிக்கிற



தென்றல் அதை நானும் உணருகிறேன். நான் அனுபவிக்கும் அந்த வேதனையைவிட உன்னுடன் ஆஸ்பத்திரிக்கு வருவது எனக்குப் பெரிய கஷ்டமில்லை!''

அவள் துணுக்குற்று அவனை ஏறிட்டுப் பார்த்தாள். 'என்ன சொல்கிறார் இவர்! இத்தனை காலமாக அர்த்நாரியின் மனத்தில் நான் அறிந்து கொள்ளாதிருந்து விட்ட பகுதியா இது? எப்படி இதை நான் தெரிந்து கொள்ளாமலிருந்தேன்? உள்ளத்தின் இந்த மறுபக்கத்தை இருட்டடிப்பு செய்து என்னிட மிருந்து இந்நாள்வரை இவர் ஏன் மறைத்து வைத்திருந்தார்? இதனால் எத்தனை எத்தனை விபரீதங்கள் நேர்ந்து விட்டன!'



வியப்பு மீதுற, அவள் அவனைப் பார்த்தாள். ''நீங்கள்... நீங்கள்...'' என்ன கேட்பதென்று அவளுக்குப் புரியவில்லை. கடைசியில், ''கிண்டல் பண்ணுகிறீர்களா? உங்களுடைய சுபாவத்துக்கு இப்போதைய உங்கள் பேச்சு கொஞ்சம்கூட ஒத்து வரவில்லையே'' என்றாள்.

''கிண்டலுமில்லை, சுண்டலுமில்லை, என்ன கண்டுவிட்டாய் என் சுபாவத்தைப் பற்றி? சுயநலம், முன்கோபம் என்று குற்றஞ்சாட்டுவாயே அதுதானே?''

'ஆமாம்' என்று கூற நாக்கூசவே மேலும் கீழுமாகத் தலையாட்டினாள் புஷ்பா.

''நீ என்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருந்தால் அதற்கு நான் என்ன பண்ண முடியும்?'' என்றான் அர்த்தநாரி. ''என் மனைவி என்கிற அளவில், என்னை உளமாற நேசிக்கிறவள் என்ற முறையில் என் மகிழ்ச்சியை உன் சந்தோஷமாக, ஏற்பவளாக, நான் விரும்புவதையெல்லாம் நீயும் விரும்புகிறவளாக, நான் சொல்வதைச் செய்வதிலேயே திருப்தியும் ஆனந்தமும் அடைபவளாக நீ விளங்க வேண்டும் என்று எதிர்பார்த்தேன். இதை நீ சுயநலம் என்று முடிவு கட்டினால் அதற்கு நானா பொறுப்பு? அர்த்தநாரி என்ற என் பெயருக்குப் பொருத்தமாக 'புஷ்பா ஒரு பாக'னாக நான் விளங்க ஆசைப்பட்டேன். இது தவறா? இதற்கு எதிர்மறையாக இன்று உன் வேதனை எனக்கு வேதனையாய் இருக்கிறது; உனக்கு நோய் வந்தால் எனக்கே கான்ஸர் வந்துவிட்டது போல் உணர்கிறேன்.''

அவள் மனம் உருகிவிட்டது: மெய் சிலிர்த்தது; கண்கள் பனித்தன. 'அர்த்தநாரி என்னை உண்மையாகவே காதலிக்கிறார்! இதில் சந்தேகமேயில்லை! இவருக்கு என் தனித்தன்மைகளை, சிந்தனைகளை, பெண்மையை, உணர்ச்சிகளை மதித்து நடந்து கொள்ளத் தெரியவில்லை. ஆனால் என்னை மனமாறக் காதலிக்கிறார் என்பதில் ஐயமே இல்லை!'

''புஷ்பா! நீ பரிபூரண குணமடைய என்னால் முடிந்ததையெல்லாம் செய்வேன். என் சக்திக்கு மீறியும் பிரயாசைப் படுவேன்!''

திடீரென்று அணை உடைத்துக்கொண்டாற் போல் அவளுக்குக் கண்ணீர் பெருகியது. ''புஷ்பா! புஷ்பா! அசடே! எதுக்கு அழுகிறாய்? டாக்டர்தான் சொன்னாளே, ஆரம்பத்திலேயே கவனித்துச் சிகிச்சை பண்ணிவிட்டால் ஆபத்தில்லை என்று. எல்லாம்

## இந்தக் காலத்தில் இப்படியும் ஒருவர்!

''பிராபல்யத்தைத் தரும் ஒரு காரியத்தைச் செய்து பலருடைய கரகோஷத்தைப் பெறுவதைவிட பலருடைய காரத்துக்கு ஆளானாலும் பாதகமில்லை என்று சரியான காரியத்தைச் செய்வதையே நான் விரும்புகிறேன். ஆண்டவனுடைய உத்தரவுகளும், நியாய உணர்வின் கட்டளைகளும், தேச நலனில் அக்கறையும் எனக்கு வழி காட்டும்.''

— இவ்விதம் சொன்னவர் யார்?

(அ) மொரார்ஜி தேசாய்?
(ஆ) கார்ட்டர்?
(இ) மலேசியா பிரதமர் பருக் ஹுஸேன் ஆன்?
(ஈ) புதிய போப்?

விடை 107ம் பக்கம்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சரியாகப் போய்விடும். அழாதே புஷ்பா ப்ளீஸ்!'' என்று அவள் முதுகைத் தட்டிக் கொடுத்துக் கன்னங்களைத் துடைத்தான்.

அவள் மிகவும் சிரமப்பட்டுக் கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். ஆனல் கணவனைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் மன்னிக்க முடியாத துரோகம் அவனுக்குச் செய்து விட்டதற்காகப் புஷ்பாவின் இதயம் குற்ற உணர்வால் பீடிக்கப்பட்டுப் புழுங்கி அழுததே, அதை அவளால் எப்படி நிறுத்த முடியும்?

## 15

''பணக்காரர்களுக்குத்தான் இந்த நோய் வரும் என்றீர்களே, பார்க்கிறீர்களல்லவா இந்தக் காட்சியை?'' என்றாள் புஷ்பா.

ஆஸ்பத்திரிக்குள்ளே அவர்கள் இன்னும் போகவில்லை. 'அவுட் பேஷண்ட்'களாக டாக்டரைப் பார்க்க நின்ற கியூவே அவ்வளவு பெரிதாக இருந்தது. பெரும்பாலோர் ஏழைகள் அல்லது கீழ் மத்தியதர வகுப்பினர் என்பதும் புரிந்தது. இவர்களும் கியூவில் இருந்து கொண்டார்கள்.

''என் ஊகம் தவறுதான் புஷ்பா. ஆனல் அப்படித் தவறானதே நமக்கு நம்பிக்கை தர வேண்டும் இல்லையா?'' என்றான்.

ஒரு வாதத்துக்காகப் பார்த்தால் அர்த்த நாரி கூறியது சரிதான். ஆனல் புஷ்பாவுக்கு நம்பிக்கை சிறிதும் இல்லை. கணவரின் உள்ளத்தை முழுமையாகப் புரிந்து கொண்ட போது, இதுவரை தான் அறிந்திராத அவரது நற்குணமொன்றைத் தெரிந்து கொண்ட போது அவளுக்கு மகிழ்ச்சியுடன் கூடவே விரக்தியும் ஏற்பட்டது. வெண்ணெய் திரண்டு வருகையில் தாழி உடைந்ததாம். கணவரிடம் அன்பும் மதிப்பும் உயர இன்று ஒரு வாய்ப்பு பிறந்திருக்கும் போதுதானு இப்படி ஒரு கொடிய நோய் தன்னைத் தாக்க வேண்டும்?

லேடி டாக்டரைப் பார்க்கப் புஷ்பாவின் முறை வரும்வரை அவன் அவளுக்குத் தன் பார்வையாலும் விரல்களின் ஸ்பரிசத்தாலும் தைரியம் அளித்துக் கொண்டிருந்தான். அவள் நன்றிப் பெருக்கில் நனைந்தாள்.

புஷ்பா பரிசோதிக்கப் படுகையில் அர்த்த நாரி வெளியேதான் இருக்க நேர்ந்தது. ''தைரியமாய் இரு புஷ்பா'' என்று முதுகைத் தட்டி அறைக்குள் அனுப்பினன். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு அவனையும் டாக்டர் உள்ளே அழைத்தார். ''பார்த்தால் கான்ஸர் மாதிரிதான் தெரிகிறது. ஆனல் சில பரிசோதனைகளைச் செய்துதான் புற்றுநோயா இல்லையா என்று இறுதியாகத் தீர்மானிக்க வேண்டும். அது எவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறது, தன்மை என்ன என்பதையும் அறிய வேண்டும்'' என்றாள். பிறகு அர்த்த நாரி என்ன சம்பாதிக்கிறன், புஷ்பாவின் சம்பளம் என்ன, அவர்களால் எவ்வளவு செலவழிக்க முடியும் என்பது போன்ற கேள்விகளைக் கேட்டாள். ''புற்றுநோயைக் கண்டு பிடிக்கவும் சிகிச்சைக்கும் செலவு ரொம்பத்தான் ஆகும். இவளுக்கு டானிக், மருந்துகள், சத்துள்ள ஆகாரம்;. பழங்கள் எல்லாம் தர வேண்டியிருக்கும். அதற்கெல்லாமும் செலவாகும். எவ்வளவு பணம் திரட்ட முடியுமோ தயாராய் வைத்துக் கொள்ளுங்கள். நாங்களும் இயன்ற அளவில் உங்கள் செலவைக் குறைக்கப் பார்க்கிறோம்.'' கடைசியாகச் சொன்னாள்: ''நான் சர்டிஃபிகேட் தருகிறேன், அதைக் கொண்டு போய்க் கொடுத்து, இவள் காரியாலயத்தில் லீவு சொல்லிவிட்டு வாருங்கள். நீங்கள் வேலைக்குப் போகலாம். தினம் மாலையில் வந்து இவளைச் சந்திக்கலாம்.''

''இப்போதே இவளை இங்கே விட்டுச் செல்லவேண்டும் என்றா சொல்கிறீர்கள்?'' என்றான் அர்த்தநாரி.

''ஏன் நான் கவனித்துக் கொள்ள மாட்டேனு?'' என்றாள் டாக்டர் சாரதா, புன்னகையுடன். ''வீட்டிலிருந்து இவளுக்கு அத்தியாவசியத் தேவையான பொருள்கள் ஏதாவது கொண்டுவர வேண்டுமென்றால் அதை நீங்கள் மாலையில் எடுத்து வரலாமே?''

அவள் வார்டில் கொண்டுபோய் விட்டு விட்டு, ''வரட்டுமா புஷ்பா'' என்றான், சோகமாக.

''கவலைப்படாமல் போய் வாருங்கள். எனக்கு உங்களை நினைத்தால்தான் இப்போது பயமாயிருக்கிறது.''

அவன் அவள் காரியாலயம் சென்று மானேஜர் கங்காதரனைப் பார்த்து விஷயத்தைச் சொன்னன்: அவர் ரொம்பவும் அனுதாபம் காட்டி, டாக்டரின் சான்றிதழ், லீவ் லெட்டர் எல்லாவற்றையும் வாங்கி வைத்துக் கொண்டார். ''நல்லவர்களுக்குத்தான் எல்லாவித சோதனைகளும் வருகிறது. உங்கள் மனைவி மாதிரி ஒரு நம்பகமான கருத்துள்ள ஊழியரைப் பார்ப்பது அரிது'' என்றார். ''சம்பளத்துடன் இரண்டு மாசலீவு சாங்க்ஷன் பண்ணறேன். அப்புறம் பாதி சம்பளத்தில் மேலும் இரண்டு மாத லீவு எடுக்கலாம். புஷ்பா விஷயத்தில் ஓரளவு ரூல்களைத் தளர்த்தவும் தயாராயிருக்கிறேன். அவளை நன்றாகக் கவனித்துக் கொள்ளுங்கள். அவளுடைய கையெழுத்தைப் பெற்று வந்தீங்கன்னு சம்பளத்தை அட்வான்ஸாகவும் டிரா பண்ணலாம்.''

நன்றி கூறிவிட்டு அர்த்தநாரி தன்னுடைய அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தான். தாமதமானதற்கு முதலில் மதனனிடம் காரணம் கூறிவிட்டு, பிறகுதான் தன் மேஜை முன் அமரமுடியும். ''என் மனைவிக்கு உடம்பு சரி

யில்லே ஸார்; க்கான்ஸர் என்று டாக்டர் சந்தேகப்பட்டார். அடையாறு புற்று நோய் மருத்துவ மனையில் சேர்த்து விட்டு வந்திருக்கிறேன்'' என்றான்.

''என்னது, கான்ஸரா!'' என்று நம்பிக் கைப் படாதவனுகக் கேட்டான் மதனன். ''அட கடவுளே! ரொம்பச் செலவாகுமே அப்பா, எப்படிச் சமாளிக்கப் போறே?''

''எப்படியோ செலவு செய்துதானே ஸார் ஆகணும்.''

''ம்.. ம்... ஐயோ பாவம்!'' என்ருன் மதனன் வருத்தம் சற்றும் எட்டிப்பாராத குரலில். பிறகு, ''ஏம்பா! கான்ஸர்னு, எங்கே கான்ஸர்? உடம்பில் எந்தப் பகுதியில் வேணும்னுலும் அதுவரும், தெரியுமில்லே? கீழே அந்தரங்க உறுப்பிலே கூட வருவ துண்டு!'' என்ருன்.

''வலது மார்பிலே ஸார்.''

''அட ஆண்டவனே!'' என்ருன் மதனன். ''என்ன பண்ணுவாங்க தெரியுமில்லே? அந்தப் பக்க மார்பை நீக்கிடுவாங்க! வெட்டி எடுத்துடுவாங்க! மாஸக்டமின்னு பேரு! பிறகு அவளுக்கு ஒரு நெஞ்சகம் தான் இருக் கும்! அப்புறம் அர்த்தநாரிங்கிற பேரு உன்னே விட உன் மனைவிக்கு ரொம்பப் பொருத்தமா யிருக்கும்!'' சிரிப்பை மனத்துக்குள் தேக்கிக் கொண்டு பேசினுன் மதனன்.

கண்களால் வெறுப்பை உமிழ்ந்து அர்த்த நாரி அவனைப்பார்த்தான். 'அர்த்தநாரிஎன்று தனக்குப் பெயர் வைத்தார்களே என்ன புண் ணியம்? நெற்றிக்கண் இல்லேயே இவனைச் சுட்டெரிக்க?'

''சரி, மேட்டூர் ஃபைலேக் கொஞ்சம் பாருப்பா. ரொம்ப 'டிலே' ஆயிடுச்சு'' என்ருன் மதனன்.

அர்த்தநாரி அன்று மேட்டூர் ஃபைலேயும் பார்க்கவில்லே. காட்டூர் ஃபைலேயும் நோக்க வில்லே. நாலு மணிக்கு மேல் இருப்புக்கொள் ளாமல் எழுந்து போய் பஸ் பிடித்து வீடு சேர்ந்து புஷ்பாவுக்குத் தேவையான சில பொருள்களே ஒரு பையில் திணித்துக் கொண் டான், அப்புறம் அடையாறுபஸ்ஸில் ஏறினுன்.

புஷ்பாவின் தலே இவன் திசை நோக்கி இராமல் மறுபுறம் சுவரைப் பார்க்கத் திரும்பி இருந்தது. அதுவே அவனேத் துணுக்குறச் செய்தது. கிட்டத்தில் நெருங்கி மெல்லத் தோளேத் தொட்டான். அவள் திரும்பினுள். மாலே மாலேயாக அவள் கண்ணீர் உகுத்திருப்பது தெரிந்தது.

''புஷ்பா! எதற்கு அழுகிருய்? சொல்லு!'' பதில் இல்லே.

''கான்ஸர் என்பது உறுதியாகிவிட்டது. அதுதானே?''

''ஆமாம். அது மட்டுமில்லே; அது ஓரளவு வளர்ந்து பரவி விட்டிருக்கிறதாம். 'ரிஸ்க்' எடுத்துக் கொள்ளப் போவதில்லேயாம். டாக்டர் அந்த நெஞ்சகத்தை வெட்டி எடுத்துவிடப் போகிருராம். இல்லாத போனுல் உயிராபத்தாம்.''

''அதனுல் என்ன புஷ்பா?''

''எனக்கு இனி ஒருபக்க நெஞ்சகம் தான் இருக்குமுங்க!'' அவள் விசும்பினுள்.

''ஒரு நெஞ்சகம் போனுல் என்ன, புஷ்பா? நீ பத்திரமாக இருப்பாயல்லவா? அந்த நெஞ்சகத்தைவிட எனக்கு நீதான் முக்கியம் புஷ்பா!''

''ஐயோ! இப்ப இப்படி சொல்றீங்களே. ஆனு நேற்றுவரை நீங்க என் அழகைத்தானே என்னேவிட அதிகமாக விரும்பினீங்க! அதை ஆள்வதிலே, அனுபவிப்பதிலே எவ்வளவு பேராசை காட்டி னீங்க! மறந்து போச்சா?''

''மறக்கலே புஷ்பா. உன் அழகு என்னேப் பேராசை பிடிச்சவனு, பைத்தியமா அடிச் சுடுத்து. உண்மைதான். நான் ஏன் அப்படி ஆனேன்னு யோசிக்கப் பார்க்கறேன். சின்ன வயசிலே எனக்கு நான் விரும்பியது எதுவுமே கிடைக்கலே. பெற்ருேர் இல்லே, நல்ல உண வில்லே, உடை இல்லே, நல்ல கல்வி கிடைக் கலே. உயர் உத்தியோகம் கிடைக்கலே. இப்படி எல்லாமே எனக்கு மறுக்கப்பட்ட போது அசாதாரணமான அழகோடு நீ எங்கிட்டே வந்து சேர்ந்தே. உன்னேச் சுலபமா நான் அடைஞ்சுட்டேன். அதிலேதான் நான் நிலே தடுமாறிப் பேராசையும் சுயநலமும் அதீதமா உடையவனு ஆகி விட்டேன். ஆனு இப்போ அதெல்லாம் அசட்டுத்தனமாத் தோணுது. உடலே, உருவத்தை நேசிக்கறதைவிட உன்னே, புஷ்பாவை, காதலிக்கறதுதான் பெரிசுன்னு மனசுக்குப் படுது.''

இவ்வளவு சொல்லியும் அவள் சமாதானம் அடைந்ததாகத் தெரியவில்லே. அவன் தொடர்ந்தான்: ''புஷ்பா, என் பேராசை, சுயநலம், தற்குறித்தனம் முன்கோபம் எல்லாவற்றுக்கும் இப்போ பரிகாரம் பண்ணி டறேன். தன்னலம் கொஞ்சமுமின்றி உன்னேச் சௌகரியமாயும் சந்தோஷமாயும் வைச்சுக் காப்பாத்தறேன். நீ குணமாகப் பிரார்த்திக் கிறதோடு பாடுபடவும் செய்யறேன்.''

''என்ன மாதிரி ஒரு அசிங்கமான பெண்ணே ஒரே ஒரு நெஞ்சகத்தை உள்ள பெண்ணே உங்களால் எப்படிக் காதலிக்க முடியும்?''

''முன்னேவிட அதிகமாக நான் இப்போ உன்னே நேசிப்பேன் புஷ்பா! என் பெயரே அர்த்தநாரி இல்லேயா? இந்த ஆபரேஷ னுக்குப் பிறகு நீ எனக்கு ரொம்பப் பொருத்த



மானவளா இருப்பே?'' என்று கூறி அவன் அவள் முகவாயை இரு விரல்களால் பற்றி இலேசாக உலுக்கினான். மெல்லச் சிரித்தான். அவளும் புன்னகை புரிந்தாள்.

''நீ சிரிச்சுட்டே புஷ்பா! சிரிச்சுட்டே! எனக்கு அதுதான் வேண்டும்!... ஒரு வேடிக்கை பாரு, புஷ்பா. ஒரே மாதிரியான வார்த்தைகள் இருவேறு சந்தர்ப்பங்களிலே பேசப்படும் போது ஒருசமயம் கோபம் பொத்துக் கொண்டு வருகிறது. இன்னொரு கட்டத்தில் சிரிப்பு கொப்பளிக்கிறது!''



''என்ன சொல்றீங்க?'' என்றாள்.

''இப்பக் கேட்டுச் சிரிச்சியே, 'அர்த்தநாரி ஜோக்!' அது என் மானேஜர் மதனன்கூறியது. அப்போ எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. ஆனால் அதே ஜோக்கை உன்னிடம் இப்போ பகிர்ந்து கொண்டு நானும் சிரித்து, உன்னையும் சிரிக்கப் பண்ணிட்டேன் பார்த்தியா?''

''உங்க மானேஜர் அப்படி சொன்னா, அயோக்கிய ராஸ்கல்!'' என்றாள் புஷ்பா. ''அவன் தலையில் இடிவிழ'' என்று சபித்தாள். அவள் உள்ளம் எரிமலையாகக் கொந்தளித்தது. அதிலிருந்து பீறிட்டெழும் நெருப்புக் கோளங்களில் மதனனைக் குளிப்பாட்ட ஆசை கொண்டாள்.

## 16

''அவன் தலையில் இடிகூட விழுவதற்குக் கூச்சப்படும், புஷ்பா! அவ்வளவு மட்டமான பேர்வழி. பெண்கள் அவனிடம் முழுமையாக வயப்பட்டால் சரி, இல்லாத போனாலும் அவர்களைப் பார்ப்பதிலும் பேசுவதிலும் தீண்டுவதிலுமே இன்பம் காண்பவன். இப்படிப்பட்ட கயவனிடம் என் சார்பில் பேச, உன்னை நான் அனுப்பியிருக்கவே கூடாது. நெருப்புடன் விளையாடுவது போல் நடந்துக்கிட்டிருக்கிறேன். அதற்காக இப்போது நான் ரொம்ப வருத்தப்படடறேன். எனக்கிருந்த தாழ்வு மனப்பான்மையும் என் சுயநலப் புத்தியும் அப்படி என்னை நடந்து கொள்ள வைத்து விட்டன.''

''இப்ப வருத்தப்படறீங்களா ,அது பற்றி?'' அவனுடைய காலம் கடந்த ஞானோதயத்தை எண்ணி அவள் பெருமூச்சு விட்டாள்.

''ஆமாம் புஷ்பா! இப்பவாவது வருத்தப் படறேனே என்பதை நினைத்து என்னை மன்னித்து விடு!''

''போனதெல்லாம் போகட்டுங்க. அப்போ நீங்க நடந்துக்கிட்டதுக்குப் பரிகாரமா இப்போ எவ்வளவோ என்னிடம் பிரியம் காட்டறீங்க. உங்க அன்பு, பரிவு எல்லாம் பார்க்கும்போது எனக்குப் பெருமையாகவே இருக்கு. ஆனா அதுக்கெல்லாம் நான் தகுதி இல்லாதவளா ஆகிவிட்டேனே என்பதுதான் என் வருத்தம்.''

அவள் எதை மனத்தில் கொண்டு பேசினாள் என்பதை அறியாமல் அவன் கூறினான்: ''நாம மறுபடி அதுபற்றி விவாதத்தைத் தொடங்கப் போறோமா? நீ பார்க்கிறதுக்கு எப்படி இருந்தாலும் சரி, பாதகமில்லை; என் இதயத்தில் உன்னை ஏற்றி வைச்சுக் கொண்டாடறேன் என்கிறதுதான் முக்கியம்.''

''என்ன, ஹஸ்பண்டு கிட்டே சொல்லிட்டியா?'' என்ற குரல் கேட்டு இருவரும் திரும்பினர். டாக்டர் சாரதா.

''உம்'' என்றாள் புஷ்பா.

''அடுத்த வாரம் ஆபரேஷன் செய்துடலாம். தேதி, கிழமை நாளைக்குச் சொல்லறேன். இரண்டு பக்க மார்பகங்களையும் பரிசோதிச்சாச்சு. நல்லவேளை ஒன்றிலேதான் நோய் கண்டிருக்கு. மற்றது பற்றிப் பிரச்னையே இல்லை.''

''ஆனால் வலது மார்பிலே நோய் கணிசமா முற்றிப் பரவியிருக்குன்னு சொன்னீங்களாமே?''

''வாஸ்தவம்தான் நோயை அலட்சியப் படுத்தவோ குறைத்துக் கூறவோ நான் விரும்பலை. பெரிய வியாதிதான்; பெரிய ஆபரேஷன்தான். இதிலுள்ள ஆபத்துக்களையும் நான் மட்டுப்படுத்த வில்லை. ஆனால் கவலைப்பட்டுப் பிரயோஜனமில்லை. எதிரி எதிரே வந்தாச்சு; போராடித்தான் தீரணும். வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை வேணும். அப்போ நல்லபடியா எல்லாம் முடியும். நான் பிரார்த்தனை பண்ணறேன். நீங்களும் கடவுள் நம் பக்கம் இருக்கிறார் என்ற உறுதியோடு உங்க இஷ்ட தெய்வத்தைக் கும்பிடுங்க.'' அவள் போய் விட்டாள்.

நிஜமாகவே புஷ்பாவுக்குக் கடவுள் தன் பக்கம் இருப்பதுபோல் தோன்றியது. அதனால் தான் தான் செய்த பெரிய குற்றத்துக்குத் தகுந்த பெரிய தண்டனையை இவ்வளவு சீக்கிரமாகக் கொடுத்து விட்டார். அர்த்தநாரியின் மனமாற்றத்துக்கும் அதன்மூலமே வழிவகுத்திருக்கிறார். இதிலிருந்து தப்பிப் பிழைத்து வீடு திரும்பினால் அப்புறம் வாழ்நாள் முழுவதும் இன்ப மயமாய் இருக்கும்

அவள் உற்சாகத்தோடு அர்த்தநாரியிடம் பேச ஆரம்பித்தாள்.அரை மணி நேரத்துக்குப் பிறகு நர்ஸ் வந்து விஸிட்டிங் அவர்ஸ் முடிந்து விட்டதென்பதைத் தெரியப் படுத்தினாள். ''மணி அடித்ததே கேக்கலே?''

''நான் முன்னே பின்னே ஆஸ்பத்திரி பக்கம் வந்ததே இல்லே, அம்மா. எனக்கு விதி முறைகள் தெரியாது, ஸாரி'' என்று கூறிய அர்த்தநாரி, புஷ்பா பக்கம் திரும்பி, ''நாளைக் காலே வருகிறேன்'' என்றான்.

''அனாவசியமா அலையாதீங்க. சாயந்திரம் வந்தால் போதும். காலையில் ஆபீஸ் கிளம்பத் தான் நேரம் சரியாய் இருக்கும்'' என்றாள் புஷ்பா.

இரவுச் சாப்பாட்டுக்குப் பதில் இரண்டு இட்டிலிகளை விழுங்கி விட்டு வந்து சேர்ந்த அர்த்தநாரிக்கு வீடு வெறிச்சென்றிருந்தது. சற்றுநேரம் கூண்டுப்புலிபோல் இப்படியும் அப்படியும் அலைந்தான். எதையோ படிக்க

எடுத்தான். 'பொத்'தென்று கீழே போட்டான். தனியே இருக்கப் பிடிக்காமல் வீதியில் இறங்கி நடந்தான். பஜாருக்கு வந்தபோது அந்தக் கலகலப்பு சற்று அவன் தனிமைக்கு மாற்றாயிருந்தது. பரோட்டா, மசாலாபால் விற்கும் காமதேனு மில்க் பாரைத் தாண்டும் போது அவனை யாரோ அழைப்பது கேட்டது. திரும்பினான். சிவசாம்பன்!

''என்னப்பா, பிரமோஷன் கிடைச்சு ஜாகை மாறினாலும் மாறினே, ஆளே மாறிட்டே எங்களையெல்லாம் கவனிக்கிறதே இல்லை! ஓல்ட் ஃப்ரெண்ட்ஸ்ஸை ஒதுக்காதேப்பா!''

''சேச்சே அதெல்லாம் இல்லை; ஓல்ட் இஸ் கோல்டு'' என்றான் அர்த்தநாரி.

''சரி வா, பால் சாப்பிடு. இந்தாப்பா, ஸாருக்கு ஒரு மசாலா போடு.''

உபசாரத்தை மறுக்கவில்லை அர்த்தநாரி. யாராவது தன்னிடம் பரிவு காட்ட மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருந்த அவன், ஸ்டூலில் அமர்ந்தான்.

''என்னப்பா ரொம்ப டல்லா இருக்கே? பெண்டாட்டிக்கிட்டே லடாயா?''

''சண்டை பூசலெல்லாம் ஒன்றுமில்லை'' என்று ஆரம்பித்த அர்த்தநாரி, மனச்சுமையை இறக்கக் கிடைத்த வாய்ப்பை நழுவ விடாமல் பயன்படுத்திக் கொண்டான்.

''அடப்பாவமே! த்சௌ த்சௌ'' என்று அனுதாபம் காட்டினான் சிவசாம்பன். ''எனக்குக் கேட்கவே இவ்வளவு கஷ்டமாயிருக்கேப்பா, நீ எப்படித்தான் தாங்கறியோ?''

இருவரும் கடையை விட்டு வெளியே வந்தார்கள். திடீரென்று நினைத்துக் கொண்டவனாகச் சிவசாம்பன், ''அவ அப்பாவுக்குத் தெரியப்படுத்திட்டியோ?'' என்றான்.

''இல்லை.''

''இப்படி இருக்கலாமா, அப்பா? பெற்றோரிடமிருந்து இவ விரோதிச்சுக்கிட்டு, பிரிஞ்சு வந்திருக்கலாம்! என்றாலும் பந்த பாசம் மனசை விட்டுப் போகுமா? இருதரப்பிலும் அது இருக்கும். தேவராஜனுக்குத் தெரிவிக்கவேண்டியது உன் கடமை. அவருக்கு ஹார்ட் அட்டாக் வந்தபோது இவ அலறித் துடிச்சுக்கிட்டு மதுரைக்கு ஓடலையா? அதேமாதிரி ஒரு தந்தி புஷ்பாவின் பெற்றோரை இங்கே வரவழைக்கலாம். பிளேன்லே கூடப் புறப்பட்டு வருவாங்க.''

''தந்தி அனுப்பிட்டாப் போச்சு. நாளை, நாளன்னிக்கு!''

''அதென்னப்பா அவ்வளவுஅசுவாரஸ்யமாப் பேசறே? இன்னொண்ணும் சொல்றேன் கேட்டுக்க. புற்றுநோய் ங்கிறது பெரிய சமாசாரம். ஏகப்பட்டது செலவாகும். உன்னால் சமாளிக்க முடியாது. அவ அப்பா எவ்வளவு வேண்டுமானாலும் கொடுத்து அவளை நோயின் பிடியிலிருந்து மீட்க முயலுவார். அதற்கு இடமில்லாதபடி நீ சொல்லாமல் மறைச்சுட்டேன்னு நாளைக்கு உன் பேரில் பழி வரப்படாது இல்லியா?''

''அப்படியொன்றும் 'அவருக்கு அன்பு தட்டுக்கிட்டுப் போறதாத் தெரியலை!''

''வாழ்க்கைப் போராட்டத்தில் அவளுக்கு அவர் உதவலேங்கிறதை வைச்சுப் பேசாதே. அவ உனக்காக அவரை விரோதிச்சுக்கிட்டா. அவரும் கோபப்பட்டுக்கிட்டார். அது வேறே விஷயம். இப்போது நடக்கிறது உயிர்ப்போராட்டம். இப்போ மனசே வேறு விதமாய் மாறிடும்.''

சிவசாம்பன் கூறியது நியாயமாகப் பட்டது அர்த்தநாரிக்கு. ''என்ன செய்யலாம் கிறே? இப்பவே மவுண்ட்ரோடுக்குப் போய்த் தந்தி கொடுக்கவா?''

''அதைச் செய்... இரு! அதைவிட நல்ல யோசனை... இப்பவே ரயிலேறி நாளைக்காலை அவரை நேரில் பார்த்துச் சொல்லிவிடேன். உடனே ஒரு ஆட்டோ கிடைத்தால் பாண்டியனைக்கூடப் பிடிச்சுடலாம்.''

''ஐயே! அந்த மனுஷன் முகத்தில் யாருப்பா விழிக்கிறது!''

''அதென்ன அப்படிச் சொல்லிட்டே? கட்டின பொண்டாட்டி உசிருக்கு மன்றாடுகிற போது கௌரவப் பிரச்னை எங்கே வந்தது? உனக்கு அவரிடம்தான் என்ன விரோதம்? நீ அவரிடம் பணம் காசை எதிர்பார்த்தாயா, இனிமேல்தான் எதிர்பார்க்கப் போகிறாயா? அவராகவே தம் பெண்ணுக்கு உதவ நினைத்துச் செய்யட்டும். இல்லாட்டா வேண்டாம்.''

''அதுக்குத் தந்தி அனுப்பினா போதாதா? எதுக்காக நான் நேரில் போகணும்?''

''எனக்கென்னவோ நீ நேரில் போவது தான் நல்லதுன்னு படுதுப்பா. அவர் ஏற்கெனவே ஹார்ட் பேஷண்ட். தந்தியைப் பார்த்து அதிர்ச்சி அடைவதைவிட நேரில் போய் நீ நாசூக்காகச் சொல்லலாம்.''

''நீ கூறுவது சரிதான், சிவா. நான் என்னுடைய கர்வம், சுயநலம் எல்லாவற்றையும் தொலைச்சுத் தலைமுழுகிச் சபதமெடுத்தேன். ஆனா அதை நிறைவேற்றுவது எவ்வளவு கஷ்டமாயிருக்கு? மாமனார் எதிரே போய் நிற்கணும்கிறபோது சுயகௌரவம் குறுக்கிடுது.''

---

**இவர்தான் அவர்!**

(104ம் பக்கப் புதிருக்கு விடை)

(இ) மலேசியா பிரதமர் பாருக் ஹுஸேன் ஆன் ?





உண்மையான
பெரிய மனிதனுக்கு
முதல் அடையாளம்
பணிவு என்று
நான் நம்புகிறேன்—
— ரஸ்கின்
— சக்திகமலே





''இப்பவாவது என்னைப் புரிந்து கொண்டாயா, சரியானபடி?''

''உன் யோசனைக்கும் ஒரு படி மேலே போய், அவரிடம் புஷ்பாவை வந்து பார்க்குமாறு மன்றாடப் போகிறேன் நான். அவ அடுத்தவாரம் ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழையு முன்னர் பெற்றோரை ஒருதரம் பார்க்க நான் வழி செய்தால், புஷ்பா என் கரிசனத்தை எண்ணி ரொம்பச் சந்தோஷப் படுவாள்.''

''அதுதான் சரி'' என்ற சிவசாம்பன் ஆட்டோ ஒன்றைக் கைதட்டி அழைத்தான். ''மாற்றுடை எடுத்துக்காட்டாலும் பாதகமில்லே. நேரே ஸ்டேஷனுக்குப் போ!''

''சிவா! அப்ப நீதான் எனக்கு இரண்டு ஹெல்ப் பண்ணனும். நாளைக்காலே என் ஆஃபீஸில் எனக்காக லீவு சொல்லணும். அப்புறம் நாளை சாயந்திரம் புஷ்பா என்னை எதிர்பார்த்திருப்பாள். அவளிடம் போய் நான் மதுரை சென்றிருப்பதைத் தெரியப் படுத்தி மறுநாளே வந்துடுவேன்னு சொல்லணும்.''

''பேஷா! அதையெல்லாம் நான் கவனிச்சுக்கறேன்'' என்முன் சிவசாம்பன். ''ஒரு லீவு லெட்டர்மட்டும் கிறுக்கிக் கொடுத்துடு.''

அங்கேயே ஒரு விளக்கொளியில் அதைச் செய்துவிட்டு ஆட்டோவில் ஏறினுன் அர்த்தநாரி. ''எக்மோருக்கு விடுப்பா சீக்கிரம்!''

அவனை முதலில் இன்னுரென்றே புரிந்து கொள்ளாத தேவராஜன் அடையாளம் கண்டு கொண்ட பிறகும் வீட்டுக்குள்ளேயே நுழைய விடவில்லை! வாசல்படிகளில் மேல் படியில் தாம் நின்று, அவனைப் போர்ட்டிகோவுக்கு வெளியே நிற்கவைத்துப் பேசினுர்.

புஷ்பாவுக்குக் கான்ஸர் என்றபோது ஏற்பட்ட அதிர்ச்சியைவிட தேவராஜன் தன்னை நடத்துகிற விதம் பெரியஅதிர்ச்சியைத் தந்தது அர்த்தநாரிக்கு. ஆனுல் அதிர்ச்சிகள் அத்துடன் முடிந்துவிடவில்லை. பாக்கியிருந்தன! அவன் எதற்கு வந்திருக்கிறுன் என்பது புரிந்ததும், ''அதற்கென்ன?'' என்முர் தேவராஜன். ''உலகில் எத்தனையோ பேர் கான்ஸர் வந்து அவதிப்படுகிறுர்கள். என்னைப் பொறுத்தமட்டில் புஷ்பா அவர்களில் ஒருத்திதான்!''

''அவள் உங்க மகள் ஸார்'' என்முன் அர்த்தநாரி.

''யார் சொன்னது? அவளுக்கும் எனக்கும் எப்பவோ தொடர்பு விட்டுப் போச்சு. அவள் எவனே ஒரு விடலைப் பயலைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு ஒற்றைக்காலில் நின்னுள். அப்பவே உறவைக் கத்தரிச்சுட்டேன். இனிமே ஒட்டாது.''

'இப்படிப்பட்ட கல் நெஞ்சக்காரரும் உலகில் இருக்க முடியுமா?'' என்று அதிசயித்தான் அர்த்தநாரி. 'இந்த எஃகு இதயத்துக்கா ஹார்ட் அட்டாக் வந்தது!'

''சே! நீயும் ஒரு மனுஷனு? உனக்கு ஹார்ட் அட்டாக் என்று தந்தி கிடைச்சதும் அரக்கப் பறக்க ஓடிவந்தாளே, புஷ்பா! அவளைத்தான் நொந்துக்கணும்; உன்னைச் சொல்லிப் பயன் என்ன?''

''என்னடா உளர்றே'' என்முர் தேவராஜன். ''ஹார்ட் அட்டாக்காவது, தந்தியாவது? ஸ்டீம் ரோலர்மாதிரி 'கிண்'ணுனு இருக்கேன் நான். மறுபடியும் ஏதாவது கதை விட்டாயோ, கூர்க்காவைத்தான் கூப்பிடணும். போ! போ! கிளம்பு!''

அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாக அடைந்த அர்த்தநாரி, பொறுக்க முடியாத அவமானத்தையும் அத்துடன் சுமந்தவனுகத் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு திரும்பி, தள்ளாடி நடந்தான். அன்று பகல் பொழுது முழுவதும் பித்துப் பிடித்தவன் போல மதுரை நகர வீதிகளை அவன் கால்களால் அளந்து கொண்டிருந்தான்.

## 17

''நீ பாட்டுக்கு பம்பாய் போயிட்டே! நீ கிளம்பியதற்கு மறுநாள் மானேஜரும் லீவு போட்டுட்டுப் புறப்பட்டு விட்டார்.''

—காரியாலயத்தில் சகஊழியர் கூறியது.

''ஏம்பா, நீ கிளம்பின மறுநாள் உன் மனைவியும் அவசரம் அவசரமா ஒரு ஸூட்கேஸை எடுத்துண்டு புறப்பட்டுப் போனுளே? அவள் சென்ற காரியமும் வெற்றிதானு? அவளுக்கும் பிரமோஷன் கிடைச்சுடுமா?''

—பக்கத்துப் போர்ஷன் சிவசாம்பன் கேட்டது.

''அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக்னு தம்பி ஆபீஸ் விலாசத்துக்குத் தந்தி கொடுத்திருந்தான்...''

—புஷ்பாவின் சமாதானம்.

''ஹார்ட் அட்டாக்காவது, தந்தியாவது? என்னடா உளறுகிறுய்?''

—தேவராஜனின் கோபம்.

''உன்னை மறுபடியும் கங்கிராஜுலேட் பண்ணனும் போலிருக்கே. உன் பிரமோஷனை உறுதிப்படுத்தி இப்பத்தான் டெலக்ஸ் செய்தி வந்தது.'' — மதனன் கூற்று.

இதயத்தில் திரும்பத் திரும்ப ஒலித்த இந்தக் குரல்கள் அர்த்தநாரியை உக்கிரமான வெய்யிலுக்கும் அதிகமாக வாட்டி வதைத்தன.

புஷ்பா தன்னை வஞ்சித்துவிட்டாள் என்பதில் அவனுக்கு லவலேசமும் சந்தேகமிருக்கவில்லை. எங்கே போகிறேம், என்ன செய்கிறேம் என்பதொன்றும் புரியாமலேயே

அவன் அழகர்மலைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் சென்றான். மாரியம்மான் கோயிலில் பெரிய தெப்பக் குளத்தைப் பார்த்தான். மாலை நேரமான போது மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்துக்கு வந்து சேர்ந்தான். போன இடங்களிலெல்லாம் சுவாமி தரிசனம் செய்தது, தீபாராதனையைப் பார்த்தது, கன்னத்தில் போட்டுக் கொண்டது அனைத்தும் ஏதோ லயிப்பின்றி நடந்தன.

ஒரு டூரிஸ்டு தம்பதி மீனாட்சி திருக்கல்யாணச் சிற்பத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அருகே ஒரு கைடு.

''எஸ், எஸ், பியூட்டிஃபுல்'' என்று ரசித்தனர், அமெரிக்கத் தம்பதி. கணவன் கேட்டான்:

''பட் டெல் மி, வாட் இஸ் தி மீனிங் ஆஃப் அர்த்தநாரி?''

சரேலென்று நிமிர்ந்தான் அர்த்தநாரி. அலைபாய்ந்து கொண்டிருந்த மனம் எப்படியோ கணநேரத்தில் ஒருமுகப்பட்டது.

''ஹாஃப் மேன், ஹாஃப் உமன்'' என்றான் கைடு.

''யெஸ் வெரி பெக்யூலியர் காட். பட் வாட் இஸ் தி ஸிக்னிஃபிகன்ஸ்?'' என்று அமெரிக்க மாது கேட்டாள்.

அர்த்தநாரியின் கவனமெல்லாம் இப்போது அந்த அமெரிக்கத் தம்பதியிடமே இருந்தது.

''ஸிவா அண்டு பார்வதி கம்பைன்டு இன்டு ஒன்'' என்றார் கைடு.

அந்த வழிகாட்டி அர்த்தநாரி தத்துவத்தை அறிந்திருக்கவில்லை என்பது தெளிவு. தான் குறுக்கே புகலாமா? தவறாக எண்ணுவார்களோ?

''மே ஐ ட்ரை டு எக்ஸ்ப்ளெய்ன்?'' என்று அனுமதி கேட்டான்.

''பிளீஸ் டு! தாங்க்யூ!''

முன்பு புஷ்பா தன்னிடம் விவரித்ததையெல்லாம் இப்போது அவர்களிடம் திருப்பிச் சொன்னான். ஆங்கிலத்தில் பேசினான் என்பது மட்டுமே வித்தியாசம். பேசப்பேச அதெல்லாம் சத்தியம் என்பது அர்த்தநாரிக்குத்தெரிந்தது. எதையெல்லாம் புஷ்பா கூறியபோது ஏற்கப் பிடிவாதமாக மறுத்தானோ அந்த விளக்கங்களையே இப்போது பேருண்மைகளென அந்த அமெரிக்கர்களிடம் அவனே கூறிக் கொண்டிருந்தான். இது அவனுக்கே வியப்பாயிருந்தது. என்றாலும் நிறுத்தாமல் பேசினான். அவனுடைய சொந்தக் குதர்க்க வாதங்கள் எட்டிப்பார்க்கவே யில்லை அங்கே.

''அர்த்தநாரி என்பது சிருஷ்டி தத்துவம். உலகின் ஜீவராசிகள் அழிந்து படாதிருக்க சிருஷ்டி வேகத்தை அவர்களிடம் உருவாக்கியுள்ளான் இறைவன். ஆயின் இந்த லோகத்தை மட்டுமின்றி சூரிய மண்டலத்தை மட்டுமின்றி கோடானுகோடி சூரியன்களையும் அவற்றைச் சுற்றிவரும் கிரகங்களையும், அதாவது அண்டசராசரத்தையே படைக்க ஆதிசிவனும் ஆதிபராசக்தியும் இணை சேர்ந்ததையே அர்த்தநாரி உருவமாகப்பார்க்கிறோம். சிருஷ்டி தத்துவம் என்பது பிரஜோற்பத்தி மட்டுமல்ல, கலைகள், இலக்கியங்கள், விஞ்ஞான ரீதியான கண்டுபிடிப்புக்கள் முதலிய சகலத்திலும் சிருஷ்டி தத்துவத்தைக் காண்கிறோம். அர்த்தநாரி இவை அனைத்துக்கும் உருவகமாக அமைகிறது. அந்த வடிவின் ஒரு பகுதி காரணம் எனில் மற்றது காரியம்; ஒன்று பிரமாணம் மற்றது பிரமேயம்; ஒன்று சொல் மற்றது அர்த்தம்; ஒன்று சிந்தனை மற்றது செயல்; ஒன்று பொருள் மற்றது அதன் தன்மை; ஒன்று யதார்த்தம் மற்றது அதன் பரிமாணம். இவற்றை ஒன்றிலிருந்து ஒன்று எப்படிப் பிரிக்க முடியாதோ அதுபோல் சக்தியைச் சிவனிடமிருந்து பிரிக்க முடியாது!''

''அற்புதம் அற்புதம்'' என்று வியந்தனர் அந்த அமெரிக்கத் தம்பதி. ''எவ்வளவு உயர்வான கருத்துக்கள்!''

''ஆதி சங்கரர் என்ன சொல்கிறார் தெரியுமா!'' என்று கேட்டுவிட்டுத் தொடர்ந்தான் அர்த்தநாரி: ''சிவபெருமானின் இயக்கச் சக்தி மட்டுமின்றி அவரது பேரழகு, நல் அருள், கீர்த்தி முதலிய அனைத்துக்கும் அவனில் ஒருபாகமாக விளங்கும் உமைதான் காரணம் என்கிறார். அர்த்தநாரி வடிவில் நடனத் தோற்றமும் உண்டு. ருத்திர மூர்த்தியைத் தனியே விட்டால் அவன் கோர தாண்டவத்தை அகிலம் தாங்காது. எனவே பராசக்தி லாஸ்யமாக, நளினமாக அவனுடன் இணைந்து ஆடுகிறாளாம்!''

இதையெல்லாம் கூறி வருகையிலேயே அர்த்தநாரிக்குக் கண்களில் நீர் தளும்பிவிட்டது. 'நாம் இங்கு வந்த சமயம் பார்த்து இந்த அமெரிக்கத் தம்பதி இங்கு வருவானேன்? அர்த்தநாரி வடிவம் பற்றி விளக்குமாறு








கேட்பானேன்?' அவன் கண்ணீர் வடிப்பதை அவர்கள் கவனித்துப் பிரமித்தனர். அவர்களை மேலும் சங்கடத்தில் ஆழ்த்த விரும்பாமல் திரும்பி நடந்தான்.

''நில்லுங்கள்! இத்தனை அழகாகப் பேசிய உங்கள் பெயரையாவது நாங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

''என் பெயரும் அர்த்தநாரிதான்!'' நாத் தழுதழுக்கத் திரும்பிப் பாராமலேயே கூறி விட்டு விரைந்தான் அவன். 'பெயர் அமைந்து என்ன பயன்? அதனுள் பொதிந்திருக்கும் உயர்ந்த கருத்துக்களைப் புரிந்து கொள்ள மூடப் பிடிவாதத்தினால் மறுத்து விட்டேன். புஷ்பாவை மதிக்காததோடு, அவளை இழிவு படுத்திச் சாக்கடையில் புரட்டி எடுத்து விட்டேன். அவள் தவறிழைத்து விட்டாள் என்றால் அதற்குக் காரணம் நான்தானே? காரணம் மோசமான போது காரியமும் கெட்டு விட்டால் வியப்பென்ன? எய்தவ னிருக்க அம்பை நொந்து என்ன பயன்? அவ ளுடைய உணர்ச்சிகளையும் தனித்தன்மை களையும் பெண்மையையும் மதித்துச் சம உரிமை கொடுத்துக் கௌரவமாக நடத்தி யிருந்தால், என் வாழ்க்கை எவ்வளவு இன்ப மயமாய் இருந்திருக்கும்?''

கடந்த விநாடி வரை எதிர்காலம் சூன்ய மாக, என்ன செய்கிறோம், செய்யப் போகி றோம் என்றே புரியாமலிருந்தது அர்த்த நாரிக்கு. இப்போது அந்நிலை மாறி, இந்த விநாடியே புஷ்பாவைப் பார்க்க வேண்டும், அவளிடம் மன்னிப்புக் கோர வேண்டும் என்று துடித்தது அவன் மனம். கைக்கடிகாரத்தை நோட்டம் விட்டுவிட்டு ஸ்டேஷனுக்கு விரைந் தான் அவன்.

## 18

கணவனிடமிருந்து புதிதாகக் கிடைத்த அன்பு, அனுதாபம் ஆகியவற்றால் ஆனந்த மடைந்திருந்த புஷ்பா, தன் மனத்தைப் புரிந்து கொள்ளவும் உணர்ச்சிகளுக்கு மதிப் பளிக்கவும் அர்த்தநாரி முன்வருகிறான் என்ப தால் பேருவகையுற்றிருந்தாள். அதே நேரத் தில் தான் கறை பட்டவள் என்பதால் ஏற் பட்ட துயரமும் அவளை வருத்தியது. இரண் டும் இரு எல்லைகள். அவற்றுக்கிடையில் ஊசலாடிக் கொண்டிருந்தது அவள் மனம்.

'அவர் உள்ளத்தில் ஏற்பட்டுள்ள ஆரோக் கியமான மாறுதலை மேலும் கொஞ்சம் ஸ்திரப்படுத்திக் கொண்டு பிறகு தன்னைப் பற்றிய உண்மையைக் கூறி அவரிடம் மன் னிப்புக் கேட்டுவிட வேண்டியதுதான். நடந் ததையெலலாம் சொல்லி மன்னிப்பையும் பெற்று விட்டால் தான் தன் எதிர்கால வாழ்க்கை நிம்மதி நிறைந்ததாய் இருக்கும்!''

அர்த்தநாரி முன் தரையில் விழுந்து அவன் பாதங்களைப் பற்றி நமஸ்கரிப்பது போல அவன் மனத்திரையில் கண்டாள். ''நீங்கள் உங்கள் சுயநலத்துக்கு என்னைக் கருவியாகப் பயன்படுத்திக் கொண்டது எனக்குப் பிடிக்கவில்லை. பழி வாங்குவது போல் நடந்து கொண்டு விட்டேன். எனக்கு மன்னிப்பு உண்டா?'' கேட்கிறாள். அவன் சற்றே சோகத்துடன், ''நீ சற்றும் விரும்பாம லேயே சந்தர்ப்பச் சூழ்லால் நேர்ந்து விட்ட காரியத்துக்கு நீ எப்படிப் பொறுப்பாக முடியும்? புஷ்பா! எழுந்திரு. நடந்து போன தற்கு நானும் காரணம் தானே? என் லட்சியம் சரியானதாய் இருந்தாலும் அதை அடைய நான் மேற்கொண்ட மார்க்கம் தப்பிதமானது தான். அதையெல்லாம் ஒரு கெட்ட சொப் பனமாக எண்ணி மறந்து விடுவோம். இனி ஒருவரையொருவர் மதித்து, புதுவாழ்வு தொடங்குவோம்'' என்று கூறுகிறான்.

இத்தகைய நம்பிக்கையூட்டும் கற்பனைகளுக் கிடையில், அர்த்தநாரியின் வரவை ஆவ லுடன் எதிர்பார்த்திருந்தாள் புஷ்பா. ஆனால் அவன் வரவில்லை. அவனுக்குப் பதில் முன்பு அவர்கள் ஜாகையிருந்த வீட்டில் பக்கத்துப் போர்ஷனில் குடியிருந்த சிவசாம்பன்தான் வந்தார். அரை டஜன் பழத்தையும் ஒரு ஹார்லிக்ஸ் பாட்டிலையும் அவள் கட்டிலுக்கு பக்கத்திலிருந்த மேஜையின்மீது வைத்தார். ''சத்துள்ள ஆகாரமாகச் சாப்பிட்டு உடம்பைத் தெம்பாக வைச்சுக்கணும் நீங்க'' என்றார். ''கவலையே படாதிங்க எல்லாம் சரி சரியாப் போயிடும்.''

''என் ஹஸ்பெண்டைப் பார்த்தீர்களா? நான் இங்கே இருக்கிறது உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''அர்த்தநாரிதான் சொன்னான்: அவன் தான் என்னை இங்கே அனுப்பி வைச்சான்.''

''அவர் எங்கே?'' திடுபென்று இதயத்தில் ஒரு கலவரம் புகுந்தது. கண்களில் பயம் தெரிந்தது.

''மதுரை போயிருக்கான்; உங்க பெற்றோ ரிடம் விஷயத்தைத் தெரியப்படுத்த வேண் டியது அவன் கடமை என்று நான்தான் அவ னுக்குச் சொல்லி அனுப்பி வைச்சேன். இல் லாட்டா அவனுக்குத் தோன்றியே இராது! நாளைக் காலை சென்னை திரும்பிடுவான். ஆபீ ஸுக்குப் போயிட்டு, சாயந்திரம் இங்கே வருவான். 'புஷ்பா என்னை எதிர்பார்த் திருப்பா, நீ போய் விஷயத்தைச் சொல்லி டு'ன்னான். புறப்பட்டு வந்தேன்.''

''மதுரைக்கா!'' என்றாள் புஷ்பா! பீதி நிரம்பிய குரலில். ''என் அப்பாவிடம் சொல் லவா?'' எதிர்காலம் பற்றி சற்றுமுன் கட்டிய கோட்டைகளெல்லாம் சரிந்துவிழ, திகைத் தாள். புற்றுநோய் முற்றிப்போனால் தாங்க முடியாமல் வலிக்குமாமே? அது இதைவிட வேதனை மிக்கதாகவா இருக்கும்?'

''ஆமாம் புஷ்பா'' என்று தொடங்கி, தான் செய்த சாமர்த்தியமான காரியம் பற்றி அளந்து கொட்டினார் சிவசாம்பன், அவள் சந்தோஷப்படுவாள் என்றெண்ணி.

''ரொம்ப நன்றி'' என்று கூறும் போதே அவள் உள்ளம் அழுதது. அவர் விடைபெற்றுச் சென்ற பிறகு கண்களும் அழுதன. அர்த்த நாரியின் அன்பு உறுதிப்பட்ட பின்னர், தானாகவே அவனிடம் தவற்றை ஒப்புக் கொண்டு, அவன் மன்னிப்பையும் கோரிப் பெற்று விடுவது சாத்தியமாய் இருந்திருக்க லாம். ஆனால் இப்போது அவன், புஷ்பா செய்த குற்றத்தை அவள் தகப்பனாரிடம் உரையாடும்போது தானாகவே அறிந்து கொண்டுவிடப் போகிறான். பேரதிர்ச்சியும் பெருத்த அவமானமும் வஞ்சிக்கப்பட்டு

விட்டதாகக் கோபமும் கொண்டு திரும்பி வரும்போது, அவனைச் சமாதானப்படுத்துவது சாத்தியமேயில்லை. ஒரு வேளை தன் முகத்தில் விழிக்க விரும்பாமல் திரும்பி வராமலேயே இருந்துவிடலாம்!



இப்போது அவள் இதயத்தில் பீதியை அதிகரிப்பதுபோல் வேறுவிதமான கற்பனைகள் எழுந்தன. ஒருசமயம் அர்த்தநாரி திரும்பி வராமலேயே இருந்து, தான் உலகில் தன்னந்தனியே விடப்படுவது போல் மனவெளித் தோற்றம். இன்னொரு சமயம் திரும்பிவந்து தன்னை, 'பாபி, சண்டாளி, வேசி' என்று வாயில் வந்தபடியெல்லாம் திட்டுவதுபோன்ற தோற்றம். ''கிடைத்த முதல் சந்தர்ப்பத்தில் உன் பெற்றோரை விட்டுவிட்டு என்னுடன் சென்னைக்கு ஓடிவந்தாய். அடுத்துக் கிடைத்த முதல் சந்தர்ப்பத்தில் என்னை விட்டுவிட்டு மதனனுடன் பெங்களூருக்கு ஓடினாய்! சீச்சீ! நீ செய்த அக்கிரமத்தை கடவுளாலேயே பொறுக்க முடியாமல்தான் உனக்கு இந்தப் பெரிய வியாதியைக் கொடுத்திருக்கிறார். இந்த ஆபரேஷனிலிருந்து நீ மீண்டும் வராமல் செத்து ஒழிந்து போ'' என்று சத்தம் போடுகிறான்.

'நான் சாகிறேன், ஒழிந்து போகிறேன்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள் புஷ்பா. 'ஆபரேஷன் நடக்கும்வரை காத்திருப்பானேன்? இப்போதே தற்கொலை செய்துகொண்டு விடுகிறேன். அர்த்தநாரி முகத்தில் விழிக்க இனி என்னால் முடியாது. அதோடு, என் வாழ்க்கை சர்வநாசமானதற்குக்காரணமான மதனனையும் சும்மாவிட முடியாது. என்னுடைய தற்கொலைக்கு முன்பு மதனனை இந்த உலகிலிருந்து ஒழித்துக் கட்டிவிடவேண்டும். எனக்கு நேர்ந்தது போன்ற துன்பம் அவனால் வேறு எந்தப் பெண்ணுக்கும் இனியேனும் நேராமல் காப்பாற்றியவளாவேன். அந்த ஒரு நல்ல காரியத்தையாவது செய்துவிட்டு நான் நிம்மதியாகச் சாகிறேன்.'

நேரமாக, ஆக, புஷ்பாவின் இந்த எண்ணங்கள் திரும்பத் திரும்பத் தோன்றி உறுதி பெற்றன. இரவு பத்தரை மணி சுமாருக்கு, இரவு விளக்கின் மங்கலான ஒளியில், டியூட்டியிலிருந்த நர்ஸின் தலை மெல்ல ஆடுகிறதைப் பார்த்தாள் புஷ்பா. 'பர்வம், பகலில் தூங்க முடியாமல் என்ன காரியம் இருந்ததோ? எனக்கு வசதியாயிற்று. அவள் மெல்லக் கட்டிலிலிருந்து இறங்கி நடந்தாள். வார்டிலிருந்த வேறுசிலர் நோய் முற்றியநிலையில் வலி தெரியாதிருக்க மயக்க மருந்து உண்டு தூங்கிக் கொண்டிருந்தார்கள். வேறுசிலர் இயற்கையான உறக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். விழித்திருந்த ஓரிருவர் புஷ்பா பாத்ரூமுக்குப் போவதாகத்தான் நினைத்தனர்.

புஷ்பா மாடிப்படிகளை அடைய நடக்கையில் ஒரு திருப்பத்துக்கு அப்பால் ''ஆப்பரேஷன் தியேட்டர்'' என்ற அறிவிப்பை ஓர் அறையின் வாசலில் பார்த்தாள். இதயம் 'திக்திக்' கென்று அடித்துக் கொள்ளக் கதவைத் திறக்க முயன்றாள். திறந்து கொண்டு விட்டது! உள்ளே சென்றாள், ''நோ அட்மிஷன்'' என்ற எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல், விளக்கைப் பொருத்தி விட்டுக் கதவைச் சாத்தினாள். சிறிய முன் அறையைக் கடந்து போனால் ஒருபக்கம் ஆப்பரேஷன் மேஜையும் இன்னொரு பக்கம் டாக்டர்கள் கைகழுவும் அறையும் இருந்தன. ஒரு மூலையிலிருந்த கண்ணாடி அலமாரியினுள்ளே ஷெல்புகளில் கூரிய கத்திகள், கத்தரிக்கோல்கள் இதர பல சஸ்திர சிக்கிச்சைக்கான உபகரணங்கள் பளபளத்தன. அலமாரியின்மீது ''சர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ்'' என்று தேவையற்ற ஓர் அறிவிப்பு எழுதப்பட்டிருந்தது. புஷ்பா அதை நெருங்கினாள், காந்தத்தால் கவர்ந்து இழுக்கப்படும் இரும்புபோல். பூட்டு தொங்கியது. இதயம் 'திக்திக்'கென அடித்துக் கொள்ள அதைத் தொட்டாள். இழுத்தாள், பயனில்லை.

திடுமென ஓர் ஆவேச வெறி உந்த அவள் கண்ணாடியை ஒரு குத்து விட்டாள். கலகலவென்ற சத்தத்துடன் கண்ணாடி பொலபொலவென்று உதிர்ந்தது. கண்ணாடி கீறியதில் ரத்தம் 'குபுக்' கென்று பொங்கியது. எரிச்சல், வலியைப் பொருட்படுத்தாமல் புஷ்பா பிடிமானமுள்ள கத்தி ஒன்றை எடுத்துக் கொண்டாள். புடைவைத் தலைப்பை முன்னால் இழுத்துச் செருகிக் கொண்டு அதில் கீறல் விழுந்த கரத்தையும் கத்தியையும் மறைத்துக்கொண்டாள். அறை வாசலுக்குச் சென்றாள்.

சத்தம் கேட்டுவிட்டு யாராவது வருகிறார்களா என்று பார்க்கச் செவிகளைக் கூர்மையாக்கித் தயங்கிக் காத்திருந்தாள். நடமாட்டம் ஏதுமில்லை. மெல்லக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். மாடிப்படிகளை அடைந்து கீழே இறங்கி நிழலில் பதுங்கி நடந்தாள். கேட்டில் ஒரு காவல்காரன் இருந்தான். இவனைக் கடந்து எப்படிச் செல்லப் போகிறோம்? என்று அவள் தயங்கித் தோட்டத்தில் ஒளிந்திருக்கையில், ''ஆறுமுகம்!'' என வாசலுக்கு வந்து ஒரு நர்ஸ் கூப்பிட்டாள். ''டீ ரெடி!''

அவன் டீ அருந்தக் கட்டட வாசலை நோக்கி நடந்தான். அவன் தலைமறைந்த மறுகணம், புஷ்பா பாய்ந்தாள், பூனை போல. விடுவிடுவென்று ஏணி ஏறுவது போல் கேட்டின் மீது ஏறி, மறு பக்கம் இறங்கி வேகமாய் நடந்து விட்டாள். அரைமைல் கடந்தபிறகு, டெலிஃபோன் பூத் ஒன்று கண்ணில் தட்டுப்பட்டது.

மதனன் வீட்டில் ஃபோன் அடித்தது. யாரும் எடுக்கவில்லை. சற்று நேரத்துக்குப் பின் பெருத்த ஏமாற்றத்துடன் ஃபோனை அவள் வைக்கப் போன சமயம், ''ஹலோ'' என்று மதனனின் தூங்கி வழியும் குரல் ஒலித்தது. அவசரம் அவசரமாகக் காசைப் போட்டு இணைப்பை ஏற்படுத்தினாள். ''புஷ்பா பேசறேன்!''

''யாரு?''

''புஷ்பா, மதனன்! என்ன குடிச்சிருக்கியா? என்னைத் தெரியலே? புஷ்பா!''

''ஆமாம்... இல்லே... நீ ஆஸ்பத்திரியில் இருப்பதாகக் கேள்விப்பட்டேனே?''

''ஆமாம், மதனன். எனக்கு அடுத்தவாரம் ஆபரேஷன் பண்றுங்க. நான் அதிலிருந்து மீண்டு வருவேனே என்னமோ தெரியாது. அதுக்கு முன்னடி உன்னைத் தனியா ஒருதரம் எனக்குக் கண்டிப்பா பார்க்கணும், பிளீஸ்!''

போதையோடுகூட கர்வமும், தலைக்கேறிய மதனனுக்கு, 'என்னைப் பார்க்க விரும்புகிருள், தனியாக... அதற்கு என்ன அர்த்தம்?'

''உன் ஹஸ்பண்டு...?''

''அவர் மதுரை போயிருக்கிருர்...''

''என்ன மதுரையா? லீவு எழுதி அனுப்பினுனேயொழிய மதுரை போவதாகச் சொல்லலியே?''

''அங்கேதான் போயிருக்கார். அங்கே அவருக்கு விஷயம் புரிஞ்சுடும். வெறுப்படைந்து திரும்பி வராமலே இருந்து விடலாம். அப்படியே சென்னை திரும்பினுலும் என்னை ஏற்றுக்கொள்வாரோ, மாட்டாரரோ? நான் நிராதரவா, நிர்க்கதியா விடப்பட்டால் அதிசயமில்லே, மதனன்.''

''த்செள, த்செள.''

''அதைப்பற்றி நான் கவலைப்படவும் இல்லே. ஏன்ன, இந்தக் கான்ஸரின் பிடியிலிருந்து தப்பிப் பிழைக்கப் போகிறேன்கிற நம்பிக்கை எனக்கு இல்லே.''

''நான் இப்ப என்ன பண்ணனும்கிறே?''

''ஒரே ஒருதரம் உன்னைப் பார்க்கணும்! என் மரணகால விருப்பம்னு வைச்சுக் கோயேன்.''

''சரி, வா!''

''எங்கே வீட்டுக்கா? ஜ்வாலாவுக்கா?''

''வீட்டுக்கே வரலாம், தைரியமா. என்னைத் தவிர ஃபாமிலியிலே எல்லாரும் ஒரு கல்யாணத்துக்காகப் போயிருக்காங்க. இங்கே யாருமில்லே. நாட் ஈவன் எ ஸர்வண்ட். உன் அதிர்ஷ்டம்!''

''அதிர்ஷ்டம்தான். நான் எப்படி வரது?'' என்று கேட்டாள். ''டாக்ஸி, ஆட்டோ, பஸ் ஒன்றுமே கிடைக்காதே இந்த நேரத்தில்.''

---

நிதானம், நீதி, வீரம்,
பெருந்தன்மை,
உண்மை இவைகள்
நம் ஆன்மாவின்
அணிகலன்கள்
— பிளாட்டோ
— சந்திரமதி

''நீ எங்கே இருக்கே?''

''அடையாறு, திருவிக பாலம் தாண்டி, ஆந்திர மஹிள சபாப் பக்கம் நடந்து வந்து நிற்கிறேன்.''

''சரி நான் காரில் வந்து பிக்கப் பண்ணிக் கறேன்.''

அவள் காத்திருந்தாள். . ஸான்தோமிலிருந்து அவன் வந்து அழைத்துப் போனுன். வீட்டை அடைந்ததும் ''நெஸ்கேஃப் சாப்பிடறியா? பௌடர் மில்க் போட்டுத்தரேன்'' என்று கேட்டு மின்சாரக் கெட்டிலில் நீர் நிரப்பி இணைப்புக் கொடுத்தான். தனக்கு விஸ்கி ஊற்றிக் கொண்டான்.

''புஷ்பா! இப்படிப் பிரமை பிடிச்ச மாதிரி நீ உட்கார்ந்திருந்தால் என்ன அர்த்தம். என்ன பிரயோஜனம்? மனம்விட்டுச் சற்றுநேரம் பேசு, ஆறுதலாயிருக்கும். அப்புறம் படுத்துத் தூங்கு. நாளை அதிகாலையில் மறுபடியும் ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் விட்டுடறேன். ஒருத்தரும் கவனிக்க மாட்டாங்க. நீ பாட்டுக்கு வார்டுக்குப் போயிடு.''

அவன் விஸ்கியை உறிஞ்சியபடியே அவளைப் பார்த்தான். நேரே ஆஸ்பத்திரியிலிருந்து தான் வருகிருள் என்றுலும், புற்று நோயினுல் அவதிப்படுகிருள் என்றுலும், எத்தனை அழகாக இருக்கிருள்! நீண்ட இடைவெளிக்குப் பிறகு இவளைப் பார்க்கும்போது சுவாரசியம் தட்டுகிறதே!

அவன் கண்களில் காம இச்சையை அடையாளம் கண்டுகொண்டாள் அவள். அது தோன்றவே அந்நேரம்வரை காத்திருந்தவள் போல, இடுப்பில் இழுத்துச் செருகி யிருந்த புடைவைத் தலைப்பைத் தளர்த்தினுள். மறைந்திருந்த கரம், ரத்தச் சிவப்பான கிரேஹுடன் வெளிப்பட்டது: கத்தி பளபளத்தது.

''என்ன புஷ்பா இது?'' அவன் கலக்கத்துடன் கேட்டான்.

''தெரியலே? கத்தி! எனக்கு ஆபரேஷன் பண்ண இதுமாதிரி கத்திதான் உபயோகிப்பாங்க!''

''எ... எதுக்கு?''

''உன்னைக் கொல்ல! எமலோகத்தில் எனக்குத் துணை வேண்டாமா? நரகத்தில் நான் தண்டனை பெறும்போது நீயும் சித்திரவதைகளை அனுபவிக்க வேண்டாமா?''

அவன் ஒரேயடியாகப் பயந்து போனுன். நாக்குளற, ''புஷ்பா! நீ செய்யப் போகும் காரியத்தின் பின் விளைவுகளை யோசித்தாயா? கொலை புஷ்பா! இதற்கு மரண தண்டனை உண்டு!'' என்றுன்.

''நோயினுலோ அல்லது அதுக்காக நடக்கப் போகும் ஆபரேஷனினுலோ நிச்சயமா சாகப் போகிற எனக்கு மரணதண்டனை பற்றி என்ன கவலே? அப்படியே நோயிலிருந்து தப்பிப் பிழைத்தாலும் நான் வாழ்க்கையில் என்ன சுகத்தைக் காணப் போகிறேன்? அதைவிடத் தூக்கிலே தொங்குவதே மேல்.''

அவனுக்கு 'திக்திக்'கென்றிருந்தது. 'மரண தாகம் பயங்கரமானது என்பார்களே? இவளுடைய மரணதாகம் என் ரத்தத்தைக் குடித்தால்தான் அடங்குமா?''

அவள் கத்தியை ஓங்கினுள்.

''புஷ்பா! வேண்டாம், வேண்டாம்!'' என்று பின்னுல் நகர்ந்தான். குடித்திருந்த

அவனால் உடல் அவயவங்களைத் திறம்பட இயக்கமுடியவில்லை. பீதியும் சேர்ந்துகொள்ளத் தடுமாறினான்.

பயங்கரமாக விழிகளை உருட்டி நோக்கியபடி அவனை நெருங்கினாள். அவளைப் பார்த்தால் ஏதோ அதிகார வடிவெடுத்த காளி மாதிரி இருந்தது அவனுக்கு. மரண பீதி அவனை ஆட்கொண்டது. ஏதோ நெஞ்சை வந்து அடைத்தது. 'சுரீர்' என்று தோளில் வலி தெறித்தது. அவன் சுருண்டு விழுந்தான்.

கத்தி பாயு முன்பே சரிந்துவிட்ட அவனைப் புஷ்பா வியப்புடன் பார்த்தாள். பக்கத்தில் அமர்ந்து கவனித்தாள். மூச்சில்லை. நெஞ்சில் கைவைத்துப் பார்த்தாள். இதயத் துடிப்பு இல்லவே இல்லை! மாரடைப்பினால் மதனன் இறந்து விட்டான்!

புஷ்பா மெல்ல எழுந்தாள். தலையை உலுப்பி, கவிந்து வந்த இருளை விரட்டினாள். 'இப்போது என்ன செய்ய? நான் நினைத்த இரண்டு காரியங்களுள் ஒன்று என்னுடைய முயற்சி இன்றியே நிறைவேறி விட்டது! நான் கொலை புரிவதற்கு அவசியமின்றி அவனே செத்து விழுந்து விட்டான். அடுத்தது பாக்கியிருக்கும் காரியம் தற்கொலைதான். இங்கேயே நான் சாகக்கூடாது. அப்படி செய்தால் மதனனுக்கும் எனக்கும் முடிச்சுப் போட்டுச் செய்தி வெளியாகும். அந்த அசிங்கத்தைத் தவிர்க்க, வீடு திரும்பி அங்கே உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டியதுதான். நான் இங்கு வந்திருந்ததாகவே யாரும் சந்தேகிக்கக் கூடாது. மின்சாரக் கெட்டிலை நிறுத்தி விடவேண்டும். தண்ணீரைக் கொட்டிவிட வேண்டும்., காப்பி கோப்பைகளை உள்ளே வைத்து விடலாம். நெஸ்கஃபே டப்பா, பால் பவுடர் டின் எல்லாம் அதனதன் இடத்தில். எதிலும் விரல் ரேகை படியாமல் புடைவைத் தலைப்பைக் கையில் சுற்றிக் கொள்ளலாம். மதுக்கோப்பை, பாட்டில் அப்படியே இருக்கலாம். விளக்கு எரியலாம். கார் ஷெட்டில்தான் இருக்கிறது...'

புஷ்பா மதனன் வீட்டை விட்டு வெளியேறி நடந்தாள். கணவன், மனைவி இருவரும் ஆபீஸ் சென்று உத்தியோகம் பார்ப்பவர்களாதலால் வீட்டு வாசல்கதவு சாவிகளை ஆளுக்கொன்றாக வைத்திருந்தனர். அவர்கள் போர்ஷனுக்குள் நுழையப் பக்கவாட்டில் ஒரு கதவு இருந்தது. யாரையும் எழுப்பத் தேவையில்லை. ஓசைப்படாமல் உள்ளே போய், அடுத்தவாரம் தன் உடலை வெட்டவிருந்த கத்தியினால் இன்று இரவே ஒரு ரத்த நாளத்தை வெட்டி, குருதியைப் பெருக்கெடுக்கச் செய்து விடலாம்..,

'நாளைக்காலை, அர்த்தநாரி ரயிலை விட்டு இறங்கி, வீடு வந்து சேரும்போது என் உயிரற்ற உடலைக் காண்பார். என்னை மன்னிக்குமாறு நான் எழுதி வைக்கும் கடிதத்தைப் படிப்பார். என்னை மன்னிக்க முடியாவிட்டாலும் இந்த அபாக்கியசாலி குறித்துக் கொஞ்சம் வருத்தமாவது கொள்வார் இல்லையா? அது போதும்!'

புஷ்பாவின் கால்கள் அவளை ஸான்தோமிலிருந்து மயிலாப்பூருக்கு அழைத்துப் போயின.

## 19

"நர்ஸ்! நர்ஸ்!" தூக்கம் பிடிக்காமல் புரண்டு கொண்டிருந்த ஒரு நோயாளி எழுந்துபோய் நர்ஸை உலுக்கி எழுப்பினாள்.

"உம்... என்ன! எதுக்குப் படுக்கையை விட்டு இறங்கி அலையறே? என்ன வேணும்?"

"நேற்று புதுசா அட்மிட் ஆனாளே, புஷ்பா அவ பாத்ரூமுக்கு எழுந்து போனா, அரைமணி நேரமாச்சு இன்னும் திரும்பல்லே."

"விருட்டென எழுந்தாள் நர்ஸ். "சரி,சரி, நான் பார்த்துக்கறேன் படுத்துக்க." அவள் தான் கண்ணயர்ந்தது வெளிப்பட்டு விடக்கூடாதே என்ற கவலையில் கடுமையாகப் பேசிவிட்டு வார்டைவிட்டு வெளியேறி நடந்தாள். பாத்ரூம்களில் யாருமில்லை. பரபரப்புடன் 'காரிடார்' வழியாகப் போய் முனை திரும்பியபோது மங்கலான ஒற்றை விளக்கு வெளிச்சத்தில், ஆப்பரேஷன் தியேட்டர் கதவு இலேசாகத் திறந்திருப்பது தெரிந்தது. 'பூட்டித்தானே வைப்பது வழக்கம்? இன்று மறந்து விட்டார்களா? வெறுமனே ஸ்பிரிங் லாக் மட்டும் பொருத்திக் கொள்ளுமாறு கதவை இழுத்துச் சாத்தி விட்டுப் போய்விட்டார்களா? அப்படியானால் கதவை இப்போது திறந்து கொண்டு உள்ளே போயிருப்பது அல்லது நுழைந்து திரும்பியது யார்? அவள் அறைக்குள் புகுந்து விளக்கைப் போட்டாள். ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் அலமாரி உடைக்கப் பட்டிருந்தது. இரண்டும் இரண்டும் நாலு என்று கணக்குப் போட அவளுக்கு அதிக நேரமாகவில்லை.



ஈட்டிக்காரன்: வட்டியோட சேர்த்து நாலாயிரம் ரூபா ஆச்சு! இன்னு வழி பண்ணப் போறே!

ஒருவன்: பேசாம உன் பொண்ணை எனக்குக் கல்யாணம் பண்ணிக் குடுத்துடு! வரதட்சிணை வாங்காம கட்டிக்கறேன்!

வெ. சீதாராமன்.

சற்று நேரத்துக்குப்பின் டாக்டர் சாரதா வீட்டில் ஃபோன் மணி அடித்தது. "டாக்டர் ஹியர்... யாரு நளினாவா?"

"யெஸ் டாக்டர். நேற்று அட்மிட் ஆன பேஷண்ட் புஷ்பா..."

"ஆமாம், அவளுக்கென்ன?"

''ஓடிட்டா!''

''வாட் நான்சென்ஸ்? நீதானே நைட் டியூட்டியிலே வார்ட் நர்ஸ்? என்ன பண்ணிக் கிட்டிருந்தே?''

''அவ பாத்ரூம் போறதா சொல்லிட்டுப் போனா. பத்து நிமிஷமாகியும் திரும்பலே. தேட ஆரம்பித்தேன். அவ அகப்படலே. வேறு ஒருவிஷயம் தெரிய வந்தது...''

''சுற்றி வளைக்காதே, சீக்கிரம் சொல்லு!''

''கோபப்படாதீங்க டாக்டர். ஆப்பரேஷன் தியேட்டரைப் பூட்டாமல் வைத்தது என் தப்பில்லே!''

''என்னது!''

''ஆமாம், அந்த அஜாக்கிரதை காரணமா புஷ்பா ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் அலமாரியை உடைச்சுடறது சாத்தியமாயிருக்கு.''

''மைகாட்! ஹௌ இர்ரெஸ்பான்ஸிபிள்! உங்க எல்லார் மேலேயும் டிஸிப்ளினரி ஆக்ஷன் எடுக்கறேன். தொலைச்சுப்பிடறேன், தொலேச்சு? யூ திங்க் ஐ காண்ட் கெட் பெட்டர் நர்ஸஸ் அண்டு மேட்ரன்ஸ்?''

''எம்பேரிலே தப்பில்லே டாக்டர், ப்ளீஸ்...''

''அதை அப்புறம் விசாரிச்சுக்கலாம்... வாட்ச்மேனைக் கேட்டியா?''

''கேட்டுட்டேன் தனக்கு ஒண்ணும் தெரியாதுங்கிறான். ஆனா புஷ்பாவைக் காணோம்.''

''சரி, இப்ப எனக்கு உடனே புஷ்பாவின் வீட்டு விலாசத்தைப் பார்த்துச் சொல்லு. ரிஜிஸ்டரில் இருக்கும்.''

அப்படியே செய்தாள் நர்ஸ் நளினா. டாக்டர் சாரதா போலீஸுக்கு ஃபோன் செய்தாள். ஆபரேஷனுக்குப் பயந்தோ அல்லது பெரிய உடம்பாக வந்து விட்டதே என்பதால் வாழ்க்கையில் விரக்தி அடைந்து, பிறருக்குப் பாரமாக இல்லாதிருக்க நினைத்தோ, புஷ்பா தற்கொலை முயற்சியில் ஈடுபடலாம்; கத்தி ஒன்றை எடுத்துக் கொண்டு தப்பிப் போயிருக்கிறாள் என்பதைத் தெரியப்படுத்தினாள்.

''அதுசரி, எங்கேயென்று போய்த் தேடுவது? முயற்சி எடுத்துக்கறோம்.''

''மனோதத்துவ ரீதியாகப் பார்த்தால் அவள் நேரே தன் வீட்டுக்குத்தான் திரும்புவாள். அவ வீட்டிலே வேறே யாரும் கிடையாது. புருஷன்கூட மதுரை போயிருப்பதாகச் சாயந்திரம் சொன்னாள். கண்ட இடத்தில் சாக யாருக்கும் விருப்பமிராது. அதனால் அவள் வீட்டுக்கே போய்ப் பார்க்கலாம்.''

''பஸ்ஸா, டாக்ஸியா ஒண்ணும் கிடைக்காது அவளுக்கு இந்த நேரத்தில். நடந்துதான் போகணும்.''

''அதனால் நீங்க அவளுக்கு முன்னாடியே அவள் வீட்டுக்குப் போய், அக்கம்பக்கத்தில் காத்திருந்து அவள் வந்து சேர்ந்ததும் சுலபமாய்ப் பிடித்து இங்கே திருப்பி அழைத்து வந்து விடலாம்.''

''சரி, அட்ரஸைச் சொல்லுங்க, எழுதிக்கறேன்.''

புஷ்பா வீடு வந்து சேர்ந்தபோது போலீஸார் தயாராகக் காத்திருந்தனர். 'அப்பாடா இவ்வளவு நேரமாச்சா இவளுக்கு வந்து சேர்வதற்கு' என்று அலுத்துக்கொண்டே இன்ஸ்பெக்டர் அவளிடம் போய்,

''உன்னை அரெஸ்ட் பண்ணயிருக்கோம்; கத்தியைக் கீழே போட்டுட்டு ஜீப்பிலே ஏறு. அசட்டுக்காரியம் ஏதும் பண்ணாதே, பலிக்காது'' என்றார்.

சப்தநாடியும் ஒடுங்க, புஷ்பா கத்தியை நழுவ விட்டாள். அப்போது பூமியே அவள் காலடியிலிருந்து நழுவிப் போய்க் கொண்டிருந்தது. 'தற்கொலை செய்து கொள்ளக் கூடத் தனக்கு வாய்ப்பில்லாமல் போய் விட்டதா? கோபாக்கினியாக வெளிப்படும் கணவனின் வசைமொழிகளைக் கேட்டுச் சித்திரவதைப் படவேண்டும் என்று தன் தலையில் எழுதியிருக்கும்போது எப்படித் தற்கொலை முயற்சி பலிக்கும்?'

கத்தியை ஒரு போலீஸ்காரர் சாட்சியமாகத் துணியில் சுற்றி எடுத்துக்கொள்ள, அவள் ஜீப்பில் மீண்டும் ஆஸ்பத்திரிக்கு அழைத்து வரப்பட்டாள். வார்டில் அவளுக்கு ஒரு பெண் போலீஸைக் காவலாக நியமித்துவிட்டு இன்ஸ்பெக்டர் ரிப்போர்ட் எழுதிக் கையெழுத்துப் பெற்றுக்கொண்டு திரும்பினார்.

நர்ஸ் நளினா, இந்த மாதிரி அசட்டுப் பிசட்டென்று நடந்து கொள்ளும் நோயாளிகளால் தன்னைப் போன்ற நர்ஸ்களுக்குக் கெட்டபேர் வந்து சேர்வது பற்றி நீண்ட நேரம் புலம்ப, சக நோயாளிகள் சிலர் ஆறுதல் சொல்ல, சிலர் வெவ்வேறு ஆஸ்பத்திரிகளில் நடந்த இது போன்ற சம்பவங்களை விவரிக்க, சிலர் அவள் குடும்பச் சூழலைப் பற்றித் தூண்டித் துருவிக் கேள்விகள் கேட்க, இரவெல்லாம் நரகவேதனையாகக் கழிந்தது புஷ்பாவுக்கு.

மறுநாள்காலே பாண்டியன் எக்ஸ்பிரஸிலிருந்து எழும்பூரில் இறங்கிய அர்த்தநாரி வீடு சென்று குளித்து மாற்றுடை அணிந்தான். மாலைவரை புஷ்பாவைப் பார்க்காமல் இருக்க முடியும் என்று தோன்றவில்லை அவனுக்கு. 'ஃபோன் பண்ணி லீவை ஒருநாள் எக்ஸ்டெண்ட் பண்ணலாமா அல்லது நேரில் போய்ப் பர்மிஷன் வாங்கிக் கொண்டு அடையாறு செல்லலாமா?' என்று யோசித்தான். கடைசியில் நேரில் போய்க் கேட்பதுதான் உசிதம் என்று தோன்றியது. 'நேற்று வராமலிருந்து வேற்று மனுஷன் மூலம் லீவ் லெட்டர் அனுப்பியதற்கே மதனன் சீறுவான்...'

அவன் காரியாலயத்தை அடைந்தபோது அங்கே ஒரே பரபரப்பாயிருந்தது. ''ஸார்! உங்க வரவைத்தான் எதிர் பார்த்திருந்தோம்'' என்று அவன் தலையைக் கண்டதும் தான் கவலை சற்றுக் குறைந்தவர்கள் போல் அனைவரும் சூழ்ந்து கொண்டார்கள்.

''என்ன விஷயம்?''

''நம்ம மானேஜர் போயிட்டார் ஸார்.''

''போயிட்டாரா?''

''ஆமாம், ஹார்ட் அட்டாக்! இப்பத்தான் போலீஸ் ஸ்டேஷன்லேருந்து மெஸேஜ் வந்தது. மதனன் ஃபாமிலியில் எல்லாரும் எங்கே போயிருக்காங்கன்னு இன்ஸ்பெக்டர் விசாரிச்சார்.''

''நம்ம ராமசாமிதானே டிக்கெட் வாங்கினான் ஈரோடுக்கு? ஏதோ மாரேஜ் போலிருக்கே'' என்றான் அர்த்தநாரி.

''அதைத்தான் சொன்னேம் ஸார். மதனன் நேற்று வாழ்த்துத் தந்தி அனுப்பியிருந்தார். அதனுல் விலாசத்தையும் கொடுக்க முடிந்தது. போலீஸ்லே ஈரோடைக் காண்டாக்ட் பண்றதாகச் சொன்னுங்க. பாவம், தாகத்துக்குத் தண்ணீர் கொடுக்கக் கூட ஆளில்லாமல் போயிட்டார் ஸார்!''



''எப்படி விஷயம் தெரிஞ்சுது போலீஸுக்கு?''

''காலமே வேலைக்காரன் வந்து கதவைத் தட்டியிருக்கான். தானே திறந்துகொண்டதாம். உள்ளே போனுல் மதனன் தரையில் விழுந்து கிடந்தானும். லைட் எரிஞ்சுக்கிட்டிருந்ததாம். மேஜை மேலே பாட்டில்.''

''ஓகோ!''

''வேலைக்காரன் போலீஸுக்குப் போன் பண்ணியிருக்கான். போலீஸ் டாக்டர் பரிசோதனை நடத்தி ஹார்ட் அட்டாக்னு சொல்லிவிட்டார். இரவு பதினேரு மணியிலேருந்து பன்னிரண்டுக்குள் பிராணன் போயிருக்கும்னு அனுமானம்!''

''வாசல் கதவு திறந்திருந்தது என்கிருயே?''

''அது காரணமா திருட்டுப் புரட்டு ஒண்ணும் போலீஸிலே சந்தேகிக்கலே. படுக்கப் போகும் முன் தாழ்ப்பாள் போடலாம், பூட்டலாம் என்று இருந்திருப்பான். தூக்கம் வரதுக்கு முன்னடி குடும்பத்துக்கே துக்கம் வந்துடுத்து!''

''வாட் எ டிராஜிடி! எப்ப வராங்களாம்?''

''ஈரோட்டிலிருந்து டாக்ஸி பிடித்து வரதானுக்கூட சாயந்திரம் ஆயிராதா? அதுக்கு முன்னுல் நாம் போய் ஆகவேண்டிய காரியத்தை யெல்லாம் கவனிக்கலாமே ஸார்!''

''கரெக்ட்! குடும்பம் வந்து சேர்ந்ததற்கப்புறம் ஒண்ணென்னுக் கவனிக்கிறதுன்னு ரொம்ப டிலே ஆயிடும். நாம் ரெடி பண்ணி வைக்க வேண்டியதுதான். இன்றைக்கு ஆபீஸுக்கு லீவு விட்டுடலாம். ஹெட் ஆஃபீஸுக்கு டெலெக்ஸ் மெஸேஜ் கொடுத்துடலாம். காஷியர் எங்கே? ஐந்நூறே ஆயிரமோ இருக்கிறதை எடுத்துக்கிட்டுக் கிளம்பச் சொல்லு... கூர்க்காவைக் கூப்பிட்டு எல்லாத்தையும் பூட்டிக்கச் சொல்லு. ஒரு நோட்டீஸ் எழுதி வாசலில் தொங்க விடு...''

அர்த்தநாரி புஷ்பாவை ஒரு கணம் கூட மறக்கவில்லை. இங்கே தன் தலைமை தேவைப்படுவதை உணர்ந்தான். ஏற்கத் தயங்கவில்லை. சாயந்திரத்துக்கு மேல்தான் புஷ்பாவைப் பார்க்கப் போக முடியும்...

மதனன் வீட்டில் போலீஸாருடைய வேலை முடிந்து விட்டது. ஒரே ஒரு கான்ஸ்டேபிளை நிற்க வைத்து விட்டுப் போய் விட்டார்கள். உடன் வந்திருந்தவர்களில் பலரையும் ஒரொரு காரியத்துக்கு அனுப்பி விட்டு வாசலறையில் கிடத்தப்பட்டிருந்த மதனின் உடலைப் பார்த்தான் அர்த்தநாரி.

அவனுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. மதனனுக்காக அல்ல, தன்னையே எண்ணி உயிருடன் இருந்தபோது இந்த உடல் என்ன பாடு படுத்தியது! இன்று மொய்க்கின்ற ஈயைக் கூட ஓட்ட முடியாமல் எப்படிப் பேச்சு மூச்சற்றுக் கிடக்கிறது! 'ஸார், ஸார்!' என்று அழைத்த மரியாதையெல்லாம் போக இப்போது 'அது'வாகி விட்ட மதனன்! 'பாடியை எடுத்தாச்சா? எத்தனை மணிக்கு' என்றுதானே கேட்கப் போகிருர்கள்! இதனிடம்போய் ஏதோ அபார சக்தி- ஒருவனை ஆக்கவும் அழிக்கவும், உயர்த்தவும் தாழ்த்தவும் கூடிய சக்தி இருப்பதாக எண்ணிப் புஷ்பாவையும் சம்பந்தப்படுத்தி எப்படியெல்லாம் முட்டாள்தனமாக நடந்து கொண்டேன்!'

''அர்த்தநாரி! அழாதேப்பா! கண்ட்ரோல் யுவர்ஸெல்ஃப்'' என்று காஷியர் கூறினுர். ''இப்படி வெளியே வா, வராந்தாவில் உட்காரு.''

அர்த்தநாரி திரும்புகையில் சட்டென்று அவன் கண்களில் ஒரு விஷயம் தட்டுப்பட்டது. அனலை மிதித்தது போல் துணுக்குற்றுன். அதோ அந்தச் சோபாவின் இடுக்கில் முனை சிக்கிக் கொண்டிருக்கும் அந்தக் கைக்குட்டை! அது.... அது.... புஷ்பாவினுடையதல்லவா? அவள் ஏன் இங்கு வந்தாள்? எப்போது? எப்படி?'

அவன் நடுக்கத்தைப் பிணத்தைப் பார்த்ததால் ஏற்பட்ட அதிர்ச்சியின் விளைவு என்பதாக எண்ணிக் கொண்ட காஷியர் பத்மநாபன் முதுகைத்தட்டி ஆசுவாசப்படுத்தினுர்.

## 20

'ஒருவேளை அந்தக் கைக்குட்டை அவளுடையது இல்லையோ? அதுபோன்ற வேறு ஒன்றே? தப்பித்தவறி அவளுடையதாகவே இருந்து பின்னுல் அது யார் கண்ணிலாவது பட்டுத் தொலைத்தால்? கேள்விகள் பிறந்தால்? அதைவிட அவமானம் வேறு என்ன வேண்டும்? பிறகு இது இயற்கை மரணம் அல்ல என்றுகூடச் சந்தேகம் எழலாம்...'

கண்ணீர் குடித்துவிட்டு வருகிறேன் என்று சொல்லி அவன் நீர் நிரம்பிய டம்ளருடன் அந்தச் சோபாமீதே அம்மூலையிலேயே அமர்ந்தான். மறுபடி எழுந்திருக்கும்போது அந்தக் கர்சீப் அவன் பாண்ட் பாக்கெட்டுக்குள் போய்விட்டது. புஷ்பாவுடையதுதான். பூப்போட்ட லேடீஸ் கர்சிப் அல்ல. ஓரம் தைத்த சாதாரண வெள்ளைத்துணி. அதனுல்தான் யாருடைய கவனத்தையும் சட்டென்று கவரவில்லை. மதனனுடையது என்றே பலரும் எண்ணியிருக்கலாம். ஆனுல் தனக்குத் தெரியாதா?'

அவன் மனத்தை நூற்றுக் கணக்கான கேள்விகள் குடைந்தன. 'ஆஸ்பத்திரியிலிருந்து அவள் இங்கே எப்படி வந்திருக்க முடியும்? முன்பு எப்போதோ அவள் அவனிடம் கொடுத்து வைத்த கர்சிப்போ இது! அவசரப்பட்டு அவனுகவே எந்த ஒரு முடி



நான் புதுக்கல்லூரியில் முதல் வருடம் அறிவியல் படித்துக் கொண்டிருக்கிறேன். இன்று, முதலாண்டு மாணவர்களுக்கு சென்னைப் பல்கலைக் கழகத்தின் முதற்பருவத் தேர்வு நடைபெற்றது. நாங்கள் எல்லோரும் 9.00 மணிக்கு பரீட்சைக்காக, தேர்வு அறையில் கூடினோம். ஆசிரியரும் வினாத்தாள்களைக்கொடுத்து முடித்தார். நாங்கள் எல்லோரும் வினாத்தாளை மிக ஆவலாகப் பிரித்துப் படித்துக் கொண்டிருக்கும்போது எங்கள் கல்லூரிக்கு அருகிலிருக்கும் ஒரு வீட்டிலிருந்து பாடல் ஒன்று வானொலியில் ஒலித்தது. அதைக் கேட்டு அறையிலிருந்த சுமார் 40 மாணவர்களும், ஆசிரியரும் வாய்விட்டே சிரித்து விட்டோம். அந்தப் பாடலின் முதல் அடி: ''ஒன்னுமே புரியலே உலகத்திலே!''

எஸ். பாபு

வுக்கும் சட்டென்று வந்துவிடத் தயாராயில்லை. பட்டது போதும். நிதான புத்தியை இழக்கக் கூடாது. விடைகள் சாயந்திரம் ஆஸ்பத்திரிக்குப் போய் புஷ்பாவைப் பார்த்தால் கிடைத்துவிடும். அதுவரை பொறுமையாகக் காத்திருப்போம். மாலையில் கிடைக்கும் விடைகள் திருப்திகரமாக இல்லாது போனால் பிறகு யோசிக்கலாம்.'

நாலு மணி சுமாருக்கு மதனன் குடும்பத்தினர் வந்து சேர்ந்தனர். அழுகையும் ஓலமும் உச்சகட்டத்தை அடைந்த சமயம் அவன் காஷியர் பத்மநாபனைத் தனியே அழைத்தான். ''உங்களுக்குத் தெரியும், என் ஒய்ஃப் ஆஸ்பத்திரியில் இருக்கா... நேற்றுகூட நான் போகலே...''

''எனக்கும் புரியுதுப்பா. நீ போயிட்டு வா. நான் இங்கே கவனிச்சுக்கறேன். தைரியமாக இரு. இந்த மரணத்தைப் பார்த்துப் பயப்படாதே. உங்களுக்கு ஒரு குறையும் நேராது. நான் பெரியவன், மனப்பூர்வமா சொல்றேன்.''

பத்மனாபனின் ஆசி கிடைத்ததும் குழம்பிய மனம் தெளிவு பெறாவிடினும் கொஞ்சம் சாந்தி அடைந்தது. வீட்டுக்குப்போய் குளித்துவிட்டுக் கைக்குட்டையையும் நனைத்துப் பிழிந்து கையோடு எடுத்துக் கொண்டான். அடையாறு போய்ச் சேருமுன் உலர்ந்துவிடும். ஆஸ்பத்திரி வாசலைத் தாண்டி உள்ளே நுழையும்போதே சில நர்ஸ்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு பொல பொலவென்று பொரிந்து தள்ளிவிட்டார்கள். புஷ்பாவைப் பற்றி மாறி மாறிப் புகார் செய்தார்கள். தற்கொலை முயற்சிக்கெனக் கத்தியை எடுத்துக் கொண்டு தப்பி யோடியதையும் அவளை வீட்டருகே போலீஸ் பிடித்து மறுபடி அழைத்து வந்து விட்டதையும் அறிந்து கொண்டான் அர்த்தநாரி. அவர்கள் கூறாத விஷயங்களும் புரிந்தன அவனுக்கு.

''காலமெயெ உங்க ஆபீஸுக்குப் ஃபோன் பண்ணி உங்களைப் பிடிக்கப் பார்த்தோம். யாருமே எடுக்கலே.''

'ஆபீஸுக்குத்தான் லீவு விட்டாச்சே யார் எடுப்பார்கள்,ஃபோனை' என்று எண்ணிக் கொண்டான் அர்த்தநாரி. சொல்லவில்லை.

''உங்க ஒய்ஃபோட அசட்டுத்தனத்தால் எங்க எல்லாருக்கும் கெட்டபேரு. டியூட்டியில் இருந்த நர்ஸை ஸஸ்பெண்ட் பண்ணிட்டாங்க. மேட்ரனுக்கு பிளாக்மார்க். இந்த மாதிரி பேஷண்டுகளாலே நர்ஸ்களின் சமூகத்துக்கே அவப்பெயர் வந்து சேர்ந்துடும்...''

'ஒருத்தி தற்கொலை செய்து கொள்ள முயன்றால் அவளிடம் அனுதாபப்பட்டுப் பரிவு காட்டாமல் இவர்கள் தங்களைப் பற்றியே கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறார்களே' என்று எண்ணினான். தர்க்கம் புரிந்து கொண்டிருக்க விரும்பாமல் புஷ்பா சார்பிலும் தன் சார்பிலும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு மனைவியைப் பார்க்க விரைந்தான்.

கனத்த இதயத்துடன் வந்தவனுக்கு இப்போது அது இறகு போல் இலேசாகி இருந்தது. 'நான் மதுரை சென்றிருப்பதைச் சிவசாம்பன் மூலம் அறிந்த புஷ்பாவின் உள்ளம் என்ன பாடு பட்டிருக்கும்! கணவனுக்கு உண்மை தெரிந்து போகும். இனி அவன் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் தன்னால் முடியாது என்று உணர்ந்ததும் பயம், சுய வெறுப்பு இவற்றுக்கும் மேலாக மதனனிடம் கோபம் பொங்கியிருக்கும். அவனை முதலில் கொன்று விட்டுப் பிறகு தன் உயிரையும் மாய்த்துக் கொள்ளக் கருதித்தான் புஷ்பா ஆஸ்பத்திரிக்குச் சொந்தமான கத்தியை அபகரித்துக் கொண்டு புறப்பட்டிருக்கிறாள். போன இடத்தில் அவள் எதிர்பாராதவாறு மதனன் மாரடைப்பினாலேயே இறந்துவிட்டிருக்கிறான்....!'

''புஷ்பா!''

அவள் மெல்ல எழுந்தாள். அவன் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமல் தலை குனிந்திருந்தாள். கோபாக்கினி தன்னைத் தகிக்கக் காத்திருந்தாள்.

''புஷ்பா, இதோ பார்! என்னைப் பாரேன்!'' அவன் அவள் முகவாயைப் பற்றினான். முகம் உயர்ந்ததே தவிர விழிகள் அவனைத் தவிர்த்தன. அவன் எரிந்து விழாமல் அன்பு காட்டியதில் அவள் மேலும் கூசிக் குறுகிப் போனாள்.

''புஷ்பா! எனக்கு எல்லாம் தெரியும்!''

அவள் முகத்தின் தசைகள் நடுங்கின. கண்களில் நீர் திரையிட்டது. சுற்று முற்றும் பார்த்தான், அர்த்தநாரி. ''நான் இவளுடன் தனியே பேச விரும்புகிறேன்.''

பெண் போலீஸும் நர்ஸும் காதுகேளாத தூரத்துக்கு விலகிக் கொண்டனர். பக்கத்துக் கட்டிலில் இருந்த நோயாளிகூட மெல்ல எழுந்து அப்பால் சென்று ஒரு கட்டிலில் போய் அமர்ந்தாள்.

''புஷ்பா!'' அவன் அவள் தலையை வருடினான். அவள் முகம் சட்டென்று அவன் நெஞ்சில் சாய்ந்தது. அவன் அவள் உடலை இழுத்து இறுக அணைத்துக் கொண்டான், அக்கம் பக்கம் பற்றிக் கவலைப்படமல். அவள்

ரகசியக்குரலில் கெஞ்சினாள்: ''என்னிடம் அனுதாபம் காட்டாதீங்க; நான் அதற்கு லாயக்கற்றவள். என்னை வைது திட்டுங்க. இல்லே. கழுத்தை நெரித்துக் கொன்றே விடுங்க. அதுவும் வேண்டாம். உங்கள் கரம் கறைபட வேண்டாம். நானே விஷம் குடித்துச் செத்துப் போறேன்.''

''அசட்டுத்தனமாகப் பேசாதே. புஷ்பா தெய்வத்தின் அனுமதியின்றி யார் உயிரை யாரால் வாங்க முடியும்? நீ மதனனைக் கொல்ல நினைத்தாயே? முடிந்ததா? தற்கொலை செய்து கொள்ள எண்ணினாயே, சாத்தியமாயிற்றா?''

''அதுவும் தெரியுமா?'' என்றாள் வியப்புடன்.

''நன்றாகத் தெரியும் போலீஸார் எதையும் சந்தேகிக்கவில்லை. ஆனால் நான் புரிந்து கொண்டு விட்டேன்.'' கர்சீப்பை எடுத்துக் காட்டினான். அதனாலேயே கண்களைத் துடைத்தான். ''நீ வாழ வேண்டும் என்பது கடவுளின் விருப்பம் புஷ்பா. அதனால்தான் நேற்று உன் எண்ணம் எதுவும் நிறைவேறவில்லை.''

''நான் வாழவேண்டும் என்று கடவுள் நினைப்பதுதான் வியப்பாயிருக்கிறது. ஒரு வேளை மரணம் இவளுக்குப் போதிய தண்டனையல்ல; வாழ்ந்து துன்புற வேண்டும் என்று நினைக்கிறாரோ என்னமோ?''

''அப்படியெல்லாம் இல்லே, புஷ்பா! நடந்து போனதற்காக எவ்வளவு தூரம் நீ மனம் வருந்தி வேதனைப்படுகிறாய், மதனனை எவ்வளவு தூரம் வெறுக்கிறாய் என்பதை என்னால் அனுமானிக்க முடிகிறது. எனக்குத் தெரிந்தது கடவுளுக்கும் புரியாமல் போகுமா? மனம்வருந்தித் திருந்திவிட்ட உன்னை மன்னிக்காது போனால் கடவுள் கருணை வடிவானவர் என்பது பொய்த்துப் போகுமே!''

அவளுக்கு இந்த உறுதிமொழி போதுமானதாய் இல்லே. ''கடவுள் என்னை மன்னிப்பது கிடக்கட்டும். நான் வாழவேண்டும் என்று ஆண்டவன் எண்ணுவது இருக்கட்டும். நான் வாழவேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? உங்களால் என்னை மன்னிக்க முடியுமா? எனக்கு அதுதான் முக்கியம். கடவுளின் விருப்பம் அல்ல.''

''நாம் ஒருவரையொருவர் மன்னித்து விடுவோம் புஷ்பா. நீ இடறி விழுந்ததற்கு நானும்தான் காரணம். உன்னை மன்னிக்க நான் தயாராயிருக்கும்போது நீ வாழ வேண்டாம் என்றா நினைப்பேன்?''

''எதற்காக நான் வாழ வேண்டும்? யாருக்காக? எந்த நம்பிக்கையின் பேரில்?''

''நம் காதல் பேரில் நம்பிக்கை வைத்து எனக்காக, என் மகிழ்ச்சிக்காக நீ வாழ வேண்டும்.''

''உங்களை எப்படி நான் சந்தோஷப்படுத்த முடியும்?'' என்று மறுபடியும் சந்தேகத்துடன் கேட்டாள் புஷ்பா. ''முன்பொருசமயம் நாம் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது சொன்னீர்களே, நினைவிருக்கிறதா? 'குரூபி என்ற சொல்லேயே கூறாதே, புஷ்பா! உன்னை அவலட்சணமாக என்னால் நினைத்துக் கூடப்பார்க்க முடியாது' என்று. இந்த ஆபரேஷனுக்குப் பிறகு நான் பார்க்க அசிங்கமாகத்தானே, இருப்பேன்?''



நாம் கோழிப் பந்தயத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கின்றோம்; ஆனால் 'நெருப்புக் கோழிப் பந்தயம்' என்று ஒன்று இருக்கிறது.

ரேக்ளா போன்ற சிறு வண்டியில் நெருப்புக் கோழியைப் பூட்டுவார்கள். நெருப்புக்கோழி வண்டியை இழுத்துக் கொண்டு ஓடுமா என்ற சந்தேகம் ஏற்படலாம்; 8 அடி உயரமும் 200 பவுண்டு எடையும் உள்ள அதனால் தாராளமாய் முடியும்.

நெருப்புக் கோழிப் பந்தயங்கள் தென் ஆப்பிரிக்காவின் பல பகுதிகளில் இன்றும் நடைபெற்று வருகின்றன.

தேவகோட்டை பி. நாராயணன்.

''அப்போது நான் புறஅழகை மட்டும் முக்கியமென நினைத்தவன் புஷ்பா. இப்போது நான் உன் உள்ளத்து அழகுகளை ரசிக்கவும் உணர்ச்சிகளை மதிக்கவும் தெரிந்து கொண்டவன்.''

''அப்படியானால் உங்களால் புரிந்து கொள்ள முடியுமா?''

''எதை?''

''உங்கள் போக்கினைக் கண்டு என் மனத்தில் எழுந்த எதிர்ப்புணர்ச்சிதான் மதனனிடம் நான் ஏமாந்து போகக்காரணம் என்பதை? உங்களை நேரடியாக எதிர்த்துக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேற முடியாத கோழையாக இருந்தேன். வாழ்க்கைப் பிரச்னைகளைச் சமாளிக்கத் துணிவின்றி அப்படி நான் மோசம் போய்விட்டேன். அது அற்பத் திருப்தி என்பதை இப்போது உணர்கிறேன்.''

''இரண்டு நாளைக்கு முன் உன்னுடைய இந்த மனப்போக்கை என்னால் புரிந்து கொண்டிருக்க முடியாது புஷ்பா. ஆனால் இப்போது உன்முன் இருக்கும் அர்த்த நாரியினால் உன்நிலையை அனுதாபத்துடன் நோக்க முடியும். இந்த மாற்றம் எப்படி நேர்ந்தது தெரியுமா? நேற்று உன் அப்பா என்னை வாசலிலேயே நிற்க வைத்துப்பேசிச் சிறுமைப்படுத்தி அனுப்பினார். அப்போது என் சுயநலம், கர்வம், தற்குறித்தனம் போன்றவையெல்லாம் கரைந்து போயின.''

''என்னுடைய பாவத்தை நான் எப்போது, எப்படிக் கரைப்பேன்?'' என்றாள் அவள் கவலையும் ஏக்கமும் மிக.

''ஆபரேஷன் தியேட்டருக்குள் நீ சென்று திரும்பும்போது புடமிட்ட பொன்னாக இருப்பாய் புஷ்பா. உன் உடம்பின் அழுக்கு அங்கே பின்தங்கிவிடும்.''

''நிஜமாகவே நீங்கள் அப்படி நம்புகிறீர்களா?''

''நீ நெறி தவறியதால்தான் உனக்கு இந்த நோய் வந்தது என்பது விஞ்ஞான ரீதியில் அபத்தமாக இருக்கலாம். ஆனல் 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது முழுக்க முழுக்கப் பொய்யுமல்ல. இதற்கு நேர்மாருக வாழ்க்கையில் நடப்பதையும் பார்க்கிருேம். அப்போது போன ஜென்மத்தில் செய்த பாவம் அல்லது புண்ணியம் என்று சமாதானம் சொல்கிருேம். எப்படியானுல் என்ன, நாம் இருவருமே தவறுகள் செய்தோம், இருவருமே உணர்ந்து வருந்திளுேம், இருவருமே தண்டனையும் பெற்று விட்டோம். இனி எதிர்காலம் ஒரே ஆனந்த மயம்தான் புஷ்பா!''

''அப்போ இந்த ஆபரேஷன் வெற்றிகரமாக நடக்கும் என்கிறீர்களா?''

''நிச்சயமாக. நமது உள்ளங்களில் நடந்த ஆபரேஷன்களே முழுவெற்றி பெற்றபிறகு இது என்ன பிரமாதம்? அதன்பிறகு உடல் வேதனையோ மனப்புண்ணே எதுவுமே நம்மை அணுகாது.''

வாதம் புரிய வேறு விஷயம் தோன்ருததால் அவள் மௌனமானுள். அவன் முறுவலித்தான். ''எங்கே சிரி, பார்க்கலாம்...! என்பெயர் என்ன, சொல்லு! சொன்னுல் தான் ஆயிற்று!''

''அர்த்தநாரி'' என்ருள் இளநகையுடன்.

''அர்த்தமுள்ள அர்த்தநாரியா, அர்த்தமற்ற அர்த்தநாரியா?''

அவள் அடக்க மாட்டாமல் சிரித்தே விட்டாள்!

நான்கு நாட்கள் கழித்து அவள் சக்கர நாற்காலியில் அமர்ந்து ஆபரேஷன் தியேட்டருக்குள் தள்ளிச் செல்லப்பட்டபோது, அவன் ஆதரவாகப் பின்னேடு அவள் கையைப் பிடித்துக்கொண்டு நடந்தான்.

தியேட்டர் வாசலில் அவர்கள் பிரிய வேண்டிய கட்டத்தில், ''நர்ஸ்! பேஷண்டை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள். கொஞ்சம் ஏமாந்தால் ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் அலமாரியை ஒருகை பார்ப்பாள்! அப்புறம் நீங்களெல்லாம் அரண்டுபோய் விடுவீர்கள்!'' என்ருன்.

மயக்க மருந்து ஊசி மூலம் ஏற்றப்பட்டிருந்த நிலையிலும் புஷ்பா சிரித்தாள். இருவர் கண்களிலும் காதலும் நம்பிக்கையும் போட்டியிட்டன.

''தைரியமாய் இரு புஷ்பா'' என்ருன்.

''நீங்கள் இங்கே காத்திருக்கிறீர்கள் எனக்காக, என்னும்போது எனக்கென்ன பயம்?'' என்ருள் புஷ்பா.

நாற்காலியை உள்ளே தள்ளிக்கொண்டு போனுள் நர்ஸ். சஸ்திர சிகிச்சை நடந்து முடியும்வரை வராந்தாவில் உலாவினுன் அர்த்தநாரி. சற்றுநேரத்தில் மாடியிலிருந்து பார்த்தபோது சாலையில் ஓர் இன்ஸ்பெக்டர் மிடுக்காக நடந்து வருவது தெரிந்தது.

அவனுக்குச் 'சொரே'லென்றிருந்தது. அதே கணத்தில் அவனுக்கு ஒருவிஷயம் ஞாபகம் வந்தது. 'கொலை செய்வது மட்டும் குற்றமல்ல. கொலை செய்ய முயல்வதும் — அதில் தோல்வியுற்ருலும் — சட்டப்படி குற்றம் தான்! மதனன் மாரடைப்பால் இறந்து போனுன் என்பது சரி. ஆனுல் எப்படி மாரடைப்பு வந்தது, எப்போது? புஷ்பா அவனைக் காணச் சென்றபோது அவன் ஏற்கெனவே செத்துக் கிடந்தானு? அல்லது இவளைச் சந்தித்த பிறகு அவனுக்கு ஹார்ட் அட்டாக் வந்ததா? அப்படியானுல் அங்கே என்ன நடந்தது?

'இதைப்பற்றிப் புஷ்பாவிடம் தான் இதுவரை கேட்கவோ, அவள் கூறவோ இல்லை. இதைக் கேட்கத் தோன்ருமல் போனது ஆச்சர்யம்தான். இப்போது இன்ஸ்பெக்டர் தலையைக் கண்டதும் திடுமென இது எனக்கு நினைவு வருவானேன்? அவர் இந்த மருத்துவமனையை நோக்கித்தான் வருவதாகத் தோன்றுகிறது. எதற்கு வருகிருர்? புஷ்பாவை விசாரிக்கவா அல்லது வேறு ஏதாவது காரியமாகவா?

சட்டத்தின் பிடி இருக்கட்டும், ஒருவேளை அதிலிருந்து புஷ்பா தப்பி விடுவதாகவே வைத்துக் கொண்டாலும் இதற்குக் கடவுள் என்ன தீர்ப்பு வழங்கப் போகிருர்?'

ஆபரேஷன் தியேட்டருக்குள்ளே புஷ்பாவின் வலது நெஞ்சகத்தைக் கூரிய கத்தி தீண்டியது. செங்குருதி பீறிட்டது.

அர்த்தநாரியின் உடல் சிலிர்த்தது.

இன்ஸ்பெக்டர் கேட்டைக் கடந்து முன்னேறி வந்து கொண்டிருந்தார்.



## புதிய போப்

- 1846க்குப் பிறகு 132 வருடங்களில் இளம் வயதில் போப் ஆனவர் இவர்தான்.
- கம்யூனிஸ்ட் நாட்டிலிருந்துவரும் முதல் போப்.
- போலந்து நாட்டிலிருந்து வரும் முதல் போப்.
- சிறந்த விளையாட்டு வீரர், மலை யேறுபவர் 4 புத்தகங்கள், 500 கட்டுரைகள் நிறையக் கவிதைகள் எழுதியுள்ளார்.
- இசைப் பிரியர்; போலந்து கிராமியக் கவிதைகளில் பற்று உண்டு.

ஆதாரம்: 'டைம்ஸ்.'
உதவி: பாரதிஸ்ரீ.

# இலங்கை தமிழ் இலக்கியத்தின் ஜீவன்



**இலங்கையில் வெளியாகும் இலக்கியப் பத்திரிகையான 'மல்லிகை' இதழின் ஆசிரியர் திரு. டொமீனிக் ஜீவா சமீபத்தில் சென்னை வந்திருந்தார். தமிழ்நாடு கலை, இலக்கியப் பெருமன்றம் அவருக்கு ஒரு வரவேற்பளித்தது. அந்த விழாவில் திரு. டொமீனிக் ஜீவா தெரிவித்த சில கருத்துகள்:**

● பள்ளிப் பருவத்தில் நான்தான் வகுப்பில் முதல் மாணவன். என் திறமையின் மேல் எனக்கு அப்போதே அளவு கடந்த நம்பிக்கை உண்டு. ஒருமுறை கரும்பலகையில் ஆசிரியர் ஒரு கணக்கைப் போட்டார். அவர் முடிக்கு முன்பே நான், எனது நோட்டில் அதே கணக்கைச் செய்தேன். விடை இருவருக்கும் வெவ்வேறாக வந்தது. ஆனாலும் எனது விடைதான் சரியென்று நிச்சயமாக எனக்குப் பட்டது. எழுந்து சொன்னேன். 'நீ வந்து போர்டில் போடு' என்றார் ஆசிரியர். போட்டேன். வெற்றி என் பக்கம் என்று முடிவானதும் மற்ற மாணவர்கள் ஆசிரியரை நோக்கி ஏளனமாகச் சிரித்து விட்டார்கள். அவருக்கு வந்த கோபத்தில் என் நோட் புக்கை வாங்கி இரண்டாகக் கிழித்து முகத்தில் வீசியெறிந்து, ''நீங்களெல்லாம் ஏன் படிக்க வருகிறீர்கள்? சிரைக்கப் போவது தானே?'' என்று கூச்சலிட்டார். என் குடும்பத்துக்குச் சோறு போட்ட என் குலத் தொழிலை என் முகத்தின் முன்னேயே இழிவாகப் பேசியது கேட்டு என் இளமனம் அன்று நெகிழ்ந்தது. சாதிக் கொடுமைகளைச் சாடும் வெறி அன்று முதல் என்னுள் வலுப்பெற ஆரம்பித்தது.

● இலங்கையின் புகழ்பெற்ற எழுத்தாளர்கள் அனைவரும் புகழ்பெற்ற பேச்சாளர்களாகவும் இருப்பது ஒரு விசேஷம்.

● தமிழ் நாட்டில் பிரசுரமாகும் எல்லா எழுத்துக்களையுமே நாங்கள் கூர்ந்து படிக்கிறோம். கோவை, மதுரை, சென்னை முதலிய இடங்களிலிருந்து வெளிவரும் சின்னச்சின்ன ஏடுகளையும்கூட நாங்கள் விடுவதில்லை. நீங்கள் இங்கு ஒரு மூலையில் தும்மினால்கூட எங்களுக்குக் கேட்டு விடுகிறது.

● அதேசமயம் எனக்கு ஒரு வருத்தமும் உண்டு. இங்கு வெளியாகும் பல கீழ்த்தரமான நசிவு இலக்கியங்கள் இலங்கை மார்க்கெட்டில் நிரம்பி வழிகின்றன. இதனால் எங்களது ஊர் நல்ல சரக்கை விற்க முடியாமல் போகிறது. இத்தகைய குப்பைகளைத் தடை செய்ய வேண்டும் என்று நாங்கள் இடைவிடாமல் போராடிக் கொண்டிருக்கிறோம்.

● தமிழகத்தில் அறிமுகமாகியிருக்கும் புதிய எழுத்தாளர்களின் வேகத்தையும், ஆற்றலையும் கண்டு நாங்கள் பிரமிக்கிறோம். இது உண்மை. நான் தமிழகம் கிளம்பிய போது யாழ்ப்பாணத்திலிருந்தும், மற்றும் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் ஏராளமான நண்பர்கள் நான் இங்கே யார் யாரைச் சந்திக்க வேண்டும் என்று ஒரு பட்டியலையே போட்டுத் தந்திருக்கிறார்கள். அதில் அறுபது சதவிகிதம் புதிய எழுத்தாளர்கள்; புதுமை எழுத்தாளர்கள்.

● எங்கள் நாட்டிலும் நாங்கள் ஒருவரையொருவர் கடுமையாக விமரிசித்துக் கொள்ளுகிறோம்; எழுதித் தள்ளுகிறோம். ஆனாலும் அவற்றையும் மீறிய எழுத்தாள சகோதரர் என்ற பாசம் இதயத்தின் ஆழத்தில் ஊறிக் கிடக்கிறது. நான் கடுமையாக விமரிசிக்கும் சகோதர எழுத்தாளனை எவராவது தாக்க வந்தால் தடுக்கும் முதல் கரம் என்னுடையதாகத் தான் இருக்கும் என்பது சத்தியம்.

தொகுப்பு : **விஜய் நிர்மல்**

---

கணவனும் மனைவியும் ஓர் ஓட்டலில் காப்பி சாப்பிட்டு விட்டுத் திரும்பினார்கள். மனைவி தன் கைக்குட்டையை மறந்துபோய் எங்கோ வைத்துவிட்டாள். ஆகவே அவள் மீண்டும் ஓட்டலுக்குள்ளே திரும்பி வந்தாள். கணவன் வாசல் படிக்கு அருகே காத்துக் கொண்டிருந்தான். மனைவி மேஜையின் மேல் கைக்குட்டையைத் தேடிப் பார்த்தாள். மேஜையின் கீழும் தேடினாள். பிறகு தரையெங்கும் தேடிப் பார்த்தாள். இதைப் பார்த்ததும் வேகமாக ஓடிவந்தான் சர்வர். ''அம்மா, ஐயா அங்கே வாசல் பக்கத்தில் நின்று கொண்டிருக்கிறார்!'' என்றான்.

—அ. ராமச்சந்திரன்



## "பட்பட்" பட்டாபி ①

கதை: சாருகேசி
படம்: செல்லம்

கோதண்டபாணி அண்டு கோ.
ஹெட் கிளார்க் பட்டாபியை நன்
றாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.
சரியான ஊசிவெடி. ஒரு மணியில்
செய்யக் கூடிய வேலையை அரை
மணியில் செய்தாக வேண்டும்
இவருக்கு.



















நீங்க சொன்னது
காதில் விழுந்தா
தின்னு குதிப்பார்!
தலெ இடிச்சு ஃபுட்பால்
கணக்கா வீங்கட்டும்!




தலெ அப்படித்தான்
சார் இருக்கு!
அந்த டைப்பிஸ்ட்டை!
ஒரு லெட்டரில்
இத்தனை மிஸ்டேக்கா?




ப்பிஸ்ட் விமலா பட்டாபி எதிரே வர....
ல் விமலா! நீ டைப்பிஸ்டா,
பேஸ்ட்டா? ஒரேயடியா
ழப்பி வைச்சிருக்கியே
மேட்டரை?




நீங்க கொடுத்த டிராஃப்ட்தான்
சார், அது! நான் ஒண்ணும்
கூடுதலா குழப்பலே!




ன்னை இன்ஸல்ட்
ணறியா? கோ-டு
வர் ஸீட்!




அக்கவுண்டன்ட் ஆராமுதன் மேஜையைச்சுற்றி குட்டி மாநாடு...
பட்டாபிக்குப்
பாடம் கற்பிச்சே
ஆகணும்!
ஆமா, பட்டாபியை
புஸ்வாணமாக்க
ஏதாகிலும் செய்தே
ஆகணும்?
கரெக்ட்,
என்ன
செய்யலாம்?
தொடரும்

மும் முகம் எங்கள் மோகம்

ஒட்டி நின்ற நாம் இருவர்...
உறவுக்கொரு கடல், ஒன்றுபட்ட உணர்வு.
கட்டழகர் அவர் நெஞ்சம் கடலாழம்,
சட்டையோ கடல் நீலம்... அதற்கு
ஒட்டி இசைந்திடுதே என் உடுப்பு;
தொட்டணைக்குதடி அலைக்கரங்கள்.






என்றும் அவர்கள் ஆடை... இயற்கையாக மபத்லால்.

மபத்லால் துணிவகைகள்:

சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
• டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷர்ட்

everest/463/MS-tm

படைலே இருக்கே தவிர வருமுன் காக்கும் அடிப்படையிலே இல்லை... கிராம மக்கள் போதிய ஞானம் இல்லாம வியாதியை வளர்த்துக்கிருங்க. வியாதி கொடுமையான பின்னும்கூடப் போதிய மருத்துவ உதவி இல்லாம இறக்கிருங்க. இதுக்கெல்லாம் அடிப்படை நிவாரணம் வேணும்னு சேவை மனப்பான்மையோட எல்லா டாக்டர்களும் கிராமப்புறங்களுக்குப் போய்ப் பணியாற்ற முன் வர வேண்டும்...

கனகா: இப்போ நிலைமை மாறிண்டு வரது.... நீங்க சொல்ற மாதிரி டாக்டர்கள் அவ்வளவு மோசமானவங்க இல்லை.

சாரங்கன்: எல்லோருமே மோசம் என்று நானும் சொல்லவில்லை. இன்னும் அதிகமான டாக்டர்கள் முன்வர வேண்டும் என்றுதான் சொல்கிறேன்.

கனகா: நீங்க பி. காம் முடிச்சுட்டு என்ன செய்யப் போறீங்க?

சாரங்கன்: 'சார்டர்ட் அகௌன்டன்ஸி' படிக்கலாம்னு இருக்கேன்.

கனகா: 'ப்ரொஃபெஷனல் கோர்ஸ்களை விட்டால் பி. காம், படிப்புக்கு ஏகப்பட்ட 'டிமாண்ட்' இருக்கே அது எதனுல்?

சாரங்கன்: பி. காம்லே மாறுபட்ட பல பாடங்களை, குறிப்பா நடைமுறை வாழ்க்கைக்கு உபயோகிக்கக் கூடிய விஷயங்களைப் படிக்க வாய்ப்பு இருக்கு. பி. காம் முடிச்சதும் ஸி. ஏ. படிக்கலாம். இல்லேன்னு ICWA (Casting) கோ, பிஸினெஸ் மேனேஜ்மென்ட் கோர்ஸ்ஸோ சேரலாம். பாங்குகளில் வேலை கிடைக்க வாய்ப்புகள் அதிகம் உண்டு. அதனுல்தான் பலரும் நாடுகின்றனர்!

கனகா: நிறைய பேர் பி. காம் படிப்பையே நாடி வருவதால் நாளா வட்டத்தில் அதற்கும் பிரயோசனம் குறைந்து விடுமே!

சாரங்கன்: ஆமாம்... எல்லாத் துறையிலும் அந்தப் பிரச்னை உண்டு... 'அகாடமிக்'கா எந்தப் பாடத்தையும் படிப்பதோடு மட்டும் முன்னேறிவிட முடியாது... தற்காலச் சூழ்நிலையில் ஓரளவு உலக ஞானத்தையும், நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான அம்சங்களையும் மாணவப் பருவத்திலேயே மாணவர்கள் பயில வேண்டும். எங்கள் கல்லூரியில் 'காமர்ஸ்' பகுதியில் 'Commerce Forum' என்கிற அமைப்பை வைத்திருக்கிறேம். இந்த அமைப்பு மாணவர்களாலேயே நடத்தப்படுகிறது. இவ்வமைப்பின் மூலம் பல Seminars Debates Symposiums ஆகியவற்றை ஏற்பாடு செய்கிறேம்...

கனகா: இத்தகைய கருத்தரங்குகளில் எந்த விஷயங்களைப் பேசுவீர்கள்?

சாரங்கன்: கொஞ்ச நாட்களுக்கு முன்பு 'தமிழ் நாட்டில் தொழிலக உறவுநிலை (Industrial Relations in Tamil Nadu) என்கிற தலைப்பில் ஒரு மாநாடு நடத்தினேம். இம் மாநாட்டிற்கு தொழிற்சங்கத் தலைவர்களையும், தொழிலதிபர்களையும், தமிழகத் தொழில் மந்திரியையும் வரவழைத்து அவர்களது கருத்துக்களை மோத விட்டோம். மாணவர்களும் பல பகுதிகளாகப் பிரிந்து இத்துறை சம்பந்தப்பட்ட தலைப்புக்களில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் தயாரித்துப் படித்தோம். இம்மாநாட்டின் மூலமாகப் பலவித கருத்துக்கள் எங்களுக்குத் தெரிய வந்தன.

கனகா: ரியலி சம்திங் ஒண்டர்ஃபுல்... மாணவ சமுதாயம் இம்மாதிரியான ஆக்கபூர்வமான செயல்களில் ஈடுபடறதை நானும் ரொம்பவும் வரவேற்கிறேன்... ஈவன் இன் அவர் ஸ்டான்லி மெடிகல் காலேஜ் சமீபத்திலே நாங்கள் ஒரு மருத்துவக் கண்காட்சி நடத்திப் பணம் கலெக்ட் பண்ணி 'அலமாடி' எனும் கிராமத்துலே ஒரு ஆஸ்பத்திரி கட்டறதுக்கு உதவியிருக்கோம்.

சாரங்கன்: நான் அதைப்பற்றிக் கேள்விப்பட்டேன்... எநோபிள் டீட்... அது சரி.... உங்களைப் பற்றிச் சொல்லுங்கள்... உங்களுக்கு வேறு எந்தத் துறைகளில் ஆர்வம் உண்டு?

கனகா: நாட்டியம் ஆடுவேன். முறையாகப் பயின்றுள்ளேன். நாட்டியக் கச்சேரிகளே செய்திருக்கிறேன். ஓரளவு ஓவியமும் வரைவேன்...

சாரங்கன்: ஈஸ் இட்.... நீங்கள் வரைந்த ஓர் ஓவியத்தை முடிந்தால் காண்பியுங்கள்..

கனகா: ஓ ஷ்யூர்... ஆங்கில நாவல்கள் படிப்பதில் ஆர்வம் உண்டு....அபௌட் யூ...?

சாரங்கன்: பேச்சுப்போட்டி, கருத்தரங்கம் ஆகியவற்றில் பங்கேற்கும் ஆர்வம் உண்டு....

கனகா: க்ளாட் டு ஹேவ் மெட் யூ....

சாரங்கன்: தேங்க்யூ..... உங்களுடன் உரையாடுவது மிகவும் சுவையான நேரமாய் இருந்தது.

கனகா: தேங்க் யூ....

உரையாடல் ஏற்பாடு: நாயகன்
படம்: சிக்கி



## கொள்ளையாட்டா? விரோதமா?

நியூஸிலாந்தில் கிறிஸ்து சர்ச் என்னுமிடத்தில் வாழும் ஜான் ஹார்வுட், ஒருநாள் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய பொழுது, அவரது வீட்டுக் கூரை, ஜன்னல்கள், ஜமுக்காளங்கள், குளியல் தொட்டி முதலியவற்றைக் காணவில்லை! ''என் வீட்டில் எதை வேண்டுமானுலும் நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்ற விளம்பரத்தை அவர் பெயரில் ஸ்தல பத்திரிகைகளில் டெலிபோன் மூலமாக யாரோ கொடுத்து விட்டார்கள்! எனவே, அவர் வீடு சூறையாடப்பட்டது! இது குறித்து அவர் போலீசில் புகார் செய்தார். அந்த வீட்டிலிருந்து எதையும் எடுத்தவர்கள்மீது திருட்டுக் குற்றம் சுமத்தப்படும் என்று போலீஸ் எச்சரிக்கை செய்த பொழுது, உத்தரங்கள், மேல் கூரையின் இரும்புச் சட்டங்கள் ஆகியவை திரும்ப வந்தன; ஆனுல் குளியல் தொட்டி, ஜமுக்காளங்கள், கதவுகள் முதலியவை திரும்ப வரவில்லை!

—நியூடைம்ஸ்.

"ஓ...! நீங்க இன்னும் பிரமச்சாரியா?'' என்று நான் வியப்பு பொங்கக் கேட்டதற்கு, ''ஆமாம்'' என்று பெருமிதம் கலந்த அழுத்தத்தோடு பதில் சொல்லிவிட்டு, தம் மனப் பவித்திரத்தைப் பிரதி பலிக்கிற மாதிரியாகப் பளிச்சென்று ஒரு சிரிப்பும் சிரித்தார் தர்மராஜன்.

எங்களது பொழுதுபோக்கு உரையாடலில் ஒரு சிறு இடைவெளி ஏற்பட்டது.

காப்பி சாப்பிட்டுவிட்டு வைத்திருந்த காலி டம்ளர்களை அவருடைய மிக வயதான தாய் தள்ளாடும் நடையுடன் வந்து எடுத்துக் கொண்டு போனாள்.

அறைச்சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களை, தர்மராஜன் வெறித்துப் பார்த்தார். அவர் மனம் கண்களுக்குப் போக்குக் காட்டிவிட்டு எங்கோ தொலை தூரத்தில் சஞ்சாரம் செய்வது தெரிந்தது.

எனக்கு அவருடைய வயதை அநுமானிக்கத் தோன்றிற்று. எப்படியும் என்னைவிட நான்கு அல்லது ஐந்து வயது அதிகமாகத்தான் இருக்கும். அதாவது ஐம்பதுக்கு மேல். ஆதாரங்களாய்........ அதிகமாக மேடேறிச் சென்றிருந்த நெற்றி; பாதிக்குமேல் பழுத்துப் போன கேசம்; வடிய ஆரம்பித்திருந்த கன்னங்கள்; கருவிழிக்குள் சுற்றிலும் கோட்டை கட்டியிருந்த வெண்பிறை........

'ஒவ்வொரு கல்லுக்கு அடியிலும் ஒரு தேள் பதுங்கியிருக்கிறது' என்கிறமாதிரி, இவருடைய ஐம்பத்தைந்து வயது பிரம்மச்சரியத்திற்குப் பின்னால் பதுங்கியிருக்கும் சோகக்கதை என்னவாக இருக்கும்? மனத்துக்குள் நான் கேள்வி எழுப்பிக் கொண்ட நேரத்தில் அவர் மௌனம் கலைந்து ஏதோ ஒரு கனவுலகில் மிதந்தவராகப் பேசினார்.

''ஏன் மிஸ்டர் கேசவன்! வாழ்க்கையிலே ஒருமுறைகூடக் காதலிக்காதவன் மனுஷனே இல்லைன்னு யாரோ சொல்லியிருக்காங்களில்லையா?''

ஓகோ! அப்படியானால் பதுங்கியிருப்பது காதல் விவகாரம்தானா?

''ஆமாம். யாரோ சொல்லியிருக்காங்க. யாருன்னு எனக்கும் நினைவில்லை.''

''சரி, யாரோ ஒரு அறிஞர் சொல்லியிருக்கார். இருக்கட்டும். அவர் சொல்லியிருக்கிறதைப்பற்றி நீங்க என்ன நினைக்கறீங்க?''

நான் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தேன். எந்த மாதிரியான பதில் இவருக்குப் பிடிக்கும் என்று என்னால் சுலபத்தில் நிர்ணயிக்க முடியவில்லை. ஆனால் நான் ஏதாவது பதில் சொல்லியாக வேண்டுமே!

''அந்த அறிஞர் எப்படியோ ஒருதரம் காதலிச்சுட்டார் போலிருக்கு! அதனால்தான் அப்படித் தைரியமா சொல்லியிருககார்னு நெனைக்கிறேன்.''

என் பதிலைக் கேட்டதும் அவர் பலமாகச் சிரித்தார்.

நானும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். இந்த ஊருக்கு வேலை மாற்றிவந்து

போட்டிக் கதை—11

# காட்டில் எரிந்த நிலவு

லிங்கன்



இவரோடு அறிமுகமாகி நெருங்கிப் பழக ஆரம்பித்த பத்து நாட்களில் இவர் வெகு தாராளமாகத்தான் சிரிக்கிறுர். ஒருவேளை தம் வாழ்க்கையில் நேர்ந்துவிட்ட மகத்தான சோகத்தை இப்படிச் சிரித்தே ஆற்றிக் கொள்ள முயல்கிருரோ?

''என் அபிப்பிராயத்தைச் சொல்லிவிட்டேன். உங்க அபிப்பிராயம் என்ன?''

''வாழ்க்கையில் ஒருமுறைகூடக் காதலிக்காதவன் மனுஷன் இல்லே தான். ஒத்துக்கலாம். ஆனு அதே மாதிரி, வாழ்க்கையில் ஒரு தடவைக்கு மேலே காதலிக்கிறவனும் மனுஷனே இல்லேங்கறது என் அபிப்ராயம்.''

அவர் உணர்ச்சி தொனிக்கப் பேசினுர். நான் என் மனத்துக்குள் பரிகசித்துக்கொண்டேன். அப்படியானல் இவருக்கு இரண்டாவது சான்ஸ் கிடைக்கவில்லை போலிருக்கிறது என்று!

ஆனல் ஒன்று. இவருடைய இந்தக் கோபமான அபிப்பிராயத்துக்கும், இவருக்கு ஏற்பட்ட ஒரே ஒரு காதல் அனுபவத்துக்கும் இடையில் ஏதோ ஒரு நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அப்போது தர்மராஜன் மேலும் பேசினுர்:

''என்னைப் பொறுத்த வரையில் காதலே ஆன்மாவிலிருந்து அரும்பி இதழ் விரிச்சு வாழ்க்கை முழுவதுக்கும் மணம் வீசிக்கொண்டிருக்கிற ஒரு அபூர்வ மலராக நெனைக்கிறேன். ஆன்மா அழிந்தாலன்றி அந்தக் காதல் மலரும் அழியாது. அழியறதுக்கு நியாயமே இல்லே!... நீங்க என்ன சொல்றீங்க கேசவன்? ஹேவ் யூ காட் எனி எக்ஸ்பீரியன்ஸ் வித் லவ்?''





**''பம்பாயிலிருந்து நீ அழைத்து வந்த வேலைக்காரப் பெண்ணை விரட்டி விட்டாயாமே ஏன்?''**

**''நான் இல்லாத சமயத்தில் வந்த இரண்டு புது புரொட்யூசர்கள் அவளை 'புக்' பண்ணிட் டாங்களே!''**

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

''யெஸ்!......... அந்த அறிஞருடைய ஃபார்முலா படி நானும் ஒரு மனிதன்தான்.'' —என்று மட்டும் நான் பதில் சொன்னேன்.

''ஓ......! அப்படின்னு நமக்குள்ளே சுவாரசியமா பேசிக்கிறதுக்கு நிறைய விஷயமிருக்குன்னு சொல்லுங்க.''

''வயசான ரேண்டு பேர் தங்களுடைய இளமைக்கால அனுபவங்களைப் பரிமாறிக் கிறது நிச்சயம் ஒரு சுவாரசியமான பொழுது போக்கா இருக்கும். இல்லையா?''

''ஓ...... நிச்சயமா.''

அவர் பீடி ஒன்றை நிதானமாக எடுத்து மிக நிதானமாகப் பற்ற வைத்தார்.

ஆமாம். அவர் பீடிதான் புகைக்கிறார். இந்தத் தகாத சகவாசத்தை இவரால் எப்படித் தான் உணர முடியாமல் இருக்கிறதோ தெரிய வில்லை. அவர் பீடி புகைப்பதைப் பார்க்கும் போதெல்லாம் அவருடைய சட்டையில் ஊர்ந்து செல்கிற அருவருப்பான புழுவைச் சுண்டிவிடத் துடிக்கிற மாதிரியான ஓர் உணர்ச்சி எனக்கு ஏற்படும்.

''உங்களால் எப்பிடிப் பீடி புகைக்க முடியுது?'' — பத்து நாட்களாக வலுக்கட்டாயமாய் வாய்க்குள் அடைத்து வைக்கப்பட்டிருந்த கேள்வி இன்று என்னை மீறிப் பிறிட்டு விட்டது.

பல்லிடுக்குகள் வழியே பீடிப்புகை கசிய அவர் புன்னகை செய்தார்.

''என்னால் இதைப் பிரிய முடியலை.''

''அப்டின்னு நீங்க சிகரெட் பிடிக்கலாமே?''

''அது அதைவிடவும் கஷ்டமான காரியமாச்சே! கேசவன்!............ அனேகமா இன்னும் உங்களுக்குத் தெரிந்திருக்காது. நான் ரொம்பவும் ஸெண்டிமெண்டலானவன்! ரொம்ப......! நான் பழகுகிற மனிதர்களையும் சரி, நான் உபயோகப் படுத்துற யாதொரு வஸ்துவையும் சரி....... என்னாலே அவ்வளவு சுலபமா மாத்திக்கவோ அல்லது மறுதலிக்கவோ முடியறதில்லை. பழக்கமான ஒண்ணைத் திடீர்னு புறக்கணிச்சிட்டு அந்த இடத்துலே இன்னொண்ணை ஏத்துக்கிறதுங்கறது என்னைப் பொறுத்த வரையில் ரொம்பக் கஷ்டமான காரியம். உயிருள்ள ஜீவன்களோட எனக்கு உண்டாகிற ஆழமான பரிவும் பாசமும் ஜடப் பொருள்கள் மேலேயும் எனக்கு ஏற்பட்டுப் போகுது. ஒரு ஜடத்துக்கும், ஜீவனுக்கும் இடையில் எனக்கு அதிகமான உணர்ச்சிபேதம் ஏற்படுகிறதில்லை. உதாரணமா எடுத்துக் கிட்டா....... முப்பது வருஷங்களுக்கு முன்னால் நான் வாங்கின சைக்கிளும், கடிகாரமும் தான் இன்னும் என்கிட்டே இருக்கு. எவ்வளவு பழசாப் போனாலும் என்னால் அதை விலைகூறி வித்துட முடியலை. அதை வித்துடலாம்னு நெனைக்கும்போது முப்பது வருஷத்து அந்யோன்யமான உறவு முறியப்போறது மாதிரி எண்ணி என் மனம் துயரப்படுது. அவ்வளவு ஏன்?......... மேற்கொண்டு அணிய முடியாதபடி தேய்ஞ்சு அறுந்துபோன செருப்பையோ, கிழிஞ்சு போன சட்டையையோ நிராகரிக்கும் போதுகூட என் மனம் எவ்வளவு சஞ்சலப்படுது தெரியுமா? அவைகளெல்லாம் என்னைப் பார்த்து மௌனமான மொழியிலே அழுகிற மாதிரி எனக்கு ஒரு பிரமை தோணும். இந்த நிலையில் கிட்டத்தட்ட முப்பத்தைந்து வருஷத்துக்கு முன்னால் என்னோட உறவு ஏற்படுத்திக்கிட்ட இந்தப் பீடியை எப்படி என்னாலே அவ்வளவு சுலபமா ஒதுக்கிட முடியும்? இது கெடுதலானதுங்கறது தெரியும். இது என் கௌரவத்துக்கு உகப்பானதில்லைங் கறதும் கூட எனக்கு நல்லாத் தெரியும். ஆனால் அதுக்கெல்லாம் அப்பாலே எனக்கும் இந்தப் பொருளுக்கும் இடையில் ஒரு உறவுப் பிணைப்பு இருக்கு. அது என் ஆன்மா சம்பந்தப்பட்டது.''

அவர் நிறுத்தி விட்டு என்னைக் கூர்ந்து பார்த்தார். நான் எதுவும் பேசத் தோன்றாதவனாக அவர் முகத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

''என்ன? நான் பைத்தியக்காரத் தனமா உளர்றது மாதிரி தோணுதா?''

''நோ..... நோ.....! அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லை.'' — என்று நான் சமாளிக்க முயன்றேன்.

''அப்படிக்கூட உங்களுக்குத் தோணலாம். ஆனா நான் சத்தியமா பேசறேன் கல்லுக்குள்ளே கடவுளைக் கண்டு சிலர் கனிந்து உருகிக் கண்ணீர் சிந்துறதில்லையா? அதே மாதிரிதான் இதுவும்.''

அணைந்து போயிருந்த பீடியை ஆஷ் டிரேக்குள் போட்டு விட்டு, மேஜைமீது அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களில் ஒன்றை எடுத்து மேலோட்டமான பார்வையுடன் அதன் பக்கங்களைப் புரட்ட ஆரம்பித்தார். ஒரு குறிப்பிட்ட இடத்தில் அவர் பக்கம் புரட்டுவது நின்றது.

''இது ஒரு வகையான பலவீனம்தான். என்னுடைய இதே பலவீனத்துனுலேதான். நான் இன்னும் ஒரு பிரம்மச்சாரியாகவே வாழ்ந்துக்கிட்டிருக்கேன். சில சமயம் இந்தப் பலவீனத்தை ஒரு பலம்னுகூட நான் பெருமையா நினைச்சுச் சந்தோஷப் பட்டுக்கிறதுண்டு. நான் காதலிச்ச பெண் எனக்குக் கிடைக்கலே. ஆனு அவளைப்பத்தில நினைவுகளை மட்டுமே மனசுக்குள்ளே தாங்கி ஆயுள் முழுவதும் அடை காத்துக்கொண்டே வாழ்றது ஒரு பலம் தான். இல்லையா?''

''இருக்கலாம். ஆனு நீங்க காதலிச்ச பெண் என்ன காரணத்துனுல உங்களுக்குக் கிடைக்காமப் போனு?'' — என்று நான் ஆவலோடு கேட்டேன்.

''என்னளவிலே பார்க்கப் போனுல் அவள் ஒரு பெரிய பெண்ணே இல்லே. அவள் ஒரு சிறுமிதான். இந்த நிமிஷத்தில் நான் அவளை நினைச்சுப் பார்த்தாக்கூட, பாவாடை சட்டை அணிஞ்ச ஒரு பத்து வயசுச் சிறுமியாத்தான் என் நினைவுக்கு வர்ரு. கண்களில் நீர்ததும்பி நிற்கிற அதே பரிவு கலந்த பார்வை! ஒ......! அந்த முகம் எவ்வளவு பிரகாசமானது!''..................

உயரமான ஜன்னல் வழியே தெரிந்த வானவெளியில் அவள் தோற்றத்தைக் காண்பவரைப்போல் தமக்குள் சிலாகித்துத் தலையசைத்துக் கொண்டார். பின் மெதுவாய்ச் சிரித்தார். அதன் பிறகு என்பக்கம் திரும்பி ஒரு விநாடி என் கண்களை ஊடுருவ முயன்று விட்டு, பார்வையை அந்த அறையெங்கும் பரப்பிக்கொண்டு தொடர்ந்தார்.

''அவளும் நானும் பக்கத்துப் பக்கத்து ஊர்தான். ஒரே ஸ்கூல்ல, ஒரே கிளாஸ்லே படிச்சுக் கிட்டிருந்தோம். ஐந்தாங் கிளாஸ்.............

''முதல் வரிசைப் பெஞ்சுலே, முதல் இடத்துலே அந்தப் பெண் உட்கார்ந்திருக்கும். அதுக்கு அடுத்த ஆண்கள் வரிசையில் அந்தப் பெண்ணுக்கு நேர் பின்னுல் நான் உட்கார்ந்திருப்பேன். அது என்னைவிடவும் சிவப்பு. ரெண்டு பக்கமும் குஞ்சம் வச்சுக் கட்டின நீண்ட ரோஜாமாலே மாதிரியான உடல் வாகு...............

''காதல்ங்கறது ஒரு விநோதமான உணர்வுதான் இல்லையா? ஒரு விநாடிச் சலனத்துலே கருத்தரிச்சு, ஊழிக் காலத்துக்கும் நித்யமாகிப் போகிற மிக உன்னதமான வஸ்து!......

''நான் அவளைக் காதலிக்கும்படியா என்னைச் சலனப் படுத்தின அந்தச் சம்பவம் கூட ரொம்பச் சாதாரணமானதுதான்.

''வேறே ஒண்ணுமில்லே! எனக்கு ஒன்பதாம் வாய்ப்பாடு சரியாச் சொல்லத் தெரியலே. ஐந்தாங் கிளாஸ் படிக்கிற பயலுக்கு ஒன்பதாம் வாய்ப்பாடு கூடச்சரியாத் தெரியலேயாடான்னு நீளமான புளிய விளாஸறை வச்சு முதுகுலேயும், கால்லேயும் விளாசு விளாசுன்னு விளாசி என்னைப் பெஞ்சுமேலே ஏத்திட்டார் வாத்தியார். அத்தனை அடியையும் வாங்கிக்கிட்டுப் பொங்கி வந்த அழுகையைக் கஷ்டப்பட்டு அடக்கிக்கிட்டு நின்றேன். ஆனு எனக்கு முன்னுடி உட்கார்ந்திருந்த அந்தப் பொண்ணு திரும்பி, தலை நிமிர்ந்து என்னைப் பாத்துச்சு. அது கண்களில

# கடைசி ஆயுதம்!

ஸ்டாக் ஹோம் மீருகக் காட்சி சாலையின் பணப்பெட்டி பலமுறை கொள்ளை அடிக்கப் பட்டுள்ளது. இப்பொழுது அந்தக் காட்சி சாலையின் கதவுகள் மூடப்படும் பொழுது, கொள்ளைக்காரர்களை விரட்டுவதற்காக, நான்கு மீட்டர் நீளமுள்ள ராஜ நாகம் அவிழ்த்து விடப்படுகிறது!

நியூ டைம்ஸ்.

இப்போ சிந்தட்டுமா, சித்த பொறுத்துச் சிந்தட்டுமாங்கிற மாதிரி கண்ணீர் ததும்பி நின்னுச்சு. அதைப் பார்த்தேனே இல்லேயோ...... கரை உடைஞ்சது மாதிரி நான் 'ஓ'ன்னு அழ ஆரம்பிச்சுட்டேன்.

''இவ்வளவுதான் நடந்தது. அந்தச் சம்பவத்துக்குப் பிறகு எனக்கு அந்தப் பெண் மேல் ஓர் அலாதியான பிரியம். அவளுக்காக நான் ஏதாவது செய்ய வேண்டியது நேர்ந்தால் அது எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கும் தெரியுமா? அவளுக்கு எழுதுறதுக்குச் சிலேட்டுக் குச்சி இல்லேன்னு எங்கிட்ட ஒண்ணே ஒண்ணு இருந்தாலும் அதை அவளுக்குக் கொடுத்துட்டு நான் பிறத்தியார் கிட்டே அலேவேன். அவளுக்கும் அவளோட வர்ற தோழிகளுக்கும் நான் எத்தனை வாளி தண்ணின்னுலும் விழுந்து விழுந்து சேந்துவேன். அவளுக்குப் பென்சில் சீவுறதுக்கு எத்தனை வகுப்புக்கு அலேஞ்சின்னுலும் பிளேடு வாங்கித் தருவேன். அவளை எவன்னுச்சும் சீண்டினுனே.........அவன் எத்தனுங்கிளாஸ் படிக்கிற பயலாக இருந்தாலும் சரி. அவனேட கட்டிப் புரளுவேன். கல்யாணம்னு என்னன்னே சரியாத் தெரியாத அந்தப் பருவத்துலேயே நான் எனக்குள்ளே முடிவு செஞ்சுக்கிட்டேன். கல்யாணம் பண்ணினுல் இவளைத்தான் பண்ணிக்கணும்,............

''மறுவருஷம் ஆறும் வகுப்புப் படிக்கிறதுக்கு அந்தப் பெண்ணை வெளியூருக்கு, யாரோ சொந்தக்காரங்க வீட்டுக்கு அனுப்பிச்சிட்டாங்க. அதுக்குப் பெறகு இன்னைக்கு வரையில் எனக்கு அவளைப் பார்க்கிறதுக்கான சந்தர்ப்பம் கிடைக்கவே இல்லே. ஆனுல் என் மனசுக்குள்ளே அவளை நினைவு படுத்திப்பார்க்காமல் நான் ஒருநாள் கூட இருந்ததில்லே. அப்படிப் பார்க்கிற ஒவ்வொரு தடவையும் அதேமாதிரி பாவாடை சட்டையோட........ எனக்காக நீர் சுமந்து நிற்கிற அதே கண்களோட.......

''திருவேடகம் ஏடகநாதஸ்வாமி தேவஸ்தானத்துல நான் நிர்வாக அதிகாரியாக வேலே பார்த்தப்போ எங்க வீட்டிலே எனக்குக் கல்யாண ஏற்பாடு செய்ய ஆரம்பிச்சாங்க. நான் அந்தப் பெண்ணைப் பற்றி எல்லா விவரத்தையும் எங்க அப்பா கிட்டே சொல்லி அந்தப் பெண்ணுக்கு இதுவரையில் கல்யாணம் ஆகாமல் இருந்துச்சுன்னு அவளையே ஏற்பாடு செய்யும்படியாக் கேட்டுக்கிட்டேன். அப்பா ஊருக்குப் போன பதினைந்தாவது நாள் எனக்குக் கடிதாசு வந்திடுச்சு.

''அந்தப் பெண் திருச்சிக்குப் பக்கத்துலே ஏதோ ஒரு ஊர் ஹைஸ்கூல்ல டீச்சரா



இருக்கு. உன் அதிர்ஷ்டம் அதுக்கு இன்னும் கல்யாணம் ஆகலே. உன் ஆசைப்படி அந்தப் பெண்ணேயே ஏற்பாடு பண்ணிட்டேன். அடுத்த வாரம் நிச்சய தாம்பூலம்... அப்படின்னு சேதி வந்துச்சு. எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருந்திருக்கும்னு நீங்களே கற்பனே பண்ணிப் பாருங்க.

''என்னேயும் அவளேயும் சுற்றி எவ்வளவு குதூகலமான ஒரு கனவு உலகத்தை நான் சிருஷ்டித்து வைத்திருந்தேன் தெரியுமா?

''எங்களுக்குள்ளே முரண்பாடுகளே கிடையாது. நான் சொன்னபடி அவள் நடந்தாள். அவள் சொன்னபடி நான் ஆடினேன். எங்க ரெண்டுபேருடைய ஆசைகளும் லட்சியங்களும் ஒரே மாதிரி...........

''என் ஆபீஸ் வேலேயில் அவளும் எனக்கு உதவி செய்தாள். நானும் அவளுக்கு வீட்டு வேலேகளிலே உதவி செஞ்சேன். கிணத்துல தண்ணி சேந்துனேன்,...., பலகாரத்துக்கு மாவு அரைச்சுக் கொடுத்தேன்,..... பிடிவாதமா பாத்திரம்கூட விளக்கினேன்!....... எல்லாம் கற்பனேயிலேதான்!...........

''எங்களுக்கு ஒரு பையனும் பெண்ணும் பிறந்தாங்க. பையன் பிரபல எழுத்தாளன். பெண் ஒரு கல்லூரிப் பேராசிரியை.....சிறந்த சமூக சேவகி.........

''எங்களுக்கு வயசாகிப் போயிடுச்சு. நாங்க ரெண்டுபேரும் சேர்ந்து காசியிலிருந்து கன்யாகுமரி வரையில் க்ஷேத்ராடனம் போய்ட்டு வந்தோம். வந்தபிறகு ஒருநாள் எதிர்பாராத விதமா அவள் திடீர்னு இறந்து போய்ட்டா. அவ்வளவுதான். அதுக்கு அடுத்த நிமிஷமே நானும் மாரடைப்புலே இறந்துட்டேன்!''

இப்படிச் சொல்லிவிட்டுத் தர்மராஜன் பலமாகச் சிரித்தார். மீண்டும் மீண்டும் சிரித்தார். அவர் சிரித்து ஓய்ந்தபோது அவருடைய விழிக்கடை வழியே நீர் பொங்கி வடிந்ததை என்னல் பார்க்க முடிந்தது. இமைகளேத் தடவி விட்டுக் கொள்கிற பாவனேயோடு அவர் அதைத் துடைத்துக் கொண்டு மீண்டும் பேசினர்.

''இப்படி எத்தனே நாட்கள் நாங்க ஜோடியா செத்துப் போனேம்னு எனக்கு நினேவில்லே. ஆனு இந்தச் சமயத்துலதான் என் வாழ்க்கையையே தலேகீழா மாத்தி, என் கனவுகளேயெல்லாம் சிதைத்துப் புதைத்து விடுகிறமாதிரி எனக்கு இந்தக் கடிதம் கிடைச்சுது''.....

அவர் திறந்து வைத்திருந்த புத்தகத்துக்குள்ளேயிருந்து ஒரு கடிதத்தை எடுத்து என்னிடம் நீட்டினர். நான் அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தேன். அதில் எனக்கு மிகவும் பரிச்சயமான எழுத்துக்கள்! படித்துப் படித்துப் பாராயணமாகிப்போன வார்த்தைகள்!

நெஞ்சுக் கூட்டுக்குள் ஒரு வெடிகுண்டைப் புதைத்து வைத்து வெடிக்கச் செய்தால் எப்படியிருக்கும்?

ஓ........ கடவுளே! இது என்ன இக்கட்டான சந்திப்பு? அந்த ஆர். டி. ராஜன்தான் இந்தத் தர்மராஜன்னு? அந்த மனேகரிதான் இவர் காதலித்த பெண்ணு?

நான் கடிதத்தைப் படிப்பதற்குத் தயங்கிக் கொண்டிருப்பதாக நினேத்து, ''சும்மா அதைப் படிச்சுப் பாருங்க'' என்று தர்மராஜன் என்னேக் கேட்டுக் கொண்டார்.

நான் ஏன் அதைப் படிக்க வேண்டும்? பல நூறுமுறை படித்துப் படித்து என் ஜீவத் துடிப்போடு சுருதி சேர்த்துக்கொண்டு நான் கானமாய்ப் பாடித் திரிந்த கதை அல்லவா அது!

ஆனுலும் அவர் பொருட்டு அதை மீண்டும் ஒருமுறை படித்தேன். படித்துவிட்டு ஒன்றுமே புரியாதவனேப் போல் அவர் முகத்தைக் கூச்சத்தோடு நிமிர்ந்து பார்த்தேன். அவர் எனக்குச் சொல்ல முனேந்தார்.

''அந்தப் பெண்ணே நான் விரும்பினேன். ஆனுல் அவளோ இன்னெருத்தரை விரும்பியிருக்கிறுள். அவள் தன் காதலனுக்கு எழுதிய கடிதம்தான் இது! ஹா! எவ்வளவு அருமையாக எழுதியிருக்கிறுள் பாத்தீங்களா? ஒவ்வொரு வார்த்தையும் காதல் கொண்டிருக்கிற தன் இதயத்தின் துடிப்புக்கள் அதிர்வு அலேயெழுப்பிப் பிரதிபலிக்கிறமாதிரி......! அவளுடைய கையெழுத்தே தனி ரகமானது. அதிகம் சுழிப்புக்களே இல்லாம...... ஒரு பார்வைக்குப் பழைய கல்வெட்டு எழுத்துக்கள் மாதிரி..... இல்ல?''

நான் கல்லாய்ச் சமைந்திருந்தேன்.

''எனக்கும் அவளுக்கும் கல்யாணம் நிச்சயமாகப் போறது தெரிஞ்சதும் பதறிப்போய், அதை நிறுத்தறதுக்காக அவளுடைய அன்புக்குப் பாத்திரமான அந்த அதிர்ஷ்டசாலிதான் எனக்கு இந்தக் கடிதத்தை அனுப்பி வைத்திருந்தான். இந்தக் கடிதத்தோட ஒரு சிறு குறிப்பு இருந்துச்சு. மனேகரியை நான் உயிருக்கு உயிராகக் காதலிக்கிறேன். அவளும் என்னே எவ்வளவு மனப் பூர்வமாக நேசிக்கிறுள் என்பதற்கு அவள் எனக்கு எழுதிய இந்தக் கடிதமே சாட்சி. ஆகவே எங்களே வாழ்க்கை முழுமைக்கும் சேர்த்து வைத்து எங்களே ஆசீர்வதிப்பீர்கள் என்று நம்புகிறேன் —அப்படின்னு அதுல எழுதியிருந்துச்சு. எழுதினவங்க பேர் இல்லே. நான் அதை எப்படியோ தவற உட்டுட்டேன்!.......

''இந்தக் கடிதமும் அந்தக் குறிப்பும் கிடைச்ச மறுநாளே நான் எங்க அப்பாவுக்குக் கடிதம் எழுதிட்டேன். எனக்கு அந்தப் பெண் வேண்டாம். உடனே கல்யாண ஏற்பாடுகளே நிறுத்திடுங்கன்னு. அப்பிடி எழுதும்போது எனக்குக் கொஞ்சங்கூட வருத்தமே ஏற்படலே. அதுதான் வேடிக்கை! ஒரு சிறு இழப்பைக் கூடத் தாங்க முடியாத எனக்கு அதுமட்டும்

எப்பிடி சாதாரண விஷயமாப் போனதோ தெரியலே, ஒருவேளை உண்மையான காதலின் குணமே தியாகம்தானே?

''அதுக்குப் பின்னாலேகூட அவள்மேல் எனக்கு உள்ள அன்புப் பிடிப்பு மேலும் அதிகமாச்சே தவிர குறையவே இல்லே. காதலின் முடிவான நோக்கம் கல்யாணம் செஞ்சுக்கிறதில்லே. தேவையால் வாழ்க்கையைத் தியாகம் செஞ்சுட்டு மேலும் அதை ஸ்திரப்படுத்திக்கிறதுதாங்குறது என்னைப் பொறுத்த வரையில் உண்மையாயிடுச்சு.

''கல்யாணத்தில் என்ன இருக்கு? ரெண்டு உடல்களையும் ஒண்ணோடை ஒண்ணு பிணைச்சுக்கிட்டுக் கட்டிப் புரண்டுக்க முடியும். பிதுர் உற்பத்தி செஞ்சுக்க முடியும். அதுக்குமேல் என்ன?

''எங்க கல்யாண ஏற்பாடு நின்றுபோனதும் அப்பாவும் அம்மாவும் என்னோடைலே வந்து தங்கிட்டாங்க. அதனால் அதுக்குப் பின்னால் அந்தப் பெண்ணைப் பற்றி என்னால் எதையுமே தெரிஞ்சுக்க முடியலே.

''அவள் தன்னைக் காதலிச்சவனையே கட்டிக்கிட்டு எங்கோ ஓர் இடத்தில் சந்தோஷமா வாழ்ந்துக்கிட்டிருக்கிறாள். நான் அவளுக்குப் பதிலாக இன்னொருத்தியை ஒத்துக்க மனம் ஒப்பாமே தனியாக வாழ்ந்துக்கிட்டிருக்கேன். தனியான்னு ஸ்தூலத் தனிமையைச் சொல்றேன். அவள் வேறு ஒருத்தனைக் கட்டிக்கிட்டதனால் நான் ஒண்ணும் அவளை இழந்துடலே. மனோகரி எனக்குள்ளேதான் இருக்கிறாள். ஐ லவ் ஹர். யெஸ், ஸ்டில் ஐ லவ் ஹர்! ஐ வில் லவ் ஹர் பார் எவர்!.........''

அவருடைய வார்த்தைகள் எரிகற்களாய் என்னை வந்து தாக்கின. சுயவெறுப்பு கலந்த வெறி எனக்குள் உருவாகி என்னை உலுக்கிற்று. இந்த நேரத்தில் என் விரல்கள் அனைத்திலும் கோர நகங்கள் வளர்ந்து என்னை நானே கிழித்துக் குதறிக் கொள்ள முடியுமானால்....!

இந்தத் தர்மராஜனைப் போலவேதான் நானும் மனோகரியை மனப்பூர்வமாகக் காதலித்தேன். அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று தீராத ஆவலும் கொண்டேன். அதன் காரணமாகத்தான் மனோகரிக்கும் வேறு ஒருவருக்கும் கல்யாண ஏற்பாடு நடைபெறுகிறது என்பதை அறிந்ததும் பதறித் துடித்தவனாய், முதலில் அதைத் தடுத்து நிறுத்தும் பொருட்டு அவள் எனக்கு எழுதிய கடிதத்தை இந்தத் தர்மராஜனுக்கு அனுப்பி வைத்தேன். பலன் ஏற்பட்டது. ஆனால் அதற்குப் பிறகு என் புத்தி எப்படியெப்படி யெல்லாம் மாறிப்போய்விட்டது!

எங்கள் விருப்பப்படி எனக்கும் மனோகரிக்கும் திருமணம் பேசப்பட்டது. அப்போது மனோகரியின் பெற்றோர் தங்களுக்கு வேறு ஜீவனோபாயம் இல்லாததால் மனோகரி வாங்குகிற மாதச் சம்பளத்தில் பாதியைக் குறைந்தது ஐந்து வருஷங்களுக்காவது தங்கள் குடும்பத்துக்குத் தந்துவிட வேண்டுமென்று கேட்டார்கள். மனோகரியும் அதை வற்புறுத்தினாள். ஆனால் இதில் என் பெற்றோருக்குச் சம்மதமில்லாமல் போய்விட்டது. கல்யாணம் தடைப்பட்டது. இந்த நேரத்தில் வேறு ஒரு பெண் வீட்டார் எனக்குப் பெண்தர முன்வந்தனர். ஆண் வாரிசு இல்லாத இடம். ஐயாயிரம் ரூபாய் ரொக்கம். அரை லட்ச ரூபாய் பெறுமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களோடு அழகான பெண்.

வாழ்க்கையில் சொத்து சுகம், ரொக்கம் இவைகளைப் போல் அன்போ, பாசமோ கை கொடுப்பதில்லை என்று என் சுற்றமும் நட்பும் எனக்குப் போதனை செய்தன. நான் மனம் மாறிப் போனேன். நான் உயிருக்கு உயிராய் நேசித்த மனோகரி எனக்குச் சாதாரணமாகிப் போனாள். ஆகவே அவளை ஒதுக்கிவிட்டுப் புதியவளைத் திருமணம் செய்து கொண்டேன். அது எப்படி முடிந்தது?

என்னால் மட்டும் எப்படி மனோகரியின் இடத்தில் சுலபமாய் இன்னொருத்தியை இருத்திக்கொள்ள முடிந்தது?

என்னை நேசித்த மனோகரிக்கும், என் பொருட்டு அவளைத் தியாகம் செய்த இந்தத் தருமராஜனுக்கும் நான் எவ்வளவு பெரிய துரோகம் செய்திருக்கிறேன்!

'மனிதனால் சிருஷ்டிக்கப்பட்ட பணம் என்னும் அமிலம் மனித ஆன்மாவையே அரித்துக் கொண்டு வருகிறது' என்று சொல்லப் படுவது எவ்வளவு உண்மை!.......

''என்ன யோசனையில் மூழ்கிட்டீங்க? உங்க பங்குக்கு உங்க காதல் அனுபவத்தைச் சொல்றதுக்குத் தயாராகிக்கிட்டிருக்கீங்கன்னு நினைக்கிறேன்.'' — தர்மராஜன் என்னைப் பார்த்து ஒரு சந்தோஷமான கண் சிமிட்டலோடு கேட்டார்.

என்னால் பதில் பேச இயலவில்லை.

நான் எப்படி என் கதையை இவரிடம் சொல்வேன்! இவருடைய மனோகரி, தான் விரும்பியவனோடு வாழ்ந்து கொண்டிருக்கிறாள் என்ற நம்பிக்கையோடும் சந்தோஷத்தோடும் தனி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிற இவரிடம் நான் என் கதையைச் சொல்லி, இவர் என்னை நம்பிச் செய்த தியாகத்தையும் இவருடைய ஐம்பத்தைந்து வயது பிரமச்சரிய வாழ்க்கையின் அர்த்தத்தையும் ஒரே நிமிஷத்தில் சிதைத்துவிட நான் விரும்பவில்லை.

அதற்குப் பதிலாக 'நான் என் வாழ்க்கையில் ஒருமுறை கூட காதலிக்கவில்லை. ஆகவே அந்த அறிஞர் வார்த்தைப்படி நான் ஒரு மனிதனே இல்லை' என்று கூறிவிட்டு அங்கிருந்து எழுந்து ஓடிவிட வேண்டும் போலிருந்தது எனக்கு.

## டூரிஸ்டு ஸ்பெஷல்!

லண்டனில் செயின்ட் பால் கதீட்ரலுக்கு அருகிலுள்ள ஹோட்டலுக்குச் சென்ற ஒருவர், 'மெனு' கார்டில் எல்லாப் பண்டங்களும் வழக்கத்தைவிட அதிக விலையில் இருப்பதைக் கண்டு வியப்புத் தெரிவித்தார். ஓட்டல் சர்வர் நிதானமாகக் கூறினார்: ''ஐயா! டூரிஸ்டுகளுக்கான மெனு கார்டு உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது; வருந்துகிறேன்.''

நியூ டைம்ஸ்.

2

படம் : செல்லம்



மறுநாள் காலை 9 மணி. சதியாலோசனை தொடர்கிறது. ஆராமுது மேஜை அருகே லெட்சுமணன், ரங்கநாதன், விமலா.
பட்டாபியின் கொட்டாவி... ஐ'ம் சாரி, கொட்டம் அடங்கணும்!




மனுஷனுக்கு முன்கோபம் மட்டும் தான்; விட்டுடுங்க




அது போதாதா? கொழுப்பு + கொட்டம் = கொட்டாவி, ஐ மீன் பட்டாபி!
ஸார், ராத்திரி சரியாத் தூங்கலேன்னு தெரியுது!




ஐடியா! ஸ்டோர்ஸில் ஏதாவும் காணும்னு சொல்ல வேண்டும்!
பட்டாபி ஒருவர்தான் ஸ்டாக் செக் பண்ண அங்கே போனார்னு நாம் கூறணும்!




அவர் தான் போகவே இல்லேன்னு மானேஜரிடம் சாதித்தால்?
நாம அத்தனை பேரும் அடித்துச் சொன்னால் நம் பேச்சுதான் எடுபடும்!
மானேஜரையா! நீங்க வேணும்னு அடியுங்க; நான் மாட்டேடன்!




இடியட்! ஒரேயடியா நாமே சாதிச்சா போச்சுங்கறேன்.
அதுக்கு ஸ்டோர்கீப்பர் ஒத்துக்கணுமே?
அவரென்ன கோல்கீப்பரா? ஒத்துக்குவார். நான சமாளிச்சுக் கறேன்.







உருவாகியுள்ளதை அறியாத பட்டாபி தம் ஸீட்டில் அமர, மானேஜர் தம் அறைக்குப் போகிறார்....




று நேரத்தில் பட்டாபியிடம் பியூன் பரமசிவம் ந்து....




மானேஜர் அறையில்....



# இவரது அன்பு மனைவிக்கு ஒரு சேலை வாங்க விரும்புகிறார். நான்கு மில்களைப் பற்றிய சிந்தனை இவருக்கு உண்டு.

## எந்த மில் இவரது விருப்பத்தை நிறைவேற்றும்?

லக்ஷ்மி. இல்லத்தரசிக்கு ஏற்ற புடவையைத் தேர்ந்தெடுப்பதில் ஓர் ஆடவனுக்கு உள்ள அக்கறையை லக்ஷ்மி அறிந்து வைத்துள்ளது. ஆகையால்தான் அழகான புடவைகளைத் தயாரித்து வழங்குகிறது.

பாலரீனா புடவைகள் லக்ஷ்மியின் அரிய படைப்புகள். பாலரீனா வாயில் புடவைகளைத் தினசரியும் உடுத்தலாம்; விசேஷங்களுக்கும் அணியலாம். பாலரீனா பிரிண்டட் புடவைகள் மனைவியையும் மணாளனையும் ஒருங்கே மன மகிழ்விப்பவை.

அடுத்த முறை உங்கள் மனைவிக்குப் புடவை வாங்கச் செல்லும்போது பாலரீனா புடவைகளைத் தவறாமல் கேட்டுப் பார்வையிடுங்கள். அல்லது லக்ஷ்மி விற்பனை நிலையத்துக்கு விஜயம் செய்யுங்கள்.

உங்களது விருப்பத்துக்கேற்ற விதவிதமான துணிகளை லக்ஷ்மி வழங்குகிறது — உங்கள் மனைவி உங்களது ரசனையைக் கண்டு பாராட்டுத் தெரிவிக்கும் வகையில்.








ஸ்ரீ
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயமுத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னதச் சின்னம்

FDS LM 2606A TAM

ராமச்சந்திரன்: உங்களுடைய அணுகு முறையைப் பாராட்டுகிறேன். சில சமயங்களில் நிலைமை உங்களுடைய கட்டுக்கும் மீறி மாணவர்கள் தீவிரச் செயல்களில் இறங்கும் போது நீங்களும் அவர்களுடன் ஒத்துப் போக வேண்டிய அவசியம் ஏற்படலாம். இதனால் பொது மக்களுக்குப் பலவித இன்னல்கள் நிகழலாம். அப்போது உங்களது சேவை மனப்பான்மை சமுதாயத்தின் தீமையாக மாறிவிடுமே!

மதியழகன்: சேவை என்பது யாருக்காகச் செய்கிறோமோ, அந்தக் கண்ணோட்டத்தில் தான் சரியாக இருக்கும். மாணவர்களுக்காகச் சேவை செய்ய வரும்போது அவர்கள் நலனுக்கு வேண்டியதைச் செய்கிறோமா என்றுதான் எண்ண வேண்டுமே தவிர மற்றவர்கள் பாதிக்கப் படுகிறார்களே என்பதால் கொள்கையைத் தளர விட முடியாது!

ராமச்சந்திரன்: உண்மையிலேயே நீங்கள் சரியான தலைவர்தான். அது போகட்டும்... எதிர்காலத் திட்டங்கள் சொந்த வாழ்க்கையில் என்ன வைத்திருக்கிறீர்கள்!

மதியழகன்: பி.. யூ. சி. முடித்ததும் 'மெடிகல்' படிக்க வேண்டும் என்கிற ஆர்வம் இருக்கிறது. அது கிடைக்கா விடில் விவசாயத் துறையில் ஆராய்ச்சிப் படிப்புக்காக என்னைத் தயார் செய்து கொள்ள முயல்வேன்.... நீங்கள் தவறாக எண்ணிக் கொள்ளாத பட்சத்தில் உங்களிடம் ஒன்று கேட்க ஆசைப் படுகிறேன்...

ராமச்சந்திரன்: தாராளமாகக் கேளுங்கள். இதில் தயக்கம் என்ன இருக்கிறது?

மதியழகன்: சிற்பக் கலையைத் தேர்ந்தெடுத்துப் பயில்கிறீர்கள். உண்மையாகவே போதிய வருமானம் உங்களால் பெற முடியும் என்று நம்புகிறீர்களா?

ராமச்சந்திரன்: இவ்விஷயத்தில் ஒன்றை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். எந்த ஒரு கலைஞனும் கலைமேல் ஏற்பட்ட ஒரு விருப்பத்தால் அத்துறையை நாடி வரும்போது பொருள், பதவி, விருது ஆகியவற்றைப் பற்றி அவன் கவலைப்பட மாட்டான். கலையில் சிறப்படைவதுதான் அவனுடைய முக்கிய குறிக்கோளாக இருக்கும். நானும் அந்த ரகத்தைச் சேர்ந்தவன்தான். ஆனாலும் சிற்பக் கலையைக் கொண்டு ஜீவனத்துக்குப் போதுமான வருவாயையும் பெற முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

மதியழகன்: கலையார்வம்... கலைதான் பொருளைவிட முக்கியமானது... போன்ற லட்சிய எண்ணங்களெல்லாம் உங்களைப் பொறுத்த மட்டில் சொந்த முறையில் சரியானதாக இருக்கலாம்... நீங்கள் மணந்து கொண்டு, குடும்பம் விரிவடையும்போது உங்கள் குடும்பத்தினருக்கு நீங்கள் நிறைய பணம் சம்பாதிக்க வேண்டும், வசதிகளைப் பெற வேண்டும் என்கிற ஆவல் தோன்றலாம். அது நியாயமானதும்கூட. அவர்களைத் திருப்திப் படுத்த வேண்டியதும் உங்கள் கடமையில்லையா?

ராமச்சந்திரன்: ஒரு சிற்பியை மணந்து கொள்ள ஒருத்தி முன்வரும் போது பொருள் விஷயங்களில் ஆசை வைத்துக் கொண்டு வர மாட்டாள். அப்படிப்பட்ட எண்ணங்கள் அவளது உள்ளத்தில் இருந்தால் அவளுக்குத்தான் ஏமாற்றம் ஏற்படும். கலை, குடும்பம் ஆகிய இரண்டும் ஒரு கலைஞனுக்கு முக்கியம்தான். இரண்டில் ஏதாவது ஒன்றுதான் நிலைக்கும் என்றால் எனக்குக் கலைதான் முக்கியம்!

மதியழகன்: இது லட்சிய வாதம்... நடைமுறைக்குச் சரிப்பட்டு வருமா?

ராமச்சந்திரன்: லட்சியப் பிடிப்பு இருந்தால்தானே ஒருவன் கலைத்துறையைத் தேர்ந்தெடுக்க முடியும்?... என்னை ஒரு லட்சியவாதி என்று சொல்லிக் கொள்வதில் நான் பெருமைப் படுகிறேன். இச்சமயத்தில் ஒன்றை நான் மனப் பூர்வமாகச் சொல்ல ஆசைப் படுகிறேன். எங்கள் கல்லூரியின் முதல்வர் கணபதி ஸ்தபதி இருக்கிறாரே, அவரைப் போன்ற லட்சியப் பிடிப்புள்ள கலைஞரை உலகெங்கிலும் தேடினாலும் காண்பது அரிது. பூம்புகார், வள்ளுவர் கோட்டம் ஆகியவற்றை நிர்மாணிப்பதில் அவருடைய கைவண்ணத்தையும், கருத்து வண்ணத்தையும் கண்டிருப்பீர்கள். பி. ஏ. படித்து ஆசிரியராக இருந்தவர் அதைத் துறந்து விட்டுச் சிற்பக் கலைக்குத் தம் தந்தையைப் பின்பற்றி வந்து விட்டார். இக்கல்லூரி இன்று சிறந்த முறையில் வடிவு பெற்றதற்கு அவர் செய்துள்ள பணி வார்த்தைகளில் அடங்காதது. சிற்பக்கலை சம்பந்தமாக ஒரு சிறப்பான நூலை முதன் முறையாகத் தமிழில் அவர் எழுதி முடித்து அதைத் தமிழக அரசு வெளியிட்டு உள்ளது. எனக்கு இக்கலையில் இந்த அளவுக்கு ஈடுபாடு உள்ளது என்றால் அதற்கு அவர்தான் காரணம். அவரைப் போன்று கலையில் உயர வேண்டும் என்பதுதான் எனது வாழ்க்கையின் குறிக்கோள்!

மதியழகன்: உண்மையில் உங்களைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றதற்குப் பெருமைப் படுகிறேன்.

ராமச்சந்திரன்: போய் வாருங்கள், மறுபடியும் சந்திப்போம்.

உரையாடல் ஏற்பாடு: நாயகன்.

'முடியாது' என்ற சொல் முட்டாள்களின் அகராதியில்தான் இருக்கும்.
—நெப்போலியன்

மிகக் கடினமான வேலை சோம்பலாக உட்கார்ந்திருப்பது'தான்
—யூதப் பழமொழி

மனிதனைப் போல சிலசமயம் இயற்கையும் மகிழ்ச்சிக்காக அழுகிறது.
—டிஸ்ரேலி

தொகுத்தவர்: அனிதா ராமச்சந்திரன்

"பட்" பட்டாபி ③

கதை: சாருகேசி

படம்: செல்லம்















போதுமே உயிரை
வாங்க.

போய்த் தொலை
யேன்!

ரெண்டு பேரும் ஜாலியா சினிமா போக விடுவேனு? நானும் வரேம்ப்பா!

அதுக்குஅத்தனை பேர் எதுக்கு? நீங்க என்ன ஏகப்பட்ட கழுத்து துள்ள ராவணனு? கிடக்கு, யார் நாலு பேர்? என்ன செய்தாங்க?

லெட்ஜர் லட்சுமணன், அக்கவுன்டென்ட் ஆராமுது, ரெகார்ட் ரங்கநாதன், டைப்பிஸ்ட் விமலா!

அப்போ, மானேஜர் நல்லவரா?

நல்ல வேளை அப்பா ஹெட் கிளார்க் ஆனார். தந்தி கிளார்க்காகப் போயிருந்தா இருந்திருக்கும் ஒரு வாழ்த்துத் தந்தியும் போய்ச் சேராது.

எனக்கு வயிறு எரிகிறது, உனக்குக் கிண்டலா? மானேஜர் என் மீது திருட்டுக் குற்றம் சுமத்திட்டார்டா!

மைகாட்! ஏம்பா இந்தப் புத்தி உங்களுக்கு? ஐ மீன்... வாட் ஐ மீன்...

வாயை மூடு!... இதுக்கு ஒரு வழி பண்ணியாக

(தொடரும்)




இதைவிட மோசமாக நான் எதிர்பார்த்தேன்; இந்த அளவில் வந்து நின்றிருக்கிறது.

நாலு பேராக இறக்க முடியாமல் கண்ணனை ரிக்ஷாவிலிருந்து இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

நன்றாக இருட்டி விட்டது. ஒன்றுவிட்டு ஒன்று தெரு விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. மெல்ல வந்து கொண்டிருந்த ரிக்ஷாவையும் அதற்குப் பின்னாலே ஒல்லி ஒல்லியாகக் கண்ணை மறைக்கும் தலை முடியோடு வந்து கொண்டிருந்த அந்தப் பையன்களையும் பார்த்ததுமே நான் தெரிந்து கொண்டேன், உள்ளே ரிக்ஷாவிலிருப்பது என் மகன் கண்ணன்தான் என்று. வாசற்படி விளக்கைப் போட்டேன்.

கண்ணனைக் கைத்தாங்கலாக இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

''என்னடா என்ன சமாசாரம்?''

''ஒரு பொறுக்கி அடிச்சுட்டான் சார்!''— ஒருவன் சொன்னான்.

கட்டிலின் மீது உட்கார்ந்தான் கண்ணன். என் மனைவி லட்சுமி அலறியபடி அருகே நின்றுகொண்டு அவன் கையையே பார்த்துக் கொண்டிருந்தாள். கையில் ஒரு பெரிய கட்டு.

மேற்கொண்டு அவன் எங்கெல்லாம் விழுப் புண்களுடன் வந்திருக்கிறான் என்று ஆராய்ந்து கொண்டிருந்தேன் நான். கண்ணீர் விட்டபடி வேகம் வேகமாகக் கொஞ்சம் மணல், மிளகு, உப்பு என்று சில பொருள்களைச் சேர்த்துச் 'சுற்றி' கழித்தாள்.

பரபரவென்று மோரில் இரும்புக் கரண்டியின் காம்பைக் காய்ச்சிச் சூடிமுத்து அதையும் குடிக்கச் செய்தாள்.

''பச்சைக் குழந்தை... யாரையாவது கூப்பிட்டு மந்திரிச்சுப் பார்... பயந்து கியந்து போயிருக்கப் போகிறான்!''

இத்தனை நேரமும் மௌனமாக இருந்து விட்டு நான் விசுவரூபம் எடுத்தேன்.

கூடவந்த பையன்கள் — நகரலாமா வேண்டாமா என்று ஆற்றிலும் சேற்றிலும் ஒவ்வொரு காலாய் நின்றனர்.

''அடி பட்டுக்கொண்டு வந்திருக்கிற குழந்தையை என்ன ஏதுன்னு ஒரு வார்த்தை கேட்கலே... கர்ஜனையைப் பார்!''

லட்சுமி ஆட்டுக் குரலில் கனைப்போடு பேசினாள்.

அவளுக்கும் உள்ளூற பயம்தான். வந்திருந்த பையன்களுக்கும் பயம்தான். ஆனால் பெரிய வீரனைப் போல் விழுப்புண்களோடு உட்கார்ந்திருக்கிற இந்த உபயோகமில்லாத கண்ணனுக்கு மட்டும் துளிப் பயமில்லை.

''ஏய் கண்ணா! சீக்கிரமே நீ எங்கேயாவது உதை வாங்கிட்டு வருவேன்னு எனக்கு அப்பவே தெரியும்!''

கல்லுளி மங்கன் மாதிரி தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.

கொஞ்ச நாட்களாகவே என் காதில் விழுந்து கொண்டுதான் இருந்தது, கண்ணன் அதிகப் பிரசங்கித் தனமான சில வேலைகளில் ஈடுபடுகிறான் என்று.

ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு வேலையாம். சமூகப் பணியாம்! ஆபீஸ் முடிந்து நேரே வீடு வரவேண்டாமோ? அதுதானில்லை. சமூகப் பணியென்றால் என்ன தெரியுமோ? யாராவது கண் தெரியாதவர்களைக் கைப்பிடித்து அழைத்துப் போவது; ஆஸ்பத்திரிக்குப் போய் நோயாளிகளைச் சரியான வைத்தியப் பகுதிக்கு அழைத்துப் போவது — இப்படி எதைச் செய்தாலும் பரவாயில்லை. வெறும் அசடு என்றாவது முடிவு செய்யலாம்.

ஆனால் கண்ணனின் சமூகப் பணி எது தெரியுமோ?

பஸ்ஸில் பெண்களோடு இடித்துக்கொண்டு ஏறுகிற ஆண்களைக் கைப்பிடித்து நிறுத்தி

மெல்ல ஏறச் சொல்வது. அதற்குள் பஸ் கிளம்ப, ஏறுதவர்கள் இவனைப் பிடித்து உலுக்கி.... அது நடந்து பத்து நாட்களுக்கு மேல் இருக்கும்.

இதை நேரில் பார்த்த என் நண்பர் ரங்கசாமியிடம் பெருமையாகப் பீற்றல் வேறு—

புதுமையான சமூகப் பணியாம்.

போன வெள்ளிக் கிழமை அப்படித்தான்.

அம்மன் கோவிலில் பெண்களை ஒரு பக்கமாகவும் ஆண்களை ஒரு பக்கமாகவும் போக வைக்கப் படாதபாடு பட்டானும். அவனுக்குத் துணையாக நாலைந்து நோஞ்சான் நண்பர்கள் வேறு.

சின்னப் பெண்களே இவனைப் பிடித்துத் தள்ளிவிட்டு ஆண்கள் பக்கமாகப் போவார்கள்! காலம் அப்படி...!

என் பிள்ளை இப்படி.

வாங்குகிற சம்பளத்தை வைத்துக்கொண்டு ஒழுங்காக இருக்க முடியவில்லை.

"சார்... நாங்கள் வர்றோம் ஸார்... கையில் ப்ராக்சர் இல்லேன்னு டாக்டர் சொல்லிட்டார்."

"ப்ராக்சர் இருந்தாலும் சரிதான். போறதுக்கு முந்தி என்ன நடந்ததுன்னு சொல்லிட்டுப் போங்க. இன்னும் உங்க எல்லோருக்கும் காலேஜ் போயிண்டிருக்கிறதாவே நினைப்பு. ஒவ்வொருத்தனுக்கும் மேரேஜுக்கு வயசாச்சு!"

ஒருவன் மட்டும் லேசாகச் சிரித்துக் காட்டினுன். மற்றொருவன் கண்ணனுக்குத் துணையாக 'உம்'மென்றிருந்தான்.

"சொல்லுங்கப்பா!" — உலுப்பினேன்.

"வந்து சார்... இந்தத் தெருவிலே ஆறும் நெம்பர் வீட்டில் சியாமளான்னு ஒரு பொண்ணு. புட் கார்ப்பரேஷன்லே வேலை."

"ஆமா! அவகிட்டே போய் ஏதாவது தத்து பித்தென்று வேலை காட்டினீங்களா! அடப் பாவமே! அந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகப் போகுதுன்னு அவளோட அப்பன் சீனிவாசன் வந்து சொன்னுனேடா? வருகிற ஞாயிற்றுக் கிழமை பெண் பார்க்கப் போகிறுனுமே யாரோ ஒரு பையன்?"

பேசிக் கொண்டே இருந்த நான் ஒரு நிமிஷம் பேச்சை நிறுத்தினேன். கண்ணன் தலையைக் கொஞ்சம் நிமிர்த்தி என்னைப் பார்த்தான். அவன் கண்கள் ஓர் உருளல் உருண்டன. அதாவது —

'பேசினுல் ஒரே புலம்பல். இல்லையென்றுல் புகையில்லை அடக்கின வாயைப் போல் ஓர் 'உம்'மா?' என்று அந்தக் கண்கள் சொல்லியிருக்க வேண்டும். ஏனென்றுல், அடிக்கடி நான் பல்வேறு விஷயங்களுக்காகக் கடிந்து கொள்கிற போது அம்மாவும் பிள்ளையுமாகச் சேர்ந்து எனக்கு வாசித்தளிக்கும் வாழ்த்துப் பத்திரத்தின் முதல் வரிகள் இவை,

**பர்வதவர்த்தனி**

தெருப்பக்கம் யாரோ கதவைத் தள்ளுவது தெரிந்தது.

"என்னப்பா நாகராஜா... உன் பையன் எப்படியிருக்கான்? ரொம்ப அடியோ? போலீசிலே சொல்லச் சொல்லுப்பா..."

—சியாமளாவின் அப்பா, சீனிவாசன்!

"வந்து பார் உள்ளே!"

அவரை அழைத்துப் போய்க் கட்டிலில் உட்கார்ந்திருந்த கண்ணனைக் காட்டினேன்.

"சாரி தம்பி! நீ செய்ததிலே தப்பே இல்லே. கோவிலுக்குப் போய் நவக்கிரகம் சுற்றிக் கொண்டிருந்த என் பெண்ணைப் பார்த்துத் தனியே பேச அந்தப் பையன் முயற்சியே செய்திருக்கக் கூடாது. அது பெரிய தப்பு. அவன்தான் ஞாயிற்றுக் கிழமை பெண் பார்க்க வரப்போவதாக இருக்கே! அதற்குள் கோயில்லே என்ன தனியா ஒரு பார்வை வேண்டிக் கிடக்கிறது? நாலு பேர் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? இல்லே இவன்தான் பெண்ணைப் பார்த்துட்டு எந்த மறுப்பும் சொல்லாமல் ஒப்புக்கப் போறுன்னு என்ன நிச்சயம்? ஒருவேளை வேண்டாம்னு போயிட்டான்னு வச்சுக்க... சியாமளா வந்து சொன்னுள். நல்லவேளை! நீ போய் அவனைத் தடுக்கல்லேன்னு வச்சுக்க? பாவம். அவனேட வந்த பையன்கள் உன்னை அடிச்சிட்டாங்களாமே? ரொம்ப சாரிப்பா! அந்த இடம் வேணும்னு நாளைக்கே தகவல் தந்துடப் போறேன்! அந்தப் பையன் ரொம்ப இவனு இருப்பான் போலிருக்கு...."



யாரையும் ஒன்றையும் கவனியாது கண்ணனிடம் பேசிக்கொண்டிருந்தான் சீனிவாசன்.

''மன்னிச்சிடுங்க சார்... அந்தப் பையன் தான் அவளைப் பெண் பார்க்க வரப்போகிறான் என்பது எனக்குத் தெரியாது. ரெண்டு நாள் முந்தி எல்லார் மேலும் இடித்துக் கொண்டு இவன் மவுண்ட்ரோட்டில், உங்கள் பெண் பஸ் ஏறும்போது ஏறினான். இன்று கோவிலில் அவளிடம் போய் நின்று கொண்டு 'என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்' என்று பேச ஆரம்பித்தான். நாங்கள் தப்பாகப் புரிந்து கொண்டு அவனை விலக்கப் போய்...''—

கண்ணன் பதில் சொன்னான்.

எனக்குக் கோபம் வந்தது. ''இவனுக்கென்னப்பா இந்தமாதிரி கவலையெல்லாம்? சகிக்கலே. இவன் ஒரு பொண்ணைப் பார்த்துப் பல்லை இளிக்கிற வயசில் இப்படியா?''

இதைக் கேட்ட சீனிவாசன் சிரித்துக் கொண்டே சொன்னான்: ''நீ என்ன ஜாதகம் கீதகம் பார்க்கிற வழக்கமெல்லாம் வச்சுக்கப் போறாயா? இல்லே நேரடியாகவே வருகிற ஞாயிற்றுக் கிழமை பெண் பார்த்துச் சம்பிரதாயமாகப் பேசலாமா?''

நான் லட்சுமியைப் பார்த்தேன். அவள் சொன்னாள்.

''கை கொஞ்சம் சரியாகட்டும். அப்புறம் பார்க்கலாமே?''

''தாலி கட்டறச்சே கை சரியாயிடும். முதல்லேயே நல்ல இடம் வரச்சயே தட்ட வேண்டாம்!'' என்றேன் நான்.

''எதுக்கும்... நம்ம கண்ணனை ஒரு வார்த்தை... அவன் ஒரு லட்சிய இளைஞன் இல்லையா?'' லட்சுமி இழுத்தாள்.

''அம்மா... நான் சொல்றதைக் கேட்டுண்டு பச்சைக் கொடி காட்டிட்டதாக நினைக்க வேண்டாம். எனக்குக் கல்யாணமென்று முடிவு செய்கிற போது நான் ஆயிரம் குறைகளையும் குற்றங்களையும் சொல்லிக் கொண்டு நிற்கவே மாட்டேன். என்னைப் பொறுத்த வரை மனைவி என்பது தெய்வத்தால் தரப்படும் ஒரு துணை...''

சீனிவாசன் மகிழ்ச்சி பொங்க நின்று கொண்டிருந்தான்.

''கையை ரொம்ப வலிக்கிறது... உங்ககிட்டே தூக்க மாத்திரை இருக்குமே?''—லட்சுமியிடம் கேட்டான் கண்ணன்.

''அடடா... ஒண்ணுகூட இல்லையே!''

லட்சுமி கைவிரித்த போது சீனிவாசன் சொன்னான்:

''நான் போட்டுக்கிற பினோபார்பிடோன் இருக்கு. அனுப்பறேன்.''

சீனிவாசன் நகர்ந்தான்.

கண்ணன் மெல்லிய குரலில் சொன்னான்:

''இதோ பாருங்கம்மா... அவர் நிச்சயமாகச் சியாமளா கிட்டேதான் மாத்திரையைக் கொடுத்தனுப்பப் போறார். நீங்க வேணுமானால் பாருங்க. இவர் போய் அந்தப் பையனை வேணும்னு சொல்லப் போறார். இந்தக் காலத்திலே...''

''போதும் நிறுத்தடா!—''

உரக்கத்தான் சொன்னேன். ஆனால், பூப்பென்ற சிரிப்புப் பொங்க!

---

# ராஜாஜி கடிதங்கள்-17

ராஜாஜி அவர்கள் ஸ்ரீசங்கரரின் 'பஜகோவிந்தம்' நூலுக்கு கல்கியில் தமிழில் விளக்கம் எழுதத் துவங்கின சமயம். ஒரு கடிதம் தலைவர் அவர்கட்கு எழுதினேன். முதல் ஸ்லோகத்தின் இரண்டாவது அடியில் 'சம்ப்ராப்தே ஸந்நிகிதேமரணே' எனப் பிரசுரமாகி இருந்தது. 'மரண' அல்ல; அது 'காலே' என்று இருக்க வேண்டும். பொருள் ஒன்றேயாயினும் ஸ்ரீசங்கரரின் வாக்கை மாற்றக் கூடாது என பக்தி ஆவேசம் ததும்ப எழுதியிருந்தேன்.

ராஜாஜி உடனே ஒரு கடிதத்தில் பதில் எழுதி இருந்தார்:

சென்னை

நமஸ்காரம். 26–11–51

தங்களுடைய கடிதம் கண்டு மகிழ்ச்சியடைந்தேன். உங்களுடைய பக்தி வேகத்தைப் பாராட்டுகிறேன். 'காலே'–'மரணே' இரண்டு விதமாகவும் பாடங்கள் உண்டு. இரண்டாவது பாடம் (மரணே) என்பதை சுவாமி சிவானந்தா அவர்கள் எழுதிய ஒரு புத்தகத்தில் படித்திருக்கிறேன். 'மரணே' என்பது 'கரணே' என்பதனோடு எதுகை கொடுக்கிறது. பொருள் ஒன்றே. 'நிந்தனை' கொஞ்சமும் இல்லை. இத்தகைய விவாதம்தான் ''டுக்ருஞ் கரணே' என்று ஸ்ரீசங்கரர் சொன்னார் போலும்! அன்புடன்,

இராஜகோபாலாச்சாரி

கடிதத்தின் கடைசி வரியில் ராஜாஜியின் முத்திரை எவ்வளவு அழுத்தமாய் விழுந்திருக்கிறது!

சு. ராமமூர்த்தி
தாம்பரம், சென்னை–45



ஊழியர்கள், அவரிடமிருந்து தைரியம் பெற்றனர். அண்ணி சாவுக்கு அஞ்சவில்லை. மானத்துக்குத் தான் பயப்பட்டார். மான மிழப்பதை விட மரணமே மேல் என்று உணர்ந்தவராக ஒரு சின்ன குப்பியில் பொட்டாஷியம் ஸயனைட் என்ற விஷத்தைத் தயாராக வைத்திருந்தார். அவசியம் நேர்ந் தால்....

அரசியல் நிர்ணய சபையில் ஓர் அங்கத் தினராக விளங்கினர் சுசேதா. பின்னர் நாடாளுமன்ற உறுப்பினரானர். ஐ. நா. சபைக்குப் பிரதிநிதியாக அனுப்பப் பட்டார். பின்னல் உத்தரப் பிரதேச முதல்வராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார். அப்போது அவர் காட்டிய நிர்வாகத் திறனையும் மனிதாபி மானத்தையும் இன்றைக்கும் அம்மாநில மக்கள் நினைவிலிருத்திப் போற்றுகிறர்கள்.

நேருவும் சாஸ்திரியும் மறைந்த பிறகு காங்கிரஸ் பிளவு பட்டபோது, அண்ணவும் அண்ணியும் புதிய கிளைகளில் படராமல் பழைய அடிமரத்தினிடமே விசுவாசத்துடன் இருந்தனர். அதிகாரத்தை ருசி பார்த்த வர்களுக்கு அதிகாரமற்ற நிலை சூன்யமாகத் தோன்றும். ஆயின் அண்ணன் — அண்ணி போன்றேருக்கு அது பாலைவனத்தினிடை யில் பசுஞ்சோலை போல. — அமைதியும் கண்ணியமும் மிக்க வாழ்வு; தான் தானு கவே வாழும் நிலை. திருமணத்துக்குப் பிறகு முதன் முறையாக அவர்கள் தமது சொந்த வீட்டில் வாழ்ந்தார்கள். அதற்குச் ''சர்வோ தயத் தீவு'' என்று பொருத்தமான பெயர் சூட்டினர்கள். அது தில்லி, அரவிந்த ஆசிரமத்துக்கருகே இருந்தது. முதல் முறையாக நான் அண்ணியை உண்மை யான, முழுமையான, இல்லத்தரசியாகப் பார்த்தேன். ஆனல் முழுநேர இல்லத்தரசி யாக அல்ல! வீட்டு நிர்வாகம் அண்ணிக்குக் கைவந்த கலை. தோட்டக் கலையையோ அவர் நேசிக்கவே செய்தார். இருப்பினும் என்ன, அவருக்கிருந்த சக்தியை யெல்லாம் வீட்டு நிர்வாகமும் தோட்டக்கலையும் ஒற்றி எடுத்துவிட முடியுமா என்ன? அவர் தம் கட்சியின் உயர் மட்டத் தலைவியாக விளங் கினர். ''காந்தி சமாரக் சங்கிரஹாலய''த் தின் பணிகளில் அக்கறை காட்டினர். சமூக சேவைக்கும் ஆரோக்கியம் பேணும் பணிக்குமாக ''லோக கல்யாண் சமிதி'' என்ற கேந்திரத்தை நிறுவி வளர்த்தார். அவருடைய சமூக சேவா மனப்பான்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அது இன்னும் சிறப்புப்பணியாற்றி வருகிறது.

1974ல் அண்ண கிருபளானி, நுரையீரல் நோயுற்றுப் படுத்திருந்தார். அடிக்கடி இருமி வேதனைப்பட்டார். அதனல் அவர் கடுகடுப்பு மிக்கவராகவும் மாறினர். டாக் டர்கள் அதிகம் பேசக் கூடாது என்று கூறி யிருந்தும் அவர் இருமல் வராத போதெல் லாம் தேசத்தின் நிலை குறித்துப் பேசி வருந்திக் கொண்டிருந்தார். தமக்குப் பணி விடை செய்ய அண்ணியைத் தவிர வேறு யாரையும் அவர் அனுமதிக்கவில்லை. அண் ணியை விட அதிகமாக அவரைப் புரிந்து கொண்டு பணியாற்றக் கூடியவர் யார்?



உதட்டை மட்டும் நெளித்துச் சிரித்தால் போதுமென்றல் புகைப்படக்காரர் ''ஸ்மைல் பிளீஸ்!'' என்பார்.

பற்கள் தெரியப் புன்முறுவல் பூக்க வேண்டு மென்றல் ''ஸே சீஸ்!'' என்பார். நீங்களும்தான் நிலைக்கண்ணுடி முன் நின்று பாலாடைக் கட்டியை நினைத்துக் கொண்டு ''சீஸ்'' என்று சொல்லிப் பாருங்களேன்! புன்முறுவலைக் காட் டிலும் முகத்தின் அழகை அதிகரிக்கக் கூடியது வேறு எது?

மேலட்டையில் புகைப்படக் கலைஞரை வண்ணப் படமெடுத்துக் கொடுத்திருப்பவர்: உத்ரா.

---

ஆனல் அண்ணியே சில காலத்துக்கு முன்னர்தான் இருதய நோய் கண்டு இப் போது சற்றே தேறியிருந்தார். அண்ணி அதிகமாகத் தம்மைச் சிரமப்படுத்திக் கொள்ளக் கூடாது என்று டாக்டர்கள் கூறியிருந்தனர். ஆனல் அண்ணவுக்குப் பணிவிடை ஆற்ற வேண்டிய நேரத்தில் அண்ணியால் எப்படி சும்மா இருக்க முடியும்? அண்ணவைக் குணமடையச் செய்வதில் அண்ணி வெற்றி கண்டார். ஆனல் அண் ணியின் வாழ்நாளே முடிவை நெருங்கிக் கொண்டிருந்தது. அதை யாரும் அச்சமயம் அறியவில்லை. ஒருநாள் இரவு திடுமென இருதயத் தாக்குதலுக்கு உள்ளாகி அண்ணி இறந்தார்.

தேசப் பணியில் ஈடுபட்டிருந்த வீரமும் கண்ணியமும் மிக்க ஓர் உன்னதமான ஆன்மா, இன்னும் எவ்வளவோ சாதிக்க லாம் என்கிற நிலையில் திடும்மென்று நம்மை விட்டுப் பிரிந்து சென்று விட்டது.

மலர்க் குவியல்களுக்கிடையில் அண்ணி கிடத்தப் பட்டிருந்தாள். கண்மூடி அமைதி யாகப் படுத்திருந்த நிலையில் மிக அழகாக இருந்தாள். அண்ண பக்கத்திலேயே அதிர்ச்சி யுற்று, பிரமித்து, தாங்க முடியாத துய ருடன் மௌனமாய் அமர்ந்திருந்தார். கீதை பாராயணம் நடைபெற்றது. பஜன்கள் பாடப் பெற்றன. அண்ண காதில் ஏதாவது விழுந்ததா? குடியரசுத் தலைவர் வந்தார்; பிரதமர் வந்தார். அண்ண கிருபளானி யாரையும் கவனிக்கவில்லை. அவர்கள் தொலைவிலிருந்தபடி அவரை நமஸ் கரித்தனர். அவரை நெருங்கவே அஞ்சினர். அண்ணவுடைய துயர் அப்படி பயபக்தியை ஊட்டுவதாக இருந்தது.

இதற்கு முன்னல் அண்ண இந்த அள வுக்குத் துயருற்றது ஒரே ஒரு சந்தர்ப்பத் தில்தான். அது 1948 ஜனவரி முப்பதாம் தேதியன்று.

காந்திஜியும் சுசேதாவும் முன்னறிவிப்பு இன்றித் திடீரென்று காலமானது அண்ண கிருபளானியின் வாழ்வில் அவருக்கு ஏற் பட்ட இருபெரும் அதிர்ச்சிகள். அவை இரண்டும் ஏற்படுத்திய சூன்யங்களை எதுவுமே என்றைக்குமே இட்டு நிரப்ப முடியாது. எனினும் அவ்விருவரையும் பற்றிய பரி சுத்தமான இனிய நினைவுகள் மெல்லிய திரையாகி அந்தச் சூன்யங்களை மறைக்க லாம். தமிழாக்கம்: **குட்டி கிருஷ்ணன்**

பட்பட் பட்டாபி



4

கதை: சாருகேசி

படம்: செல்லம்




உட்காரலாம்னு ஒரு லிஸ்ட் கொடு. அதைப் பார்த்துட்டு அப்பப்ப இடிஞ்சு இடிஞ்சு உட்கார்றேன்! இடியட்.

அம்மா! அப்பாவை சினிமாவுக்கு அழைச்சுண்டு போகச் சொல்லித் தொந்தரவு பண்ணாதே. அவர் இங்கேயே நிம்மதியா தூங்கட்டும், -ஆபீஸா நினைச்சுண்டு.

தூக்கம் வராதுடா எனக்கு; துக்கம் தான் வரும்!











ணம் இருக்கணுமே
க சந்தேகத்துக்கு?
ஸ்பிரிட் பாட்டில் ஒன்றைக்
கொடுக்கிறதைப் பாத்
துட்டு அவனைக் கண்டிச்
தேன்.




சண்யமாய் இல்லேன்னுட்டே
அப்புறம்?




ம்... வந்து அந்த
ப்பிஸ்ட் விமலா
டே, 'நீ ரொம்ப
ாயிருக்கேன்னு'
நாள் அசடாட்டம்
ளறினன்.
விமலா அழகாக
இருந்தால் அப்ப
யாகணும்? அ
எப்படி உறவா
ும்?




டு! அப்படி ஒரு
ண் கிட்டே போய்ச்
சால்லலாமாடா?
பின்னே அப்பாகிட்டே
வந்தா சொல்லுவான்?




டேய்! நீ உன்
வேலையைப்
பார்த்துண்டு
போக மாட்டே?
ஷ்யூர்! இப்ப இதைத் துப்பறிந்து
உண்மையைக் கண்டு பிடிக்கிறது
தான் என் வேலை!... விமலா...
விமல்! ஹியர் ஐ கம்!
(தொடரும்



கண்ணதாசன் பக்கம்

# சுயதரிசனம்

கோடையிலே வெய்யில் கொளுந்துகின்ற நாள்பார்த்து
ஓடையிலே நீர்தேடி ஓடுகின்ற மானினங்காள்!
வானிடையே மேகங்கள் வாராத காலமதில்
ஞானமிலாச் சங்கீத நடமாடும் மயிலினங்கள்!
ஆனியிலே விதைவிதைத்து அவசரத்தில் நீர்பாய்ச்சி
ஆடியிலே வாளெடுத்து அறுவடைக்குச் செல்வோரே!
தேன் இல்லாக் காகிதத்தைத் தேடி அமர்ந்துவிட்டு
தேனெடுத்து விட்டதுபோல் திரும்பிவரும் வண்டுகளே!

காலமறி யாதவர்க்குக் காயேது, கனியேது!
ஞாலமறி யாதவர்க்கு நாளேது, பொழுதேது?
விதைக்கும் விதைமுகமே விளைகின்ற பயிர்முகங்கள்
வினையளவும் அவ்வளவே; வீண்புலம்பல் லாபமில்லை!
சத்தியத்தை உன்வீட்டுத் தலையணையில் வைத்திருந்தால்
தத்துவங்கள் காலடியில் தானாக வந்துநிற்கும்!
செய்வதைநீ செய்து திறமையுடன் வாழ்ந்திருந்தால்
தெய்வமெலாம் கைகட்டிச் சேவகமும் செய்திருக்கும்!
ஓடுவது காட்டுவழி; உறங்குவது வெட்டவெளி;
தேடுவது புகழானால் சிறிதளவும் கிடைக்காது!
ஏரில்லா விவசாயி; எருமைஇல்லா பால்காரன்
தேரில்லாத் திருக்கோவில் தேம்பித்தான் அழவேண்டும்!

கற்பனையில் நீராடி கனவில் உடை உடுத்தி
அற்புதங்கள் காண்பதிலே ஆனந்தம் என்ன உண்டு?
எந்த ஊர் செல்லுகிறோம் என்பதை நீ கண்டால்தான்
அந்த ஊர் போகும்வழி அறிந்து கொள்ள முடிந்துவிடும்!

செல்லும் பயணத்தில் திட்டமில்லை என்று சொன்னால்
கல்லோடு முள்ளும்உன் காலை உறுத்திவிடும்!
நாளை அறிந்தவர்க்கும் நல்லவழி கண்டவர்க்கும்
வேளை பிறப்பதுண்டு; விருந்தும் கிடைப்பதுண்டு!
கூத்தாட் டரங்கத்துக் கோமாளி போலிருந்தால்
பார்த்தால் சிரிப்புவரும்; பசித்தபசி தீராது!
ஆத்தாளோ பெற்றுவிட்டாள், அப்பன் வினைப்பயனாய்!
காத்தாளும் ஈசனவன் கண்ணுக்குத் தெரியவில்லை!
நம்மைநா மேநடத்தி நல்லவழி கண்டுகொண்டால்;
உண்மை துணைக்குவரும்; உதவிக்கு தெய்வம்வரும்!
கோவிலுக்குச் சென்று கூத்தாடத் தேவையில்லை!
கும்பிடும் ஓர் தெய்வம் கொள்கையெனக் கண்டுகொள்!





5

கதை:
சாருகேசி
படம்:
செல்லம்


















எத்தனை ஸ்வீட் ஸார்?

ஒரே ப்ளேட்!




நீங்க துப்பறியும் நிபுணரா, கவிஞரா?

இரண்டும்தான். மூன்றுவதாக நான் என் அப்பாவின் மகன்!

அடடா! எனக்குத் தெரியாம போச்சே! நீங்க உங்க அம்மாவின் மகன்னு நினைச்சுக்கிட்டிருக்கேன்!

அதாவது நான் என்ன சொல்றேன்னு... கோதண்டபாணி அன்கோ ஹெட் கிளார்க்....

மிஸ்டர் பட்டாபியா?

யெஸ்; பட்டாபியோட சாட்சாத் புத்திரன்_பார்த்தசாரதி என்கிற பாச்சு!

ஐயோ போச்சு!

என்ன மிஸ்? பாதாம் அல்வாவில் பச்சை மிளகாயைக் கடிச்சுட்டீங்களா?

**பரிசு பெறுபவராக நீங்கள் ஏன் இருக்கக் கூடாது?**

எமது 76-ம் ஆண்டு நிறைவை முன்னிட்டு 29-10-78 வரை நீங்கள் சென்னையில் வாங்கும் ஜவுளிகளின் ஒவ்வொரு ரூ. 100/-க்கும் ஒரு பரிசு கூப்பன் தரப்படும்.

**முதல் பரிசு ரூ. 1,500/- இரண்டாம் பரிசு ரூ. 1,000/-**

**மூன்றும் பரிசு ரூ. 500/-**

மேற்சொன்ன பரிசு தொகைக்கு சமமாக எங்கள் கடையிலிருந்து ஜவுளிகள் வழங்கப்படும். நான்கு ஆறுதல் பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 100/- மதிப்புள்ள பாக்கட் டிரான்ஸிஸ்டர். குலுக்கல் தேதி 31-10-78.

**சம்பூர்ணம் சில்க்ஸ்**

(Formerly SAMPURNA SASTRIAR & SONS)

48, வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை – 600 004

ESTD: 1902 Phone: 71719

கிளை ஸ்தாபனம்: **சம்பூர்ண சாஸ்திரியார்**

14-A, பார்க் ஸைட் ரோட், கல்கத்தா - 26; போன்: 410090

**தீபாவளி வரை ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு**

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்




பிராண்டு (Regd.)

* **ஊறுகாய்கள்** – மாங்காய், எலுமிச்சை, வெங்காயம்
* சாம்பார் பொடி, ரசப் பொடி
* திடீர் இட்லி & தோசை பவுடர்
* புளியோதரைப் பவுடர், பாவக்காய் பவுடர்
* அப்பளம் (புதுமுறை தயாரிப்பு)
* வடாம், வத்தல்கள்

**ஸ்ரீ கணேஷ்ராம் அண்டு கோ.,**

ப. நெ. 46 - பு. நெ. 193, தம்புச் செட்டி தெரு,

சென்னை - 600 001.

போன்: 20401 & 20402 தந்தி: 'COCHUTNI'

பட்பட் பட்டாபி



6

கதை: சாருகேசி
படம்: செல்லம்
































...து வந்து...
வந்து...
வந்து...வந்துன்னு சொல்கிறீர்களே தவிர மனசை விட்டு வரமாட்டேங்கிறதே! உங்களுக்கு ஏதோ தெரிஞ்சிருக்கு; சொல்லப் பயப்படுகிறீர்கள்!




எ...எ.. எனக்கென்ன பயம்? ஒ...ஒன்று மில்லை.
அடடா! நீங்க பயப்படாதே எக்கச்சக்க அழகா இருக்கு தெரியுமா? ஸ்டோரீஸ் சம்பூர்ணம் சொன்னது தப்பு. நீங்க அழகாய் மட்டுமில்லை; அதிரூப லாவண்யத்துடன் அழகு சுந்தரியாக, எழிலரசியாக, ஏணி வைத்து ஏறினாலும் ரதி தேவியாலும்...




எனக்கு வெட்கமாய் இருக்கிறது... கையை விடுங்கள்!




இதோ விட்டேன்... ஆனால் விமல்! நீ என் மிஸ்டரிக்கு விடை சொல்லலியே...




அது வந்து... உங்க தகப்பனார் மிஸ்டர் பட்டாபி சதா 'சள் வள்'னு எல்லாரிடமும் எரிந்து விழுகிறரா... நீங்க இதை யாரிடமும் சொல்லக் கூடாது, சண்டைக்குப் போகக் கூடாது!




அப்போது சற்றுத் தள்ளி லெட்ஜர் லட்சுமணன் வ...
அதாவது உங்க அப்பா பட்டாபி 'பட் பட்'னு பட்டாசு மாதிரி வெடிக்கிறரா... ஐயோ லெட்ஜர் லட்சுமணன்
'யெஸ், யெஸ்! பிராமிஸ்!

## H. M. V. புதிய இசைத்தட்டு

**எங்கும் அமோக வரவேற்பு !**

நாகூர் 'தர்கா வித்வான்' S. M. A. காதிர் 'இசை மணி' M. M. யூசுப் பாடியுள்ள E. P. Record No. TAE 8017

எளிய நடையும், பரம்பரை பாடல்கள் அடங்கியது (Light and Traditional Systematical Songs) திரு குணங்குடியார், மலையாளம்-'வாலகவி'ப் புலவர் பாடல்களில், திரு காதிரின் இராக பாவமும், சன்னப் பின்னல் ஸ்வரப்ரஸ்தாரமும் (Intricate Style of Swaraprasthara) ரசிகர்களை மிகவும் கவரும். அருகிலுள்ள H. M. V. வியாபாரிகளிடம் வாங்கிப் பயனடைவீர் Music: முத்து.









**The Gramophone Co., of India Ltd. Madras - 600 006**

Dis: Saraswathi Strores, Madras - 600 002



ஸ்ரீ ரஸ்து சுபமஸ்து ஸ்ரீ லக்ஷ்மீ வெங்கடேசப் பிரசன்ன

## தீபாவளி கங்காஸ்நானம், சுவர்ன அன்னபூர்ணு தரிசனம் அன்ன கூடம், லட்டுத் தேர், மிட்டாய் திருவிழா

வைதீகமான முறையில் காசியாத்திரை 20-10-78ல் சென்னை சென்ட்ரலில் இருந்து புறப்பட்டு 17 நாட்கள் கொண்ட யாத்திரை.

**தீபாவளியன்று காசியில் கங்காஸ்நானம்**
**காசியில் 9 நாட்கள் தங்குதல்**

பெட்காபி, காலை காபி டிபன், மாலை காபி, இரவில் போஜனம் அல்லது பலஹாரம், ரயில் சார்ஜுகள், யாத்திரை வரி, ஒரு பை, ஆங்காங்கு ஊர் சுற்றி பார்க்கும் சிலவுகள் உள்பட நபர் 1க்கு ரூ. 558/-

இன்னும் 15 இடங்கள் மட்டுமே காலி உள்ளது

மேலும் விபரங்களுக்கு :

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்

புது நெ. 21, அய்யாபிள்ளை தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005

டெலிபோன்: 841957



## கல்கி

**சந்தா விவரம்**

★

| | ஓராண்டு | | ஆறு மாதம் |
|---|---|---|---|
| இந்தியா | ரூ. 38 | — | ரூ. 19 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 54 | — | ரூ. 27 |
| இதரவெளிநாடுகள் | ரூ. 90 | — | ரூ. 45 |

மானேஜர்

கல்கி, சென்னை - 600 032

✖ கோமாதா என் குல்மாதாவில் பிரமீளாவுடன்
✖ சில நேரங்களில் சில மனிதர்கள் படத்தில்



நடிகர் அதாவது அடி வாங்குபவர் 'பொசிஷ.
னு'க்கு மேலே சற்றுத் தலையை முன்னேக்கி
நீட்டினுலும் அடி வாங்கிக் கொள்வார்.

சில சமயங்களில் நடிப்பது அவரவர்களது
சுய இயல்புகளோடு ஒத்துப்போகும். அப்படிப்
பட்ட சந்தர்ப்பங்களில்தான் சிலர் என்
நடிப்பைப் பாராட்டுகிருர்கள். 'சில நேரங்
களில் சில மனிதர்கள்' படத்தில் வரும்
வெங்குவின் அனுபவங்கள் எனக்கு நிஜ
வாழ்க்கையில் எப்பொழுதாவது நிகழ்ந்திருப்
பதால்தான் அது சிறப்பாக அமைந்திருக்
கிறது.

''இவர்கள் வித்தியாசமானவர்கள்'' படத்
தில் எதற்கெடுத்தாலும், முன் கோபப்படும்
ஒரு . கதா பாத்திரம் எனக்கு. அது என்
சொந்த இயல்பு. அது படத்திலும் வரும்
பொழுது சிறப்பாக நான் நடித்திருப்பதாகச்
சொல்கிருர்கள்.

'' கருணை உள்ளம்'' படத்தில் நிஜமாகவே
'தாக்காய் வலிப்பு' வந்தவனைப் போல் நடிப்
பதாகப் பலர் என்னைப் பாராட்டினுர்கள்.
அதில் என்க்கு முன் அனுபவம் இல்லை. என்ரு
லும் அந்நோய் கண்ட பொழுது அவன்
கைகள் எப்படிக் கோணிக் கொண்டிருக்கும்
என்பதைத் தெரிந்து கொண்டு பிறகு நடித்
தேன்.

''வடைமாலை'' படத்தில் ஆஞ்சனேய
பக்தனுக நடித்து வருகிறேன். அதற்காக நான்
பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து என்னை
அதில் வரும் ரகோத்தும ராவாக மாற்றிக்
கொள்ள முயன்று வருகிறேன்.

வில்லன் வில்லனுகத்தான் நடிக்க முடியும்
என்னும் நிலையை மாற்றி வில்லன் பக்தனுக
வும் நடிக்க முடியும் என்பதைத் தோற்றத்தால்
மட்டுமின்றி நடிப்பாலும் நிரூபிக்க நான்
முயற்சி செய்து வருகிறேன். ஒரு நடிகன்
இப்படி பலதரப்பட்ட நடிப்பையும் வெளிப்
படுத்தும் ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும்.

டைரக்டர் சொல்லித் தருவது 15 சத
விகிதம் என்ருல் மீதி 85 சதவிகிதத்தை நடிப்
பவர்கள்தான் புரிந்து கொள்ள வேண்டும்.

நான் பிறவி நடிகன் அல்ல. பல வாய்ப்புக்
களால் நான் நடிகனுக்கப் பட்டவன்!

பேட்டி: இரைஞானி

# 'பட்பட்' பட்டாபி



7

கதை: சாருகேசி
படம்: செல்லம்



















...ட் வொர்ரி...
...தையும் யாரிடமும்
...லமாட்டேன். அதுக்காக
... நீ உன் அப்பா
...வுக்கு இல்லாத
...தியெல்லாம் அடுக்க
...டாம்... அது சரி யார்
... லக்கி ஃபெல்லோ?
ஓகோ! இவருக்கு பாச்சு, பட்டாபியின் பிள்ளை என்று தெரியாது போலிருக்கு! தப்பித்தேன்!


அவர் வந்து ஒரு கம்பெனியிலே அஸிஸ்டண்ட் மானேஜர், ஸார்!
ஜாக்கிரதையா இரு! இந்தக் காலத்துப் பசங்களை நம்பக் கூடாது. இப்ப அஸிஸ்டண்ட் என்பான் அப்புறம் பார்த்தா அடெண்டராக இருப்பான்!


... வேளை! அவர் பட்டாபியின்
...என்று இவருக்குத் தெரிந்திருந்
... என்னைத் துரோகி என்றும்
...தாம் படைக்காரி என்றும்
எல்லார் முன்னிலையிலும்
...னத்தை வாங்கியிருப்பார்!


அப்போது எதிர்பாராத விதமாக பாச்சுவே அங்கே வர..
ஐயோ! பாச்சுவே இங்கே வந்து விட்டாரே!


...! நம்ம பட்டாபி ஸார்
...ன் பாச்சு இல்லே
...திருக்காரு?.. என்ன
...பி? நயினா அனுப்பிச்
...சாரா? எதுக்கு?


என்ன! இவன் தான் பட்டாஸ் பட்டாபியின் பிள்ளையா? இவளோடு தானே விமலா நேற்று பார்க்கில் பேசிக் கொண்டிருந்தாள்?!
தொடரும்



இப்போது ரு. 365
அதிகம் செலுத்திஞல் போதும்,
அமெரிக்கா செல்வதற்கான
எங்கள் உல்லாசப்பயண டிக்கெட்
அளிக்கும் வாய்ப்போ மிக அதிகம் !
போகும்போது அல்லது வரும்போது
ஓரிடத்தில் இறங்கலாம் !

இதோ, இந்திர லோகம் போன்ற
உல்லாச புரிகள் ஐந்து !
எது வேண்டும் உங்களுக்கு ?
லண்டன், பாரிஸ், ஜெனிவா, ரோம்,
அல்லது ஃப்ராங்ஃபர்ட். அதோடு,
நியூயார்க்கிலிருந்து வட அமெரிக்க
நகரங்களுக்கும் கனடாவிற்கும் வசதி
யான இணைப்புகளையும் வழங்குகிறோம்.

ஆயின், களிப்பூட்டும் எல்லா விவரங்க
ளையும் கேட்டறிய; முதலில் எங்கள்
அலுவலகம் அல்லது உங்கள் பயண
ஏஜெண்டை சென்று பாருங்கள்.

**ஏர்-இந்தியா**
சுபமான பயணம்...
சுபமான செய்தி

# அமெரிக்கா செல்லும் வழியில் ஐரோப்பாவில் இறங்குவீர்.

AI.3508A

# தீபாவளி ஜோக்ஸ்

கிட்டு—



''பரவாயில்லையே! ஐந்து பெண்களுக்குக் கல்யாணம் பண்ணியும் உங்களுடைய மூத்த மாப்பிள்ளையை மட்டும் ஒவ்வொரு தீபாவளிக்கும் கூப்பிடுகிறீர்களே?''

''அவர் 'ஸ்வீட்' நன்றா பண்ணுவார் அதனால் தான்!''



''போன வருஷம், ரவா லட்டு பண்ண நேர மாச்சுன்னு கோபித்துக் கொண்டு போய்ட்டீங்களே, மாப்பிள்ளை! நீங்க போன பத்து நிமிடத்திற்குள் ரெடியாகி விட்டது இந்தாங்க....''



''மாப்பிள்ளை வரார்னு சொன்ன போது பீரோவுக்குப் பின்னாலே ஒளிஞ்சுண்டீங்க; என் அப்பா வரார்ன்னு சொன்னவுடன் வரவேற்க ஓடறீங்களே?''

''என் தலை தீபாவளிக்கு உங்கப்பா போடறேன்னு சொன்ன மோதிரத்தை இப்போ கொண்டு வரேன்னு சொன்னார்! அதை வாங்கி நம்ம மாப்பிள்ளைக்குப் போடத்தான்...''















பட்பட் பட்டாபி

8

கதை: சாருகேசி

படம் செல்லம்
















போ தெரியாது சார்! ம்மா இப்பத்தான், க சொல்லித்தான் யும். கம்பெனி ரைச் சொல்லி அதில் ஸ்டண்ட் மானேஜர்னு டும்தான் சொன்னார்!
ஓ! உன்னோடு கம்பெனி கீப் பண்ண, கம்பெனி பெயரை மட்டும் சொன்னால் போதும்னு நினைச்சா ருக்கும்....


... அயோக்கியப் பயல்!
பாவம்! இப்படி
நீங்களே திட்டிக்காதீங்க ஸார்!


ன்னையா திட்டிக் ாண்டேன்? ல கேட்கிறேன்... ன்னையா திட்டிக் காண்டேன்?
இங்கே, உங்க பக்கத்தில் பயல்னு சொல்லும்படி ஆண்பிள்ளை வேறு யாரு மில்லையே ஸார்!


அதிகப் பிரசங்கி! நீ நம்ம பிளானையெல்லாம் அந்த அயோக்கியப் பயல் பாசுவிடம் சொல்லிட்டியா?
பட்டாளை புல்வாண மாத்தும் திட்டம் தானே? வாயைத் திறப்பேனு நான்? இதிலிருந்தே நான் அதிகப் பிரசங்கி இல்லேன்னு புரியலையே உங்களுக்கு?


து போதும். உன் ட்டுக்குப் போ! னு நீ ஏதாவது பு பண்ணினதா தெரிஞ்சுதோ...
கம்பை எடுத்து நானே உங்க கையில் தரேன் ஸார்! மேஜை மேல் ஏறி நின்னுக்கிட்டு வில்லன் கணக்கா சுழற்றுங்க!


விமலா தன் வீட்டுக்குத் திரும்பியதும்...
என்ன ஸார்? நம்ம பிளான் ஜனதா அரசிடம் அகப்பட்ட இருபதம்சத் திட்டம் தானா?
நோ...நோ... விமலாவை எச்சரிக்கை பண்ணியாச்சு! திட்டம் நிறைவேறியே தீரும்! பட்டாபியின் கொட்டம் அடங்கவே செய்யும்! ஹஹ்ஹஹ் ஹா!
ஐயோ! ஐயோ!
தோற்றா போங்க!

வட்டமேஜையில் வாசகர்கள் எழுப்பிய ஐயப்பாடுகளை அலட்சியப் படுத்தி விடாமல் அவற்றைக் களையும் வகையில் 'ஆங்கிலத்தை விடாதீர்கள்' என்ற தலையங்கத்தில் தாங்கள் அளித்துள்ள விளக்கம் அற்புதம்!

அரகண்டநல்லூர் கே. பிரதாப்சிங்

"ஸ்ரீனிவாச சாஸ்திரியாரையும், சத்தியமூர்த்தியையும் அண்ணாதுரையையும் உருவாக்கிய தமிழகத்தில் இன்று பல பட்டதாரிகள் ஒரு வேலை விண்ணப்பத்தைக்கூடச் சரியான ஆங்கிலத்தில் எழுதத் தெரியாதவர்களாய் இருக்கிறார்கள்" என்று நீங்கள் எழுதியிருப்பது நூற்றுக்கு நூறு சரியாகும். "என்னுடைய அம்மாவுக்கு உடல்நிலை மோசமாக இருப்பதால் ஊருக்குப் போக எனக்கு அனுமதி தரும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்" என்பதற்கு ஒரு பட்டதாரி மாணவர் "As my mother is oangerous I reguest your permission to saw her" என்று எழுதியிருந்தது என் நினைவுக்கு வருகிறது.

ஆங்கிலத்தில் மாணவர்களின் தரம் இவ்வளவு தூரம் குறைந்திருப்பதற்கு முக்கியமாக இரண்டு காரணங்கள். ஒன்று, தமிழுக்குச் சேவை செய்வதாக நினைத்துக் கொண்டு சிலர் மறைமுகமாக ஆங்கிலத்தை எதிர்க்கிறார்கள். இதன் பின் விளைவை அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. ஆங்கிலத்தை அகற்றி விட்டால் அந்த இடத்தில் இந்தி வந்து உட்கார்ந்து விடுமே!

இரண்டாவது காரணம்: இன்றையக் கல்வி முறையில் Teaching எனப்படும் போதனைக்குப் பதில் Coaching எனப்படும் பரீட்சைக்குத் தயார் செய்யும் வித்தைக்குத் தான் முக்கிய இடம் தரப் படுகிறது. இந்த நிலை மாற வேண்டும்.

வி. ஆர். என். ராஜன்

நடிப்புக்கு இலக்கணம் கூடாது என்கிறார் சிவகுமார். அவரது அந்தக் கட்டுரையே நடிப்புக்கு ஓர் இலக்கணம் போலத்தான் உள்ளது.

திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

திரைப்பட நடிகர்களின் பேட்டிக் கட்டுரைகள் கல்கியின் தனி பாணிக்குச் சான்றுகள். நட்சத்திரங்களுக்கு அறிவுரையையும், தான்தோன்றித்தனமாக எழுதப்படும் விமரிசனக் கருத்துக்களையும் தவிர்த்து; நட்சத்திரங்களுக்குக் கௌரவமளித்து எழுதப்படும் சுவையான கட்டுரைகளுக்காகக் கல்கியைப் பாராட்டுகிறேன்.

கீழாம்பூர் எஸ். சங்கரசுப்பிரமணியன்.

'தேஜ்பூருக்கு ஒரு டிக்கட்' சிறுகதையை வெகு சிறப்பாக எழுதியிருக்கிறார், தி. சா. ராஜு. தர்ம சங்கடமான நிலைமையிலிருந்து தப்பிக்கத் தேஜ்பூருக்குப் பயணமாகும் பொன்னுரங்கம் "எல்லாம் சரிதான், இவ்வளவு காலமும் பொற்கொடிக்கு அப்பாவாக மட்டும் நான் அங்கு வாழ்ந்தேன் என்று முருகையனுக்கு யார் சொல்லுவார்கள்?" என்று பொருமுகிற இடம் என் நெஞ்சைத் தொட்டது!

அரகண்டநல்லூர் கே. பிரதாப்சிங்

சாட்சி நம்பர் 3'யின் முடிவு நெஞ்சை நெகிழ வைத்தது. சரயு; நிசி காந்தை தமிழ் வாசகர்கள் என்றும் மறக்க மாட்டார்கள். சிறந்த முறையில் தமிழாக்கம் செய்த ரா. வீழிநாதனுக்கு என் பாராட்டுக்கள்.

திருச்சி-14 வி. ராதாகிருஷ்ணன்

என்னைப் போன்ற வாசக உள்ளங்களைத் துடி, துடிக்க வைத்துக் கொண்டிருக்கிறது "ராஜ கர்ஜனை."

"வலை வீச்சில் அகப்பட்டுக் கொண்ட ரங்கநாயகி இளஞ் சிவப்பாய் அழகு தரும் சங்கரா மீனைப் போலத் துடித்தாள்" என்பது போன்ற உபமானங்கள் வர்ணனைகள் பல படிக்கப் புடிக்க நயமாய் உள்ளன.

தாம்பரம் விஜயராஜா

"மண்ணின் அழைப்பு" போட்டிக் கதை கருத்துள்ள கதை. அலுவலகப் பணியையே பெரிதும் விரும்பும் வேலையற்ற இளைஞர்களுக்கு "இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்

நிலமென்னு நல்லாள் நகும்" என்ற குறளை நினைவு படுத்துவதாக உள்ளது.

மேல்பள்ளிப்பட்டு, கி. தாண்டேசுவரன்

## வட்ட மேஜை













# ரன் ஸைலண்ட்.. ரன் டீப்

படவிமரிசன

தாய் நாட்டை அடிமை கொள்ள வந்த நாஜிகளை விரட்டியடிக்கப் புரட்சிக் காரனாகிறான் அந்த ரஷ்யன். நாஜிகளை ஏற்றிவரும் ரயில் வண்டிகள் கவிழுகின்றன. ஜெர்மானியரின் படைத் தளங்கள் வெடி குண்டால் தகர்க்கப்படுகின்றன. உயர் அதிகாரிகளின் உயிர்கள் பறிபோகின்றன. புரட்சிக் காரனைப் பிடிக்கப் படாத பாடு படுகின்றனர் நாஜிகள். அவனை உயிருடனோ பிணமாகவோ கொண்டு வருபவருக்கு ஏராளமான தொகை பரிசாகத் தருவதாக அறிவிக்கின்றனர்.

புரட்சிக் காரனின் மனைவி இறந்து கிடக்கிறாள். அவள் அருகே ஐந்து வயதுப் பெண் குழந்தை அழுது கொண்டிருக்கிறது. அவளுடைய அந்தக் குழந்தையை ஒரு கிழவன் தூக்கிச் சென்று காப்பாற்றுகிறான். கிழவன் வசிப்பதோ கானகத்தின் நடுவே தன் ஒரே பேரனுடன். இங்கிருந்துதான் கதை ஆரம்பமாகிறது. புரட்சிக் காரனின் குழந்தையைக் கண்டு பிடித்து அதை வைத்து அவனைப் பிடிக்கத் திட்டமிட்டிருக்கின்றனர் நாஜிகள். அதற்காகக் கிராமம் கிராமமாகக் குழந்தைகளையெல்லாம் கூட்டித் தங்களிடமுள்ள ஒரு போட்டோவை வைத்துக் கொண்டு தேடுகின்றனர். அந்த முயற்சியில் நாஜிகளின் குரூரம், கெடுபிடி, அப்பாவித் தாய் மார்களின் அவஸ்தை இதெல்லாம் கதையில் கொஞ்சம் தான். ஆனால் படத்தில் ஜீவனாக இருப்பது புரட்சிக் காரனின் ஐந்து வயதுப் பெண்ணாக வரும் சிறுமியின் அற்புதமான நடிப்பு. யுத்த காலப் பின்னணியுடன் இருந்தாலும் இது அந்தப் பாணிப்படமல்ல. மிகச் சிறந்த குழந்தைகள் படம். சிறுமியைக் காப்பாற்றும் கிழவனின் பேரன், முதலில் குழந்தையிடம் அலட்சியமும் வெறுப்பும் காட்டுகிறான். பன்னிரண்டு வயதுப் பையன். ஆனால் நாஜிகள் கிழவனையும் கொன்ற பிறகு அந்தச் சிறுமியைக் காப்பாற்ற அவன் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் பிரமாதம். நடிப்போ அற்புதம். பண்பட்ட பெரிய நடிகர்களெல்லாம் பார்த்துத் தெரிந்து கொள்ளும் படியாக இருக்கிறது சிறுமி சிறுவன் இருவரின் நடிப்பும். நாஜிகளால் வேட்டையாடப் பட்டுக் கானகத்தினுள், புதரும், புனலும், சகதியும், பள்ளமும் பார்க்காமல் இருவரும் ஓடுகிறார்கள், ஓடுகிறார்கள்; ஓடிக்கொண்டே இருக்கிறார்கள்! எத்தனை கஷ்டங்கள், தவிப்புகள், அபாயங்கள். நள்ளிரவில் தன்னந் தனியே சிறுமி கானகத்தின் இருளில் பயப்படுவதும், பிறகு பயத்தை வென்று உறங்க முற்படுவதும் நெஞ்சை விட்டு நீங்காத காட்சிகள்.

நாஜிகள் காட்டும் புகைப் படத்தைப் பார்த்து 'இதுதான் எங்கப்பா, இதுதான் எங்கம்மா, இது நான்' என்று கூறும் போது கள்ளங் கபடமறியாத குழந்தை உள்ளத்தைக் கண்டு கண்ணீர் திரளுகிறது நமக்கு.

தைரியம், தன்னம்பிக்கை, தேச பக்தி, சகிப்புத் தன்மை ஆகியவைகளைக் கற்றுத் தர நம் குழந்தைகள் ஒவ்வொருவரையும் 'ரன் ஸைலண்ட், ரன் டீப்' படத்தைப் பார்க்கச் செய்யவேண்டும். சிறுமியின் நடிப்புக்காகவும், 'வெடுக்' பேச்சுக்காகவும் பார்க்க வேண்டிய படம்.

—கௌசிகன்

# பட்பட் பட்டாபி

9

கதை: சாருகேசி
படம்: செல்லம்



















அவர் முகத்தில்
செய்து கொள்கிறது?


மானேஜரிடம் ரிப்போர்ட்
செய்து விட்டார்கள்.
போகப் போகிறது!


யோ
தமாச்சே!
என்ன விபரீதம்? ஸ்டோர்ஸ் சம்பூர்ணம் ஒரு சம்பூர்ண ரோக்! ஸ்டோர்ஸிலிருந்து பார்ட்ஸ் விற்றுத் திருட்டுத் தனமாய்ச் சம்பாதிக்கிறன்.


இதைச் சொல்லத்தான் அன்று நீங்க ஆபீஸுக்கு வந்தீங்களா?
வந்தேன், சொன்னேன், சென்றேன். இனிதான் செயலில் இறங்குவேன்!


அபாரமா
செய்யறது. நீங்கள்
பிரத்தில் ஒருவர் கூட
லட்சத்தில்
ஒருவர்!
நல்ல வேளை, 'அறுபது லட்சத்தில் ஒருவர்' என்று சொல்லாமல் விட்டாயே!


ஏன், அறுபது லட்சம் என்ன கணக்கு?
இந்தியாவில் மொத்தம் அறுபது லட்சம் பைத்தியக்காரர்கள் இருக்கிறார்களாம்! ...ஹஹ்ஹஹா...!
தொடரும்

# யார் இந்த இருவர்?



# ரூ. 50,000

## பரிசு பெறுபவர் நீங்கள் ஒருவராக இருக்கக் கூடும்

ஒவ்வொரு வரிசையிலும்
2 முதல் பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 50,000
3 இரண்டாவது பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 10,000
5 மூன்றுவது பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 5,000
மேலும் ஏராளமான இதரபரிசுகள்.
மொத்தப் பரிசுகள்: 7,965.
மொத்தப் பரிசுத் தொகை: ரூ. 11,70,000



DIPR 38163/78 FDS

குலுக்கல் நாள்:
18-11-'78.
பரிசுச் சீட்டின் விலை:
ரூ.1/- மட்டுமே.

வெளியிட்டோர்:
இயக்குநர்,
தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்டம்,
சென்னை 600 002.


10
கதை:
சாருகேசி
செல்லம்


ஸ்டோர்ஸ் சம்பூர்ணம் கிதர் வைறு?
டௌன்... கீழே... கம்...


டேய், பரமசிவம்! யார்ரா இந்தத் தாடிக்காரன்?
உன் வாடிக்கைக் காரனு யிருப்பான்னு நினைச்சேன். எனக்கென்ன தெரியும்?


பரமசிவம் போனதும்...
நல்டர் சம்பூர்ணம்! நமக்குச்சில பார்ட்ஸ் அர்ஜண்டா வேணும். நோ பில்... நத்திங்... நீ அட்ஜஸ்ட் பண்ணிக்கொடுப்பேன்னு எனக்குத் தகவல் கிடைச்சுது...
உஷ்... இரையாதே, சர்தார்ஜி!


ஏன் இரைந்து பேசப்படாது? இது என்ன லைப்ரரியா?
நாசமாய் போச்சு மெள்ள... மெள்ள... மெள்ள...


நாசமாய்ப் போறதிலே என்னய்யா மெள்ள, மெள்ள? சீக்கிரமாத்தான் போறது! இதோ இருக்கு சாமான் லிஸ்ட். இதோ இருக்கு பணம், சீக்கிரம், ஜல்தி, குவிக்!
அவசரப்படாதே சர்தார்ஜி... இவ்வளவு சாமானையும் எடுத்து வைக்க வேண்டாமா? ஆட்களைச் சரிக் கட்டணும்...


ஓகே, ஓகே! நான் அப்புறம் வரேன். கீப் தி ஐட்டம்ஸ் ரெடி ரெடி காஷ் பிடி!
சர்தார்ஜி கிளம்பி விடுகிறார்.


...கல். சர்தார்ஜி மறுபடியும் கோதண்டபாணி
...டு கோவுக்கு வருகிறார்.
...னே மறுபடி சம்பூர்ணத்தைப் ...க்கணுமா?... பேருதான் ...பூர்ணம்; ஒரு காரியத்தை ...சா முடிக்கிறதில்லே... கீழேதான் இருக்காரு போ!
சம்பூர்ணம் வேண்டாம். மானேஜர் எங்கே?


மானேஜர் தேக்ஜி? கம். ஜூ ஷோ! அவர் இப்ப நல்ல மூட்லே இருக்காரு...
வெரிகுட்,


...னேஜர் அறையில்... பரமசிவம் தலை மறைந்ததும்...
...தாங்யூ மிஸ்டர் பாச்சு சிங்! ...ரி பாச்சு! நீங்கள் சொன்னது ...சொன்னபடி கண்டுபிடிச்சுட்டீங்க! ...நான் சம்பூர்ணத்தை இப்பவே ...கூப்பிட்டு டிஸ்மிஸ் செய்து விடுகிறேன்!


எல்லாம் உங்க ஐடியாதான் மானேஜர் ஸார். ஐட்டமெல்லாம் பில் போடாமலே எடுத்து வைத்திருக்கிறார், சம்பூர்ணம். நீங்கள் கொடுத்த பத்து நூறுரூபாய் நோட்டிலும் பென்ஸிலில் மார்க் பண்ணிக் கொடுத்திருக்கிறேன்.
வெரிகுட்! பரமசிவம்! பரமசிவம்!


...ன்னு சார்?
டைப்பிஸ்ட் விமலா கிட்டே சொல்லி சம்பூர்ணத்தை வேலையிலிருந்து நீக்கி விட்டதாக ஒரு லெட்டர் டைப் அடிக்கச் சொல்லி எடுத்துக் கொண்டு வா! சம்பூர்ணத்தையும் வரச் சொல்லு!


தாடிக்காரன் நோ டைம் வந்தப்பவே ஸம் திங் ராங்னு நினைச்சேன்...!
ஏய் அதிகப்பிரசங்கி! சொன்னதைச் செய்!
நான் சற்று வெளியே இருக்கேன் மானேஜர் ஸார்!

## காட்சி 1

[நவீன முறையில் அலங்கரிக்கப் பட்ட ஆபீஸ் மானேஜரின் அறை. முப்பது வயது மதிக்கத் தக்க மானேஜர் முரளி நாற்காலியில் அமர்ந்திருக்கிருன். எதிரிலுள்ள நாற்காலியில் வசந்தி உட்கார்ந்திருப்பது போல் பாவனை செய்கிருள்.]

முரளி: (தன் கையிலிருந்த விண்ணப் பத்தை மேஜையின் மேல் வைத்து விட்டு) ஸோ!... யூ ஆர் வசந்தி!...

வசந்தி: எஸ், ஸார்!... மிஸ் வசந்தி..., (''மிஸ்'' என்ற வார்த்தையில் அழுத்தம் தெரிகிறது.)

முரளி: (சிரித்து) மிஸ் வசந்தி... இந்த வேலைக்கு மணமானவர்கள் விண்ணப்பிக்கத் தேவையில்லை என்ற ''கண்டிஷனை'' ஞாபகப் படுத்துகிறீர்கள்.

வசந்தி: (நாணத்துடன்) அதற்காக இல்லை, ஸார்...

முரளி: நீங்கள் மிஸ்ஸா, இல்லை மிஸஸா என்று எனக்கு நீங்கள் உள்ளே வரும்போதே தெரிந்துவிட்டது.

வசந்தி: ஸார்!

முரளி: என்னை யாரும் ஏமாற்ற முடியாது... ஒருவர் முகத்தைப் பார்த்தவுடனே அவர்கள் மனத்தை எடை போடும் சக்தி எனக்கு உண்டு... ''ஸ்கர்ட்'' போட்டுக் கொண்டு பள்ளிக்கூடம் போகும் பெண்ணைப் போல் இருக்கிறீர்கள்... உங்களைப் போய்த் திருமணமானவள் என்று எந்த முட்டாள் சந்தேகப் படுவான்?

வசந்தி: (வெட்கத்துடன்)..., அப்படியானல்... இந்த வேலை...

முரளி: உங்களுக்குத்தான்...

வசந்தி: தாங்க்யூ, ஸார்..,




முரளி: ஆனல், மிஸ் வசந்தி ஒரு சின்ன ஒப்பந்தம்...

வசந்தி: (திகைத்து) ஒப்பந்தமா...?

முரளி: எஸ்... ஒரு சின்ன ''காண்டிராக்ட்''... ஒரு வருஷம் முடிவதற்குள் நீங்களும் வேலையை விட முடியாது... நாங்களும் அனுப்ப முடியாது. அப்படியே நீங்கள் போனல் வாங்கின சம்பளம் முழுதும் திருப்பிக் கட்ட வேண்டும். நாங்களாக அனுப்பினல் வருஷம் முடிய எத்தனை மாதங்கள் இருக்கின்றனவோ—அதற்கான சம்பளத்தைக் கொடுத்து விடுவோம்...''

வசந்தி: (உற்சாகத்துடன்) சம்மதம், ஸார்!

முரளி: அப்படியானல் உங்களுக்கு வேலை பிடித்திருக்கிறது...

வசந்தி: 'ஷ்யூர், ஸார்!'

முரளி: (கண்களைச் சிமிட்டியபடி) வேலையை மட்டும்தானு?....

வசந்தி: (சிரித்துக் கொண்டு) நீங்கள் ரொம்பக் குறும்புக் காரர்...

[போகிருள். அவள் போனபின் அவள் புகைப்படத்தைப் பார்த்து 'விசில்' அடிக்கிருன். பின்னர் தன் வேலையில் மூழ்கி விடுகிருன்.]

## காட்சி 2

(வசந்தியின் அறை.)

முரளி: மே ஐ கம் இன்?

வசந்தி: (பரபரப்புடன்)... நீங்களா ஸார்!... வாருங்கள்... வாருங்கள்...

(அவசரம் அவசரமாக ஒரு நாற்காலியை இழுத்துப் போடுகிருள்)

முரளி: (உட்கார்ந்தபடி) நீ என்னை இங்கே எதிர்பார்க்கவில்லை, இல்லையா?

வசந்தி: பெரிய சர்ப்ரைஸ், ஸார்!... வருவதாக நேற்று ஆபீஸில்கூடச் சொல்லவில்லையே ஸார். ..

முரளி: ஏதேதோ சொல்ல வேண்டும் என்று நான்கு மாதங்களாக ஆசை... உம்... எப்படி ஆரம்பிப்பது என்று குழம்பிப் போய்க் கடைசியில் ஒரு தீர்மானத்துடன் புறப்பட்டு வந்து விட்டேன்...

வசந்தி: நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?...

முரளி: எதற்குச் சுற்றி வளைக்க வேண்டும்?... நீ வேலைக்குச் சேர்ந்த அன்றே நான் உனக்கு அடிமையாகி விட்டேன்.:. நீ மட்டும் சம்மதம் என்ற ஒரு தலை அசைவு...

வசந்தி: (திடுக்கிட்டு) ஸார்!... நீங்கள் என்ன ஸார் சொல்கிறீர்கள்?... நீங்கள் எங்கே?... நான் எங்கே... நான் ரொம்ப ஏழை ஸார்... என் சம்பாத்தியத்திலே தான்...

முரளி: உன் குடும்பம் நடக்கிறது... ஒப்புக் கொள்கிறேன்... நமக்குக் கல்யாணம் ஆனுல் என்ன? நான் என் மனைவியின் குடும்பத்தைத் தவிக்க விடும் அளவுக்குக் கல் நெஞ்சன் இல்லை.

வசந்தி: (தலையைப் பிடித்துக் கொண்டு) இது ரொம்பப் பெரிய விஷயம் ஸார்!... நான் எதிர்பார்க்கவேயில்லை. நான் ரொம்பவும் குழம்பிப் போயிருக்கிறேன் ஸார்!....

முரளி: நான் உன்னை அவசரப் படுத்தவில்லை... உன்னுடைய சம்மதத்துக்காக எத்தனை நாட்கள் வேண்டுமானுலும் காத்திருப்பேன்... நான் வரட்டுமா?

வசந்தி: இருங்கள் ஸார்... ஒரே நிமிஷத்தில்... காப்பி...

முரளி: நான் உன்னிடமிருந்து எதிர்பார்ப்பது வெறும் காப்பி மட்டும் இல்லை, வசந்தி! (போகிறுன்)



காட்சி 3

[வசந்தியும் அவள் தோழியும்]

வசந்தி: வரவர இந்த மானேஜர் பிடுங்கல் தாங்கவில்லை... கமலா!... கறையான்கூடத் தேவலே போ!... என் சம்மதம் வேண்டுமாம்... என் நிலைமை உனக்குத் தெரியும்... ஒவ்வொரு நாள் போவதும் முள்மேல் நடப்பதுபோல் இருக்கிறது...''

கமலா: ஏதாவது அத்து மீறினுல் 'ஸ்லிப்பரை'க் கழற்றிக் கொள்...

வசந்தி: சே!.,. ஹி இஸ் எ ஜென்டில்மேன்... இல்லா விட்டால் இத்தனை நாள் காலம் தள்ளியிருக்க முடியுமா? அவரைப் பார்த்தால் சில சமயம் இரக்கம் கூட வருகிறது...

கமலா: வசந்தி... அப்படியானுல் உன் மனத்தில் கூட...

வசந்தி: (காதுகளைப் பொத்தியபடி) சீச்சீ!. என்ன பேச்சு இது .. இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்க ஒருவழி சொல்லுடி என்ருல்...

கமலா: உம்... பேசாமல் ஒரு கால் கடுதாசி...

வசந்தி: அது அத்தனை சுலபம் இல்லையே...? வாங்கிய ஆறுமாதச் சம்பளத்தை எண்ணி வைக்க வேண்டும்...

கமலா: எல்லாவற்றையும் விவரமாக ஊருக்கு எழுதிப் பணம் அனுப்பச் சொன்னுல்...

வசந்தி: வேண்டாம்... அந்த அவமானத்துக்கு இந்த அவஸ்தை மேல்...

(திரை)

## காட்சி 4

*[வசந்தியின் அறை.]*

முரளி: நானும் மூன்று மாதங்களாகப் பொறுத்துப் பார்த்து விட்டேன்... வசந்தி!.. என்னைப் பிடிக்கவில்லையென்றால் நேருக்கு நேர் சொல்லி விடு... இந்த ''சஸ்பென்ஸ்'' எனக்குப் பிடிக்கவில்லை...

வசந்தி: உங்களுக்கு மனைவியாக வருபவள் கொடுத்து வைத்திருக்க வேண்டும்... எனக்கு அந்தத் தகுதி இல்லை, ஸார்!

முரளி: அப்படி என்ன காரணம்?... உனக்கு முன்பே கல்யாணமாகி, துரதிருஷ்ட வசமாக நீ அவனை இழந்து...

வசந்தி: (குறுக்கிட்டு) அப்படிப்பட்ட விபரீதக் கற்பனைகள் வேண்டாம், ஸார்!...




(விருந்தினர்:) ''பாகிஸ்தானில் பார்த்தேளா, ரொம்ப அன்ருலி கிரௌட் ஸார்!''



''பாகிஸ்தான் ஆட்டக்காரா எல்லாரும் மழுங்க ஷேவ் பண்ணிண்டிருக்கா; நம்மவா எல்லாரும் தாடி வளர்க்கிறளே?''

''டெஸ்ட் ஸீரிஸில் வெற்றி பெறணும்னு பிரார்த்தனை போலிருக்கு!''



ஏண்டா! நான்தான் ஆபீஸுக்கு அரை நாள் லீவு சொல்லி விட்டு டி. வி. பார்க்க வந்துட்டேன். நீயும் பள்ளிக்கூடம் மட்டமா?''

''வாத்தியாரும்தான் அப்பா!''



''அலமாரி மேலே இருக்கிற தட்டு முட்டுச் சாமான்களை அப்புறப் படுத்துப்பா! எங்களுக்கு டெர்ரஸ் ஸீட் வேணும்!''



''என்ன ஸார் கங்கா ஸ்நானம் ஆச்சா?''

''இன்னைக்கு 'ரெஸ்ட் டே' டிவிலே கிரிக்கெட் மாட்ச் இடையாது. நாளைக்கு வாங்கோ!''

முரளி: இல்லை... உன்னையறியாமல்... இளம் பிராயத்தில் ஏதாவது அசம்பாவிதமாகத் தவறே நடந்திருந்தால் கூட...

வசந்தி: நோ!... நோ!... இட் ஈஸ் நாட் தட் (ரோஷத்துடன் தலை ஆட்டுகிறுள்)

முரளி: அப்படியானுல் ஏன் சம்மதிக்க மாட்டேன் என்கிறுய்?...

வசந்தி: எத்தனையோ இருக்கும்... வெளிப்படையாக எல்லாவற்றையும் சொல்ல முடியுமா?

முரளி: என் உருவத்தை உனக்குப் பிடிக்காமல் இருக்கலாம்...ஆனுல் ஒரு மனைவிக்குத் தகுந்த பாதுகாப்புக் கொடுக்கக் கூடிய கணவனுக நான் இருப்பேன் என்று நம்ப முடிகிறதா இல்லையா?

---



''அம்மா டீ டைம் வந்தாச்சு. தீபாவளி பட்சணத்தை டிவி கிட்டேயே கொண்டு வந்து கொடுத்துடு!''

''நம்ம பவுண்டரிக்குள் இருக்கிறவா எல்லாருக்கும் விநியோகிக்கறதுன்னு நான் பட்சண செஞ்சுரி போடணும் போலிருக்கே!''



''டி. வி.யிலே ஸ்கோர் என்ன சொன்னுன்?''

''ஸ்கோர் எங்கே கேக்க முடிஞ்சுது?... உங்கப்பா பல்லை 'நறநற'ன்னு கடிக்கற சத்தம் தான் கேட்டுது!''



''ஐயய்யோ! டி. வி. ரிப்பேர் ஆயிடுச்சே!''

''நான் அப்பவே நினைச்சேன்! கண் திருஷ்டி! கிரிக்கெட் மாட்ச் பாக்க வந்த பேர் எவ்வளவு பேர் 'கண்' பட்டிருக்கும்!''



''லாகூர் டெஸ்ட்டுக்கு வந்த மாதிரி கராச்சி டெஸ்ட்டுக்கும் தவரும வந்துடுங்க!''

''கண்டிப்பா வரேன்!...''

''வரச்சே ஒரு அறுநூறு ரூபா கொண்டு வாங்க... நான் டி. விக்கு மூணு இன்ஸ்டால்மெண்ட் கட்டல்லே. அப்பறமா திருப்பிக் கொடுத்துடறேன்.''




---

வசந்தி: (மௌனம்)

முரளி: அப்புறம் என்ன? இன்று இல்லா விட்டாலும் கூட என் மனைவி என்று வந்த பிறகு கட்டாயம் நீ பிரியம் காட்டு வாய் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது... என்னுல் இனி பொறுக்க முடியாது... நான் இப்போது நேராக பிரஸ்ஸுக்குப் போய்க் கல் யாணப் பத்திரிகை அச்சடிக்கக் கொடுக்கப் போகிறேன்.

வசந்தி: ஸார்!... ஸார்!...

[முரளி ''நோ!'' என்று தலை ஆட்டிவிட்டுப் போகிருன். குழம்பியபடி உட்கார்ந்திருக் கிருள் வசந்தி. பத்து நிமிஷங்களுக்குப் பிறகு தன் நகைகளையெல்லாம் கைப்பையில் அடைத்துக் கொண்டு வெளியே போகிருள்.)

## காட்சி 5

[முரளியின் அறை: அவன் ஒரு திருமணப் பத்திரிகையை அழகு பார்த்துக் கொண்டு இருக்கிருன். வசந்தி கோபமாக வருகிருள்.]

முரளி: ஹாய் வசந்தி... இன்விடேஷன் அச்சடித்து வந்து விட்டது... பார்க்கிருயா? (தூக்கிப் போடுகிருன்)

வசந்தி: (தொடாமல்) அதை நான் பார்க்க வேண்டாம். இதை நீங்கள் பிடியுங்கள்... என் ராஜிநாமா...

முரளி: ராஜிநாமாவா!

வசந்தி: ராஜிநாமா மட்டும் இல்லை... நீங்கள் கொடுத்த ஏழாயிரம் ரூபாய்... இதோ...

முரளி: (சோகமாக) வேலையைக் கூட உதறும் அளவுக்கு நான் என்ன தப்பு செய் தேன், வசந்தி?

வசந்தி: (கம்மிய குரலில்) நீங்கள் தப்பு செய்யவில்லை... நான்தான் இதை முட்டாள் தனமாக வெளியே தெரியாமல் பார்த்துக் கொண்டேன். (தன் கழுத்துச் சங்கிலியில் இருந்த தாலியை அவனுக்குக் காண்பித்துக் கண்களில் ஒற்றிக் கொள்கிருள்).

முரளி: (திடுக்கிட்டு) அப்படியா?... ஆரம்பத்திலிருந்தே நீ பொய்...

வசந்தி: பொய் சொன்னதிற்குத் தான் அனுபவித்து விட்டேன். ஒரு சின்ன மனஸ் தாபத்தைப் பெரிதாக்கி — அவரை விட்டுத் தனியாக வந்து... வாழ்ந்து காட்டுவேன் என்ற வீம்பில்... (விம்முகிருள்)

முரளி: இது தெரியாமல் நான் 'இன்வி டேஷனை' வேறு அடித்து...

வசந்தி: (ஆத்திரத்துடன் )... இன்வி டேஷனு?... (அதைக் கையில் எடுத்துக் கிழிக்கத் தொடங்குகிருள்.)

முரளி: நோ!... அதைக் கிழிக்காதே... அது எனக்கும் என் மாமன் மகள் அருணு வுக்கும் நடைபெறப் போகும் திருமணம்...

வசந்தி: (குழம்பி) அப்படியானுல்?...

முரளி: வசந்தி! நீ யார் என்பது எனக்கு முன்பே தெரியும்... முகுந்தன் — உன் ஹஸ் பெண்ட் — என் காலேஜ் மேட்... உங்கள் கல்யாண போட்டோ என் ஆல்பத்தில் இருக் கிறது... அப்போது நான் 'ஸ்டேட்ஸி'ல் இருந்தேன்... முகுந்தன் அதை அனுப்பி வைத்தான். உன் வாயால் உண்மை வரத் தான் நான் இப்படியெல்லாம் நடந்து கொண் டேன். ஐடியா மட்டும் முகுந்தனுடையது...

வசந்தி: அப்படியானுல்... நான் (தன் ராஜினுமாக் கடிதத்தை எடுக்க முயல்கிருள்.)

முரளி: நோ! வசந்தி... யூ ஆர் டிஸ்மிஸ்ட் உனக்கு வேலை கிடையாது... ஐந்து மாதச் சம்பளம் நான் தருகிறேன்... கம்பெனிச் சட்டம் எல்லோருக்கும் பொது.

வசந்தி: (ஏமாற்றத்துடன்) ஐ ஆம் ஸாரி, ஸார்!...

முரளி: இங்கேதான் உனக்கு வேலை இல்லையே தவிர... நான் இன்னெரு 'பிஸி னெஸ்' ஆரம்பித்திருக்கிறேன். . குடும்பஸ்தர் களுக்கு வேண்டியது. கட்டில் முதல் தொட்டில் வரை... அதற்கு ஒரு குடும்பப் பெண்தான் தேவை... நீங்கள் விண்ணப்பிக்கலாம்... ஒரு கண்டிஷன்...

வசந்தி: கண்டிஷனு!

முரளி: குடும்பப் பெண் என்றுல் குடும் பத்தில் உள்ள பெண்... மிஸ் வசந்தி தேவை இல்லை... மிஸஸ் வசந்தி முகுந்தன் வேண் டும்... புரிகிறதா?...

வசந்தி: (சிரிக்கிருள்)... புரிகிறது ஸார்... உங்களையும் புரிகிறது... உங்கள் நண்பரையும் புரிகிறது!

● 5.11.78 வட்டமேஜைக் கடிதம் எழுதிய திரு 'அல்லியப்பா'வுக்கு என் நன்றி.

அறு(ை)வ, முண்(ை)ட, அறுத(ா)லி, ஆகிய சொற்கள் விதவையெனும் பொருள் படத் தென் ஆர்க்காடு கிராமப் பகுதிகளிலும், நாகர் கோவில் பகுதிகளிலும் வழங்கப் படுவதைக் கேட்டிருக்கிறேன். அதனுல்தான் கவிதையில்' கையாளப் பட்டது. அகராதியைப் பார்த்து எழுதவில்லை.

ஆமாம்... எந்த அகராதியில் 'அறுவை' என்பதற்கு 'Bore' என்ற பொருள் இருக்கிறது? அதை நாம் கையாளவில்லையா?

எளிய நடையில் நகைச்சுவையாகச் சில கருத்துக்களை எழுத வேண்டும் என்றுதான் விரும்புகிறேன். அதற்காகக் 'கட்டுக்கோப்பு'கள் தவறுவதைப் பற்றி நான் கவலைப் படுவதில்லை.

அரிவை என்பதற்கு 'அறிவை' என எழுதியது தவறுதான். கையை மேலே தூக்கி விடுகிறேன்.

தூத்துக்குடி—5 புவனு சந்திரன்

● தமிழக முதல்வர் நாட்டில் உள்ள பிரச்னைகளிலிருந்து தாற்காலிகமாகவேனும் தப்பத் தமது வெளிநாட்டுப் பயணத்தைத் துவக்கி இருப்பது போல் வெளி வந்துள்ள கார்ட்டூன் மிகவும் வேதனை அளிப்பதாக உள்ளது.

இதற்கு முன்னுல் எந்த ஆட்சித் தலைவரும் விடுக்காத முறையில் எதிர்க் கட்சிகளுக்கெல்லாம், 'எந்தப் பிரசினையானுலும் பேசித் தீர்த்துக் கொள்ளலாம். போராட்டம் தேவையில்லை' என்று வேண்டுகோள் விடுத்து விட்டுத்தான் தமது பயணத்தை முதலமைச்சர் துவக்கி யிருக்கிருர்.

சென்னை—32 என். ஏ. தாஸ்

● ஓராண்டு இடைவெளிக்குப் பிறகு 'கல்கி' புனர்ஜென்மம் எடுத்தது வியப்பன்று. இடைவெளியில் நின்று போனதால் ஏற்பட்ட மாபெரும் பொருளாதார இழப்பிற்குப் பின்பும், ஒரு மாபெரும் தீபாவளி மலரைக் கொண்டு வந்ததுதான் வியப்பினும் வியப்பு! பிரும்மாண்டமான மலரில் பக்கத்துக்குப் பக்கம் அருமையான அம்சங்கள் சார்!

சென்னை—5 புனர்வசு

● ''கந்தர் — சஷ்டி'' முன்னிட்டு வெளியான திரு. ஹரலிங்கம் அவர்கள் எடுத்த, வள்ளி, தெய்வயானையுடன் கூடிய முருகன் படம் கண்ணையும் கருத்தையும் கவருவதாக அமைந்திருந்தது.

குடியாத்தம் ஏ. என். சுப்பிரமணியம்

● 'Tongue Twister' பற்றிய துணுக்கைப் படித்து மகிழ்ந்தேன். தமிழில் உள்ள பல 'Tongue Twister' களில் ஒன்று:

'காக்கைக் காகா கூகை கூகைக் காகா காக்கை
கோக்குக்கு காக்கைக்கு கொக்கொக்க — கைக்கைக்கு
காக்கைக்கு கைக்கைக்கா கா.'

காளமேகப் புலவர் பாடிய சிந்தியல் வெண்பா இது. 'காகமும் கூகையும் ஒன்றுக்கொன்று ஆகாதவை. அரசன் கொக்கு போல்




இருந்து நாட்டைக் காக்க வேண்டும்' என்கிற கருத்தைச் சொல்கிறது.

'Tongue Twister' மட்டுமல்லாமல் Language Twister கூடத் தமிழில் உண்டு.

'நீவாத மாதவா தாமோக ராகமோ
தாவாத மாதவா நீ.'

—இந்த வெண்பாவைக் கடைசி எழுத்திலிருந்து திருப்பிப் படித்துப் பார்த்தால், மீண்டும் அதே வெண்பா தோன்றுவதைக் காணலாம்.

திருப்பூர் க. கிருஷ்ணன்

● தலை நிமிர்ந்து நிற்போமா — தாழ்ந்து போவோமா கட்டுரையில் சகோதரி காஞ்சனு சென்னையில் ஈவ் டீஸிங் பற்றி மனம் நொந்து பேசியிருக்கிருர். அண்மையில் சென்னை வந்த போது எழும்பூர் ஸ்டேஷனில் மின் ரயிலிலிருந்து இறங்கிச் சென்ற ஒரு மாணவியை ஐந்தாறு மாணவர்கள் கைநீட்டிக் கூப்பிட்டு வம்பு செய்ததை நானும் பார்க்க நேர்ந்தது. ஜனத்திரள் மத்தியில்தான்! யாரும் இதைக் கண்டிக்க மனே தைரியம் உள்ளவர்களாக இல்லை. தவறுசெய்பவர்களைத் தட்டிக் கேட்கும் தைரியம் கூட இல்லாது தாழ்ந்து விட்ட சமுதாயமாகப் போயிற்றே நம் தமிழினம் என்றே நொந்தேன்.

திருச்சி—18 டி. ஆர். அலமேலு

● கடந்த பத்து தினங்களாக பெரம்பூர் தபால் நிலையத்தில் 'இன்லண்டு கடிதம் கைவசம் இல்லை' (Inland letter No stock) என்ற அட்டை தொங்கியவண்ணம் உள்ளது. எப்பொழுது சென்று கேட்டாலும் இன்னும் வரவில்லை வரவில்லை என்று சொல்கிருர்கள். ஆனுல் வெளியில் உள்ள கடைகளில் 22 பைசாவுக்குக் கிடைக்கிறது.

சென்னை—11
27.10.78 கே. சீனிவாசன்

● பட் பட் பட்டாபி வசனங்கள் உண்மையில் மேடை நாடகமானுல் வீடு கட்டக் கல் ரசிகர்களிடமிருந்து குவியும். விஜயா ஸ்பிரே, துணுக்குக்கு ஒரு குழந்தையின் படத்தைப் போட்டிருக்கலாம். ஏன் கவர்னர்...?

இதயகுமார்

# பட் பட் பட்டாபி



11

கதை: சாருகேசி

படம்: செல்லம்




















தைக்குத்
?
வேலை நீக்க உத்தரவு
இருக்கு.
அனுப்பலாமில்லே?




கணக்கையும் தீர்த்து அனுப்பு.
அப்புறம் உன் கணக்கையும்




யா குரங்த பிடிக்கப் போய்
ளையாரா முடிஞ்சுதே!
ர்! மன்னிக்கணும் ஸார்,
எங்களை!
சர்தார்ஜி
வும் வந்தான்,
தலை நீக்க அதுக்
உருண்டுடுச்சு....
அவன் மறுபடி
ன! இன்னும்
ார் தலை உருளப்
தோ நான்
ப்பேனு?
MA




மனேஜர் அறைக்குள் சர்தார்ஜி வர்றார்....
மனேஜர் ஸார்! நீங்க இறைந்ததைக் கேட்டுக்கிட்டேதான் வந்தேன். இவங்க மூணு பேருக்கும் தண்டனையா ஒரு எக்ஸ்ட்ரா இன்கிரிமெண்ட் தரணும் நீங்க!




! இவங்க மூணு
ரும் இன்கிரிமெண்ட்;
வுக்கு மட்டும்
மெண்டி!
ஐயோ! நான் என்ன தப்பு பண்ணினேன்?




நீ டைப் பண்ற கடிதங்களில் உள்ள தப்புகள் போதாதா? அதைவிடப் பெரிய தப்பு, எங்களுக்குத் தெரியாமல் நீ பட்டாபி மகன் பாச்சுவைக் காதலிச்சது! அதுக்குத் தண்டனையா நீ இந்த சர்தார்ஜியைக் கல்யாணம் பண்ணிக்கணும்!
தொடரும்

# அமிர்தாஞ்சன் பரிசுப் போட்டி

## வென்றிடுவீர்! ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள பரிசுகள்!




AM-1989

முதல் பரிசு
பிரிமியர் பத்மினி கார்.
அல்லது ரொக்கத் தொகை ரூ. 40,000



இரண்டாம் பரிசு
தங்க ஆபரணங்கள் அல்லது
ரொக்கத் தொகை ரூ. 15,000



650 இதர பரிசுகள்
மதிப்புத் தொகை ரூ. 45,000

இப்பரிசுகளை அடைய நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் இதுதான்: அமிர்தாஞ்சன் குணப்படுத்தும் கீழ்க்கண்ட உபாதைகளை அதன் செயல்திறனுக்கு ஏற்ப வரிசைப்படுத்தி எழுத வேண்டும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| a. மூட்டுவலி | □ | d. தசைவலி | □ | g. பல்வலி | □ |
| b. இருமல்/ஜலதோஷம் | □ | e. சுளுக்கு | □ | h. .................. | □ |
| c. தலைவலி | □ | f. வீக்கம் | □ | | |

எடுத்துக்காட்டாக, அமிர்தாஞ்சன் தசைவலியைப் போக்குவதில் முதலிடம் பெறுகிறது என்று நீங்கள் கருதினால், (d) க்கு எதிரே 1 என எழுதுங்கள். இங்கு குறிப்பிட்டுள்ளவைகளைத் தவிர வேறு எந்த உபாதையாவது நீங்கள் சேர்க்க விரும்பினால், அதை (h) க்கு எதிரே எழுதுங்கள்.

பிறகு நீங்கள் அமிர்தாஞ்சனத்தின் குணத்தை விவரிக்கும் “சிறப்பு வாக்கியம்” (Slogan) ஒன்றை 15 சொற்களுக்கு மேற்படாமல் புனைந்து எழுதவேண்டும்.

________________________________

________________________________

பெயர் ____________________________

விலாசம் ____________________________

நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொன்றுடனும் 12 கிராம் அமிர்தாஞ்சன் பாட்டிலின் அட்டைப்பெட்டி ஒன்றைக் கட்டாயமாக இணைத்து அனுப்ப வேண்டும்.

### விதி முறைகள்:

1. இந்தப் பரிசுப் போட்டியில் அமிர்தாஞ்சன் நிறுவனத்தைச் சேர்ந்த ஊழியர்கள், விளம்பர ஏஜெண்டுகள், அவர்களுடைய உறவினர்கள் ஆகியவர்களைத் தவிர மற்ற இந்தியக் குடிமக்கள் யாவரும் பங்கு கொள்ளலாம்.
2. நுழைவுத்தாள்கள் பென்சிலால் எழுதப்பட்டிருந்தாலோ, அழித்திருந்தாலோ, அடித்துத் திருத்தியிருந்தாலோ, தெளிவில்லாமல் எழுதியிருந்தாலோ, தபால் தலை ஒட்டாமலோ அல்லது குறைவாக ஒட்டியிருந்தாலோ பரிசுப் போட்டிக்கு ஏற்கப்படமாட்டா.
3. நுழைவுத்தாள்கள் காலம் கடந்து வந்ததற்கும், தொலைந்து போனதற்கும் இந்நிறுவனம் பொறுப்பு ஏற்காது.
4. நுழைவுத் தாள்களை ஆங்கிலத்திலோ அல்லது ஏதாவதொரு இந்திய மொழியிலோ நிறைவு செய்து அனுப்பலாம்.
5. நுழைவுத்தாள்கள் நடுவர் குழுவினால் தேர்வு செய்யப்படும். அக்குழுவின் தீர்ப்பே இறுதியானது. ஏற்கப்பட வேண்டியது.
6. இப்பரிசுப் போட்டியின் தொடர்பாக எவ்விதக் கடிதத் தொடர்பும் வைத்துக் கொள்ளப்பட மாட்டாது.
7. நுழைவுத்தாள்களும் சிறப்பு வாக்கியங்களும் இங்கு வந்து சேர்ந்த பின், அமிர்தாஞ்சன் நிறுவனத்திற்கு உரியவையாகிவிடும்.
8. பரிசுகள் வழங்குவது பரிசுத்திட்டத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டதாகும்.
9. நிறைவு செய்யப்பட்ட நுழைவுத் தாள்கள் ஒவ்வொன்றும் ஓர் அமிர்தாஞ்சன் 12 கிராம் பாட்டிலின் மேல் அட்டைப் பெட்டியுடன் 30-11-1978க்குள் அமிர்தாஞ்சன் லிமிடெட், 14/15 லஸ் சர்ச் ரோடு, சென்னை 600 004 என்ற முகவரிக்கு வந்து சேர வேண்டும். மேல் உறையில் அமிர்தாஞ்சன் பரிசுப் போட்டி என்று எழுதியிருக்க வேண்டும்.

மோபெட் வகைகளில், சுவேகாவின் தனிச்சிறப்பு நெ. 1

# "என் மோபெட் குறைந்த பெட்ரோலில் அதிக தூரம் ஓட வேண்டும் என விரும்பினேன்.



SS சீரீஸ் கார்ப்யூரேட்டரைக் கொண்டுள்ள மோபெடான சுவேகா சீரான வேகத்தையும், ஒரே லிட்டர் பெட்ரோலில் 70 கி.மீ. ஓட்டத்தையும்' அளிக்கிறது.

**தனித்து விளங்கும் சிறப்புகள்**

எல்லா மோபெட்களும் ஒரே மாதிரி தயாரிக்கப்பட்டவையல்ல. சுவேகாவின் சிறப்பு அம்சங்களைக் கவனியுங்கள்.

* சுவேகா ஒரு பாதுகாப்பான மோபெட். இதன் செயின் இயக்கம் மற்றும் உட்புற உறுதியுடன் அமைக்கப்பட்ட பாக்ஸ் பிரிவு பிரேம் பாதுகாப்பான ஓட்டத்திற்கு உதவுகின்றன.
* சுவேகா ஒரு நீடித்து உழைக்கும் மோபெட். இதன் சிறப்புகள் — கடின க்ரோம் அலுமினிய சிலிண்டர்கள், டீலக்ஸ் மாடலில் கரடு முரடான பாதைகளிலும் சொகுசாக சவாரி செய்வதற்கேற்ற பின்பக்க ஷாக் அப்சார்பர்கள், மிகக் குறைந்த பழுது மற்றும் பராமரிப்புச் செலவு.
* சுவேகா இரட்டைச் சிக்கனத்தை அளிக்கும் ஒரு இரண்டு சீட் மோபெட்.

சுவேகா டீலக்ஸ் எளிதில் ஸ்டார்ட் ஆகும் ஒரு மோபெட். ஒரே உதை தான், உடனே கிளம்பி விடும்.

இன்றே சுவேகா வாங்குங்கள். விபரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள டீலரை அணுகுங்கள்.

# சுவேகா வாங்கும் வரை இது நிறைவேறும் என்று நான் நினைக்கவே இல்லை."

**Suvega**

சுவேகா-தன்னிகரற்ற மோபெடின் மறுபெயர்



மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்
திருப்பதி, ஆந்திரப்பிரதேசம்.

SAA/MIL/119

பட்பட் பட்டாபி

12

கதை: சாருகேசி
படம்: செல்லம்

பாச்சு.

பயந்துடாதே, விமலா! நான் தான்.

நான் எங்கே பயந்தேன்? உங்களுக்கு ஏமாற்றமளிக்காதிருக்கக் கொஞ்சம் பயந்தது போல் நடித்தேன். நீங்கதான்னு எனக்குத் தெரியாதாக்கும்?

பேசாதே. நீ என்ன அந்த பிள்ளைன்னு நினைப்போ?

நீங்க மட்டும் என்ன

விமலா! உனக்குச் சரியான தண்டனை கொடுத்துட்டேன், பார்த்தியா? நீ உன் ஆயுசு முழுவதும் பட்டாபியின் நாட்டுப் பெண்ணாக இருந்து அவர் இரைச்சலையும் கூப்பாட்டையும் சகித்துக் கொள்ள வேண்டும்!

ஸார்! நீங்க விஷயம் புரியாம பேசறீங்க. இந்த ஒரு வாரத்தில் அப்பா அடியோடு மாறிட்டார்!

இஸ். இட்?

ஆமாம், இப்பல்லாம் அவர் பட்பட்ன்னு பட்டாசு மாதிரி வெடிக்கிறதே இல்லை... அதிர் வேட்டு மாதிரி இடி முழக்கம் செய்கிறார்!

ஐயோ!

ஆ! இப்பவாவது நிஜமாவே பயந்ததா ஒப்புக் கொள்றியா?

நீ ஒண்ணும் கவலைப்படாதே, விமலா! பட்டாபி ஆபீஸுக்குத் திரும்பினால் எல்லாம் சரியாயிடும். சகஜநிலைக்கு, அதாவது பட்டாசு வெடிக்கு திரும்பிடுவார்.

மானேஜர் ஸார்! விமலா கலியாணத்துக்கு அவள் பெற்றோரை சம்மதிக்க வைக்க நீங்கதான் உபகாரம் பண்ணணும்.

ஆமாம் ஸார்! மிஸ்டர் பாச்சு கல்யாணத்துக்கு அவர் பெற்றோர் சம்மதிக்க நீங்கதான் உதவணும்!

அழகுதான், நான் என்ன மானேஜரா, மெஸஞ்சரா?

மானேஜர்...

ரைட்!
மானேஜ்
ஆல்ஸோ!




கு அவன் செய்த உபகாரத்துக்குப் பிரதியா
லுக்கு இங்கே ஒரு நல்ல உத்யோகம் கொடுக்கப்
றேன். உங்களுக்கு அவன் செய்திருக்கிற ஸேவைக்கு
அவளோட கல்யாணத்துக்குச் சம்மதம்
தெரிவிச்சு, சந்தோஷமா நடத்தி
வையுங்கோ. மீட் யுவர் டாட்டர்
இன்லா விமலா!




னே என்ன ஸார்?
ான ஏற்பாடுகள்
த்தையும் பண்ணி
ச்சு பிறபாடு எங்கிட்ட
ல்லக் கூடாது?
வே என்ன அவசரம்?
பாருங்க, எல்லாக்
யங்களையும் நானும்
ா அப்பாவும் தான்
த்துப் போட்டுண்டு
நாகணும். சரி சரி,
லீவை இன்னும்
ாடு வாரம்
ஸ்டெண்ட் பண்ணுங்க.
ந்தியைச் சந்திச்சு
பாடுகளைக் கவனிக்
றேன். இப்பலே நந்து
லக்சாத்தான்
ம் ஒரு மாசத்துக்
ளையாவது ஏற்பாடு
முடிக்கலாம்.

முற்றும்

● 'உலகம் சுற்றும் வாலிபர்' படித்த பிறகு நீண்ட நேரம் அட்டைப் படத்திலிருக்கும் பெண் செய்வதைச் செய்து கொண்டிருந் தேன். மணியனின் ஸ்டைலை நன்றாகவே Parody செய்திருக்கிறீர்கள்.
மதுரை—1 ஜி. விசுவநாதன்

● கி. ராஜேந்திரன் எழுதிய நட்பின் கதையைப் படித்துக் குலுங்கி, குலுங்கிச் சிரித்து என் வயிறு புண்ணாகி விட்டது. போதாக் குறைக்குக் ''கிண்டல் கிட்டா'' வேறு. உடனே என் வயிற்றுப் புண்ணுக்கு ஒரு புட்டி மருந்து அனுப்பி வையுங்கள்.
செங்கோட்டை ஏ. எம். ராஜ்

● கி. ராஜேந்திரனின் 'உலகம் சுற்றும் வாலிபர்' போன்ற சார்புக் கட்டுரைகள் கல்கி யில் இடம் பெற வேண்டியது அவசியமான ஒன்றா?
சென்னை—50 ப. ஜெயராமன்

(கல்கி சார்ந்திருப்பது சத்தியம் ஒன்றைத் தான். — ஆசிரியர்)

● குழந்தைக் கல்வி பணத்துக்கு ஏங்கும் போது முதியோர் கல்விக்கு 620 கோடி ரூபாய் திட்டம் நல்ல தமாஷ்! உங்கள் கார்ட் டூன் ஏ. கிளாஸ்.
கம்பரசம்பேட்டை டி. ஆர். பத்மா

● ''மகான்கள் பேசாமலே தங்களுடைய நினைப்பைப் பிறருடைய இதயத்தில் தெளி வாக்கி விடுவார்கள். வாயும் செவியும் பாமரர் களுக்குத்தான். அப்படிக்கேட்கவும், பேசவும் செய்யும் கருவிகள் இல்லாமலே கேட்பிக்க வும், பேசுவிக்கவும் செய்ய மகான்களால் முடியும்'' — துளசி மாடம். எத்தகைய தெய்வீக வாசகங்கள்!
சென்னை—30 ஜி. ராஜாராமன்

துளசி மாடம் கமலி, இந்தியாவுக்கு வந்ததும் சாஸ்திர சம்பிரதாயப்படி மடிசார்ப் புடவை கட்டிக்கொள்கிறாள். கோ பூஜை, துளசி பூஜை விரும்பிச் செய்கிறாள். ஆனால் தலை முடியை மட்டும் ஏன் அப்படியே ''பாப்'' பண்ணிக் கொள்கிறாள்?
சிதம்பரம் சியாம் லதா

● 'அந்த ஆறாவது அடி' என்ற ராஜேஷ் குமாரின் கதையைப் படித்த போது 'ஹிட்ச் சாக்' திரைப் படத்தைப் பயந்து கொண்டே பார்ப்பது போல இருந்தது. குண்டு வெடிக்கப் போகிறது என்று ஆவலுடன் படித்து, கடைசி யில் கதையின் சஸ்பென்ஸ் வெடித்த போது உண்மையிலேயே அசந்து விட்டேன்! அற்புத மான கதை.
வடுகவிருட்சியூர் ஆர். அமுதா

● ராஜகர்ஜனை, பொன்னியின் செல்வனின் அருள் மொழித் தேவரை (திப்பு சுல்தான்) யும் வந்தியத் தேவனை (பசவ ராஜை)யும் நினைவூட்டுகிறது.
பெங்களூர் சரோஜா தண்டபாணி

● ''டி. வி. கிரிக்கெட்'' நகைச்சுவைத் துணுக்குகளைப் படித்து விட்டு 'ஸ்பின் பௌல்' செய்யப்பட்ட பந்து போல் குலுங்கிக் குலுங் கிச் சிரித்தேன்!
அரகண்டநல்லூர் கே. பிரதாப்சிங்

● 'கெமிஸ்ட்ரி மிஸ்ஸின் கவலை' என்ற கதையில் 'கம்யூனிடி சோஷல் சர்வீஸ்' போன்றவை வெறும் 'ஹம்பக்', பிர யோசனமற்ற வீண் செலவு, கிராம வாசி களின் ஒத்துழைப்புக் கிடைப்பதில்லை என்பது போன்ற எண்ணங்களைப் புகுத்த முயன்றிருக் கிறார் ஆசிரியர். ஒரேயடியாக அப்படிச் சொல்லி விட முடியாது. மாணவர்களின் முயற்சியாலும், உற்சாகத்தாலும், கிராம மக்களின் ஒத்துழைப்பாலும் பல கிராமங் களில் என். எஸ். எஸ், ஸி. எஸ். எஸ். முதலிய திட்டங்கள் பலன் தந்திருக்கின்றன!
திருநெல்வேலி பாரத்வாஜன்

● ''அருகில் இருந்தால் வேதனைதான்'' என்ற பகுதிக்கு நான் எழுதிய பெரிய கட்டுரையைப் பிரசுரிக்காமல் விட்டு விட்டீர்களே? உங்களை என்ன செய்தால் தேவலாம். தச்சோளி அம்பு பைலட் பிரேம்நாத் ஆகிய பட விமர்ச னங்கள் கனகச்சிதம். அது சரி, பைலட் பிரேம் நாத்தில் ஜெய கணேஷ் தான் மகன், பிரேம் ஆனந்த் அல்ல.
ஈரோடு—10 மேஜர் தாசன்

● 'வாழ்ந்து காட்டுகிறேன்' கங்காதரன் உழைப்பின் சிறப்புக்கு ஓர் உதாரணம். 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்று அக்காலப் பெரியோர்கள் சும்மாவா சொன்னார்கள்?
மதுரை—11 ரா. சுந்தரராஜன்

● ராகவேந்திர ரமணன், கிரிஜா ஆகி யோரின் கலந்துரையாடலில் வருங்கால சமு தாயத்தைப் பற்றிய நம்பிக்கை சூரிய ஒளி போல் பிரகாசிக்கிறது.
காரைக்குடி கதி. சுப்பிரமணியன்










அத்தியாயம் 1

## பனி நிலவில் ஒரு கனவு

டிர்ர்ர்ர்ரிங் !

அலாரம் கடிகாரம் அலறி, ஆழ்ந்த துயில் கொண்டிருந்த மோகனை எழுப்பும் தன் கடமையை நிறைவேற்றியது !

அதேபோல் கடமையில் கண்ணான மோகனின் தந்தை ஜகதீசன் கூடத்துக் கட்டிலிலிருந்து குரல் கொடுத்தார் — ''மோகன் ! மணி நாலாயிடிச்சு. ம்... ம்... எழுந்திரி !''

அவரை அடுத்து, மோகனின் அறை வாயிலிலேயே ஒலித்தது அவன் அம்மா கனகத்தின் அன்பொழுகும் கடமைக் குரல்

''மோகனு ! எழுந்திரிச்சி பல் தேய்ச்சு, முகம் கழுவிக்கிட்டு, காப்பி சாப்பிட வா, கண்ணு !''

இந்தக் கடமை ஒலிகளை யெல்லாம் இன்பத்துடன் வரவேற்பவன்தான் மோகன். குறிப்பாகத் தன் தாயின் ''மோகனு!'' என்ற அன்பழைப்பை ஒவ்வொரு தடவை கேட்கும்போதும் அவன் உடலே புல்லரித்துப் போகும். ''மோகன்'' என்ற அவனுடைய ஆண்பால் பெயரை, ''மோகனு'' என்ற பெண்பால் பெயராக்கி அவள் அழைக்கும்போது 'பாவம்!

தனக்கு ஒரு பெண் குழந்தை இல்லாக் குறையை அம்மா எவ்வளவு சாதுரியமாக ஈடுசெய்து கொள்கிறுள்!' என்று அவன் புன் முறுவலுடன் நினைத்துக் கொள்வான்.

அது எப்பொழுதுமே அப்படித்தான் —ஒரே குழந்தை – ஒரே சந்ததியாக இருக்கும் எவருமே பெற்றேரின் அன்பெனும் ஆற்றுப் பெருக்கில் ஒரேயடியாக மூழ்கடிக்கப்பட்டு விடுவார்கள்!

மோகன் படுக்கையில் புரண்டு நெளிந்தான். அலாரத்தின் கடமை ஒலியையும், தந்தையின் பாசக் குரலேயும், தாயின் அன்பு அழைப்பையும் புளகத்துடன் ஏற்றுத் துயில் நீங்கும் அவனுக்கு, இன்று அந்த ஒலிகள் ஒருவிதச் சலிப்பையே ஏற்படுத்தின.

''ப்ச்சு!'' என்று அதன் உதடுகள் அலுப்புடன் முணுமுணுத்தன. ''போச்சு! எல்லாம் போச்சு!''

உண்மையில் உருப்படியான எதுவும் எங்கும் போய் விடவில்லே. மோகன் என்ற அந்த இருபத்தாறு வயது அழ



சிய இளைஞன் தன் சொந்த ஊரான திண்டிவனத்தைஅடுத்த வேலவனூரில், தங்கள் புராதன வீட்டின் படுக்கை அறையில்தான் இருந்தான். அவன் தந்தை ஜகதீசன் – வேலவனூரின் மிராசுதார்களில் ஒருவர் – அந்த வீட்டுக் கூடத்து ஊஞ்சலில் படுக்கையில் அமர்ந்தவாறு வெற்றிலேச் செல்லத்தை இழுத்து வெற்றிலே போட்டுக்கொண்டுதான் இருந்தார் – அது அவருடைய பழக்கம்; தூங்கி எழுவதென்றுல் வெற்றிலேச் செல்லத்தின் முகத்தில்தான் அவர் விழிப்பார். அவன் அம்மா கனகம்— அந்த நாற்பத்து நான்கு வயதிலும் இளமை

குன்றாத எழில் மங்கை — மகனுக்குத் திருப் பள்ளி எழுச்சி பாடிவிட்டு, அவனுக்குக் காப்பி போட்டுக் கொடுப்பதற்கென்று முந்தின நாள் இரவே எடுத்து வைத்திருந்த பாலைச் சூடு பண்ணுவதற்காகச் சமையல் அறையை நோக்கி நடந்து கொண்டுதான் இருந்தாள். ஏன்? மோகனின் உள்ளத்தில் இப்பொழுது சில காலமாக நீங்கா இடம் பெற்றிருந்த ஜெயா கூடத் தன் கொள்ளை எழிலுடன், தேனினிய குரலுடன், மோகனைச் சொக்க வைக்கும் மோகனப் பார்வையுடன், சென்னை யில் தன் மந்தைவெளிப்பாக்கம் வீட்டில் தான் இருந்தாள்.

ஆயினும் எல்லாவற்றையுமே பறி கொடுத்து விட்டது போன்ற ஒருவிதச் சலிப்பு அச்சமயம் மோகனுக்கு ஏற்படத்தான் ஏற் பட்டது. ஏன்? காரணம் என்ன?

கற்பனையில் மட்டுமே இருந்து வந்த மோக னின் நினைவுகளுக்கு ஒரு கனவு வடிவம் கொடுத்திருந்தது அவனுடைய அன்றைய உறக்கம். ஆனந்தமான அந்தக் கனவைக் கலைத்து அவனை எழுப்பி விட்டது இந்த அலா ரம் கடிகாரம்; கலைத்து விட்டனர் இந்த அப்பாவும், அம்மாவும்!

மூன்று இடங்களிலிருந்து எழுந்து வந்த மூன்று விதமான உசுப்பல்கள் மோகனைத் தூக்கத்திலிருந்து விழித்தெழச் செய்துவிட் டன; எனினும், அவன் அந்தக் கனவுலகி லிருந்து இன்னும் நினைவுலகுக்கு வந்துவிட வில்லை. போதை தெளிந்த பின் உடலில் பரவி நிற்கும் புத்துணர்ச்சியைப் போல், அந்தக் கனவு லாகிரி இப்பொழுது அவனிடம் ஒருவிதக் கிளுகிளுப்பைத் தோற்றுவித் திருந்தது.



ஆஹா! எப்பேர்ப்பட்ட கனவு அது!

மோகன் அந்த இனிய கனவை நினைவுக்குக் கொண்டு வர முயன்றான்.

அதன் நிலைக்களன் இந்தியாவின் வட வெல்லையான காஷ்மீர். அவனும் அவ னுடைய ஜெயாவும் அங்கே வந்திருந்தனர். ஆம்; ஜெயா மட்டும்தான்; தாயற்ற ஒரே மகளை நிழலாகப் பின்தொடர்ந்து, கண்ணை இமை காப்பது போல் காத்து வரும் தந்தை கல்யாணசுந்தரம் கூட அப்பொழுது அவ ளுடன் வரவில்லை. பின் என்ன? தேனிலவை உல்லாசமாக அனுபவிக்க வரும் புது மணத் தம்பதியருடன் அவர்களுடைய பெற்றோர் களும் வருவார்களா என்ன?

மோகனும் ஜெயாவும் தங்கியிருந்தது ஒரு படகு வீடு. ஒரு 'போஷ்' பங்களாவின் வசதிகள் அனைத்தும் கொண்டிருந்த அந்தப் படகு வீட்டின் பெயர் தாஜ் மஹல்! காத லின் சின்னம்! அப்பொழுது ஏப்ரல் மாதம். பனிக் காலத்தின் பிற்பகுதி. ஆயினும் காஷ்மீரின் சீதோஷ்ண நிலை இன்னும் ஆறு டிகிரியிலேயே இருந்தது. இரவு நேரம்; முழு நிலவை நெருங்கும் காலம். மேகமற்ற வானில் சந்திரன் பவனி வந்து கொண்டிருந் தான். நம் ஊராக இருந்தால் அத்தகைய நிர்மலமான வானத்தில் சந்திரன் பால் நில வைப் பொழிந்து கொண்டிருப்பான். ஆனால் இங்கே அவனால் பனி நிலவைத்தான் பொழிய முடிந்தது. அவனுடைய ஒளி மயமான குளிர்க் கிரணங்களைப் பனியின் பொழிப்பு மங்கலாக்கி யிருந்தது. மேக மூட்டம் சூழ்ந்த மங்கிய பகல் பொழுதைப் போல், எங்கும் ஒருவித மந்தமான நிலவே பரவியிருந்தது.

அந்தப் பனி நிலவுப் பொழுதில் மோகனும் ஜெயாவும் இரவுச் சாப்பாட்டை முடித்துக்





''மூன்று மாதங்களுக்கு முன் நடந்த கார் விபத்தில் ஏற்பட்ட கால் ஊனம் தான் சரியாகி விட்டதே, இன்னும் எதற்குக் கட்டைக் காலைப் பயன்படுத்துகிறாய்?''

''டாக்டர் என்னவோ, வேண்டாம் என்றுதான் சொல்கிறார். வக்கீலோ, கார் ஓட்டி மீது போடப்பட்டிருக்கும் வழக்கு முடியவில்லை; அதுவரை பயன்படுத்தத் தான் வேண்டும் என்கிறார்.''

- ஜோக்ஸ் - முத்து

கொண்டு, தாஜ் மஹலின் 'டெர்ரஸ் கார்டன்'லில் ஆளுக்கு ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தனர். இருவர் உடலையும் கனத்த கம்பளி ஆடைகள் மூடியிருந்தன. ஜெயா, தன் மேக வர்ண சாரியின் மேலே, பச்சை நிறக் கம்பிளிக் கோட்டு ஒன்றைத் தரித்திருந்தாள். கோட்டு என்று பெயரே தவிர, அது அவளுடைய பூவுடலை ஒரு காதலனை விட இறுக்கமாகத் தழுவி யிருந்தது. பனி நிலவின் மிதமான வெளிச்சத்தில் ஜெயாவின் எடுப்பான உடற்தோற்றத்தை வைத்த விழி வாங்காமல் மாந்திக் கொண்டிருந்தான் மோகன்.

ஜெயா 'களுக்'கென்று சிரித்தாள். பெண்களின் சிரிப்பே ஒரு போதைப் பொருள்தான். அதிலும் தேனையும் விடத் தித்திக்கும் குரல் ஜெயாவுக்கு. எனவே, அந்தச் சிரிப்பு, மோகனுக்கு ஸ்வர நயத்துடன் கூடிய ஒரு வீணையின் மீட்டலைப் போல் இன்பமாக ஒலித்தது.

அகமும் முகமும் மலர, ''என்ன சிரிக்கிறே?'' என்று அவன் கேட்டான்.

''உண்ட பொருள் ஜீரணமாகிவிடும்; தெரியுமா உங்களுக்கு?'' என்று அவள் மிழற்றினாள்.

''உணவுப் பொருள் என்றாலே அது சாப்பிடத்தானே இருக்கிறது, ஜெயா? நல்ல பொருளாக இருந்தால் சாப்பிட்ட உடன் ஜீரணமாகிவிடுவதும் அதன் இயற்கைதான்!'' என்றான் அவன்.

''ஜீரணமாயிடுச்சுன்னா அதிலே ஒண்ணும் மிச்சம் இருக்காதே!''

''ஆனா, நீ ஓர் அட்சய பாத்திரம் ஜெயா! எடுக்க, எடுக்க, மாந்த மாந்தக் குறையாத எழில் பெட்டகம் நீ!'' – பரவசம் கலந்திருந்தது அவனுடைய இந்தப் பதிலில்.

''அமிர்தமேயானாலும் அளவுக்கு மீறினாத் திகட்டிப் போயிடும்!''

''ஒரு திருத்தம்...''

''என்ன?''

''இந்த 'அளவுக்கு மீறி' என்கிறது ஒரே தடவையில் விடாமல் மாந்துவதைத்தான் குறிக்கும். விட்டு விட்டு மாந்தும்போது நாட்டந்தான் அதிகமாகுமே தவிர, திகட்டாது.''

''அம்மாடியோ! இந்த ஆண் பிள்ளைகளைப் பேச்சிலே ஜெயிக்கவே முடியாது.''– ஜெயா சிரித்தாள்; மீண்டும் அதே வீணை மீட்டல் சிரிப்பு.

''அப்பாடியோ! இந்தப் பெண் பிள்ளைகளைச் சாகசத்திலே மிஞ்சிக்கவே முடியாது!'' அவனும் சிரித்தான்.

''ஸாப்!'' – கீழ்த் தளத்திலிருந்து தாஜ் மஹல் படகு வீட்டு மானேஜரின் அழைப்பு வந்தது.

''எஸ், மானேஜர்!''

''யுவர் ஷிக்காரா இஸ் ரெடி.''

''வீ ஆர் கமிங்'' என்று அவருக்குப் பதிலளித்துவிட்டு, ''கிளம்பு, ஜெயா!'' என்றான் மோகன். அவர்கள் கீழே இறங்கி, படகு வீட்டு வாயிலருகே மிதந்து கொண்டிருந்த அழகிய சிறிய படகுக்கு வந்தனர். அந்தப் படகின் பின் கோடியில் யானை மீது அம்பாரி போன்று முழுதும் வண்ண வண்ணத் துணிகளினால் சித்திர வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டிருந்த ஒரு 'ஷாமியானா'–அதாவது வசந்த மண்டபம். கீழே மென்மையான வெல்வெட் மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. இருவர் வசதியாகச் சாய்ந்து கொள்ளத் தக்க வகையில், அதே வெல்வெட் துணியில் தைக்கப்பட்ட வட நாட்டுக்கே உரிய உருண்டையான நீண்ட திண்டுகள் போடப்பட்டிருந்தன. அதில் ஒரு திண்டில் ஜெயா சாய்ந்து அமர்ந்து கால்களை நீட்டிக்கொண்டாள். அவள் மடியில் தலை வைத்துப் படுத்தபடி, தனக்குத் தெரிந்த அரைகுறை ஹிந்தியில் ''சலோ ஜாவ்'' என்றான் மோகன். படகு டால் ஏரியில் மெதுவாக நகர்ந்து முன்னேறியது. படகின் முன் கோடியில் ஷிக்காரி ஏதோ ஒரு காஷ்மீரி நாடோடிப் பாட்டைப் பெருங் குரலில் பாடியபடியே துடுப்பை வலித்தான்.

''ஜெயா!''

''ம்...''

''நீயும் ஒரு பாட்டுப் பாடேன்.''

''என்ன பாட்டுப் பாடணும்?''

''இந்தச் சூழ்நிலைக்கு, இப்போ நாம் இருக்கிற நிலைமைக்கு ஏற்றதாக ஏதாவது பாடேன்.''

ஜெயா, தன் மடியில் படுத்திருந்த மோகனின் தலையை வருடியவாறு மகா கவி பாரதியாரின் 'பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்' என்ற பாடலைப் புன்னாகவராளி ராகத்தில் மென் குரலில் பாடத் தொடங்கினாள். அவள் பாடப் பாட, அவளுடைய இசையில், அந்தப் பாடலின் கருத்தாழத்தில் ஒன்றிப் போனான் மோகன்.

''சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேர நன் நாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்
தோணிகளோட்டி விளையாடி வருவோம்''

என்ற அடியை அவள் பாடி முடித்ததும், ''ஆஹா! ஆஹா!'' என்று அவன் தன்னையும் மறந்து ஆர்ப்பரித்தான். பாட்டை நிறுத்திவிட்டு, ''ம்க்கும்'' என்று நொடித்தாள், ஜெயா.

''என்ன ம்க்கும் என்கிறே?''

''ரொம்பத்தான் பாட்டைக் கேட்டு ரசிச்சவர் மாதிரி 'ஆஹா' ஊஹூ' என்கிறேளே? அந்தப் படகுக்காரனோடு காட்டுக் கத்தலிலே என் பாட்டு எங்கே ஒங்களுக்குக் கேட்டிருக்கப் போகுது!''

''ஜெயா! ஒனக்கு ஒண்ணு தெரியுமா?'' என்று எழுந்து உட்கார்ந்து கொண்டு கேட்டான் மோகன்.

''என்ன?''

''ஆயிரம் குழந்தைகளின் கூக்குரலுக்கு இடையிலேயும், தன் குழந்தையின் குரலைத் தனித்துக் கேட்டிடுவாளாம் தாய். இந்த விஷயத்திலே காதலனும் ஒரு தாய்க்கு ஒப்பானவன்தான்.''

''ஏதேது? நீங்க இன்னும் அந்தக் காலத்திலேயே இருக்கிறீங்க போலிருக்கே'' என்றாள் ஜெயா.

''எந்தக் காலத்திலே?''

''நாம் வெறும் காதலர்களாக இருந்த காலத்திலே. இப்போ நாம்ப கணவனும் மனைவியும் ஆயிட்டோம்; அதை மறந்திடாதிங்க.''

''மறப்பேனா? எப்படி மறக்க முடியும்?'' என்ற அவன், தாபம் தொனிக்க, ''ஜெயா!'' என்று குழைந்தான்.

''ம்....'' அவள் குரலிலும் அந்தத் தாபம் இழைந்தது.

மோகன் மேலே பேசவில்லை. இரு கைகளாலும் அவள் முகத்தைத் தாங்கி, தன் முகத்தருகே இழுத்தான். கண்களும் கண்களும் சந்தித்தன. முகமும் முகமும் நெருங்கின; உதடும் உதடும் உறவாட விரைந்தன!

இப்படிப்பட்ட அயனான நேரத்தில் ஓர் இளைஞனின் கனவை, அலாரம் கடிகாரம் என்ன? பெற்றோர்தாம் என்ன? அந்த ஆண்டவனே கலைத்தாலும் அவனுக்கு அலுப்பும் சலிப்பும் ஏற்படாமல் என்ன செய்யும்?

**மோ**கன் சென்னையில் கட்டிட காண்ட்ராக்ட் தொழில் செய்து வந்தான். அவன் ஒரு பி. ஈ. ஆர்க்கிடெக்ட். மகன் பி. ஈ. படிக்க விரும்பியபோது ஜகதீசன் ஒரு நிபந்தனை போட்டார். ''டேய்! இதப்பாரு. நீ எங்கே போய், என்ன வேணும்னாலும் படி. ஆனா, படிச்சுப்புட்டு, கண்டவங்க கிட்டே போய்க் கைகட்டிச் சேவகம் பண்ற எண்ணத்தை மட்டும் வைச்சுக்கிடாதே. நீ வேலை பார்த்துச் சம்பாதிக்கணும் என்கிற தேவை ஒண்ணும் நமக்கு இல்லை. ஒருவேளை, படிச்சுப் புட்டுச் சும்மா இருக்கிறதான்னு ஒனக்குத் தோணினா, தேவையான பணம் தரேன்; ஒன் படிப்புக்கு ஏத்த தொழில் எதையாவது சுயமாகச் செய்; நான் வேண்டாம்னு சொல்லலை'' என்று கண்டிப்பாகக் கூறியிருந்தார்.

அதன்படி அவன் பி. ஈ. ஆர்க்கிடெக்ட் பட்டம் பெற்றதும், சொந்தமாகக் கட்டிட காண்ட்ராக்ட் தொழில் செய்ய விரும்பினான். அதற்குத் தேவையான பணத்தை ஜகதீசன் அட்டி சொல்லாமல் கொடுத்தார். சென்னையில் மாம்பலம் போக் ரோட்டில் ஒரு பங்களாவை வாடகைக்கு எடுத்துக் கொண்டு, அதையே ஆபீஸாகவும் வீடாகவும் பயன்படுத்தித் தொழிலைத் தொடங்கினான்.

நாகரிகம் முதிர்ந்து வரும் காலம் இது. இப்போதெல்லாம் பண வசதி படைத்தவர்கள் பழைய பாணியில் பங்களாக்களைக் கட்டிக்கொள்ள விரும்புவதில்லை. நவ—நவமான அமைப்புக்களைக் கொண்ட பங்களாக்களில்தான் அவர்கள் நாட்டம் செல்கிறது. எனவே, கட்டிட நிர்மாணத் துறையில் பி.ஈ. சிவில் பட்டம் பெற்ற இன்ஜினீயர்களை விட பி. ஈ. ஆர்க்கிடெக்ட் பட்டம் பெற்றவர்களுக்குத்தான் இன்று மதிப்பும், டிமாண்டும் அதிகமாக உள்ளன. மோகனைத் தொழிலில் கைதூக்கி விட இது பெரிதும் உதவியாக இருந்தது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் தந்தையிடமிருந்து பெற்ற ஒரு லட்சம் ரூபாயுடன் தொழிலைத் தொடங்கிய அவன், இந்தச் சாதகமான சூழ்நிலை காரணமாக, மூன்றே ஆண்டுகளில் தந்தை கொடுத்த லட்சம் ரூபாயையும் திருப்பிக் கொடுத்து விட்டான். அது மட்டுமா? புத்தம் புது அம்பாசடர் கார் ஒன்று அவன் வாங்கியிருக்கிறான். ஐம்பதாயிரம் ரூபாய் வரையில் பாங்கியிலும் போட்டிருக்கிறான்.

மகன் சென்னையில் தொழில் தொடங்கியதுமே அவனுக்குக் கல்யாணத்தை முடித்துவிடத் துடித்தாள் கனகம். அவள் அப்பொழுது மோகனுடன் சென்னையில் தங்கியிருந்தாள். மகனிடம் தன் ஆவலை ஒருநாள் அவள் வெளியிட்டபோது அவன் சொன்னான்: ''என்னம்மா இது? நான் இப்பத்தான் தொழில்லயே கால் எடுத்து வைச்சிருக்கேன். நீ அதுக்குள்ளே எனக்கு ஒரு கால் கட்டுப் போட்டிடறேன்னு சொல்றியே?''

''ஏண்டா மோகனா! ஒன் தொழிலுக்கும் கல்யாணத்துக்கும் முடிச்சுப் போடறே? நீ என்ன அந்தத் தொழில்லே கிடைக்கிற வரும்படியை வைச்சுத்தான் குடும்பம் நடத்தணுங்கிற நிலையிலே இருக்கிறவனா? தவிரவும் நான் எத்தனை நாளைக்குடா இங்கே தங்கி ஒனக்குச் சமையல் செய்து போட்டுக்கிட்டிருக்க முடியும்?'' என்று மகனை மடக்க முயன்றாள் அந்தத் தாய்.

''யம்மா! சமையல் செய்து போடறதுக்காக என் கழுத்திலே ஒருத்தியைக் கட்டணும்னு நீ நெனைச்சா, அதுக்கு ஒருத்தி இந்த ஜென்மத்திலே எனக்குத் தேவைப்படவே மாட்டாள். ஏன்னா, ஏழெட்டு வருஷங்களா நான் ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுப் பழக்கப்பட்டவன். அந்த ஹோட்டல் சாப்பாட்டிலேயே என் வருங்காலத்தையும் ஓட்ட முடியும்.''

''மோகனா! பெத்தவங்களோடு மனசைப் புரிஞ்சுக்காம இப்படிக் குதர்க்கம் பேசறியே; இது ஒனக்கே நல்லா இருக்கா? கல்யாணம் மாதிரியான நல்ல காரியங்கள் காலாகாலத்திலே நடந்தாத்தாண்டா பெத்தவங்க கவலை தீரும்.''

''ஒங்க கவலையை நான் தீர்க்க மாட்டேன்னு சொல்லலியே! கொஞ்சம் டயம் குடுங்க; தொழில்லே நான் ஒரு மாதிரி நிலைப் பட்டுக்கட்டும்; அப்புறம் கல்யாணம் செய்துக்கறேன்னுதான் சொல்றேன்.''

''சரி, சரி; நீங்கள்ளாம் படிச்ச புள்ளைங்க; பெரியவங்க சொன்னதை ஒடனே கேட்டு நடப்பீங்களா? ஒன் பிரியம் போலே எப்போ தோணுதோ அப்போ கல்யாணம் செய்துக் கோப்பா'' என்று அப்பொழுது ஓய்ந்துவிட்டாள் அந்தத் தாய்.

(தொடரும்)

''இதோ பாருங்கள்..'' மேடையில் தன்னை மிகவும் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்த பேச்சாளரிடம் தலைவர் சொன்னார்: ''என்னை இமயமலை, அது இது என்று புகழாதீர்கள் எனக்குக் குளிர் தாங்காது; ஜலதோஷம் பிடிக்கும்''

-ஆகரான் சாமி



மேக் அப் உங்கள் முகத்தின்
குறைகளை மறைக்கலாம்.



# பனி நிலவு

**மாயாவி**



## 2. கண்டு கொண்ட கனவு

அந்தத் தடவை அவள் மூன்று மாத காலம் மகனுடன் தங்கி யிருந்தாள். அதற்கு மேல் ஒரு மனைவியால் தன் கணவரைச் சோற்றுக்குத் திண்டாட விட்டு விட்டு மகனுடன் தங்கியிருக்க எப்படி முடியும்? ஜகதீசனே வேலவனூரில் ஐம்பது ஏக்கர் நிலம் உடையவர். அத்தனையும் சொந்த விவசாயம். நவீன சாகுபடி முறைகளைக் கையாண்டு, ஒன்றைப் பத்தாக்கிக் கொண்டிருந்ததால், சேர்ந்தாற்போல் ஒரு பத்து நாட்கள் கூட ஊரை விட்டுப் போக முடியாத நிலையில் அவர் இருந்தார். இதனால் குடும்பத்தையே சென்னைக்கு மாற்றிக் கொண்டு விடும் ஆலோசனைக்கும் இடமில்லாமல் போய் விட்டது.

மோகன் கூறியது போல் ஏற்கெனவே ஏழெட்டு ஆண்டு காலம் அவன் ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்தவன் தான். ஆனால் அப்பொழுது அவன் மாணவன். குறிப்பிட்ட நேரத்தில் கல்லூரி என்று இருந்ததால், ஹோட்டல் சாப்பாடே ஆயினும் நேரம் காலம் தவறாமல் சாப்பிட வசதி இருந்தது. இப்பொழுது அவன் வேலை நடக்கும் இடத்திலேயே காலையிலிருந்து மாலை வரை பழி கிடக்க வேண்டி யிருக்கிறது. சூப்பர்வைசர், மேஸ்திரி என்று சில பேர்களை மாதச் சம்பளத்தில் வேலைக்கு அமர்த்திக் கொண்டிருந்த பொதிலும், அவன் எடுக்கும் காண்டிராக்ட்கள் பெரும்பாலும் நுட்பமான வேலைப்பாடுகள் கொண்ட பணிகளாக இருந்தமையால் ஒவ்வொரு கட்டத்திலும் அவனுடைய நேரடி மேற்பார்வையும் ஆலோசனைகளும் தேவைப்பட்டன. சாப்பாட்டு நேரம், அது இது என்று வேலை ஸ்தலத்திலிருந்து நகர்ந்து விட்டால், ஒரு தடவை கட்டினதை மறுபடியும் இடித்துக் கட்டியாக வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விடக் கூடும். எனவே, கிடைத்ததைக் கிடைத்த இடத்தில் சாப்பிட்டுக் கொள்ள வேண்டியவனாகவே மோகன் இருந்தான். வீட்டில் சமையல் செய்து போட ஒருத்தி இருந்தால், வேலை ஸ்தலத்திலிருந்து ஓர் ஆளை அனுப்பச் சொல்லிச் சாப்பாடு கொடுத்து அனுப்பலாம். இப்பொழுது கூட வேலை நடைபெறும் இடத்தை விட்டு நகர முடியாத நாட்களில் மோகன் ஹோட்டலுக்கு ஆள் அனுப்பிச் சாப்பாடு எடுத்து வரச் செய்துதான் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஆனால் ஹோட்டல் சாப்பாட்டை யெல்லாம் எடுத்து வந்து சாப்பிட்டால் ருசிக்குமா, இல்லை. ரசிக்குமா?

இதையெல்லாம் அவன் சிந்திக்கவில்லை யென்றாலும், வேலவனூரில் இருந்து கொண்டு கனகம் சிந்தித்தாள். மகன் கண்ட கண்ட வேளையில் கண்டது கண்டதை யெல்லாம் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக் கொண்டு விடக் கூடாதே என்று கவலையுற்றாள். தினந்தோறும் சாப்பாட்டு வேளையில், நீண்ட பெருமூச்சு விட்டபடி, ''ம்... புள்ளை என்ன சாப்பிடுதோ? எங்கே சாப்பிடுதோ?'' என்று கணவனிடம் புலம்பினாள்

''இந்தா, சும்மா எப்பப் பார்த்தாலும் இது என்ன தொணதொணப்பு? மகன் மேலே இவ்வளவு கரிசனம் இருக்கிறவ, அவன் சாப்பாட்டுக் கவலையை நிரந்தரமாகப் போக்க இல்லே வழி செய்யணும்?'' என்று ஒரு நாள் ஜகதீசன் மனைவியைக் கடிந்து கொண்டார்.

''அவன் இங்கே வரும்போதெல்லாம் நான் உரையேற்றிக்கிட்டுத்தானே இருக்கேன்? ஒண்ணும் தெரியாதவங்க கணக்கிலே பேசறீங்களே! ஆனா ஒங்க மகன் தான் கல்யாணப் பேச்சை எடுத்தாலே காத தூரம் ஓடுறானே; நான் என்ன செய்ய? இந்தக் காலத்துப் புள்ளைங்க வயசையும் மற்றதையும் எங்கே பார்க்குது? அதுங்களுக்குக் குடும்பம், குழந்தை – குட்டி என்கிற பொறுப்பு ஏதும் இல்லாம சுதாவா சுத்திக்கிட்டு இருக்கிறது தானே புடிக்குது?''

''அப்படி ஒன் மகனைச் சுதாவாச் சுத்த விட்டுக்கிட்டிருந்தால். நாளைக்குக் குலம் கோத்திரம் இல்லாத ஒருத்திக்கிட்டப் போய் மாட்டிக்கிட்டு நிக்கப் போறான். அதையும் நெனைப்பிலே வைச்சிக்கிடு'' என்று மனைவியின் வாயைக் கிண்டி வேடிக்கை பார்த்தார் ஜகதீசன்.

''வாயைக் கழுவிட்டுப் பேசுங்க. நான் பெத்த புள்ளை ஒருபோதும் அப்படித் தரம் தாழ்ந்து போயிட மாட்டான். அந்தத் தைரியம் எனக்கு இருக்கு. அதனாலேதானே அவனே கல்யாணம்னு வரட்டும்ன்னு விட்டுப் புடிச்சுக்கிட்டிருக்கேன்'' என்று மறுகணமே மறுப்பு வந்தது அவளிடமிருந்து.

''அந்தத் தைரியம் இருக்குதில்லே? பின்னே ஏன் எப்பப் பார்த்தாலும் புலம்பிக்கிட்டிருக்கே?''

''நான் அதுக்காகவா புலம்பறேன்? அவன் வேளா வேளைக்கு வாய்க்கு ருசியாச் சாப்பிடாம ஒடம்பைக் கெடுத்துக்கப் போறானேன்னுதான் கவலைப்படறேன்''

''அப்ப அதுக்கு ஒரு வழி செய்.''

''என்ன செய்யணும் சொல்லுங்க.''

''நாளைக்கே செல்லம்பாளையத்துக்குப் புறப்பட்டுப் போ. பொன்னம்மாவைப் பார்த்துப் பட்டணத்திலே போய் இருந்துக்கிட்டு மோகனுக்குச் சமையல் செய்து போட்டுக்கிட்டிருக்க முடியுமான்னு கேட்டுப் பாரு.''

பொன்னம்மாள் ஜகதீசனின் ஒன்று விட்ட தங்கை. சிறு வயதிலேயே வாழ்வை இழந்தவள். பிள்ளை-குட்டி ஒன்றும் கிடையாது. கணவன் விட்டுச் சென்ற இரண்டு ஏக்கர் நிலத்தை நம்பி வாழ்ந்து வந்தாள். எனவே, அவளுக்கு எப்போதும் பற்றுக்குறைதான். பணத் தட்டுப்பாடு ஏற்படும்போதெல்லாம் பஸ் ஏறி வேலவனூருக்கு வருவாள். அண்ணனிடம் ஐம்பது நூறு என்று கேட்டு வாங்கிப் போவாள். தன்னால் திருப்பிக் கொடுக்க முடியாது என்று தெரிந்திருந்தும் கடனைத்தான் கேட்பாள். ஜகதீசனுக்கும் அது தெரியும். ஆதலால், கடன் கொடுப்பது போலவே கொடுத்தாலும் திருப்பிக் கேட்க மாட்டார்.

அப்படிப்பட்டவளிடம், ''பட்டினத்துக்குப் போய், பங்களா வாசம் செய்துகொண்டு எங்கள் பையனுக்குச் சமையல் செய்து போட்டு, நீயும் வயிறுரச் சாப்பிட்டுக்கொண்டிரு'' என்று கேட்டுக் கொண்டால் அவள் மறுத்து விடுவாளா, என்ன? கனகம் போய் விஷயத்தைச் சொன்ன மறுநாளே பொன்னம்மாள் சென்னைக்குப் புறப்பட்டுச் சென்று விட்டாள்.

அது சரி, மகனுடைய திருமண விஷயமாக ஜகதீசனின் கருத்துத்தான் என்ன? அவர் ஏன் அவ்விஷயத்தில் தமக்குச் சம்பந்தமே இல்லாதது போல், மனைவியிடம் ஏனோ—தானோ என்று பேசினார்?

காரணம் இல்லாமல் இல்லை. இந்தக் காலத்துப் பிள்ளைகளின் மனப் போக்கை மற்ற எவரையும் விட நன்றாக அளவிட்டிருந்தார் ஜகதீசன். அவர்கள் வேறு எந்த விஷயத்தில் வேண்டுமானாலும் தங்கள் சுதந்திரத்தை விட்டுக் கொடுப்பார்கள்; ஆனால் கல்யாண விஷயம் என்று வந்து விட்டால், அது அவர்கள் போக்குப்படி அவர்கள் நினைக்கும் காலத்தில்தான் நடக்க வேண்டும் என்பதில் பிடிவாதம் உடையவர்கள். இதை அவர் நன்கு அறிவார். அதே சமயம், மோகன் மீது கனகத்துக்கு இருந்த நம்பிக்கை —அதாவது அவன் தரம் தாழ்ந்த பெண்ணிடம் நாட்டம் கொண்டுவிட மாட்டான் என்ற நம்பிக்கை — அவருக்கும் இருந்தது. எனவே, அவனைத் தனக்கு இன்னார் பெண்ணைப் பிடித்திருக்கிறது என்று வரட்டும்; இந்தப் பெண் பிள்ளையைப் போல் நாமும் அவனுடன் சதா மோதிக் கொண்டிருக்க வேண்டாம் என்றுதான் அவர் வாளாவிருந்து வந்தார்.

தன் திருமண விஷயமாக மோகன் மட்டும் எந்த விதமான கருத்தும் இல்லாமல் இருந்தானா என்ன? இல்லை; அவனும் தனக்கு மனைவியாக வாய்ப்பவளுக்கு ஒரு தகுதியை நிர்ணயித்துத்தான் வைத்திருந்தான். அவன் பிரமாதமான அழகியை எதிர் பார்க்கவில்லை. பெரிய படிப்புக்கள் படித்த நாகரிக யுவதியை அவன் மனம் நாடவில்லை. பணமோ, அந்தஸ்தோ கூட இவ்விஷயத்தில் அவனுக்கு ஒரு பிரச்னை இல்லை. ஆனால் அவள் குணசாலியாக இருக்க வேண்டும்; அத்துடன் சங்கீத ஞானம் உடையவளாகவும், ஓரளவுக்காவது இனிமையாகப் பாடக் கூடியவளாகவும் இருக்க வேண்டும் என்பது அவன் ஆசை. தன் மனைவி இசை ஞானம் உடையவளாக இருக்க வேண்டும் என்று மோகன் விரும்பியதற்குக்



காரணம், அவனுக்குச் சங்கீதத்தில், குறிப்பாகக் கர்நாடக சங்கீதத்தில் அப்படி ஓர் ஈடுபாடு. மற்ற இளைஞர்களைப் போல் அவன் அதிகமாக சினிமா, நாடகம் என்று போக மாட்டான். ஆனால் நல்ல கச்சேரி என்றால் கூடியவரையில் அதைத் தவற விட மாட்டான். அவனுக்குப் பாடத் தெரியாது. அவன் சங்கீதம் கற்றுக் கொள்ளவும் இல்லை. ஆனால் இசையின் நுணுக்கங்களை அவன் ஓரளவு அறிவான். எல்லாம் கேள்வி ஞானந்தான். மொத்தத்தில் அவனுடைய பொழுது போக்கே இசையை அனுபவிப்பதுதான். அவனிடம் ஸ்டீரியோ ரிக்கார்டு பிளேயர், டேப் ரிகார்டர் எல்லாம் இருந்தன. தமிழ் நாட்டின் இசை மேதைகளின் ரிக்கார்டுகளில் பெரும்பாலானவற்றை அவன் சேகரித்து வைத்திருந்தான். காஸெட்-காஸெட்டாக அவர்களுடைய ரேடியோக் கச்சேரிகளை டேப் செய்து வைத்திருந்தான்.

இசைக் கலையில் இத்தனை ஈடுபாடு கொண்ட ஓர் இளைஞன் தனக்கு மனைவியாக வாய்ப்பவள் நன்றாகப் பாடக்கூடியவளாக இருக்க வேண்டும் என்று விரும்பியதில் வியப்பு

ஆனால் காலம் அவனை ஒரு நீண்ட காத்திருப்புக்கு உள்ளாக்கவில்லை. ஆறேழு மாதங்களுக்கு முன் மோகனின் ஆசைகளெல்லாம் ஓர் உருக்கொண்டது போல் ஜெயா அவன் வாழ்வில் இடைப்பட்டாள்.

அந்த அவர்கள் சந்திப்பு!

அது ஒரு சுவையான கதை!

## 3. விநோத அறிமுகம்

அப்பொழுது சென்னை - மகாபலிபுரம் ரோட்டில், லாட்டிஸ்பிரிட்ஜுக்கு அப்பால் புதிய காலனி ஒன்று உருவாகிக் கொண்டிருந்தது. நகரின் செல்வந்தர்களில் பலர் அங்கே நிலம் வாங்கிப் பங்களாக்களைக் கட்டி வந்தனர். அவற்றுள் ஒன்றிரண்டைக் கட்டிக் கொடுக்கும் காண்டிராக்ட் மோகனுக்குக் கிடைத்திருந்தது.

அன்று ஞாயிற்றுக் கிழமை; ஆதலால் அந்தக் காலனியில் கட்டுமான வேலை ஏதும் நடைபெறவில்லை. ஆனால், தான் கட்டிவந்த பங்களாக்களில் ஒன்றின் முகப்பைக் கலை




என்ன? அப்படிப்பட்ட ஒருத்தி கிடைக்கும் போது கல்யாணம் செய்து கொண்டால் போதும் என்றிருந்தான் மோகன். அதற்காக எவ்வளவு காலம் வேண்டுமானாலும் காத்திருக்கவும் அவன் தயாராக இருந்தான்.

யம்சம் நிறைந்த அமைப்புடன் உருவாக்க விரும்பிய மோகன், அதை விளக்குவதற்காக, வீட்டின் சொந்தக்காரர், தன் சூப்பர்வைசர், பிரதான மேஸ்திரி ஆகியோரை மாலை நான்கு மணி அளவில் அங்கே வரச் சொல்லியிருந்தான். அவனும் மூன்றரை மணிக்கு வீட்டி

லிருந்து காரில் புறப்பட்டு வேலை ஸ்தலத்துக்குச் சென்றான். பங்களாச் சொந்தக்காரருக்கு எல்லாவற்றையும் விளக்கி அவருடைய சம்மதத்தைப் பெற்றபோது ஐந்து மணி ஆகிவிட்டது. அவர் புறப்பட்டுச் சென்ற பிறகு மறுநாள் நடக்க வேண்டிய வேலைகள் பற்றி சூப்பர்வைஸருடனும் மேஸ்திரியுடனும் சிறிது நேரம் விவாதித்துவிட்டு, மயிலாப்பூருக்குக் கிளம்பினான்.

அன்று மாலை ஆறு மணிக்கு மயிலாப்பூரில் உள்ள சிவஞான சபை கலையரங்கில் ஜெயகுமாரி என்ற புதிய பாடகி ஒருத்தியின் கச்சேரி நடக்க இருந்தது. சில நாட்களுக்கு முன் மோகன் அவளுடைய ரேடியோக் கச்சேரி ஒன்றைக் கேட்டான். அவனுக்கு அவளுடைய பாட்டு ரொம்பவும் பிடித்திருந்தது. இனி மெட்ராசில் எங்கே அவளுடைய கச்சேரி நடந்தாலும், போய்க் கேட்டு மகிழ வேண்டும் என்ற அளவுக்கு அவளுடைய சங்கீதம் அவனைக் கவர்ந்து விட்டது. ஒவ்வொரு சனி—ஞாயிறும், பேப்பர்களில் அவளுடைய சபாக் கச்சேரி பற்றிய அறிவிப்பு ஏதாவது வெளியாகிறதா என்று துழாவிக்கொண்டிருந்தான். ஏறக்குறைய ஒரு மாதத்துக்குப் பின் இன்று தான் சிவஞான சபாவில் நடைபெற இருந்த ஜெயகுமாரியின் கச்சேரி பற்றிய அறிவிப்பு வந்தது. இப்பொழுது அதற்காகத்தான் அவன் மயிலாப்பூருக்குச் சென்று கொண்டிருந்தான்.

அன்று பிற்பகலிலிருந்தே வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. மாலை ஆக ஆக மேகங்கள் சூழ்ந்து வானம் கருக்கத் தொடங்கியது. கோடை காலமாதலால், இடியும் மின்னலும் கூடச் சேர்ந்து கொண்டன. மோகன் லாட்டிஸ்பிரிட்ஜிலிருந்து புறப்படும்போதே எந்நேரமும் மழை வருவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. மழைக்கு முன் சபாவை அடைந்து விட வேண்டும் என்று அவன் காரை வேகமாகவே ஓட்டிச் சென்றான். ஆயினும் இரண்டு கிலோமீட்டர் தூரம் செல்வதற்குள் மழை 'சோ' என்று பொழியத் தொடங்கி விட்டது. மழையுடன் காற்றும் சீறி அடித்ததால் ரஸ்தாவில் எதிரே என்ன வருகிறது என்பது கூடத் தெளிவாகத் தெரியவில்லை. எனவே, அவன் வண்டியின் வேகத்தை வெகுவாகக் குறைத்து ஜாக்கிரதையாக ஓட்டிச் செல்ல வேண்டியதாயிற்று.

திருவான்மியூருக்குத் திரும்பும் கிளைச் சாலையைக் கடந்து, அடையாற்றை நோக்கி வந்து கொண்டிருக்கையில் டாக்ஸி ஒன்று 'பிரேக்-டவுன்' ஆகி, கிட்டத்தட்ட நடு ரோட்டில் நிற்பதையும், டாக்சி டிரைவர் அந்தக் கொட்டும் மழையில் சொட்டச் சொட்ட நனைந்தபடி காரை நிறுத்தும்படி தன்னை நோக்கிக் கைகாட்டுவதையும் மோகன் கண்டான். உடனே தன் அம்பாசடரை டாக்சியின் பக்கவாட்டில் கொண்டு நிறுத்தி, ''என்ன டிரைவர்?'' என்று கேட்டான்.

''சார்! நீங்க எங்கே போறீங்க?'' என்று விசாரித்தான் டிரைவர்.

''மயிலாப்பூருக்கு.''

''ஒரு உதவி செய்யுங்க, சார். திருவான்மியூரிலிருந்து ரெண்டு பாஸஞ்சரை ஏத்திக்கிட்டு மயிலாப்பூருக்குச் சவாரி வந்துக்கிட்டிருந்தேன். மழை பிடிச்சுக்கிட்டதினாலே பானட் வழியா தண்ணி இன்ஜின்லே இறங்கி வண்டி நின்னுடுச்சு. என்னவெல்லாமோ செய்து பார்த்தேன். ஸ்டார்ட் ஆகலே. கார்புரேட்டரைக் கிளீன் பண்ணிப் போட்டாத்தான் ஸ்டார்ட் ஆகும்போல் இருக்கு. பாஸஞ்சர்ஸ் மயிலாப்பூரிலே சிவஞான சபாவிலே ஒரு கச்சேரிக்குப் போகணுமாம்; பறக்கறாங்க. தயவுசெய்து அவங்களை அடையாறு டாக்சி ஸ்டாண்ட் வரையிலே கொண்டு போய் விட்டுடுங்க சார்'' என்று அவன் கெஞ்சினான்.

''சரிப்பா. வந்து ஏறிக்கச் சொல்லு. நான் கூட அதே சபாவுக்குத்தான் போய்க்கிட்டிருக்கேன்; அங்கேயே கொண்டு போய் இறக்கிடறேன்'' என்று கூறிவிட்டுக் காரின் பின் ஸீட் கதவின் 'லாக்'கை 'ரிலீஸ்' செய்து விட்டான் மோகன்.

''தாங்க்ஸ் சார்; ரொம்ப தாங்க்ஸ்!'' என்று கூறியபடி டிரைவர் தன் வண்டிக்கு ஓடினான். சற்றைக்கெல்லாம், நாற்பத்தைந்து வயதுக்கு அதிகமாகவே மதிக்கக் கூடிய ஒரு பெரியவரும், இருபது — இருபத்திரண்டு வயதுத் தோற்றத்துடனான பெண் ஒருத்தியும் டாக்ஸியிலிருந்து இறங்கி ஓடிவந்து மோகனின் காரில் ஏறிக் கொண்டார்கள்.

மோகன் திரும்பிக் காரின் பின் ஸீட் கதவை மூடக் கைநீட்டிய அதே நேரத்தில் அந்தப் பெண்ணும் அதற்காகக் கைநீட்டவே இருவர் கரங்களும் தொட்டுக் கொண்டன. இருவரும் ஒரே சமயத்தில் ''சாரி!'' என்று கூறியவாறு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர். ஒரு கணந்தான்! ஆனால் அந்த ஒரு கணத்திலேயே மோகனைக் காந்தமெனக் கவர்ந்து விட்டது அந்த முகம்.

அவன் ஒன்றும் பெண் பித்தனல்ல. 'ரோடு சைடு ரோமியோ'வும் அல்ல. இருந்தாலும் நல்ல இசை ரசனை இருந்தது போலவே அழகு ரசனையும் அவனுக்கு உண்டு. கல்லூரியில் படிக்கும்போதும் சரி, அதற்குப் பின்னும் சரி, எத்தனையோ அழகிய பெண்களை அவன் சந்தித்திருக்கிறான். பேசிப் பழகியவர்களும் உண்டு. அவர்களில் சிலர் இந்தப் பெண்ணை விடப் பலமடங்கு அழகானவர்கள். ஆனால் பல நாள் பழகியும் கூட அவர்களில் எவரும் அவனைக் கவர்ந்ததில்லை. இந்தப் பெண்ணோ இமைக்கும் நேரப் பார்வையிலேயே மோகனை ஆட்கொண்டு விட்டாள். மரியாதையின் பொருட்டு, அவன் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டான். காரின் கதவை மூடி 'லாக்' செய்து விட்டு முன்புறம் திரும்பிக் காரை 'ஸ்டார்ட்' செய்யத் தொடங்கினான்.

---

◘ முதிர்ந்த வயதினர், நடக்க இயலாதவர், நோய் உள்ளவர்கள் ஆகியோர் அந்தக் காலத்தில் கோவிலுக்குள் சென்று சுவாமி தரிசனம் செய்ய இயலாது இருந்தனர். ஆகவே இறைவனே அவர்களைத் தேடி வருவது போல, சுவாமி ஊர்வலம், தேர்த் திருவிழா ஆகியவை தோன்றின!



ஆயினும் எதிரே இருந்த 'ரியர் வியூ மிரரி'ல் தெரிந்த அவள் உருவத்தை அவனுடைய கடைக்கண் அடிக்கடி நோக்கிக் கொண்டே தான் இருந்தது.

''ரொம்ப தாங்க்ஸ் ஒங்களுக்கு. டாக்சி வழியிலே மக்கர் பண்ணினதும் தவிச்சுப் போயிட்டோம் தவிச்சு'' என்று அந்தப் பெரியவர் நன்றிப் பெருக்குடன் சொன்னார்.

மோகன் காரை நகர்த்திக் கொண்டே, ''ஜெயகுமாரியின் கச்சேரி திருவான்மியூரிலிருந்தும்கூட உங்களை இழுத்திருக்குதே! ஆச்சரியம்தான்!'' என்றான்.

சிறிது நேரத்துக்குப் பிறகுதான் அவரிடமிருந்து இதற்கு மறுமொழி வந்தது. சொன்னார்: ''நாங்க இருக்கிறது திருவான்மியூர் இல்லே சார்; மந்தவெளி. அங்கே ஒரு திருமண வரவேற்புக்குப் போயிட்டு வரோம்.''

''பின்னே டாக்சி டிரைவர், நீங்க சிவஞான சபாவுக்குக் கச்சேரிக்குப் போகத் துடிச்சுக்கிட்டிருக்கிறதாகச் சொன்னானே!''

''அவன் சொன்னது உண்மைதான். அங்கேதான் இப்போ நாங்க போகணும்.''

''ஆமாம் சார். அப்பா, ஜெயகுமாரி கச்சேரி எதையும் மிஸ் பண்ண மாட்டார்; மயிலாப்பூரிலே என்ன, லண்டன்லே நடந்தாலும் சரி.''

இப்படிக் கூறியவள் அந்தப் பெண். கண்ணாடியில் தெரிந்த அவள் முகம்தான் அப்பொழுது எப்படி விகசித்திருந்தது! 'ஆஹா! இவள் அழகு மட்டும் இனிக்கவில்லை. குரலும் கற்கண்டுப் பாகாக இனிக்கிறது!' என்று மனத்தினுள் கூறிக் கொண்டான் மோகன். எப்படி அவள் அழகைத் திருட்டுத்தனமாகவாவது பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியதோ, அவ்வாறே அவள் குரலைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்றும் தோன்றியது.

எனவே, ''நீங்க பேசற தோரணையைப் பார்த்தால், ஒங்களுக்கு ஜெய்குமாரியின் பாட்டு அவ்வளவாப் பிடிக்கலேன்னு தோணுதே!'' என்று பேச்சை வளர்த்தான்.

''ஏதோ சுமாராப் பாடறு! இன்னும் நெறைய ஒழைக்கணும்; நெறையச் சாதகம் பண்ணணும்கிறது என் அபிப்பிராயம். சரி, அவ பாட்டைப் பற்றி ஒங்க ஒப்பீனியன் என்ன?'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''ஒப்பீனியன் சொல்ற அளவுக்கு நான் சங்கீதத்திலே வல்லவன் இல்லே. இருந்தாலும் என்னைப் பொறுத்த வரையில் அவங்க பாட்டு ஜனரஞ்சகமாக இருக்கிறதாகத்தான் தோணுது.''

''ஒங்ககிட்டே ஃப்ராங்கா ஒண்ணு கேட்கலாமா?''

அவள் முன் பின் அறிமுகமில்லாத தன்னுடன் இவ்வளவு ஃப்ரியாகப் பேசுவாள் என்று மோகன் எதிர்பார்க்கவில்லை. இது வரையில் அவனுக்கு அவளுடைய அழகும் குரலும்தான் பிடித்திருந்தன. இப்பொழுது அவளுடன் பேசுவதிலும் அவன் சுவை கண்டான். ''கேளுங்களேன்'' என்றான் உள்ளூற உற்சாகத்துடன்.

''ஜெயகுமாரி பாடற ஸ்டாண்டேர்டிலே ஓர் ஆண்பிள்ளை பாடினு அவரையும் இதே மாதிரி பாராட்டுவீர்களா?''



''அடடா! ஏன் இப்படித் தொங்கறே ?''
''என் காலை, பூட்ஸ் காலால் மிதிப்பவனை ஏமாத்தற!''

மோகனுக்குத் தன் நெஞ்சின் பக்கத்தில் உள்ள ஏதோ ஒரு நரம்பைச் சுண்டி இழுத்தது போலிருந்தது, அவளுடைய இந்தக் கேள்வி. அதே உணர்ச்சிதான் அச்சமயம் அவள் தந்தைக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். ''இதெல்லாம் என்னம்மா அர்த்தமில்லாத கேள்வி? அர்த்தமில்லாத விவாதம்!'' என்று அவர் தம் மகளைக் கடிந்து கொண்டார்.

மோகன் சுதாரித்துக் கொண்டு சொன்னான்: ''பரவாயில்லை ஸார். ஒங்க டாட்டர் கேட்டது இந்தக் காலத்து ஆண்பிள்ளைகள் கிட்டே, குறிப்பா என்னை மாதிரி யங்ஸ்டேர்ஸ் கிட்டே கேட்க வேண்டிய கேள்வி தான். ஆனு அதே சமயம் என் வரையிலே இந்தக் கேள்வி தேவை யில்லைங்கறதையும் சொல்லிக்கிறேன். ஏன்னு, ஜெயகுமாரி கறுப்பா–சிவப்பான்னு கூட எனக்குத் தெரியாது. இன்னைக்குத்தான் அவங்க கச்சேரியை நான் நேரிலே கேட்கப் போறேன். கொஞ்ச நாளைக்கு முன்னுலே அவங்க ரேடியோப் புரோகிராம் ஒன்று கேட்டேன். அது தான் நான் அவங்க பாட்டை முதல் முதலாக் கேட்டது. ஃபர்ஸ்ட் இம்ப்ரெஷன் இஸ் தி பெஸ்ட் இம்ப்ரெஷன் என்கிறது உண்மையானு, என் வரையில் அவங்க ஒரு நல்ல ஆர்ட்டிஸ்ட்; நல்ல பாடகி!''

மீண்டும் சிறிது நேரம் காரின் பின் சீட்டில் அமைதி நிலவிற்று. பிறகு அந்தப் பெரியவரே மறுபடியும் பேசினார்: ''சார்! இவ கொஞ்சம் விளையாட்டுப் போக்கா ஏதேதோ பேசுவா; செய்வா. நீங்க ஒன்றையும் மனசிலே வைச்சுக்காதீங்க!''

அவர் இதைச் சொல்லவும், மோகனின் கார் சிவஞான சபா வாசலில் வந்து நிற்கவும் சரியாக இருந்தது. மழை இப்பொழுது சிறிது விட்டிருந்தது. ஆயினும் பெரும் தூற்றல் விழுந்து கொண்டுதான் இருந்தது. பின் கதவைத் திறந்து கொண்டு முதலில் அந்தப் பெரியவர் இறங்கினார். உடனே வெளி கேட்டில் குடையுடன் நின்ற கதர் ஜிப்பா போட்டிருந்த ஒருவர், ''வாங்க, வாங்க'' என்று கார் அருகே ஓடிவந்து குடையைப் பெரியவருக்கும் சேர்த்துப் பிடித்துக் கொண்டார். பிறகு, கேட்டை நோக்கி, ''டேய்! இன்னொரு குடை கொண்டு வாங்கடா; ஜெயகுமாரி இறங்கி வரட்டும்'' என்று குரல் கொடுத்தார்.

(தொடரும்)

# பனி நிலவு

## 4. திருமண முயற்சி

மாயாவி

மோகன் வியப்பால் திகைத்துப் போனான். ஆனால் அந்த வியப்பும் திகைப்பும் நீடிக்கவில்லை. அவற்றின் இடத்தைக்களிப்பும், மகிழ்ச்சியும் பிடித்துக்கொண்டு விட்டன. முன்பின் தெரியாத தன்னுடன் ஜெயகுமாரி இவ்வாறு விளையாட வேண்டுமென்றால்...?

ஜெயகுமாரி அழகும், குரலினிமையும், பேச்சு வல்லமையும் மட்டும் உள்ளவள் அல்ல; அவளுக்குச் சாமர்த்தியமும் சாதுரியமும்கூட இருக்கின்றன என்பதையும் அவனுக்கு அவள் ஆடிய அந்தச் சிறிய விளையாட்டு நிரூபித்தது.

வண்டியிலிருந்து இறங்கிச் சபாவுக்குள்ளே போகும்போது கூட அவள் தன் நாடகம் வெளியாகிவிட்ட அதிர்வையோ, 'உங்களை ஏமாற்றி விட்டேனே!' என்ற எக்களிப்பையோ முகத்திலாகட்டும், பேச்சிலாகட்டும் காட்டிக் கொள்ளவில்லை. ''ரொம்ப தாங்க்ஸ் சார்'' என்று ஒரு குமிழ் சிரிப்புடன் கூறி விட்டு, அந்த ஜிப்பாக்காரரைப் பார்த்து, ''செக்ரட்டரி சார்! சார் மட்டும் எங்களுக்கு 'லிஃப்ட்' கொடுத்திருக்கலேன்னா, இன்னிக்கு நான் எப்போக் கச்சேரிக்கு வந்து சேர்ந்திருப்பேனோ தெரியாது. அதனாலே தயவுசெய்து அவருக்கு ஃப்ரண்ட் ரோவிலே அப்பா பக்கத்திலே ஒரு சீட் புரொவைட் பண்ணிடுங்க, சார்!'' என்று கூறிவிட்டு நகர்ந்தாள். சில அடிகள் சென்றதும், நின்று மோகனை நோக்கித் திரும்பிச் சற்று உரத்த குரலில், ''கச்சேரி முடிஞ்சதும் பார்க்கலாமா சார்? வீட்டுக்கு 'லிஃப்ட்' கேட்க மாட்டேன், பயப்படாதீங்க'' என்று கூறிக் கலகலவெனச் சிரித்து விட்டுச் சென்றாள்.

'இந்தச் சிரிப்பு ஒண்ணுக்கே இன்னிக்கு மட்டும் என்ன, வாழ்நாள் முழுக்க நான் ஒனக்கு 'லிஃப்ட்' கொடுக்கலாமே!' என்று மோகனின் மனம் கூறியது.

பிறகு என்ன? அன்று அவனுக்குச் சிவஞான சபாவில் ராஜோபசாரம் நடந்தது. ஜெயகுமாரியின் அப்பா (அவர் பெயர் கல்யாணசுந்தரம் என்பதை மோகன் பிறகு தெரிந்து கொண்டான்) ஹாலில் அவன் அருகே அமர்ந்து, தம் மகளின் குறும்புச் செயலுக்காக ஆயிரம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். தாய் இல்லாத பெண் என்று சிறு வயதிலிருந்தே அவளுக்கு அதிகமான செல்லம் கொடுத்து வளர்த்து விட்டதாகவும் அதுவே இத்தகைய குறும்புத்தனத்துக்குக் காரணம் என்றும் தம்மை நொந்து கொண்டார். மோகனைப் பற்றி எல்லாம் விசாரித்தார். அவன் முகவரியை எழுதி வாங்கிக்கொண்டு, தம் வீட்டு முகவரியைக் குறித்துக்கொள்ளச் சொன்னார், தங்கள் வீட்டுக்கு ஒருநாள் வரவேண்டும் என்று அழைத்தார். கடைசியாகத் தம் மகளுக்கு எங்கெங்கு எந்தெந்தத் தேதியில் கச்சேரிகள் இருக்கின்றன என்பதைச் சொல்லி, சென்னையில் நடக்கும் கச்சேரிகளுக்கெல்லாம் தவறாமல் வர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

ஜெயகுமாரியின் அன்றையக் கச்சேரியை மோகன் வழக்கத்துக்கும் அதிகமான ஈடுபாட்டுடன், ஓர் உரிமை உணர்வுடன் ரசித்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

கச்சேரி முடிந்ததும் கல்யாணசுந்தரம் மோகனை மேடைக்கு அழைத்துச் சென்றார்.

கல்யாணசுந்தரத்தின் குடும்பமே சங்கீதக் குடும்பம். அவரும் ஒரு நல்ல பாடகர்தான். தகப்பனார் தலைமுறை வரையில் குடும்பத்தில் ஒவ்வொருவரும் தங்கள் தந்தையிடமிருந்து சங்கீதத்தை முறையாகப் பயின்று அதையே தங்கள் பிழைப்பாகக் கொண்டிருந்தார்கள். கல்யாணசுந்தரமும் தம் தந்தையிடம் சங்கீத அப்பியாசம் செய்தார். ஆரம்பத்தில் சில காலம் கச்சேரிகள் செய்து கொண்டிருந்தார். ஆனால் பிறகு அவரால் இசைத் தொழிலில் தொடர்ந்து ஈடுபட முடியவில்லை. அவருடைய மனைவி — ஜெயகுமாரியின் தாய் — நீடித்த நோயாளியாகி விட்டதே அதற்குக் காரணம். ஜெயகுமாரியைப் பெற்றதிலிருந்து அந்த அம்மாளைக் காசநோய் பற்றிக்கொண்டு வாட்டி எடுத்தது. ஆறு ஏழு ஆண்டுகள் நோயுடன் போராடி விட்டு அவள் கண்களை மூடினாள். அந்த ஆறு ஏழு ஆண்டுகளும் வந்த கச்சேரிகளை யெல்லாம் கல்யாணசுந்தரம் உதறித் தள்ளிக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. மனைவி இறந்த பிறகு, அவர் பரம்பரைத் தொழிலில் ஈடுபட விரும்பினார். ஆனால் இசை உலகுடன் தொடர்பு விட்டுப் போனதால் அவரைச் சீண்டுவார் இல்லை. அதற்காகக் கல்யாணசுந்தரம் வருந்தவில்லை. தமக்குப் பதில் தம் மகளை மேடையேறச் செய்து விடுவதென்று, ஏழு வயதி

விருந்தே ஜெயகுமாரிக்கு இசைப் பயிற்சியை ஆரம்பித்தார்.

ஏறக் குறைய பத்து ஆண்டுகள் தந்தையும் மகளும் இசையே மூச்சாக, இசையே பேச்சாக வாழ்ந்தனர். பதினாறாவது வயதில் மயிலை கற்பகாம்பாள் சந்நிதியில் ஜெயகுமாரியின் முதல் கச்சேரி அரங்கேற்றமாயிற்று. நகரில் அத்தனை சபாக்களின் காரியதரிசிகளையும், பிற இசை உலக விற்பன்னர்களையும் வரவழைத்து அரங்கேற்றத்தைச் சிறப்பாக நடத்தினார் கல்யாணசுந்தரம். இனிய குரலும் நல்ல பயிற்சியும், சுயமான கற்பனா சக்தியும் இருந்தமையால் ஜெயகுமாரியின் பாட்டை அன்று எல்லோரும் ஒருமுகமாகப் பாராட்டினர். அவ்வளவுதான்; அவளுக்கு மார்க்கெட் பிடித்து விட்டது. முதலில் சென்னையிலும், பிறகு ரேடியோ சான்ஸ் மூலம் வெளியூர்களிலுமிருந்தும் அவளுக்கு அழைப்புக்கள் வரலாயின.

கடந்த நான்கு ஆண்டுகளாக ஒரு நல்ல பாடகி என்ற பெயரை அவள் நிலைநாட்டி வந்தாள். ஆனால் எந்தக் கச்சேரியாகட்டும்; அது முடிந்ததும் முடியாததுமாக அவள் தன் தந்தையிடம் அபிப்பிராயம் கேட்கத் தவற மாட்டாள். அவரும் பாராட்டுத் தெரிவிக்க வேண்டிய அயிட்டங்களைப் பாராட்டுவார்; குறை தென்பட்டால் அவற்றைச் சுட்டிக் காட்டி, இப்படிப் பாடியிருக்க வேண்டும் என்று திருத்துவார்.

இன்றும் அப்படித்தான், அவர் மோகனுடன் மேடைக்குச் சென்றதும், ஜெயகுமாரி ''எப்படியப்பா பாடினேன்?'' என்று கேட்டாள்.

''எல்லாம், வீட்டுக்குப் போய் விவரமாய்ச் சொல்றேம்மா'' என்றார் அவர்.

''ஏம்ப்பா?''

''இன்னைக்கு ஒன் கச்சேரியை நான் அவ்வளவு நுணுக்கமாக் கவனிக்கலே!''

''காரணம்?''

''சார்கிட்டே நீ பண்ணின வேடிக்கை என் மனசை வேதனைப்படுத்திடிச்சு, ஜெயா, அவர் யார் தெரியுமா? ஒரு பெரிய இடத்துப் பிள்ளை. ஒரு பெரிய ஆர்க்கிடெக்ட்; கண்டிராக்டர்!''

கல்யாணசுந்தரத்தின் குரலில் அப்பொழுது தொனித்த தீவிரம் மோகனை அவர்களுடைய பேச்சில் புகச் செய்தது. ''என்ன சார் நீங்க, சின்ன விஷயத்தை யெல்லாம் பெரிசுபடுத்திக்கிட்டு?'' என்றான் அவன்.

''இல்லே, மிஸ்டர் மோகன். என்னதான் என் பெண் வயசிலே சின்னவளா யிருந்தாலும் வேடிக்கைக்கும் விளையாட்டுக்கும் ஒரு லிமிட் வேணுமில்லேயா?...'' அவர் மேலும் ஏதோ கூற வாயெடுத்தார். அதற்குள் சபா காரியதரிசி அங்கே வந்து, ''கல்யாணசுந்தரம் சார், ஒரு நிமிஷம் என்று கூறி அவரை மேடையின் பக்கவாட்டில் இருந்த ஆபீஸ் அறைக்கு அழைத்துச் சென்று விட்டார்.

அவர் போனதும், ஜெயகுமாரி முகத்தில் விசனம் தேங்க, ''என்னை மன்னிச்சிடுங்க சார்!'' என்றாள்.

''மன்னிக்கிறதா? எதுக்கு?'' என்று கேட்டான் மோகன்.

''நான் அந்த அளவுக்கு ஒங்ககிட்டே உரிமை எடுத்துண்டதுக்கு?''

''பரவாயில்லே, மிஸ் ஜெயகுமாரி. உண்மையைச் சொல்வதா யிருந்தா இந்த மாதிரி வேடிக்கைகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.''

''ஆண் பிள்ளைகள் வேடிக்கை பண்ணினாலா? பெண்பிள்ளைகள் வேடிக்கை பண்ணினாலா?'' என்று அவள் முறுவலுடன் கேட்டாள்.



''பார்த்தீங்களா? மறுபடியும் ஆரம்பிச் சுட்டீங்களே!''

''ஒங்களுக்குத்தான் இந்த மாதிரி வேடிக் கைகள் பிடிக்கும்னு சொன்னீங்களே!'' அவள் முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள். மோகனும் சிரித்தான்.

''அது சரி; கச்சேரி எப்படி இருந்திச்சு?''

''ஏ ஒன்! ஒங்கப்பா அடுத்து நடக்கப் போற ஒங்க கச்சேரிகள் பத்தி ஒரு லிஸ்ட் குடுத்து எல்லாத்துக்கும் சேர்த்து ஒரேயடியா இன்விடேஷனும் குடுத்திட்டார்.''

''வருவீங்க இல்லே?''

''வராம லிருப்பேனு?''

''அதோடு என்னுேடு பெர்சனல் இன்வி டேஷன் ஒண்ணு.''

''என்ன?''

''எங்க வீட்டுக்கு ஒருநாள் நீங்க வரணும்.''

''டு லேட். அந்த அழைப்பும் ஒங்கப்பா கிட்டேயிருந்து ஏற்கனவே வந்தாச்சு.''

''பொல்லாதவர் இந்த அப்பா!''

பொல்லாத அந்த அப்பா அச்சமயம் திரும்பிவிடவே அவர்கள் உரையாடல் முற்றுப் பெற்றது.

அன்று அவர்களைத் தன் காரிலேயே மந்த வெளிப்பாக்கத்தில் வெஸ்ட் சர்க்குலர் ரோட்டிலிருந்த அவர்கள் வீட்டில் கொண்டு இறக்கி விட்டுச் சென்றான் மோகன். வாக் களித்தபடி ஓர் ஞாயிற்றுக் கிழமை அவர்கள் வீட்டுக்குக் காலையிலேயே புறப்பட்டுப்போய், அங்கேயே சாப்பிட்டுவிட்டு, மாலைவரையில் தங்கி பரஸ்பரம் குடும்ப விஷயங்களைப் பற்றியும், சங்கீதம் பற்றியும் பேசிக் கொண்டிருந்தான்.

அத்துடன் நகரில் நடக்கும் அவளுடைய கச்சேரிகளுக்குத் தவறாமல் ஆஜரானான். கச்சேரி முடிந்ததும் அவர்களை வீட்டில் கொண்டு விட்டு விட்டுச் சென்றான். சில தினங்களுக்குப் பிறகு கச்சேரி நாட்களில் பிற்பகலிலேயே அவர்கள் வீடு சென்று சபாவுக்கோ, மற்ற இடங்களுக்கோ அவர்களைக் காரில் ஏற்றிச் செல்வதையும் வழக்க மாக்கிக் கொண்டான். ஜெயகுமாரியின் பெரும்பாலான கச்சேரிகள் ஞாயிற்றுக் கிழமைகளிலேயே நடந்ததால் தன் வேலைக்கு இடையூறு இல்லாமல் போய் வருவதற்கு அவனுக்கு வசதியாக இருந்தது.

அடிக்கடி நிகழ்ந்த இந்தச் சந்திப்பு, ஜெயாவையும் அவனையும் மிக நெருக்கத்துக்குக் கொண்டு வந்து, ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொள்ளச் செய்தது. ஓர் ஞாயிற்றுக் கிழமை ஜெயாவுக்கு வேலூரில் ஒரு கல்யாண ரிஸப்ஷனில் கச்சேரி. அன்று காலையில் கல்யாணசுந்தரத்துக்குக் கடுமையான ஜுரம் வந்து விட்டதால், அவள் மோகனுக்கு டெலிபோன் பண்ணி அன்றைய கச்சேரிக்குத் தனக்குத் துணை வருமாறு கேட்டுக்கொண்டாள். சாதாரணமாக இத்தகைய வெளியூர்க் கச்சேரிகளுக்குப் பக்கவாத்தியக் காரர்கள் கூடவே தாங்களும் செல்வதுதான் அவர்கள் வழக்கம். ஆனல் அன்று மோகன் அவளைத் தன் காரிலேயே வேலூருக்கு அழைத்துப் போவதாக ஃபோனில் கூறியதால் அதே காரில் பக்கவாத்தியக்காரர்கள் வருவதை அவன் விரும்புவானே, மாட்டானே என்ற சந்தேகத்தில் கல்யாண சுந்தரம் பக்க



வாத்தியக்காரர்களை முன்னதாக பஸ்ஸில் புறப்பட்டுச் சென்றுவிடுமாறு செய்தி சொல்லி அனுப்பி விட்டார்.

அவர்களிடையே பழக்கம் ஏற்பட்டு ஏறக் குறைய ஓராண்டு காலம் ஆகிவிட்ட போதிலும், இன்றுதான் ஜெயாவும் மோக னும் தனியாக ஓர் இடத்துக்குப் போகும் வாய்ப்புக் கிட்டியது. அந்த வாய்ப்பை இருவருமே மனம் விட்டுப் பேசுவதற்குப் பயன் படுத்திக் கொண்டனர். அவர் களிடையே காதலைப் பற்றிய பரிமாற்றம் ஏற்பட்டதும் அன்றுதான். ஜெயாவின் மன நிலை தெள்ளத் தெளிவாகிவிட்ட பின் மோகன் மேல் நடவடிக்கையில் இறங்கினன்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை மந்தைவெளிக்கு வந்து கல்யாணசுந்தரத்திடம் ஜெயாவைத் தான் மணக்க விரும்புவதாகத் தெரிவித்தான்.

''இது நான் எதிர்பார்த்த ஒன்றுதான்'' என்று பளிச்சென்று கூறிய அவர், ''ஆனல்?'' என்று ஒரு கேள்விக் குறி போட்டு நிறுத்தினர்.

''சொல்லுங்க'' என்று மோகன் அவரை ஊக்கினன்.

''ஒங்க அம்மா—அப்பா சம்மதம் கிடைக் கும் என்கிற நம்பிக்கையோடுதான் நீங்க இந் தக் கோரிக்கையை வெளியிட்டிருப்பீங்கன்னு நெனைக்கிறேன். ஆனல் நான் போடற நிபந் தனை ஒண்ணுக்கு நீங்களும், ஒங்க அப்பா—அம்மாவும் கட்டுப்படுவீங்களா என்கிறது தெரியணும்.''

''என்ன நிபந்தனைன்னு சொல்லுங்க.''

''பரம்பரை பரம்பரையாச் சங்கீதத்தைத் தொழிலாகக் கொண்ட குடும்பம் எங்க குடும் பம். என் தலைமுறையோடு அது அழிஞ்சிடக் கூடாதுன்னுதான், ஜெயா பெண்ணுக இருந்த போதிலும் சங்கீதத்தைக் கற்றுக் கொடுத்து அவளை அந்தத் துறையிலே ஈடுபடுத்தியிருக் கேன். அதனலே கல்யாணத்துக்கு அப்புற மும் அவள் கச்சேரி செய்வதற்கு நீங்களும் ஒங்க அப்பா—அம்மாவும் மனப்பூர்வமான சம்மதம் தரணும்.''

''என்வரையில் என் சம்மதத்தை இப் பவே கொடுத்திடறேன். எங்கப்பா—அம்மா வின் சம்மதத்தையும் பெற்றுக்கிட்டு ஒங்களை வந்து சந்திக்கிறேன்'' என்று கூறிவிட்டு, மோகன் அடுத்த ஞாயிற்றுக் கிழமை வேலவ னூருக்குப் புறப்பட்டு வந்தான். பெற்றோ ரிடம் எல்லாவற்றையும் ஒளிவுமறைவின்றித் தெரிவித்தான்.

''கச்சேரிதானே? செய்தா செய்துக்கிட்டுப் போகட்டுமே! என்னங்க? நீங்க என்ன சொல்றீங்க?'' என்று கனகம் தன் கண வரைக் கேட்டாள்.

''சினிமாவுக்குக் கினிமாவுக்குப் போய்ப் பாட்டுப் பாடுவேன்னு பிடிவாதம் பிடிக்காத வரையிலே எனக்கு ஆட்சேபணை ஒண்ணும் இல்லை. ஆனல் அவுங்க குடும்பம், குலம், கோத்திரம் இவற்றையெல்லாம் விசாரிச்சுத் தெரிஞ்சுக்க வேண்டாமா?'' என்ருர் ஜக தீசன்.

''அவங்க அப்பழுக்கு இல்லாத சங்கீத வித்வான்களின் பரம்பரையைச் சேர்ந்த வங்க, அப்பா. எனக்கு அது நல்லாத் தெரி யும். இருந்தாலும் ஒங்க மனச் சமாதானத் துக்கு நீங்களும் நல்லா விசாரணை பண்ணிக் கிட்டுச் சம்மதம் குடுங்க, போதும்'' என்ருன் மோகன்.

இரண்டு — மூன்று வருஷங்களாகவே தன் னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி தாய் நேரடியாகவும், தந்தை மறைமுக மாகவும் வற்புறுத்தி வந்ததால், ஜெய குமாரியை மணக்க அவர்கள் தடை சொல்ல மாட்டார்கள் என்ற உறுதி மோக னுக்கு உண்டு. ஆனல் கல்யாணத்துக்குப் பிறகு ஜெயாவைக் கச்சேரிகள் செய்ய அவர்கள் அனுமதிப்பார்களா என்பது அவ னுக்குச் சிறிது சந்தேகமாகவே இருந்தது. இதற்கு அவர்களைச் சம்மதிக்கச் செய்ய, தான் கொஞ்சம் போராட வேண்டி யிருக்கும் என்று கூட அவன் நினைத்தான்.

ஆனல் அவன் நினைத்ததற்கு மாருக அந்தப் பிரச்னை சுலபமாகத் தீர்ந்து விட்டது. குலம்—கோத்திரம் பற்றிய அவர்களுடைய விசாரணை சாதகமாகவே அமையும் என்பதில் அவனுக் குச் சிறிதும் ஐயமில்லை.

எனவே, தான் வந்த காரியம் நூற்றுக்குத் தொண்ணூறு வெற்றி யடைந்து விட்ட களிப்புடனும், தானும் ஜெயாவும் வருங் காலத்தில் நடத்தப் போகும் இன்பமயமான இல்லற வாழ்வு பற்றிய கற்பனைகளுடனும் அன்றிரவு வேலவனூரில் உறக்கத்தில் ஆழ்ந்தான்.

அந்த உறக்கத்தில்தான் தங்கள் தேனிலவு பற்றிய அந்த இனிய கனவைக் கண்டான். ஆனல் என்ன பயன்? வெறும் கனவுதான்—என்றாலும் அது கூட சுவையான கட்டத்தில் கலைக்கப்பட்டு விட்டதே! (தொடரும்)

---



ராஜஸ்தானைச் சேர்ந்த பன்வர்லால் குமாவத் என்பவர் அரிசியில் எழுத்துக்கள் எழுதும் நிபுணர்.

650 ஆண்டுகளுக்கு முன் 85 எழுத்துக்கள் ஒரே ஒரு அரிசியில் எழு தப்பட்டு 11,000 டாலர்களுக்கு விலை போனதாகக் கேள்விப்பட்ட இவர் 1955ல் இக்கலையை ஆரம்பித்தார். கடும் உழைப்பும், நேர்மையும் கொண்ட இவர் இக்கலையில் ஐந்து வருடங்களில் முழுத் தேர்ச்சி பெற்ருர். ராணி எலிசபெத் 1960ம் ஆண்டு இந்தியாவிற்கு வருகை தந்தபோது எழுத்துக்கள் எழுதப்பட்ட ஓர் அரிசியைப் பரிசாக அளித்தார்.

ஒவ்வொரு அரிசியிலும் 365 எழுத்துக்கள் வீதம் பகவத்கீதையில் உள்ள 700 சுலோகங்களை 90 அரிசிகளில் எழுதி உலக சாதனை புரிந்த இவர், பணியாற்றும்போது சக்தி வாய்ந்த கண்ணுடி எதுவும் அணிவ தில்லை. தமது இந்தக் கலைக்கு இந்தியாவில் வரவேற்பு இல்லாவிடினும் அமெரிக்காவில் பெரும் வரவேற்பு இருப்பதாகக் கூறுகிருர் இவர்.

ஆதாரம்: ''விஸ்டம்'' — அ. ரா.



காரைச் செலுத்திக் கொண்டிருந்த மோகனின் உதடுகள் திடீரென எதையோ நினைத்து முறுவலித்தன.

ஆம்; அவன் கனவு கலைக்கப்பட்டதேயன்றி நினைவு கலைக்கப்படவில்லை. அந்த நினைவை அவனுடைய ஜெயா தான் எப்பொழுதும் நிறைத்திருந்தாள். ஓய்வாக இருக்கும் போதெல்லாம் அவளைப்பற்றி நினைப்பதில் அவன் ஒரு தனி இன்பம் கண்டான். ஓய்வாக இருக்கும் போது மட்டும் இல்லை; அவர்கள் நெருங்கிப் பழகத் தொடங்கிய பிறகு எத்தனையோ இரவுகளில் அவன் தூக்கத்தைக் கலைத்துக் கொண்டுகூட அவளைப் பற்றிய நினைவுகளில் மூழ்கிப் போயிருக்கிறான். தங்களிடையே நிகழ்ந்த சந்திப்புக்கள் ஒவ்வொன்றையும் நினைவுக்குக் கொண்டு வந்து, அப்பொழுது தாங்கள் பேசிக் கொண்டது அனைத்தையும் வார்த்தைக்கு வார்த்தை நினைத்துப் பார்த்து மகிழ்வான். எத்தனை தடவை அந்தச் சந்திப்புக்களை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்த்தாலும் அவனுக்கு அலுக்காது.

## 5. யார் அந்தப் பெண்?

மோகன் எழுந்து படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு, பல் தேய்ப்பதற்காக வீட்டுப் பின்கட்டுக்குச் சென்றான். தன் கனவு கலைக்கப் பட்டு விட்ட ஏமாற்றத்தை எண்ணி ஆதங்கப் பட்டுக் கொண்டு அவன் இனியும் படுக்கையில் உட்கார்ந்திருந்தால், ''ஏண்டா டேய்! எழுந்திருக்கலே?'' என்று வெற்றிலையைக் குதப்பிய வாயுடன் அவன் அப்பாவும், ''மோகனு! என்னடா கண்ணு ஒடம்புக்கு?'' என்று அவன் அம்மாவும் அந்த அறைக்கே படையெடுத்து வந்து விடுவார்கள்.

அன்றியும் இது அவனே செய்து கொண்டிருந்த ஓர் ஏற்பாடு. எப்பொழுது வேலவனூருக்கு வந்தாலும் சரி, அங்கிருந்து சென்னை திரும்பும் நாள் ஞாயிற்றுக் கிழமையாக இல்லாவிட்டால், எந்த ராஜா எங்கே போனாலும், காலை நான்கு மணிக்கெல்லாம் அலாரம் வைத்து எழுந்து, பல் தேய்த்து, காப்பி சாப்பிட்டு விட்டு நாலரை மணிக்குள் புறப்பட்டு விடுவான். வேலவனூரிலிருந்து சென்னைக்குக் கிட்டத்தட்ட நூறு கிலோமீட்டர் தூரம். காரில் இரண்டு மணி நேரப் பிரயாணம். காலையில் நாலரை மணிக்குப் புறப்பட்டால் ஆறரை மணி வாக்கில் சென்னை வந்து சேர்ந்து விடுவான். அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் குளித்து, டிஃபன் சாப்பிட்டு விட்டு வேலை ஸ்தலத்துக்குப் புறப்படுவதற்குச் சரியாக இருக்கும்.

ஊருக்கு வந்து திரும்பும் நாட்களில், ஒருகால் அலாரம் அடித்துத் தூக்கம் கலையாதிருந்தால், தன்னை எழுப்பிவிட்டு விடுமாறு அவனே தான் தன் பெற்றோரிடம் சொல்லி ஏற்பாடு செய்திருந்தான். அந்தக் கடமையைத்தான் அவன் தாயும் தந்தையும் அப்பொழுது நிறைவேற்றினர். எனவே, தன் இன்பக் கனவு கலைக்கப்பட்டதால் அலுப்பும் சலிப்பும் ஏற்பட்ட போதிலும், அதையெல்லாம் ஒரு பக்கம் ஒதுக்கி விட்டு, அவன் சென்னைக்குப் புறப்படுவதற்கு ஆயத்தமானான்.

அடுத்த அரை மணியில் அவனுடைய அம்பாசடர் கார், தேசிய நெடுஞ்சாலையில் ஒளி வெள்ளத்தைப் பரப்பியபடி சென்னையை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. ரோட்டில் கண்களும், ஸ்டீரிங்கில் கைகளுமாகக்

இன்றும் அப்படித்தான் காரை ஓட்டிக் கொண்டே அந்தச் சந்திப்புக்களையும் சம்பாஷணைகளையும் நினைத்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தான். கடைசியாகத் தங்கள் இருவர் மட்டும் தனியாக வேலூருக்குப் போன சம்பவத்தில் அவன் நினைவு கவிந்த போது கார் தாம்பரத்தைத் தாண்டிவிட்டது.

இதோ, இந்த ஃபிரண்ட் ஸீட்டில்தான் அவனதுஇடப்புறம் அமர்ந்திருந்தாள் ஜெயா. நகர எல்லையைக் கடக்கும் வரையில் அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

பட்டுப் போன்ற ஜெயாவின் கரம், பட்டதும் சில்லிட்டுப் போன மோகனின் கரம் தடுமாறியது. வண்டி இங்கும் அங்கும் நெளியவே தன்னிச்சையாக அவன் வலது கால் ஆக்சிலேட்டரிலிருந்து பிரேக்குக்குத் தாவி அதைப் பலமாக அழுத்தியது. வண்டியின் ரப்பர் சக்கரங்கள் கிறீச்சிட்டன!

மோகனின் நினைவு கலைந்தது.

ஆ! என்ன அது சாலையோரம்?

ஆம்! அங்கே ஓர் இளம் பெண் அலங்கோலமாக விழுந்து கிடந்தாள்.

அந்தப் பெண் ஆக்சிடெண்டுக்கு உள்ளாகி யிருக்க வேண்டும்? காரோ லாரியோ அவளை மோதித் தள்ளிவிட்டுச் சென்றிருக்க வேண்டும் என்று மோகன் நினைத்தான்.

எனவே, காரை நிறுத்திய போதிலும், இறங்கிப்போய் அவளைப் பார்ப்பதா வேண்டாமா என்ற தயக்கம் அவனுக்கு ஏற்பட்டது. யார் என்று பார்க்கப் போய், அவள்மீது காரை மோதிவிட்ட பழி அவன் மேல் விழுந்து விடக் கூடாதே!

அவன் வண்டியிலிருந்து இறங்காமலேயே அவளைச் சிறிது கூர்மையாக நோக்கினன். அவளுடைய உடம்பிலோ, ஆடைகளிலோ ரத்தக்கறை ஏதும் காணப்படவில்லை. ஆயினும் ஒருகால் ஊமைக் காயம் பட்டுக்கூட உயிர் பிரிந்திருப்பதும் சாத்தியந்தானே!

சே! அவள் உயிரிழந்து விட்டாள் என்று எப்படி நினைப்பது? ஏன் வெறும் மயக்கத்தினல் இப்படி விழுந்து கிடக்கக் கூடாது?

எதாக இருந்தாலும், காரை நிறுத்தி இவ்வளவு அருகே வந்துவிட்ட பிறகு என்ன ஏது என்று தெரிந்து கொள்ளாமல் திரும்ப அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. எந்தப் பாவி இப்படி மோதித் தள்ளி விட்டுப் போனனே? எப்பொழுது அந்த விபத்து நடந்ததோ? ஒருவேளை அவளுக்கு உடனடி சிகிச்சை ஏதாவது தேவையாக இருந்தால்?

தனக்கு ஏற்படக்கூடிய அபாயத்தைப் பற்றிய பயத்தைவிட மனிதாபிமானந்தான் அப்பொழுது மோகனிடம் மேலோங்கிற்று. வந்தது வரட்டும் என்று காரிலிருந்து இறங்கி, அந்தப் பெண்ணின் அருகே சென்று பார்த்தான்.

அவள் உடலில் காயம் எதையும் காணவில்லை. ஆயினும் உயிர் இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ள எண்ணி நிமிர்ந்து படுத்துக் கிடந்த அவள் மூக்கருகே கையை நீட்டிப் பார்த்தான். மூச்சு வந்து கொண்டிருந்தது! அப்பாடி! இப்பொழுதுதான் அவனுக்கும் சரியாக மூச்சு வந்தது! அப்படியானல் அவளுக்கு மயக்கந்தான்!

வேறு எதையும் சிந்திப்பதற்கு முன் அவன் அந்தப் பெண்ணை ஒருதடவை கால் முதல் தலைவரையில் அளவெடுத்தான். அவளுக்கு இருபது வயசுக்கு உள்ளாகவே இருக்கும் என்று தோன்றியது. இளமையோடு அழகும் அவளைப் போர்த்தியிருந்தது. எளிய ஆடைகளையே தரித்திருந்தாள். கைகளில் சில கண்ணுடி வளையல்களையும், காதுகளில் மலிவான வளையங்களையும் அன்றி வேறு எந்தவிதமான ஆபரணமும் அவளிடம் காணப்படவில்லை. ஒருகால் ஏழைக் குடும்பத்தவளாக இருக்கலாம். மோகன் அவள் கழுத்தையும், கால் விரல்களையும் உற்றுப் பார்த்தான். மஞ்சள் சரடோ, மெட்டியோ தென்படவில்லை. ஆகவே, அவள் திருமணம் ஆகாதவள். இங்கே எதற்காக வந்தாளோ? எப்பொழுது வந்தாளோ? ஏன் மயக்கமுற்ருளோ? ''அம்மா! அம்மா!'' என்று அவளைக் கூப்பிட்டுப் பார்த்தான். பதில் இல்லை.

'நமக்கேன் வம்பு? பேசாமல் திரும்பிப்போய் விடலாமா?' என்று முதலில் நினைத்தான். ஆனல் அவனுடைய இளகிய மனசு, அதற்கு ஒப்பவில்லை. சட்டென ஒரு முடிவுக்கு வந்தான். அவன் வசித்து வந்த மாம்பலம் போக் ரோட்டிலேயே அவனுடைய பங்களாவுக்குச் சிறிது தள்ளி டாக்டர் தேவசகாயம் என்று ஒருவர் சகாயமாதா நர்சிங்ஹோம் என்ற பெயரில் நர்ஸிங் ஹோம் நடத்தி வந்தார். அவர் அவனுடைய நெருங்கிய நண்பர். இந்தப் பெண்ணை அவருடைய நர்ஸிங்ஹோமில் கொண்டு சேர்த்துவிட்டு மாம்பலம் போலீஸ் ஸ்டேஷனுக்கும் போய் எல்லாவற்றையும் எழுதி வைத்து விடுவது.

இந்த முடிவுடன் அவன் காரின் பின் ஸீட்டின் கதவைத் திறந்து அப்பெண்ணை ஒரு குழந்தையைத் தூக்குவது போல் இரு கைகளிலும் தூக்கிப் பின் சீட்டில் கிடத்தினன். கதவை மூடிக் காரை ஸ்டார்ட் செய்து நேரே தியாகராயநகரை நோக்கிச் செலுத்தினன்.

அவன் பங்களா வடக்கு போக் ரோட்டில் இருந்தது. ஊரிலிருந்து வரும்போதெல்லாம் அவன் அண்ணுசாலையில் தேனம்பேட்டை வரையில் வந்து, தியாகராய ரோட்டில் திரும்பி, பிறகு வடக்கு போக் ரோட்டில் நுழைவான். இன்றும் அவ்வழியாகத்தான் வந்தான். இவ்வழியாக வரும்போது அவன் பங்களாவைக் கடந்துதான் தேவசகாயத்தின் நர்ஸிங்ஹோமுக்குப் போக வேண்டும்.

இதற்குள் பொழுது விடிந்து விட்டது. வீட்டு வாசலில் கோலம் போடுவதற்காக வீதிக்கு வந்த மோகனின் அத்தை பொன்னம்மாள் அவன் கார் வருவதைக் கண்டதும் சற்று ஒதுங்கி நின்ருள். மோகன் அவள் நிற்பதைப் பார்த்து விட்டான். அவன் நேரே நர்ஸிங் ஹோமுக்குப் போவதாகத்தான் இருந்தான். ஆனல் இப்போது அத்தை தன்னை வரவேற்கத் தயாராக வாசலில் நின்றதால் அவளிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போகலாமென்று காரைப் பங்களா வாசலில் நிறுத்தி, ''அத்தை இப்படி வாங்க'' என்று அழைத்தான்.

''என்ன மோகன், ஊரிலிருந்து சாமான் ஏதாவது அனுப்பியிருக்காங்களா அண்ணி?'' என்று கேட்டபடி காரை நெருங்கிய பொன்னம்மாள் பின் சீட்டில் ஒரு பெண் படுத்திருப்பதைக் கண்டதும், ''இதென்னடா கூத்து? யாருடா இவ?'' என்று கையைத் தட்டிக் கன்னத்தில் வைத்துக் கொண்டு வியந்து நின்ருள்.

''ஸ்! இரைஞ்சு பேசாதீங்க அத்தை'' என்று அவன் முதலில் அவளை அடக்கினன். ஆம்; பொன்னம்மாள் இரகசியம் பேசினலே இரண்டு வீடுகளுக்குக் கேட்கும்.

''யாருன்னு தெரியலே அத்தை. பல்லாவரம் தாண்டி நான் வந்துக்கிட்டிருந்த போது



ரோட்டோரம் மயக்கமா விழுந்து கிடந்தா, தூக்கிக் காரிலே போட்டுக் கொண்டு வந்தேன்.''

''நல்லா இருக்குது போ. ஆமாம், இப்போ என்ன செய்யப் போறே இவளை?''

''டாக்டர் தேவசகாயத்தின் நர்ஸிங் ஹோமுக்குக் கொண்டு போகப் போறேன். என்ன உடம்போ? எதனலே ரோட்டிலே வந்து விழுந்து, மயக்கம் அடைஞ்சாளோ? ஒண்ணும் தெரியலே. டாக்டரை விட்டுப் பார்க்கச் சொல்லி விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்த் தகவல் கொடுக்கப் போறேன்.''

''ஐயையோ! வேண்டாம் சார்!'' என்று அப்போது மூன்றுவது குரல் ஒன்று பதறியது.

மோகனும் பொன்னம்மாளும் திடுக்கிட்டுத் திரும்பினர். அந்தப் பெண் மயக்கம் நீங்கிக் காரின் பின் ஸீட்டில் எழுந்து உட்கார்ந்திருந்தாள்.

## 6. கண்ணற்ற கபோதி

மோகனுக்கு மட்டுமல்ல, பொன்னம்மாளுக்கும் அந்தப் பெண் நினைவு பெற்று விட்டது அளவற்ற நிம்மதியை அளித்தது.

''ஏம்மா பொண்ணு, நீ யாரு? ஒனக்கு என்ன?'' என்று பொன்னம்மாள் அந்தப் பெண்ணை உற்று நோக்கியபடி கேட்டாள்.

''நான் ஓர் அநாதைங்க. எனக்கு ஒண்ணும் இல்லே'' என்று அந்தப் பெண் முனகுவது போல் சொன்னுள்.

''ஒண்ணும் இல்லாமலா பல்லாவரத்துக்குப் பக்கத்திலே ரோட்டோரம் மயங்கிக் கிடந்தே? என் மருமகன் பார்த்து, ஒன்னைக் காரிலே தூக்கிப் போட்டுக்கிட்டு டாக்டர் கிட்டே காட்டலாம்னு கொண்டு வந்திருக்கானே!''

அந்தப் பெண் பதில் சொல்லாமல் சோகமாக முறுவலித்தாள்.

''என்னம்மா, பதிலையே காணோம்?''

அவள் தன் துக்கத்தை அடக்க முயலுவது போல் உதட்டைக் கடித்துக் கொண்டாள். பிறகு, ''ஒங்க மருமகனு இவங்க?'' என்று முன்போலவே முனகும் குரலில் கேட்டாள்.

''ஆமா, ஆனு, மருமகன்னு மகளைக் கட்டிக் கொடுத்தவன் இல்லே. எங்கண்ணன் மகன்.''

''இது எந்த இடம்மா?''

''மெட்ராஸ்தான்; தியாகராயநகர். இது எங்க பங்களா. வாடகை பங்களாதான்.



என் மருமகனும் நானும்தான் இங்கே இருக்கோம். என் அண்ணனும் அண்ணியும் திண்டிவனத்துக்குப் பக்கத்திலே வேலவனூரிலே இருக்காங்க. அதான் அவங்க சொந்த ஊரு. எங்க அண்ணன் வேலவனூரிலே பெரிய பணக்காரர். என் மருமகனுக்கு இன்னும் கல்யாணம் நடக்கலே. அதனாலே, நான் அவனுக்குச் சமையல் செய்து போட்டுக்கிட்டு அவன் கூடவே இருக்கேன். என் மருமகன் பெரிய இன்சினியரு. கண்டிராக்கட்டுத் தொழில் செய்றான். லட்சம் லட்சமா....''

''அத்தே!'' மோகன் பொன்னம்மாளை இடைமறித்தான். ''அவங்க நம்ப சரித்திரத்தைக் கேட்கலே; இது எந்த இடம்ன்னு தான் கேட்டாங்க. தவிர, இப்போ அவங்க யாரு — என்ன என்கிறதை நாம்ப தெரிஞ்சுக்கணுமா, நம்ப பூர்வோத்திரத்தையெல்லாம் அவங்க தெரிஞ்சுக்கணுமா?''

''சொன்னதினாலே என்னடா தப்பு, மோகன்? நாம்ப நம்பளைப் பத்திச் சொன்னா அவள் தன்னைப் பத்திச் சொல்லுவா?''

''ஒங்க மருமகன் பேரு மோகனா, அம்மா?'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''ஆமாம்மா. ஒன் பேரு என்ன?''

''என் பேரு சௌதாமினி. சுதான்னுதான் கூப்பிடுவாங்க.''

''சுதா! அழகான பேரு. நீயும் அழகாத்தான் இருக்கே. ஆமா, எந்த ஊரு, சுதா, ஒனக்கு?''

''அநாதைக்கு ஊரேது? வீடேது? வாசலேது, அம்மா?''

''அப்படிச் சொல்லிட முடியுமா? யாராயிருந்தாலும் எங்கேயாவது பிறந்து, எங்கேயாவது வளர்ந்துதானே இருக்கணும்? — சரி, அதான் போகட்டும்; நீ பல்லாவரத்துக்கு எங்கே விடியக்காலையிலே வந்தே? ஏன் மயங்கி விழுந்து கிடந்தே?''

''மன்னிச்சுக்குங்க, அம்மா. அதையெல்லாம்பத்தி எங்கிட்டே எதையும் கேட்காதீங்க. அதைச் சொல்லக்கூடிய நிலைமையிலே நான் இப்போ இல்லை. தயவுசெய்து என்னைப் போக விட்டுடுங்க.''

அவளுடைய பிடிவாதம் மோகனைச் சோர்வடையச் செய்தது. ''அப்போ எங்கே போகணும்னாவது சொல்லுங்க, அம்மா; என் காரிலேயே கொண்டு விட்டிடறேன்'' என்று சொன்னான் அவன்.

''நன்றி, சார். அந்த மட்டும் நடு ரோட்டிலே கவனிக்கிறவங்க இல்லாதபடி கிடக்க விடாமல், என் மேலே இரக்கம் காட்டி மாம்பலம் வரையிலே கொண்டு வந்து சேர்த்தீங்களே, அதுவே எனக்கு அதிகம். நான் வரேங்க; வரேம்மா.''

சுதா சீட்டிலிருந்து எழுந்து காரின் கதவைத் திறப்பதற்குக் கைப்பிடிக்காகத் துழாவுவதைக் கண்டு பொன்னம்மாளே கதவைத் திறந்து விட்டாள். அவள் அவசரமாகக் கீழே இறங்க முயன்று, அந்த முயற்சியில் கதவருகே நின்ற பொன்னம்மாள் மீது மோதிக் கீழே விழப் போனாள். பொன்னம்மாள் அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, ''மெதுவா, பார்த்து இறங்கு சுதா, என்ன அவசரம்?'' என்றாள்.

சுதாவிடம் மீண்டும் அந்தச் சோகச் சிரிப்பு மலர்ந்தது. ''பார்த்து இறங்கக் கூடியவளாகக் கடவுள் என்னைப் படைக்கலையே, அம்மா? நான் ஒரு கண்ணில்லாத கபோதி என்கிறதை நீங்க இன்னும் தெரிஞ்சுக்கலையா?''

''சுதா!'' என்று கூவியபடி பொன்னம்மாள், தன் அணைப்பிலிருந்த அந்தப் பெண்ணின் முகத்தை நிமிர்த்திக் கண்களைப் பார்த்தாள். கண்கள் கண்களாகவே இருந்தன; ஆனால், அவற்றில் கருவிழி ஓட்டமும் இல்லை; ஒளியும் இல்லை!

''டேய் மோகன்! கண் தெரியாத பொண்ணுடா! இவளை எப்படிடா போகவிட முடியும்?'' அவள் குரலில் பச்சாத்தாபம் பரவியது.

சுதா பார்வையற்றவள் என்று அறிந்ததும் மோகனும் பதறித்தான் போனான். அவன் காரிலிருந்து இறங்கி, ''அத்தை! ரொம்ப நேரமா தெருவிலேயே நின்னு பேசிக்கிட்டிருக்கோம். அவங்களை உள்ளே கூட்டிக்கிட்டு வாங்க; எல்லாம் விவரமாகப் பேசலாம்'' என்றான்.

''வேண்டாங்க, என்னை விட்டிடுங்க. நான் எப்படியாவது சமாளிச்சுப்பேன்'' என்று உள்ளே வர மறுத்தாள் சுதா.

''எப்படிச் சமாளிப்பே, சுதா? என்ன சமாளிப்பே? ஊரு பட்டணம், அம்மா. நீ சின்னப் பொண்ணு. அழகா வேறே இருக்கே. கண்ணும் தெரியாது. சமாளிச்சுக்கிடுவாளாம் இல்லே? புத்தியுள்ள பொண்ணு பேசற பேச்சா இது? வாம்மா உள்ளே!'' என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாகப் பங்களாவுக்கு அழைத்துச் சென்றாள் பொன்னம்மாள்.

''அப்படியெல்லாம் மானுங்காணியா கண் தெரியாத சின்னப் பொண்ணைப் போகவிட்டிட முடியாது, சுதா. என் மருமகனே, 'போகட்டும்; விட்டிடு'ன்னு சொன்னாக்கூட நான் விட மாட்டேன். ஏன்னா, நான் ஒன்னை மாதிரி ஒரு பொம்புள்ளை. நம்ப ஜென்மத்துக்கு ஏற்படக்கூடிய அவலங்களெல்லாம் எனக்கு நல்லா தெரியும். அதனாலே நீ இங்கேயே இரும்மா; என் மகள் போலே ஒன்னைக் கவுனிச்சுக்கறேன்.''

''பொண்ணுக்குப் பொண்ணு, நீங்க சொல்லிட்டீங்க. ஆனா ஒங்க மருமகன் என்ன நினைக்கிறாரோ?''

''எனக்கும் நீ அத்தைகூட இங்கே இருக்கிறதிலே ஆட்சேபம் ஒண்ணும் இல்லேம்மா சுதா'' என்றான் மோகன்.

சுதா அவர்களுடன் தங்க வந்து இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகியும், பொன்னம்மாளால் எவ்வளவோ முயன்றும் அவளுடைய பெயரைத் தவிர வேறு எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை! (தொடரும்)

---

பகைவன் வீழ்ந்தால் மகிழாதே. அவன் எனக்குச் செய்தது போல, நான் அவனுக்குச் செய்வேன் என்று எண்ணாதே.

எபிரேய மதம்



# பனி




மாயாவி

## 7. ஏன்? ஏன்? ஏன்?

அன்று பொன்னம்மாளின் பெயருக்கு வேலவனூரிலிருந்து கடிதம் வந்திருந்தது. ஜகதீசன் எழுதியிருந்தார்.

அதில் அவர், இரண்டு மாதங்களுக்கு முன் மோகன் வேலவனூருக்கு வந்து தங்களிடம் அறிவித்த செய்தியையும், தாங்கள் அவனிடம் கூறியதையும் விவரித்துவிட்டு, ''நானே ஒரு நடை பட்டணத்துக்கு வந்து அவங்க குடும்பத்தைப் பற்றி விசாரிக்கணும்னுதான் நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனா, ரெண்டு மாசமா எனக்கு விவசாய வேலைகளிலிருந்து ஒழிவே கிடைக்கலே. ஒங்க அண்ணியும் குடும்பத்தைப் பத்தி விசாரிச்சிட்டா மாத்திரம் போதாது, அந்தப் பொண்ணைப் போய்ப் பார்த்து, பேசிப் பழகி, அது குடும்பப் பாங்கான பொண்ணுதானான்னு தெரிஞ்சுக்கிடணும்னு அபிப்பிராயப் படுகிறாள். அதனாலே, அந்தப் பொண்ணைப் போய்ப் பார்த்துப் பேசறதையும், அவங்க குடும்பத்தைப் பத்தி விசாரணை பண்றதையும் ஒங்கிட்டே விட்டிடலாம் என்கிற முடிவுக்கு நாங்க ரெண்டு பேருமே வந்த பிறகு இந்த லெட்டரை உனக்கு எழுதறேன். ஜெயகுமாரிங்கிற அந்தப் பொண்ணை ஒனக்குத் தெரியுமோ, என்னவோ? மோகன் அவளைப் பத்தி ஒங்கிட்டே சொன்னானோ, என்னவோ? எதுக்கும் அவங்க விலாசத்தைக் கீழே எழுதியிருக்கேன். ஒருநாள் போய், எல்லாத்தையும் நல்லா தெரிஞ்சுக்கிட்டு வந்து எனக்கு விவரமா கடிதாசு போடு; ஒன் அபிப்பிராயத்தையும் தெரிவி'', என்று எழுதி, கல்யாணசுந்தரத்தின் மந்தைவெளிப் பாக்கம், வெஸ்ட் சர்க்குலர் ரோடு வீட்டு முகவரியையும் குறிப்பிட்டிருந்தார்.

பொன்னம்மாளுக்கு அந்தக் கடிதத்தில் அடங்கியிருந்த விஷயம் வியப்பை அளித்தது. ஏனென்றால், அவளுக்கு ஜெயகுமாரியைத் தெரியும். ஜெயகுமாரியுடன் நெருங்கிப் பழகுமுன் மோகன் ஒரு தடவை அவளுடைய கச்சேரிக்குப் பொன்னம்மாளை அழைத்துப் போய், அவளையும் அவள் தந்தையையும் அறிமுகம் செய்து வைத்திருந்தான். அவளுடைய கச்சேரி என்றால் அவன் விசேஷப் பரபரப்பு அடைவதை அவள் கவனித்திருந்தாள்; ஒவ்வொரு தடவையும் அவளுடைய கச்சேரியைக் கேட்டு விட்டு வந்ததும் அவள் பாட்டைப் பற்றி வானளாவப் புகழ்வான். ஆனால், அவள் மீது தனக்கு நாட்டம் ஏற்பட்டிருப்பது பற்றிப் பொன்னம்மாளிடம் அவன் ஒரு சிறு கோடிகூடக் காட்டவில்லை. 'பயன் அழுத்தந்தான்! நமக்குத் தெரியாமலே ஒரு பெண்ணைக் காதலிச்சு; நம்மகிட்டே மூச்சுக்கூட விடாம ஊருக்குப் போயி காதும் காதும் வைச்சது போலே விஷயத்தைச் சொல்லிட்டு வந்திருக்கானே!' என்று தனக்குள் கூறிக் கொண்டாள்.

ஆனால், அதற்காக அவள் மனத்தாங்கல் ஒன்றும் அடைந்துவிடவில்லை. மாறாக, மோகன் முறைப்படி காரியங்களைச் செய்திருப்பதை எண்ணிப் பெருமையே அடைந்தாள். இந்தத் திருமணம் எவ்விதத் தடையுமின்றி நிறைவேற வேண்டும் என்று தான் வணங்கும் கபாலீசுவரரையும் வேண்டிக் கொண்டாள்.

''யார் கடிதாசு எழுதியிருக்காங்க, அத்தை?'' என்று இவ்வளவு நேரம் சும்மா இருந்த சுதா கேட்டாள். அவளும் இப்பொழுது மோகனைப் போலவே பொன்னம்மாளை அத்தை என்றுதான் அழைத்து வந்தாள்.

''மோகனுக்குக் கல்யாணம் வந்திருக்கு, சுதா!'' என்று பொன்னம்மாள் மகிழ்ச்சியோடு சொல்லிவிட்டுக் கையிலிருந்த பஞ்சாங்கத்தை உள்ளே கொண்டு வைக்கச் சென்றாள்.

அவள் திரும்பி வந்ததும், ''பொண்ணு எந்த ஊரு?'' என்று சுதா கேட்டாள்.

''இங்கேதான், மயிலாப்பூரிலே இருக்கா. ஜெயகுமாரின்னு பேரு. பெரிய பாட்டுக்காரி. பொண் எப்படி? அவங்க குடும்பம் எப்படிங்கிறதைத் தெரிஞ்சுக்கிட்டு வந்து எழுதச் சொல்லி ஊரிலிருந்து அண்ணன் காயிதம் போட்டிருக்காங்க. எனக்குத் தெரிஞ்ச பொண்ணுதான். இருந்தாலும், கொஞ்சம் விவரமா பேசிப் பார்த்தாத்தானே அவள் குணத்தையெல்லாம் நல்லா தெரிஞ்சுக்க முடியும்? மத்தியானமா போயிட்டு வரலாம்னு இருக்கேன்.''

''நானும் வரட்டுமா, அத்தை?'' என்று ஆர்வத்துடன் சுதா கேட்டாள்.

இதுநாள் வரை பொன்னம்மாள் வெளியே எங்கே போனாலும் சுதாவைத் தனியே வீட்டில் விட்டுச் சென்றதில்லை.

எனவே, பிற்பகல் இரண்டு மணிக்கு பொன்னம்மாளும் சுதாவும் ஜெயகுமாரியின் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினர். ஜெயகுமாரியே கதவைத் திறந்தாள். பல மாதங்களுக்கு முன் ஒரே ஒரு தடவை சிறிது நேரம் மட்டுமே சந்தித்திருந்த போதிலும் பொன்னம்மாளை அவள் சட்டென இனங் கண்டு கொண்டாள்.

''வாங்க, வாங்க'' என்று மலர்ந்த முகத்துடன் அவர்களை வரவேற்று முன்னறையில் இருந்த சோபா—கம்—பெட்டில் உட்கார்த்தி விட்டு, உள்ளறையில் தூங்கிக் கொண்டிருந்த தன் தந்தையை எழுப்பி அழைத்து வந்தாள்.

''வணக்கம். வாங்க'' என்று தூக்கக் கலக்கத்துடன் அவர்களுக்கு வரவேற்பு அளித்தபடி வந்த கல்யாணசுந்தரம் சோபாவின் எதிரே கிடந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டார். ''மோகன் சௌக்கியமா? எங்கே அவரைக் கொஞ்ச நாட்களாக இந்தப் பக்கம் காணோம்?'' என்று கேட்டார்.

''ஜோலி ஜாஸ்தி. இல்லாமல் போனா வராம இருப்பானா?''

ஜெயா மூன்று எவர்சில்வர் டம்ளர்களில் ஜூஸ் கொண்டு வந்து அவர்கள் மூவருக்கும் கொடுத்து விட்டு, ''இவங்க யாரு தெரியலையே!'' என்று சுதாவைக் காட்டிக் கேட்டாள்.

சுதாவை மோகன் சந்தித்து வீட்டுக்கு அழைத்து வந்தக் கதையைக் கூறிவிட்டு, ''யாரு பெத்த பெண்ணோ, பாவம்! வீட்டிலே என்ன சங்கடமோ? என்ன தகராறோ? அப்படி ரோட்டிலே வந்து மயங்கி விழுந்து கிடந்திச்சு. கண் வேறே தெரியாது. கூடவே இருந்திட்டுப் போகட்டும்ன்னு வைச்சுக்கிட்டிருக்கோம்'' என்று பொன்னம்மாள் சொன்னாள்.

பிறகு அவள் நெடுநேரம் ஜெயாவிடமும் கல்யாணசுந்தரத்திடமும் பல்வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தாள். ஜெயாவின் அடக்கமான பேச்சும், தற்பெருமையற்ற தன்மையும், பெரியவர்களைப் பற்றிப் பேசிய போது அவள் காட்டிய மரியாதை, பணிவு ஆகிய நற்பண்புகளும், பொன்னம்மாளைக் கவர்ந்து விட்டன. இடையே ஜெயா அவர்களுக்கு காப்பி டிஃபன் தயாரிக்கச் சென்ற போது அவளுடன் சமையல் அறைக்குப் போய், வீட்டுக் காரியங்களையும் அவள் பதவிசாகச் செய்வதைக் கண்டாள். அன்று அவள் தயாரித்த சேமியா கேசரியும் மைசூர் போண்டாவும் தேவாமிருதமாக இருந்தன. 'சரி, பொண் நம்ப மோகனுக்கு ஏத்தவள் தான்!'' என்ற முடிவுக்கு வந்தாள்.

அன்றிரவு அவள் மோகனைச் சிறிது கோட்டா பண்ணினாள். ''டேய்! நீ எங்கிட்டே ஒன் காதலை மறைச்சிட்டாலும், இந்தப் பொண்ணை ஒனக்குக் கட்டிக்கலாமா, கூடாதா என்கிறதைத் தீர்மானிக்கிற பொறுப்பை ஒங்கப்பாவும் அம்மாவும் எங்கிட்டேதான்டா விட்டிருக்காங்க'' என்று சொல்லி ஜகதீசனின் கடிதத்தைக் காட்டினாள்.

கடிதத்தைப் படித்துவிட்டு மோகன், ''தப்பா நினைச்சுக்காதீங்க, அத்தை. ஒங்ககிட்டே சொல்லக்கூடாதுன்னு ஒண்ணுமில்லே. முன்கூட்டியே சொன்னா, என் கூடவே இருக்கிற நீங்க, நான் ஜெயாவைப் பத்திப் பேசும் போதெல்லாம் கேலி செய்துக்கிட்டிருப்பீங்களேன்னு வெட்கப்பட்டுக்கிட்டுத்தான் சொல்லலை'' என்று மன்னிப்புக் கோருவது போல் கூறிவிட்டு, ''அது சரி, என்னைக்கு அவங்களைப் பார்க்கப் போகணும்? சொல்லுங்க. ஒங்களுக்கு அவங்க வீடு தெரியாதே; நானே காரிலே கொண்டு விட்டிடறேன்'' என்றான்.

''ஏண்டா, இது சாக்கா அவங்க வீட்டுக்குப் போயி, அந்தப் பொண்ணை இன்னொரு தடவை பார்க்கலாம்ன்னு நினைப்பா? ஒன் உதவி ஒண்ணும் தேவையில்லை. அண்ணன் காயிதம் வந்ததும் நானும் சுதாவும் அவங்க வீட்டுக்குப் போய் வந்திட்டோம்!''

''போய் வந்திட்டீங்களா? ஒங்க அபிப்பிராயம் என்ன?''

''கவலைப்படாதே. மோகன். ஜெயா ஒனக்கு ஏத்த பொண்ணுதான். அவங்க குடும்பமும் நாம்ப சம்பந்தம் செய்துக்கிறதுக்கு ஏத்த குடும்பம்தான். நாளைக்கே அண்ணனுக்கு இதை எழுதிடறேன். இனிமேல் இந்தக் கல்யாணம் முடிஞ்ச மாதிரித்தான்னு வைச்சுக்க!''

சொன்னப்படி பொன்னம்மாள் மறுநாள் எல்லா விவரங்களையும் ஜகதீசனுக்கு எழுதினாள். அடுத்த இரண்டு நாட்களுக்குப் பின் மோகனுக்கு அவன் தந்தையிடமிருந்து கடிதம் வந்தது — கல்யாணசுந்தரத்தைப் போய்ப் பார்த்து, தாங்கள் திருமணம் நிச்சயிக்க என்று வரலாமென்று கேட்டு எழுதும் படி.

சொல்லவொண்ணுக் களிப்புடன் அன்று மாலையே மோகன் மந்தைவெளிப்பாக்கத்துக்குச் சென்றான். ஜெயா சோபா-கம்-பெட்டில் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாள். எப்பொழுது மோகன் வந்தாலும் கரைகடந்த குதூகலத்துடன் வரவேற்கும் அவள், இன்று அவனைக் கண்டதும்



''வாங்க, ஒக்காருங்க'' என்று சாதாரண மாகக் கூறிவிட்டு ''அப்பா. மிஸ்டர் மோகன் வந்திருக்காங்க'' என்று அழைத்தபடி வீட்டி னுள்ளே சென்று விட்டாள்.

அவளுடைய இந்தப் போக்கு மோகனுக்கு விசித்திரமாக இருந்தது. இருந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல், உள்ளேயிருந்து மௌனமாகத் தன் அருகே வந்து அமர்ந்த கல்யாணசுந்தரத்திடம்,''ஊரிலிருந்து அப்பா கடிதம் எழுதி யிருக்காங்க'' என்றான்.

''மன்னிச்சுக்கங்க மோகன். ஒங்க குடும் பத்தோடு சம்பந்தம் செய்துக்க நான் விரும்பலே'' என்ற கல்யாணசுந்தரத்தின் பதில் மோகன் தலையில் இடியாக விழுந்தது!

அதிர்ச்சியை மிஞ்சிய உணர்ச்சி ஒன்று உண்டா? ஏமாற்றத்தை மிஞ்சிய துன்பம் ஒன்று உண்டா? அவமானத்தை மிஞ்சிய வேதனை ஒன்று உண்டா? உண்டென்றால், அவற்றை யெல்லாம் ஒருசேர அடைந்து நின் றான் மோகன்!

நெடுநேரம் அவனுக்குப் பேச்சே எழவில்லை. கற்சிலையாக அந்தச் சோபா—கம்—பெட்டில் அமர்ந்திருந்தான்.

''சரி, உள்ளே கணக்கு-வழக்குப் பார்த்துக் கிட்டிருந்தேன். வரட்டுமா?'' என்று கூறி விட்டுக் கல்யாணசுந்தரம் எழுந்து வீட்டுக் குள்ளே செல்லத் தொடங்கினார்.

அவர் சில அடிகள் நடந்த பிறகுதான் மோகன் தன்னிலை அடைந்தான். ''சார்!'' என்ற அவன் குரல் அவரை நிற்க வைத்தது. ஆனால் அவனைத் திரும் பிப் பாராமலே, ''என்ன?'' என்று கேட்டார்.

''நீங்க திடீர்னு இந்த முடிவுக்கு வந்ததுக்குக் காரணம் என்னன்னு தெரிஞ்சுக்கலாமா?''

இப்போது கல்யாணசுந்தரம் அவனை நோக்கித் திரும்பினார்.

''மிஸ்டர் மோகன்! கல்யாணம் மாதிரி ஒரு காரியத்திலே, ஒரு தடவை எடுத்த முடிவை ஒருத்தன் மாற்றிக்கறதுக்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம். அதையெல்லாம் சொல்லிக்கிட்டிருக்க முடியுமா?''

''சொன்னீங்கன்னு என் அதிர்ச்சி கொஞ் சம் குறையும்.''

''இல்லே; ஒங்க அதிர்ச்சி அதிகமாகும். அதனாலே நான் சொல்லப் பிரியப்படலே!''

''சார்!'' என்று மோகன் கூவினான். ''ஒங்க இந்த முடிவு ஜெயாவுக்குத் தெரியுமா?''

''இந்த முடிவு நான் எடுத்ததில்லே: ஜெயாவே எடுத்தது; போதுமா?''—அதன் பிறகு அவர் அங்கே நிற்கவில்லை.

மோகன் அவர் சென்ற திசையையே பார்த்தபடி ஒரு நிமிஷம் சோபா – கம் – பெட்டில் அமர்ந்திருந்தான். பிறகு நடைப் பிணமாக, வாசலில் நிறுத்தியிருந்த காரில் ஏறிக் கொண்டு புறப்பட்டான். **(தொடரும்)**



# POWER for bigger profit!

## THE P6/354

## 120 BHP for Vehicular and 90 BHP for Industrial applications

The P6/354 is a cost effective power unit specially designed to give higher productivity at lower fuel consumption levels.

It's 5.8 litres swept volume together with the direct fuel injection system ensures instant and sustained power output at all load conditions.



Engineered to perform under the worst operational conditions the P6/354 has earned a reputation for reliability.

This profitable prime mover is available in both industrial and vehicular versions and is backed up by a nation wide service and parts outlets.

*Manufactured and Marketed by*

Simpson & Co. Ltd

861/862, Anna Salai, Madras-600 002

# பனி நிலவு

மாயாவி



## 8. அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி!

தன்னைப் பற்றியோ தன் குடும்பத்தைப் பற்றியோ ஏதோ தவறான செய்தி காதில் விழுந்ததன் காரணமாகவே ஜெயா இந்த முடிவுக்கு வந்திருக்கிறாள் என்பது மோகனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. ஆனால் அது என்னவாக இருக்கும் என்பதை எவ்வளவு முயன்றும் அவனால் ஊகிக்க முடியவில்லை.

சரி, அது போகட்டும். இப்பொழுது அவன் தன் அப்பாவுக்கு என்னவென்று பதில் எழுதுவது? வீட்டில் நுழைந்ததுமே கேட்கப் போகிறாளே அத்தை? அவளுக்கு என்ன பதில் சொல்வது?

நடந்ததை அப்பாவுக்கு எழுதுவதா? எழுதினால், ஐயோ! அவரும் அம்மாவும் அப்படியே அவமானத்தால் குன்றிப் போய் விடுவார்களே! இல்லை; இதை வேறு விதமாகத்தான் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும். எப்படித் தெரிவிக்கலாம்? மோகன், கொந்தளிக்கும் கடலிலே உருண்டு புரளும் கட்டுமரம் போல் இந்தச் சிந்தனையைச் சிறிது நேரம் நெஞ்சில் புரள விட்டான். ஒரு வழியும் கண்டான். அதாவது, ''நம் அந்தஸ்துக்கேற்ற வகையில் கல்யாணத்தை விமரிசையாக நடத்தக் கல்யாணசுந்தரம் விரும்புகிறார். கையில் கொஞ்சம் பணமிருக்கிறது. இன்னும் கொஞ்சம் சேர்த்துக் கொண்ட பின் கல்யாணத்தை நடத்தலாம் என்பது அவர் எண்ணம். ஆதலால், 'அடுத்த சித்திரையில் நிச்சயதாம்பூலம் வைச்சுக்கலாமே; அப்பாவுக்கு அப்படியே எழுதிடுங்க' என்று சொன்னார்.'' இப்படி எழுதி விடுவது. இடையே, அவர்கள் மனமாற்றத்தின் காரணத்தை அறிந்து, அதைப் போக்க முயல்வது. அது சாத்தியமில்லாது போனால், ஜெயாவைப் பற்றியோ கல்யாணசுந்தரத்தின் குடும்பத்தைப் பற்றியோ, மனத்துக்கு ரம்மியமில்லாத செய்தி ஏதோ காதில் விழுந்ததாகவும், ஆகவே, இந்தத் திருமணத்தில் தனக்கு விருப்பம் இல்லை என்றும் தன் பெற்றோரிடம் ஏதாவது அளந்து விஷயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவது!

சரி, பெற்றோர் விஷயத்தை அவன் இப்படிச் சமாளித்து விடலாம்; ஆனால் அத்தையிடமும் இதையே கூறிச் சமாளிக்க முடியாதே! அவள் நாலு நாட்களுக்கு முன்தான் அவர்களைச் சந்தித்திருக்கிறாள். இந்தச் சம்பந்தத்தில் அவர்களுக்கு இருந்த ஆர்வத்தையும் அவசரத்தையும் தெரிந்து வந்திருக்கிறாள். அவளிடம் இப்படிக் கூறினால், ''என்னடா இது? நாலு நாளைக்கு முன்னே என்கிட்டே கல்யாணத்தை உடனே நடத்திடப் போறவங்க போலப் பேசிட்டு இன்னைக்கு ஒங்கிட்ட இப்படிச் சொல்லியிருக்காங்க? நான் போய்க் கேட்கிறேன்'' என்று கிளம்பி விடுவாள்.

ஆனால், அவன் நடந்ததைச் சொன்னால் கூட, அவள் ''என்னடா அக்கிரமம் இது? நான் போய்க் கேட்கிறேன்'' என்று கிளம்பத்தானே செய்வாள்? 'கிளம்பட்டும்; கிளம்பிப் போய்க் கேட்கட்டும். அவளிடமாவது, அவர்கள் தங்கள் மனமாற்றத்தின் காரணத்தைச் சொல்கிறார்களா, பார்க்கலாம்' என்று எண்ணினான் மோகன். ஆனால் ஒன்று—அத்தையிடம் நடந்ததைக் கூறினாலும், அப்பா—அம்மாவுக்கு இதைத் தெரிவிக்கக் கூடாது என்று கண்டிப்பாகக் கூறிவிட வேண்டும்.

இந்த முடிவுடன் மோகன் வீடு திரும்பினான். அவன் நினைத்தபடியே பங்களாவின் வெளித் தாழ்வாரத்தில் பிரம்பு நாற்காலி ஒன்றில் அமர்ந்தபடி பொன்னம்மாள் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால், அவன் காரை ஷெட்டில் விட்டுவிட்டு, வீட்டுப் படி ஏறி வந்ததும், ''என்ன மோகன், என்றைக்கு வரச் சொன்னாங்க?'' என்று கேட்கவில்லை. மாறாக, ''டேய் மோகன்! விஷயம் விபரீதமாகப் போயிடுச்சேடா!'' என்று அரற்றினாள். பொன்னம்மாளுடைய இந்த அரற்றலும், அவள் முகத்தில் அப்பொழுது தோன்றி நின்ற கவலைக் குறியும் வேறொரு சமயமாக இருந்தால் மோகனைக் கலங்கச் செய்திருக்கும். ஆனால் அவன்தான் இப்பொழுது முங்கிக் குளித்து விட்டு வந்திருந்தானே! இனி அவனுக்குக் குளிர் ஏது?

எனவே, அத்தைக்கு எதிரே கிடந்த மற்றொரு பிரம்பு நாற்காலியில் அமைதியாக உட்கார்ந்து கொண்டு, ''என்ன விஷயம், அத்தை?'' என்று கேட்டான்.

''அந்தப் பொண்ணு ...... அந்தப் பொண்ணு....!'' என்று பொன்னம்மாள் தடுமாறினாள்.

உணர்விழந்திருந்த மோகனின் உடலில் சூடேறியது. ''எந்தப் பொண்ணு?'' என்று அவன் கேட்டான். கேள்வியில் இப்பொழுது சிறிது ஆர்வம் தொனித்தது.

''சுதாதாண்டா!''

''சுதாவா? அவளுக்கு என்ன?''

''அவ....அவ....'' — பொன்னம்மாள் இன்னும் தயங்கினுள்.

''ஓடிப் போயிட்டாளா?'' மோகன் கல வரம் அடைந்தான்.

''ஓடிப்போயிருந்தால்தான் தேவலாமே!''

''பின்னே?''

''அது உண்டாயிருக்குடா!''

''அப்பாடா! இதுக்குத்தாஞ இந்தப் பரபரப்பு?'' அவன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான்.

''என்னடா இப்படிப் பேசறே? அது கல்யாணம் ஆகாத பொண்ணுடா?''

''இருக்கட்டுமே! அதுக்கு நீங்க ஏன் இவ்வளவு கலங்கிறீங்க?''

''மோகன்! நீ புரியாமப் பேசறே!''

''இல்லே, அத்தை! இப்பத்தான் அவளேப் பத்தி எனக்குக் கொஞ்சம் புரியுது. அப்படி ஏதோ ஆகியிருக்கிறதிஞலேதான் அவ, தான் இருந்த இடத்தை விட்டு வெளியேறி யிருக்கா. அதஞலேதான் தன்னேப் பத்தி ஏதுவுமே சொல்ல மறுக்கரு.''

''நான் அதைச் சொல்லலேடா.''

''பின்னே?''

''பழி ஓம்மேலே விழுந்திருமேடா! எங் கேயோ இருந்த ஒரு பொண்ணே நீ அழைச்சுக் கிட்டு வந்து வீட்டிலே வைச்சுக் காப்பாத் திக்கிட்டிருக்கே. அவ உண்டாயிருக்கிறுன்ஞ மத்தவங்க ஒன்னேத்தானேடா அதுக்குக் காரணமா நினேப்பாங்க?''

மோகனுக்குச் 'சுள்' என்று உறைத்தது.

பொன்னம்மாளே தொடர்ந்து பேசினுள். ''பாவம்! கண்ணில்லாத பொண்ணு! எங்கே அடிச்சுத் துரத்தறதுன்னு இருந் தேன். ஆஞ, இனிமேல் அவளே நாம்ப வச்சுக்கிட்டிருந்தா ஒம்மேலே வீண் பழி விழுந்தே தீரும்.''

''என் மேலே இனிமேத்தான் பழி விழப் போகுதுன்னு நினேக்காதிங்க. அத்தை. அது இந்தப் பழியோ, வேறு எந்தப் பழியோ? ஆஞ ஏதோ ஒரு பழி விழுந்து அதன் எதி ரொலி ஏற்கனவே தாக்கிடுச்சு!''

''என்ன மோகன் சொல்லறே?''

''கல்யாணசுந்தரம் நம்ப குடும்பத் தோடு சம்பந்தம் செய்துக்க விருப்ப மில்லேன்னு சொல்லிட்டார்!''

''மோகன்!'' என்று ஏறக்குறைய வீரிட்டு விட்டாள் பொன்னம்மாள்.

பொன்னம்மாளால் தன் காது களேயே நம்ப முடியவில்லே.

''டேய்! உண்மையாத்தான் சொல்றியா?'' என்று அவள் கேட்டாள்.

''பொய் சொல்றவிஷயமா அத்தை இது?''

''ஏண்டா? அவங்க கிட்ட ஏன்னு கேட் கலேயா நீ?''

''கேட்டேன். 'கல்யாண விஷயத்திலே ஒரு மனுஷன் தன் முடிவை மாத்திக்கற துக்கு ஆயிரம் காரணம் இருக்கும்; அதை யெல்லாம் சொல்லிக்கிட்டிருக்க முடியுமா?' என்று சொல்லிவிட்டார்.''

''அந்தப் பொண் என்ன சொல்லிச்சு?''

''ஜெயா என்கிட்ட முகம் கொடுத்துக் கூடப் பேசலே. ஆஞ, இது அவளே எடுத்த முடிவுதான்னு கல்யாணசுந்தரம் சொன்ஞர்.''

''ஏண்டா! நான் நாளேக்கு அவங்க வீட் டுக்குப் போய்க் கேட்கட்டுமா?''

''கேளுங்க. ஆஞ நாளேக்கே வேண்டாம். அவங்க இந்த விஷயத்திலே அவசர முடி வுக்கு வந்திருந்தா, ஆலோசனே செய்து அந்த முடிவை மாத்திக்கக் கொஞ்சம் டைம் கொடுப்போம். ஒருவாரம் — பத்து நாட்கள் பொறுத்துப் போய்ப் பாருங்க.''

''அதுவரையில் ஒங்கப்பாவுக்குப் பதில் எழுதாமலா இருக்கப் போறே?''

''இல்லே. அவருக்கு நாளேக்கே கடிதாசு போட்டிடத்தான் போறேன்'' என்று தொடங்கி, மோகன் தான் எழுத உத் தேசித்திருந்ததை விளக்கிஞன்.

''ஆமா, ஆமா. அப்படி ஏதாவது எழு தறதுதான் சரி'' என்று பொன்னம்மாள் ஆமோதித்தாள். பிறகு, ''இப்படி ஒரு சம்பவமும் நடந்திட்ட பெறகு, மோகன்,



இனிமே நாம்ப சுதாவை இங்கே வச்சிக்கிட்டிருக்கக் கூடாது. ஒங்கப்பாவுக்கு விஷயம் தெரிஞ்சா என்னைக் கொன்னே போட்டிடுவார்!''

''கர்ப்பமாகிவிட்ட ஒருத்தியை நாம்ப வச்சிக்கிட்டிருக்கிற ஒவ்வொரு நாளும் நமக்கு அபாயமானதுதான். ஆனா அவளை எங்கே அனுப்பறது?''

''ஏன்? இந்த மெட்ராசிலே எத்தனையோ அனாதைப் பெண்கள் விடுதி இருக்காமே. ஏதாவது ஒரு விடுதியிலே கொண்டு விட்டு அந்த விடுதிக்குக் கொஞ்சம் பணம் வேணும்னாலும் கொடுத்திடு.''



''ஆமாம், அத்தை! அப்படியே செய்யலாம். நல்ல வேளையா நாளைக்கு ஸைட்டிலே நான் இருந்தாக வேண்டிய வேலை ஒண்ணும் இல்லே. போய், தலையைக் காட்டிட்டு, மயிலாப்பூரிலே கூடத் திக்கற்ற பெண்களுக்கான விடுதி ஒண்ணு இருக்கு. அங்கே போய் விசாரிச்சு ஏற்பாடெல்லாம் செய்திட்டு வரேன்.''

மறுநாள் மோகன் அந்தத் திக்கற்ற பெண்கள் விடுதிக்குச் சென்று, அதன் தலைவியைச் சந்தித்துச் சுதாவைப் பற்றிப் பேசினான்.

ஆனால், விடுதித் தலைவியோ, ''சார்! நாங்கள் திக்கற்ற பொண்ணுங்களை மட்டுமில்லே; தெரிஞ்சோ, தெரியாமலோ நெறி தவறி, அதனாலே பெத்தவங்களாலேயே புறக்கணிக்கப்பட்ட பொண்ணுங்களுக்கும் இங்கே இடம் கொடுத்திருக்கோம். இதே மாதிரி கர்ப்பத்தோடு வந்த பெண்களைக் கூட ஏத்துக்கிட்டு, அவங்க பிரசவத்துக்குத் தேவையான உதவிகளைச் செய்து, அவங்களையும் அவங்க குழந்தைகளையும் சேர்த்துப் பராமரிச்சுக்கிட்டிருக்கோம். ஆனா இந்த உதவிகளை யெல்லாம் நாங்க இலவசமாகச் செய்யலே. இங்கே இருக்கிற ஒவ்வொரு பொண்ணும் தையல், நெசவு, அது இதுன்னு ஏதாவது வேலை செய்தே ஆகணும். நீங்க அந்தப் பொண் கண் பார்வை இல்லாதவள்ன்னு சொல்றீங்க. அவளாலே என்ன வேலை செய்ய முடியும்? அவளை நாங்க ஏத்துக்கிட்டு வெறுமனே உட்கார்த்தி வைச்சுக் காப்பாத்திக்கிட்டு வர முடியுமா? நீங்களே சொல்லுங்க'' என்றாள்.

''அவ பராமரிப்புக்கு மொத்தமாகவோ, மாசா மாசமோ நான் ஒரு தொகை குடுத்திடறேன், அம்மா!'' என்று மோகன் சொன்னான்.

''மன்னிச்சுக்குங்க. இது ஒரு திக்கற்ற பெண்கள் விடுதியே தவிர, பணம் வாங்கிக்கிட்டுச் சாப்பாடு போட்டு, தங்க இடம் கொடுக்கிற போர்டிங் — லாட்ஜிங் ஹோட்டல் இல்லே. அதுவும் தவிர, ஒரு பொண்ணுடைய பராமரிப்புக்கு ஒருத்தர் பணம் கொடுக்கத் தயாரா யிருக்கார்ன்னா, அவளை

8

# கிரிக்கெட் கற்கலாம்!

கோச்: கே. சந்திரசேகர்
படம்: ராஜு தயாரிப்பு: குண்டுமணி




எப்படித் திக்கற்றவள்னு சொல்ல முடியும்?''

மோகன் விடுதித் தலைவியிடம் பலப் பல சொல்லி மன்றாடிப் பார்த்தான். தான் திருமணம் ஆகாத இளைஞன் என்றும், அவளை இந்த நிலையில் தன் ஆதரவில் வைத்துக் கொண்டிருப்பது வீண் அபவாதங்களுக்கு இடம் அளித்து விடும் என்பதற்காகவே நிரந்தரமாக ஓர் இடத்தில் சேர்த்துவிட முயலுவதாகவும் உண்மை நிலையைக் கூடக் கூறினான்.

ஆனால் விடுதித் தலைவி, ''உங்களுக்குத் திருமணம் ஆகணும் என்கிறதுக்காகக் கூட ஒங்களாலே தாய்மை அடைஞ்சிட்ட ஒரு பொண்ணை நீங்க இப்படி எங்கேயாவது தள்ளிவிடப் பார்க்கலாம், இல்லையா?'' என்று தட்டைத் தன்னிடமே திருப்பிவிட்ட போது, அவன் வாயை மூடிக் கொண்டு திரும்ப வேண்டியதாயிற்று.

இருந்தாலும் மோகன் மனம் சோர்ந்து விடவில்லை. அவனுக்கு வேறொரு ஆலோசனை தோன்றியது. என்னதான் தன்னை அநாதை என்று கூறிக் கொண்டாலும், தான் சந்தித்து அழைத்து வரும் வரையில் யாரோ ஒருவருடைய ஆதரவில்தானே சுதா இருந்திருக்க வேண்டும்? பத்திரிகைகளில் ஒரு விளம்பரம் கொடுத்துப்பார்க்கலாமே? யாராவது அவளை ஏற்றுக்கொள்ள முன் வரலாம் அல்லவா?

அவ்வாறே அவன், சுதாவைத் தான் சந்தித்த சூழ்நிலை, அவள் இப்பொழுது இருக்கும் நிலை ஆகியவற்றைக் குறிப்பிட்டு, அவளுடைய சொந்தக்காரர்களோ, அவள்மீது அக்கறை உடையவர்களோ இருந்தால் வந்து அழைத்துப் போகும்படி ஒரு விளம்பரம் கொடுத்து, தன் முகவரியையும் அதில் தெரிவித்திருந்தான்.

விளம்பரம் வெளிவந்த ஒரு வாரத்துக்கெல்லாம் ஒரு நாள் இரவு ஏழு மணி இருக்கும். மோகன் வேலை ஸ்தலத்திலிருந்து திரும்பி, வீட்டில், தன் அறையில் மறு நாள் நடைபெற வேண்டிய வேலைகளை புளூ-பிரிண்டைப் பார்த்துக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தான். அப்பொழுது ''சார்!'' என்ற அழைப்பு வெளியே கேட்டது.

மோகன் எழுந்து வெளித் தாழ்வாரத்துக்கு வந்தான். அங்கே இருபத்து ஏழு—இருபத்து எட்டு வயது மதிக்கக் கூடிய இளைஞன் ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவனுடைய ஆடை அலங்காரங்களைப் பார்த்தபோது, நாடக நடிகனாகவோ, அல்லது நாட்டியம் ஆடுபவனாகவோ இருக்கலாம் என்று தோன்றியது.

''வணக்கம் சார்! மோகன் என்கிறது நீங்கதானே?'' என்று அவன் கரம் குவித்த விதத்திலேயே நடன பாணி தெற்றெனப் புலனாயிற்று.

''நான்தான். நீங்க யாரு?''

''என் பேர் ராஜாமணி. ஒங்க விளம்பரத்தைப் பார்த்துட்டு வந்தேன்'' என்றான் அந்த இளைஞன். (தொடரும்)

# பனி நிலவை

மாயாவி

## 9. "நீ யாரோ, நாங்க யாரோ!"

'உங்க விளம்பரத்தைப் பாத்திட்டு வந்தேன்'' என்று ராஜாமணி கூறினன்.

''ஒக்காருங்க, மிஸ்டர் ராஜாமணி'' என்று வெளித் தாழ்வாரத்தில் இருந்த நாற்காலிகளில் ஒன்றைக் காட்டி அவனை அமரச் செய்து விட்டுத் தானும் மற்றொரு நாற்காலியில் அமர்ந்தபடி, ''நீங்க எந்த ஊரு?'' என்று ஆர்வத்தோடு வினவினன் மோகன்.

''நான் இருக்கிறது பல்லாவரங்க. அங்கே ஒரு டான்ஸ் ட்ரூப் வைச்சு நடத்திக்கிட்டிருக்கேன். சுதா எங்க அக்கா மகள்தாங்க! சின்ன வயசிலேயே அக்காவும் அத்தானும் காலமாயிட்டாங்க. நான்தான் சுதாவை எடுத்து வளர்த்துக் கிட்டிருந்தேன். அதுக்கும் டான்ஸ் கத்துக் கொடுத்து என் ட்ரூப்பிலே சேர்த்துக்கிடணும்னு பார்த்தேன். ஆனு சுதாவுக்கு டான்ஸ் வரலீங்க. அதன் மேலே தப்பு இல்லே. டான்ஸ் கத்துக்கறதுன்னு, சொல்லிக் குடுக்கறவன் ஆடற ஆட்டத்தையும், காட்டற பாவத்தையும் பார்த்துத் தானேங்க கத்துக்க முடியும்? சுதாவுக்குத் தான் ஆண்டவன் ரெண்டு வயசிலேயே பார்வையைப் பறிச்சுக்கிட்டானே! சும்மாதான் எங்க வீட்டிலே இருந்துக்கிட்டிருந்திச்சு. ஆனு என் சம்சாரத்துக்கும் அதுக்கும் அவ்வளவா ஒத்துக்கலீங்க. ரெண்டு மாசத்துக்குமுன்னே ஒருநாள் ராத்திரி ரெண்டும் பெரிசா சண்டை போட்டுக்கிட்டிச்சு. மறுநாள் எழுந்திரிச்சுப் பார்த்தா சுதாவைக் காணும். நான் தேடாத இடம் இல்லீங்க. எங்கேயோ குளம் குட்டையிலே விழுந்து செத்திடிச்சின்னு நெனைச்சேன். கடைசியா இன்னைக்குப் பழைய பேப்பரை சும்மா புரட்டிக்கிருந்தேன்; ஒங்க விளம்பரம் கண்ணிலே பட்டிச்சு. ஒடனே பஸ் பிடிச்சு ஓடி வந்தேன். சுதா எங்கேங்க இருக்குது?'' என்று கேட்டான் ராஜாமணி.

மோகன் அடைந்த மனநிம்மதிக்கு அளவே இல்லை. ''வீட்டுக்குள்ளே தான்' இருக்கா. இருங்க கூப்பிடறேன்'' என்று கூறியபடி உள்ளே திரும்பி, ''சுதா!'' என்று அழைக்க வாயெடுத்தான்.

ஆனல் ராஜாமணி, ''பொறுங்க!'' என்று அவனை அமர்த்தினன்.

மோகன் அவனைச் சந்தேகத்தோடு பார்த்து, ''அவளைக் கூட்டிகிட்டுப் போகிற நோக்கத்தோடுதானே வந்திருக்கீங்க?'' என்று கேட்டான்.

''ஆமாங்க. அதுக்குத் தாய்மாமன் நான். நான் கூட்டிக்கிட்டுப் போகாம யார் வந்து கூட்டிக்கிட்டுப் போகப் போறாங்க? ஆனு அதுக்கு முன்னே இன்னொரு சங்கதியையும் சொல்லிடறேன்.''

''என்ன?''

''என் சம்சாரமும் டான்ஸ் ஆடறவதான். நாங்க ரெண்டு பேருமே டான்சுக்காக அடிக்கடி வெளியூர் போயிடுவோம். கண் தெரியாத சுதாவை வெளியூருக்கெல்லாம் கூட்டிக்கிட்டுப் போக முடியுங்களா? வீட்டிலேதான் விட்டுட்டுப் போவோம். கண் இல்லேன்னுலும் அது தன் காரியங்களைத் தானே பார்த்துக்கிடும். சாப்பாட்டுக்கு மட்டும் ரெண்டு வீடு தள்ளி, தெரிஞ்ச கெழவியம்மா ஒருத்திக்கிட்டே ஏற்பாடு செய்திட்டுப் போவோம். அந்த அம்மா வேளா வேளைக்குக் கொண்டு வந்து போட்டுட்டுப் போவாங்க. மூணு நாலு மாசத்துக்கு முன்னே ஒரு வாட்டி நானும் என் சம்சாரமும் டான்சுக்காக வெளியூர் போயிட்டு வந்த போது அந்தக் கெழவியம்மா, 'நீங்க ஊரிலே இல்லாத போது, ஒரு வயசுப் பையன் சுதாவோடு வீட்டிலே இருக்கிறதைப் பார்த்தேன்'னு சொன்னுங்க. சுதாவைக் கூப்பிட்டுக் கேட்டோம். அப்படியெல்லாம் யாரும் வரலேன்னு அது சொல்லிடிச்சு. அப்போ நாங்களும் அதை நம்பினேம். ஆனு பிற்பாடும் ரெண்டு—மூணு வாட்டி நாங்க வெளியூர் போயிருந்த போது அதே பையன் வந்திச்சுன்னு கெழவியம்மா சொல்லவும், நாங்க சுதாவைக் கண்டிச்சோம். எங்க வீட்டிலே சுதாவைத் தவிர, என் டான்ஸ் ட்ரூப்பைச் சேர்ந்த இன்னும் நாலஞ்சு வயசுப் பொண்ணுங்க இருக்குது. அதுகளும் இதைப் பார்த்துக் கெட்டுப் போயிடுச்சுன்னு...? என் சம்சாரம் முன்னேயே சுதாவை, வெட்டிச் சோறுன்னு கரிச்சுக்கிட்டு இருக்கிறவ. இப்போ இந்த மாதிரி நடவடிக்கையும் காதிலே விழுந்ததினலே அன்னைக்கு நாக்கிலே நரம்பில்லாமப் பேசிப்புட்டா. மறுநாள்தான் அது வீட்டிலிருந்து ஓடிடிச்சு. என் சம்சாரம் அப்படிப் பேசினது மட்டும் அது ஓடிப் போகக் காரணம் இல்லே; தான் உண்டாயிருக்கிறதும் அதுக்குத்

தெரிஞ்சு, அதனுலேதான் அது ஓடிப் போயிருக்குது என் கிறதை ஒங்க விளம்பரத்தைப் பார்த்த பெறகுதான் தெரிஞ் சுக்கிட்டேன்.''

''ஆமா, ராஜாமணி, சுதா இப்போ உண்டாகியிருக்கிற நிலைமையிலே ஒங்க மனைவி அவளை ஏத்துப்பாங்களா?'' என்று ராஜாமணியைக் கேட்டான் மோகன்.

''கொஞ்சம் முணுமுணுக்கத்தான் செய்வா. அதுக்காக நான் அதைக் கைவிட்டுட முடியுங்களா? ஆனு சுதாதான், எங்கூட வர முடியாதுன்னு சொல்லிடுமோ, என்னவோ? இந்த ரெண்டு மாசமா அதை எல்லா வசதிகளோடும் ஒங்க பங்களாவிலே வைச்சுக்கிட்டிருக்கீங்க இல்லையா? விட்டுப் புட்டு வரணுமேன்னுதான் இருக்கும் அதுக்கு.''

''ஆனு அப்படி எத்தனை நாளைக்கு அந்நியமான ஒரு பொண்ணை நான் வைச்சுக் காப்பாத்த முடியும்?''

''அதானே! அதனுலே அது ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி எங்கூட வரமாட்டேன்னு சொன்னுலும் சொல்ல லாம்; நீங்க கண்டிஷனு போய்த் தான் ஆகணும்னு சொல்லிப் புடுங்க!'' என்று ஆலோசனை தெரிவித்தான் ராஜாமணி.

அவன் கூறியது சரிதான். சற்றைக்கெல்லாம் மோகன் சுதாவை அழைத்து, ராஜாமணி வந்திருப்பதையும், பிற விவரங்களையும் தெரிவித்த போது, அவள், அவன் சொல்வ தெல்லாம் பொய்யென்றும், அவனை யாரென்று தனக்குத் தெரியாது என்றும் ஒரேயடியாகச் சாதித்தாள்.

பொன்னம்மாளும், மோகனும் அவளுக்கு எவ்வளவோ சாமதானம் சொல்லி அனுப்பி விடப் பார்த்தனர். ஆனுல் அவள், தன்னை, தன் விருப்பத்துக்கு மாருக இந்த ஆளுடன் அனுப்பினுல், போகும் வழியிலேயே, ரயிலிலிருந்தோ, காரி லிருந்தோ குதித்து உயிரை மாய்த்துக் கொண்டு விடுவதாகக் கூறவே, அவர்கள் பயந்து விட்டனர்.

கடைசியில் மோகன் ராஜாமணியைப் பங்களாவுக்கு வெளியே அழைத்துச் சென்று, ''மிஸ்டர் ராஜாமணி! நீங்க போங்க. வர்ற ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம், நானும் எங்க அத்தையும், மயிலாப்பூர் கோயிலுக்குப் போகலாம்னு சொல்லி, சுதாவைக் கூட்டிக் கிட்டுப் பல்லாவரத்திலே ஒங்க வீட்டிலேயே கொண்டு வந்து விட்டிடறேம்'' என்று கூறி, அவனுடைய முகவரியைக் குறித்து வாங்கிக் கொண்டு அனுப்பி வைத்தான்.

அவன் பங்களாவுக்குத் திரும்பிய போது பொன்னம்மாள் சுதாவிடம் இரைந்து கொண்டிருந்தாள்: ''நீ என்ன சுதா நினைச்சுக்கிட்டிருக்கே ஒன் மனசிலே? இது என்ன சத்திரம்–சாவடின்னு நினைச்சியா, கண்ட பொண்களை நாங்க மாசக் கணக்கிலே வச்சுக் காப்பாத்திக்கிட்டிருக்க?''

மோகன் அமைதியாக இருக்கும்படி அவளுக்கு ஜாடை காட்டிவிட்டு, ''இருந்தா இருந்திட்டுப் போகட்டும், அத்தை. தனக்கு ஒரு பொண் குழந்தை பிறக்கலையே என்கிற ஆதங்கம் அம்மாவுக்கு இருக்குதில்லையா? சுதாவை என் தங்கையாக நினைச்சுக் கூட வைச்சுக்கிட்டிருந்திட்டுப் போவோம்!'' என்ருன்.

விசித்து அழுதவாறு தலை குனிந்திருந்த சுதா, இதைக் கேட்டதும் தலை நிமிர்ந்து மோகன் இருந்த திசையில் திரும்பி, ''தயவு செய்து அப்படியெல்லாம் பேசா தீங்க'' என்று கெஞ்சுவது போல் கூறினுள்.

''பின்னே எப்படிப் பேசச் சொல்றே, சுதா?''

''மனச்சாட்சியை மறைச்சுப்பேசறது ஒங்களுக்கு அழகு இல்லேங்க!''

தான் ராஜாமணியிடம் கூறியனுப்பியதை இவள் ஊகித் திருப்பாளோ என்று அவன் எண்ணினுன். ஆனுல் பொன் னம்மாள் அப்படி நினைக்கவில்லை. அவள் மனத்தில் சட் டென்று ஒரு சந்தேகம் மெழுகாக உருகியது.

''ஏய் சுதா! பேசறதைத் தெளிவாப் பேசு. இந்த மூடு மந்திரம் எல்லாம் வேண்டாம்'' என்று அவள் கடுமை யாகச் சொன்னுள்.



சுதா பதில் பேசவில்லை. மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள்.

''சொல்லுடி!'' என்று அதட்டினுள் பொன்னம்மாள்.

சுதாவின் உதடுகள் மென்மையாகப் பிரிந்தன. ''எனக்கு இந்த வீட்டிலே இருக்கக் கொஞ்சம் உரிமை இருக்கு, அத்தை!''

''அடி! நீ என்ன சொல்றே?''

''என் வயற்றிலே வளர்ந்துக்கிட்டிருக்கிற குழந்தை ஒங்க மருமகன் தந்ததுதான்!''

''சுதா!'' என்று மோகன் அண்டமே அதிரும்படி கத்தினுன். ஆனுல் பொன்னம்மாள் கத்தவில்லை; கூவவில்லை. அவள் சுட்டுவிடுவது போல் மோகனை ஒரு பார்வை பார்த்தாள்.

உருகிய மெழுகாயிருந்த அவள் சந்தேகம் இப்பொழுது இறுகி உறுதிப்பட்டு விட்டது!

சீடத்து ஊஞ்சலில் துயரத்தின் வடிவாக வெற்றிலையை மென்று கொண்டிருந்த ஜகதீசன் மனைவியை ஏறிட்டுப் பார்த்தார்.

கையில் கடிதத்துடன் கதறிக் கொண்டிருந்தாள் கனகம்!

அப்புறம் அந்தக் கடிதத்துக்கிடையே ஒரு முடிவுக்கு வந்தவளாக ''அடுத்த பஸ்ஸிலேயே பட்டணத்துக்குப் புறப்பட்டு போயி, அந்தக் குருட்டுப் பொண்ணு கையிலே ஆயிரமோ - ரெண்டாயிரமோ கொடுத்து ஒழிச்சு விரட்டிப்புட்டு, அவன் காண்டிராக்டுத் தொழில் செய்ததெல்லாம் போதும்; எல்லாத்தையும் ஏறக்கட்டிட்டுக் கையோடு கூட்டிக்கிட்டு ஊர் வந்து சேருங்க'' என்று அழுதாள்.

''என்ன சொன்னே?'' என்று ஜகதீசன் வெகுண்டு வினவினுர்.

''ஆமா உங்களுக்கு எதையும் ஒருதரம் சொன்னுல் காதிலே ஏறுதே!''

''ஆனு இப்போ நீ சொன்னது என் காதிலே மட்டுமில்லே; கருத்திலேயும் ஏறிதினுலேதான், கனகம், அப்படிக் கேட்டேன். ஒழிச்சு விரட்டறதா? யாரை?''

''அந்தக் கபோதிச் சனியனைத்தான்!''

''சீ!'' என்றுர் ஜகதீசன். காறி உமிழாத தோஷம்தான்.

''இனிமே சுதாதான் உன் மருமகள்!'' என்று முடித்தார்.

''ஆ! என்னங்க இது? அது எங்கே பொறந்ததோ? யாருக்குப் பொறந்ததோ? என்ன ஜாதியோ? என்ன குலமோ? அதைப் போயி!''



''ஜாதி, குலம், கோத்திரத்தையெல்லாம் பார்த்தா ஒன் மகன் அந்தப் பொண்ணைக் கெடுத்தான்? நீயும் ஒரு பொம்புள்ளேயா யிருந்தால் இப்படிப் பேசாதே. நமக்கு ஒரு மகள் இருந்து, அவளை ஒருத்தன் கெடுத்திருந்தா என்ன செய்ய நினைப்போமோ, அதைத்தான் இப்பவும் செய்யணும். அதைத்தான் செய்யவும் போறேன்'' என்று தீர்மானமாகக் கூறிவிட்டு ஜகதீசன் ஊஞ்சலிலிருந்து எழுந்தார்.

''மயிலத்து ஆண்டவனே! வரப்போற என் மருமகளைப் பத்தி ஆயிரம் மனக்கோட்டைகள் கட்டிக்கிட்டிருந்தேனே! எல்லாத்தையும் இடிச்சுத் தரைமட்டமாக்கிட்டியே!'' என்று ஆற்றுமை வெளிப்படப் புலம்பினுள், கனகம்.

கடிதம் கிடைத்த அன்று மாலையே ஜகதீசன் சென்னைக்கு வந்து சேர்ந்தார். சுதாவைப் பார்த்தார். அருள் பொழியும் அவளுடைய முக விலாசத்தைக்கண்டதுமே அவருடைய உள்ளம் வெயிலிடைப் பனியாகக் கனிந்து கரைந்தது.

''மோகன் என் மகன்தாம்மா. இருந்தாலும், ஒன்னை இந்தக் கோலத்துக்கு ஆளாக்கிட்டு, அவன் தப்பிச்சுக்க விட்டிட மாட்டேன். என்னம்மா நடந்திச்சு? எதையும் ஒளிக்காமச் சொல்லு'' என்று கேட்டார்.

சுதா தேம்பித் தேம்பி அழுதாளேயன்றி அவள் வாயிலிருந்து சொற்கள் வெளிவர மறுத்தன.

''சொல்லும்மா, சுதா. எங்கிட்டேத்தான் எதையும் சொல்ல முடியாதுன்னு சொல்லிட்டே இப்போ ஒன் விஷயமா ஒரு முடிவு எடுக்க வேண்டியவரே வந்திருக்கார். அவர் கிட்டேயாவது சொல்லு'' என்று பொன்னம்மாள் அவளை அணைத்தபடி ஊக்கினுள்.

அழுகைதான் தொடர்ந்தது.

''இந்தா பாரும்மா! இப்படி அழுதுக்கிட்டே இருந்தா எப்படி? மோகன் என்மகன் தான்னுலும் அவன்கிட்டே நியாயம் பேசணும்ன்னு, நடந்தது முழுக்க எனக்குத் தெரிஞ்சாத்தானே முடியும்?'' என்று ஜகதீசனும் அவளுக்குத் தைரியமூட்டினுர்.

கண நேர மௌனத்துக்குப் பிறகு, மிகச் சன்னமான குரலில் சுதா சொன்னுள்: ''அதுக்கு நான் இப்போ முழுகாம இருக்கிற ஒண்ணே போதாதாங்க?''

''ஆனுலும் அதற்குக் காரணம் என் மகன் தான்னு எப்படீம்மா நம்பறது?''

திடீரென்று சுதா சூடு பட்டவள் போல் ஆவேசத்துடன் பேசினுள்: ''நான் யாரையும் நம்பச் சொல்லலீங்க. ஏழை சொல் அம்பலம் ஏறுதுன்னு தெரிஞ்சுதான், ஒங்க மகன் என்னை இங்கே கொண்டு வந்த அன்னைக்கே 'என்னை விட்டுடுங்க; நான் எங்கேயாவது போயிடறேன்'னு சொன்னேன். அப்பவே அவரும் அத்தையும் என்னைப் போக விட்டிருந்தாங்கன்னு இந்தச் சங்கடமெல்லாம் ஒங்களுக்கு வந்திராது. ஆனு அவுங்க என்னைப் போக விடாமே, ''நீ யாரு? யாரு''ன்னு துளைச்சு எடுத்தாங்க. நான் யாராயிருந்தா என்னங்க? சரி, நான்தான் என்னை யாருன்னு காட்டிக்க விரும்பலேயே! அப்பவாவது அவங்க என்னைப் போக விட்டிருக்கக் கூடாதா? அப்பவும் அவங்க என்னைப் போக விடவில்லே. என் வயிறு கனத்திட்டது எனக்கே தெரிஞ்ச பிறகு, பத்திரிகையிலே விளம்பரம் போட்டு யாரோ முன்பின் தெரியாத ஒருத்தர் கிட்டே என்னை ஒப்படைச்சிடப் பார்த்தாங்க. அப்பத்தான் நான் மனசு பொறுக்காம ஒங்க மகன்தான் என் தாய்மைக்குக் காரணம் என்கிற உண்மையைச் சொன்னேன். அதைக் கூட நான் அவரோட வாழ்ந்து, ஒங்க சொத்து — சொம்பையெல்லாம் அனுபவிக்கணும்னு சொல்லலீங்க. எனக்காக வாழாட்டாலும் ஒங்க மகனுடைய குழந்தைக்காக வாழணுமேன்னுதான் சொன்னேன். இவ்வளவுதாங்க நான் சொல்ல முடியும். என்னுடை மற்ற கதையெல்லாம் மண்ணுேடு மண்ணுகப் போக வேண்டிய ஒண்ணு. அது என் வாயிலிருந்து ஒரு நாளும் வெளியில் வராது. இப்பவும் ஒண்ணும் கெட்டுப் போயி

# கரம் பக்கோடா

ஆடம்பர அசோகா ஓட்டலுக்குள் ஆயிரக் கணக்கான கந்தலாடை ஏழைகள் புகுந்து நிர்வாகிகளைத் தினற அடித்து விட்டார்கள்.

—டில்லிச் செய்தி.

எல்லோரும் இந்நாட்டு அசோகர்கள்!

ஷேக் அப்துல்லா ஜகஜீவன் ராமைச் சந்தித்து இருபது நிமிடம் பேசிக் கொண்டிருந்தார்.

—செய்தி.

ஜகஜீவன் ராமை ஷேக் பண்ணியிருக்க முடியாதே!

நியூ ஜெர்சியைச் சேர்ந்த ஜெரோம் யங் என்பவருக்கு கடந்த இரண்டு வருடங்களில் மூன்று தடவைகள் இருதய மாற்று அறுவைச் சிகிச்சை வெற்றிகரமாக நடந்திருக்கிறது.

—செய்தி.

எந்த இதயத்தையும் தாங்கும் உடல்!

'காவிரி பற்றிய பெங்களூர் பேச்சில் உடன்பாடு ஏற்படவில்லை.'

பேச்சில் உடைப்புத்தான் கண்டதா?

'இந்த ஆண்டு மின்சார வெட்டு இன்றித் தமிழ்நாடு சமாளித்து விடும்!'

— மின்சாரத் துறை அமைச்சர் பேட்டி.

இந்த ஆண்டிற்கான வெட்டு குத்துக்கள் ஏற்கனவே பல இடங்களில் நேர்ந்த கலவரங்களில் தீர்ந்து போயிருந்தால் நல்லது!

—கோமதி ஸ்வாமிநாதன்

# கிண்டல் கிட்டா




டலிங்க. என் வயிற்றிலே இருக்கிறது ஒங்க பேரனா, பேத்தியோதான் என்கிறது இன்னமும் ஒங்களுக்குச் சந்தேகமா யிருந்தா, அது என்னோடதாகவே இருந்துட்டுப் போகட்டும். என்னைப் போக விட்டிடுங்க. நடந்தது எதையும் பற்றி யார் கிட்டேயும் நான் மூச்சு விட மாட்டேன். அந்தக் கவலையும் ஒங்களுக்கு வேண்டாம்.''

பெருமழை பெய்து ஓய்ந்தது போல் அங்கே ஒரு நிமிஷம் நிசப்தம் நிலவியது. பிறகு, ''நீ எங்கேயும் போக வேண்டாம், அம்மா! நீதான் என் மருமகள்!'' என்று ஜகதீசன் அமைதியாகச் சொன்னார்.

ஆனால் அவர் சொல்லி விட்டால் போதுமா? அவளை மனைவியாக ஏற்றுக் கொள்ள மோகன் முன்வர வேண்டாமா?

அன்று மாலையில் வேலை ஸ்தலத்திலிருந்து திரும்பிய அவன், தந்தையுடன் நிகழ்த்திய விவாதத்தில் இதைக் கடுமையாக எதிர்த்தான். ''அப்பா! சுதாவுக்குக் கண் தெரியாது என்கிறதே, அவளை இங்கே கொண்டு வந்த பிறகுதான் எனக்குத் தெரியும். அப்படி இருக்கும்போது நான் குற்றம் செய்தவனா இருந்தா, எக்கேடும் கெட்டுப் போகட்டும்னு விட்டிட்டு வராம, வேலை மெனக்கெட்டு வீட்டுக்குக் கொண்டு வந்திருப்பேனா?'' என்று தர்க்கரீதியாக வாதிட்டான்.

ஆனால் அவன் பேச்சு எதும் ஜகதீசன் செவியில் ஏறவில்லை. ''நீ அவளைக் கல்யாணம் செய்துக்கப் போறியா இல்லையா?'' என்று அவர் கண்டிப்பாகக் கேட்டார்.

''நீங்களெல்லாம் எந்தக் குற்றத்தை என் மேலே சுமத்தறீங்களோ, அதை, இவளை மனைவியாக ஏற்றுக்கிட்டாத்தான் நான் செய்தவன் ஆவேன். ஏன்னா, சுதா வேறே யாராலோ களங்கப்படுத்தப்பட்டவள்னு நான் இன்னமும் உறுதியாச் சொல்றேன். அதனாலே....''

''அதனாலே....?'' என்று கோபத்துடன் குறுக்கிட்டார் ஜகதீசன்.

''சுதாவுக்கு நல்லது செய்யறதா நெனைச்சுக்கிட்டு, அவ கற்பைக் கெடுத்த பாவத்துக்கு ஒங்க மகனை ஆளாக்காதீங்க.''

''இந்த வேதாந்தமெல்லாம் எனக்குத் தேவை இல்லை. முடிவா என்ன சொல்றே? சுதாவை முறையாக் கட்டிக்கப் போறியா இல்லையா?''

''அது என்னாலே முடியாதப்பா.''

''சரி, அப்போ இந்த நிமிஷத்திலிருந்து ஒனக்கும் எங்களுக்கும் தொடர்பு விட்டுப் போச்சு. புறப்படும்மா, சுதா. புறப்படு, பொன்னம்மா!''

''எங்கே அண்ணா?''

''வேலவனூருக்குத்தான். இங்கே இனிமே ஒங்களுக்கு என்ன வேலை?''

மூவரும் புறப்பட்டு விட்டனர். மோகன் அவர்களைத் தடுக்கவில்லை.

புறப்படும்போது ஜகதீசன் சொன்னார்: ''இங்கே பாருடா! என்னைக்கு நீ உன் தவறை உணர்ந்து, சுதாவை மனமாரக் கல்யாணம் கட்டிக்க நினைக்கிறியோ, அன்னைக்கு வேலவனூருக்கு வந்தாப் போதும். அதுவரையிலும் நீ யாரோ? நாங்க யாரோ? (தொடரும்)



# முகங்கள் மனசைக் காட்டுவதில்லை

அரவிந்தன்

அவனுக்குத் தன்னை மிகவும் பிடித்துவிட்டது என்பதில் அவளுக்குக் கொஞ்சமும் சந்தேகம் இருக்கவில்லை. அந்த அலுவலகத்தில் அவள் வேலைக்குச் சேருவதற்கான நேர்முகத் தேர்வில் அவன்தான் அவளிடம் கேள்விகள் கேட்டான், பேட்டிக்கு வந்திருந்த பதினேரு பேரில் அவள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டாள்.

அவனுக்குத் தன்மீது இருந்த அக்கறையும், அன்பும் அந்த அளவோடு நின்றிருந்தால் அவளும் அவன் மீது கௌரவமான எண்ணங்களுடன் அவனை மதித்திருப்பாள்.

அவள் அங்கே வேலைக்குச் சேர்ந்த பிறகும் தொடர்ந்து தன்மீது அவன் செலுத்திய விசேஷ அக்கறையும், பரிவும் அவளுக்கு உண்மையிலேயே மிகவும் சங்கடமாகத்தான் இருந்தது.

அவன் அழகாக இருந்தான். சிவந்து பம்மிய கன்னங்களில் சைட் பார்ன்ஸ் வழிந்தது. அலை அலையான கேசம். லாங் ஹேர் தோள் பிடரியில் நின்றது. நளினமான முகம். ஓரளவு பெண்மை கலந்த விழிகள். ஆனல் தீர்க்கமானவை. ஸ்டைலாக இருந்தான். மடிப்புக் கலையாமல் தினம் ஒரு டிரஸ்ஸாகப் பண்ணிக் கொண்டு வந்தான். அவளுக்கு அவன் மீது பரிதாபம், கோபம், வெறுப்பு,.... இப்படிப் பல உணர்வுகள் தோன்றின.

அவள்!— அவளும் அழகானவள்தான். ஒழுங்கான பல் வரிசை. அடிக்கடி சிரித்தாள். கழுத்தில் ஒற்றைச் சங்கிலியோடு பளிச்சென்று இருப்பதில் கேரளத்தின் சாயல் தெரிந்தது. அவள் அசல் தஞ்சாவூர். இந்த நடையுடை பாவனைகள் அவளாகத் தேர்ந்தெடுத்துச் சுவீகரித்துக் கொண்டவை!

அவன் அவளை விரும்பியதில் அதிசயம் இல்லை.

ஆனல்—

அவளால் அவனை விரும்ப முடியாமல் போனதுதான் பெரிய துரதிர்ஷ்டம்.

அவள், அவளுடைய அத்தை மகனுக்குத் தான் என்று ஏற்கனவே நிச்சயமாகியிருந்தாள். அவன் டாக்டருக்குப் படித்துவிட்டு மேற்படிப்புக்காக வெளிநாடு போயிருக்கிறன். அவன் மேல் படிப்புக்குப் போவதற்கு முன்பே கல்யாணத்தை முடித்து விட வேண்டும் என்று இரண்டு பேருடைய பெற்றேருமே மிகவும் மும்முரமாக முயற்சி செய்தார்கள். அவனுக்குத் தன் படிப்பு முடிந்து சம்பாதிக்கத் தொடங்கிய பிறகே கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று பிடிவாதமான எண்ணம் இருந்தது.

இரண்டு பக்கமும் இழுத்துக்கொண்டே இருந்த அந்த விவகாரத்துக்கு அவள்தான் முற்றுப்புள்ளி வைத்தாள்.

''அத்தான் மீது எனக்குப் பரிபூரண நம்பிக்கை உண்டு. அவர் விருப்பப்படிதான் கல்யாணம் நடக்கும்!''

அதற்கு மேல் யாரும் எந்த மறுப்பும் சொல்லவில்லை.

அத்தை மகன் மேல்படிப்புக்காகக் கிளம்பிப் போன பின்புதான் அவன் திரும்பி வரும் வரை உள்ள இடைவெளியில் வேலை வெட்டி ஏதும் இல்லாமல் எப்படிக் கழிப்பது என்ற பெரிய பிரச்னை அவளுக்குத் தலையெடுத்தது.

அதுவரை வேலைக்குப் போனல் என்ன என்று அவள் நினைத்தாள். முதலில் அவள் கலந்து கொண்ட இண்டர்வ்யூவில் தேர்வு பெற்றுள்.

தன்னைக் கவர்வதற்காக அவன் செய்த முயற்சிகள் அவளுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவன்மீது அவளுக்கு இருந்த கொஞ்சநஞ்ச மரியாதையுமே இதனல் பாழாகிக் கொண்டிருந்தது.

அவனும் அவளை ஆசைப்பட்டானே தவிர, முறையற்ற வழிகளில் எந்த விதமாகவும் அவன் நடந்து கொண்டதில்லை. மிகவும் கௌரவமான மொழிகளில் பேசினன். ''நீங்கள்'' என்று மரியாதையுடன் அழைத்தான். எதிரெதிராகச் சந்தித்துக் கொண்ட பின் ஒதுங்கி வழி விட்டான். அவளாகப் பேசினல் தவிர ஆபீஸ் விஷயங்களைத் தவிர வேறு எதுவும் பேசாமல் கண்ணியமாக நடந்து கொண்டான்.



வேலை அதிகமாயிருந்த ஒரு நாள் மாலை நல்ல மழை பிடித்துக் கொண்டது. ஆபீஸில் மற்றவர்கள் எல்லோரும் போயிருந்தார்கள். அவனும், அவளும் இன்னும் இரண்டு கிளார்க்குகள் மட்டுமே உட்கார்ந்து வேலை செய்தார்கள்.

வேலை முடிந்தபிறகு அவர்கள் கிளம்பியபோது அவர்களோடு வேலை செய்த இரண்டு கிளார்க்குகளும் ஒரே இடத்தில் இருந்து வருகிறவர்களாதலால் சேர்ந்தே கிளம்பி விட்டார்கள்.

மழை இன்னும் பெய்து கொண்டேயிருந்தது.

அவன் தன் காரை ஸ்டார்ட் பண்ணிக் கொண்டு வந்து, போர்டிகோவில் நிறுத்தி, ''ப்ளீஸ் கெட் இன்'' என்றபடியே கதவைத் திறந்து விட்டான்.

'சட்'டென்று அவளுக்கு அந்தச் சினிமா நினைவுக்கு வந்தது. அந்தச் சினிமாவிலும் அப்படித்தானே மழை பெய்வதை ஒரு காரணமாக்கி ஒரு கல்லூரிப் பெண்ணை ஓர் ஆள்...

அவள் தலையை உலுக்கிக் கொண்டாள். அவள் மனத்துக்குள் பெண்மையின் குரல் 'பத்திரம், பத்திரம்' என்று மாறி மாறிக் குரல் கொடுத்தது.

ஆனாலும் அவனுடைய அழைப்பை அவளால் மறுக்க முடியவில்லை. பஸ்களும், டாக்ஸி, ஆட்டோ எல்லாமே வேலை நிறுத்தம். அன்று காலையில் வேலைக்கு வந்து சேர்வதற்கே படாத பாடு பட்டுப் போனாள் அவள்.

அதோடு இப்போது மழை வேறு சேர்ந்து கொள்ளவே வேறு வழியில்லாமல் அவள் அவன் காரில் ஏறிக் கொண்டாள். மனத்துக்குள் திரும்பத் திரும்ப, ''தைரியமாக இரு'' என்று கூறித் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்டாள்.

காரில் அவள் தன்னோடு வருகிற தனிமையைப் பயன்படுத்தி அவன் காதல் ஊதல் என்று ஏதேனும் உளறப் போகிறானே என்று அவளுக்குப் பயமாக இருந்தது. ஆனால் அவன் அவளை அவள் தெருவின் முனையில் இறக்கி விடும்வரை எதுவுமே பேசவில்லை. இதுதான் அவளுக்கு மிகவும் அதிசயமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது.

அன்றைக்கு அவள் வீடு திரும்பியபோது அவளை மிகவும் சந்தோஷப்படுத்துகிற செய்தி ஒன்று காத்திருந்தது அங்கே.

அவள் அத்தானுக்கு மேல்நாட்டின் பிரஜா உரிமை கிடைக்கும் என்றும், அவன் அவளோடு கல்யாணமான பிறகு அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிட விரும்புவதாகவும் விவரமாக எழுதியிருந்தான். அதோடு அங்கே இருக்கிற கவர்ச்சியான சம்பள விகிதமும், நாகரிக வாழ்க்கையும், இதர வசதிகளும் அவன் கடிதத்தில் படிக்கும்பொழுதே அவளுக்கு இன்பமாக இருந்தது.

கூடிய சீக்கிரம் அவன் இந்தியா திரும்பி வருவதாகவும் கல்யாணம் முடிந்ததும் அவன் மட்டும் திரும்பிப் போய் அவளையும் அழைத்துக் கொள்ள விரைவில் ஏற்பாடு செய்வதாகவும் எழுதியிருந்ததை மீண்டும் மீண்டும் பலமுறை படித்தாள்.

இரவு அவளுக்குத் தூக்கமே வரவில்லை. தன்னையும் தன் அத்தானையும் இணைத்து எழுந்த அவள் நினைவுகள் எங்கெங்கோ சுற்றின.

காரியாலயத்தில் அவனோடு தனியாக அவன் அறையில் இருந்தபோது அவன் ஒரு கடிதத்தை எடுத்து அவளிடம் நீட்டினான்.

அவள் அதைப் படித்துவிட்டு அவனைக் கூர்மையாகப் பார்த்தாள். அவன் தாய் அவனுடைய கல்யாணம் பற்றி எழுதியிருந்தாள். பெண் பார்க்கலாமா என்று கேட்டிருந்தாள்.

''வெரி குட்.... நடக்கட்டும் ஸார். அதற்குள் என் கல்யாணமும் நடந்து விடும். தம்



''வெயிட் பார்த்திங்களே! சீட்டுலே என்ன எழுதியிருக்கு?''
''வெயிட் எ மினிட்!''

பதி சமேதராக நிச்சயம் உங்கள் கல்யாணத்துக்கு வருகிறோம் ஸார்!'' என்றாள்.

அவன் முகம் பிரமை பிடித்தாற்போல் இருந்தது. அவன் தகாத காதல் ஏக்கங்களுக்கு நாசூக்காகவும், மனத்தில் உறைக்கிற மாதிரியும் நல்ல பதிலைக் கொடுத்துவிட்ட திருப்தியுடன் அவள் அன்றைக்கு வீடு திரும்பினாள்.

அன்றைக்குத்தான் அவள் அத்தான் வருவதாக இருந்தது. கனவில் மிதக்கிறவளைப் போல் அவள் வீடு போய்ச் சேர்ந்தாள்.

அத்தானைப் பார்க்கும்வரை அவள் மனம் அவளிடமே இல்லை.

வாய் நிறையப் புன்னகையும் கைநிறைய சாமான்களும் வாங்கி வந்திருந்தான்.

இரவு உணவு முடிந்து வெகு நேரம் வரையிலும் கூட அவர்கள் பேசிக் கொண்டே இருந்தார்கள்.

''நாளை மகாபலிபுரம் போகிறோம். தயாராய் இரு!''

''எதுக்கு?''

''அமெரிக்காவில் என் நண்பன் ஒருவன் இந்திய சிற்பக் கலைபற்றி ஆராய்ச்சிப் படிப்புப் படிக்கிறான். அவனுக்கு நம்ப மகாபலிபுரச் சிற்பங்களின் புகைப்படங்கள் வேணும்.''

கல்யாணத்துக்கு முன்னே அவர்களைச் சேர்த்து எப்படி அனுப்புவது என்று அவள் பெற்றோர் கையைப் பிசைந்தபோது—

அவளே தீர்மானமாகத் தன் முடிவையும் சொன்னாள்.

''நான் போகாவிட்டால் அத்தான் தவறாக நினைச்சுக்கும். நான் போய் வரேன். நான் விவரம் தெரியாத குழந்தையா என்ன?''

அவள் அம்மா என்ன பதிலைச் சொல்வது என்று தெரியாமல் மௌனமாகவே தலையை அசைத்தாள்.

சொன்னபடியே அவர்கள் கார் மகாபலிபுரம் நோக்கிக் கிளம்பி விட்டது.

அவள் அருகில் அமர்ந்திருக்க அவள் அத்தான் 'டிரைவ்' பண்ணினான். வேண்டுமென்றே கைகள் அவள் மீது இடிக்கிற மாதிரி ஸ்டீரியரிங்கை வளைத்துத் திருப்பிவிட்டு அவளைப் பார்த்துக் காதலோடும், குறும்போடும் சிரித்தான்.

அவன் சிரிப்பில் அவளும் கலந்து கொண்டாள்.

போகிற வழியெங்கும் அமெரிக்காவில் அவன் பார்த்த பல காதல் ஜோடிகளைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லிக் கொண்டே வந்தான்.

வழி முழுதும் அவன் இதுபோன்ற விஷயங்களாகவே பேசியபோது அவன் உள் மனத்தின் விவகாரங்கள் அவளுக்கு மிக நன்றாகவே புரிந்தது.

இதே இடத்தில் வேறு யாருமாக இருந்திருந்தால் அவள் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கும் பாடமே வேறு விதமாக இருந்திருக்கும்.

ஆனால் அவன்—

அவள் அத்தான்!

நாளை அவள் கழுத்தில் மூன்று முடிச்சுகள் போட்டு அவளுக்குக் கனவுமயமான அந்த மேலை நாட்டின் கவர்ச்சிகளைச் சாசுவதப் படுத்தப் போகிறவன்.

அவள் பொறுமையோடு சகித்துக் கொண்டாள்.

கடல் மணலில் கால்கள் புதையப் புதைய நடந்து சென்று பஞ்சபாண்டவர் ரதங்களைப் புகைப்படம் எடுத்துக் கொண்டு திரும்பிய பொழுது அவர்கள் இருவரும் மிகவும் களைத்துப் போயிருந்தார்கள்.

மேல் நாட்டில் வாழ்ந்து பழகிவிட்ட அவனுக்கு இந்த வெய்யில் தாங்கிக்கொள்ளவே முடியாததா யிருந்தது.

உடனே ஓர் ஏர்கண்டிஷன் அறைக்குப் போக வேண்டும் என்று காரைக் கிளப்பிய அவன் அசுர வேகத்தில் ஓட்டினான். ஹோட்டலில் ஏ. ஸி. காட்டேஜ் ஒன்றினுள் புகுந்து கொண்ட பிறகுதான் அவனுக்கு மூச்சே வந்தது.

பிற்பகல் உணவு முடிந்தபிறகு அவர்கள் அறைக்கு வெளியே வராந்தாவில் அமர்ந்து நீச்சலுடையில் கடலில் குளித்துவிட்டு வந்து மணலில் படுத்து ஓய்வெடுக்கும் அல்லது விளையாடும் வெள்ளைக்காரர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவன் அவளைப் பார்வையாலேயே அளந்தான். பார்வையாலேயே அவளை ஆரத் தழுவினான். அவன் பார்வை அவளை அணு அணுவாய்த் துகிலுரித்தது.

நிச்சயம் அவளால் அவனுடைய இந்தப் பார்வையை ரசிக்க முடியவில்லை. இவ்வளவு நேரமும் அடக்கி வைத்திருந்த வெறுப்பும் கோபமும் இதயத்தில் கொழுந்து விட்டு எரிந்தன.

''அத்தான் வாட் ஈஸ் திஸ்?....''

தன் இடையைச் சுற்றியிருந்த அவன் கைகளை விலக்கிவிட்டு அவள் விலகி நின்றாள்.

''ப்ளீஸ் மை டியர்... ஐ வான்ட் யூ....!''

அவன் கண்களில் மோகம் கொப்பளித்தது.

மீண்டும் தன்னைத் தழுவ வந்த அந்தக் கரங்களை ஆவேசத்துடன் தட்டி விட்டு விட்டு ஒதுங்கி நின்றாள்.

''என்ன இருந்தாலும் நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறவன் தானே? எனக்கு இல்லாத உரிமையா?''

''அஃப்கோர்ஸ். — அந்த உரிமை உங்களுக்கு நிச்சயம் உண்டு — நம் கல்யாணம் நடந்த பிறகு!''

''ஓ.கல்யாணம் ஓர் அடையாளம் அவ்வளவுதானே. அமெரிக்காவில் ஒருவரை ஒருவர் கல்யாணம் பண்ணிக் கொள்வதைப் பற்றி யோசனையே செய்யாத ஆணும் பெண்ணும் மிகச் சுலபமாகத் தங்கள் இஷ்டப்படி இருப்பார்கள் தெரியுமா?''—

''இருக்கட்டும். அதற்காக.....?''

''இதிலொண்ணும் தப்பு இல்லை....'' அவன் அவளிடம் கெஞ்சினன்.

''ஓ....நோ....!''

''என்மீது அடிப்படை நம்பிக்கை கூட இல்லாமல் சந்தேகப்படுகிறவளோடு நான் வாழ்நாள் முழுதும் எப்படி வாழ முடியும்? நான் உன்னைக் கைவிட்டு விடுவேன் என்று நீ பயப்படுகிறாய்.''

''......''

''ஆல்ரைட்.... உன் மனம் புரிந்தது. நான் உன்னோடு வாழ முடியாது!''

''அத்தான்!'' — அவள் திகைப்போடு திரும்பினாள். அவள் கண்களில் ரத்தத் துளி போல் இரண்டு சொட்டு நீர் திரண்டிருந்தது.

அவன் எதுவுமே பேசவில்லை.

அவர்கள் சென்னை திரும்பும்போதும் மௌனமாகவே வந்தார்கள்.

அன்று மகாபலிபுரத்தில் சொன்னதையே ஊர்ஜிதம் செய்து விட்டான் அவன்.

யார் யாரோ சமாதானம் சொன்னார்கள். அவன் மசியவே இல்லை.

அவள் மனமும் இறுகிப் போயிற்று. ஓர் அளவுக்கு மேலே போனபோது அவள் தனக்கே உரிய பிடிவாதத்துடன் ''தட்ஸ் ஆல் ரைட்!'' என்று அவனைப் பார்த்துக் கூறிவிட்டு விலகி விட்டாள்.

அவன் திடீர் மனமாற்றத்தின் காரணம் புரியாமலேயே அவன் பெற்றோர் அவனுக்கு வேறு இடத்தில் பெண் பார்க்கக் கிளம்பினர்.

தான் அவனுக்கு உடன்பட மறுத்தது சரியே என்று அவளைப் பொறுத்தவரை உறுதியாக நம்பினாள்.

சம்பந்தமே இல்லாமல் தன் ஆபீஸின் நினைவும் 'அவன்' நினைவும் வந்தது.

உள்ளத்தில் தாங்க முடியாத காதலைச் சுமந்து கொண்டு எவ்வளவோ நாகரிகமாக நடந்து கொண்ட அவன் மீது அவளுக்குத் தன்னையும் மீறி மதிப்பும் மரியாதையும் விழுந்திருந்தது.

மழை பெய்கிற இரவில் தன்னைத் தனியாக அழைத்து வந்தபோதும் கௌரவமாக நடந்து கொண்டதும், மற்றும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவன் அவளை மதித்து, அவள் உணர்ச்சிகளை மதித்து, நாகரிகமாக நடந்து கொண்டதும் அவள் நினைவுக்கு வந்தன.

கடைசி நாள் அவன் அம்மாவின் கடிதத்தைக் காட்டியபோது அவள் அவன் இதயத்தையே உடைக்கிற விதமாகப் பேசிய

## மாலை மாற்றல்!

ராஜாஜி பக்தர்களில் என். எஸ். வரதாச்சாரியார் முக்கியமானவர். ராஜாஜியின் வேண்டுகோளுக்கு இணங்கித் தேர்தலில் போட்டியிட்டார்.

தேர்தலில் வாக்காளர்கள் அளித்த வோட்டுச் சீட்டுகளை அதிகாரிகள் எண்ணிக் கொண்டிருந்தனர். எதிர்த்து நின்ற அபேட்சகரை விட என். எஸ். வரதாச்சாரிக்குக் கூடுதலாகவே ஒவ்வொரு பெட்டியிலும் வாக்குகள் விழுந்திருப்பதைப் பார்த்து விட்டு இன்னும் பத்தாயிரம் வாக்குச் சீட்டுகள் எண்ண வேண்டிய தருணத்தில் தமக்கு இனி வெற்றி கிடைக்காது என்று வீட்டுக்கு நழுவினர், எதிர்த்தரப்பாளர்.

தேசபக்தர் என். எஸ். வரதாச்சாரியாரே வெற்றி பெறுவார் என்று அவரது ஆதரவாளர்கள் மாலைகளுடன் வந்து குழுமிவிட்டார்கள். ஆனால் என்ன அதிசயம்! அடுத்து எண்ணப்பட்ட பத்தாயிரம் வாக்குகளில் எதிர்த்த அபேட்சகரே அதிக எண்ணிக்கை பெற்றுத் தேர்தலிலும் ஜெயித்து விட்டார்!

அந்தத் தருணம் என். எஸ். வரதாச்சாரியார் என்ன செய்தார் தெரியுமா? தமக்காக வந்த அத்தனை மாலைகளையும் எடுத்துக் கொண்டு வெற்றி பெற்ற அபேட்சகர் வீட்டுக்குச் சென்று அவருக்கு அணிவித்துப் பாராட்டினர்.

[ராஜாஜி அவர்களின் நூறு பொன் மொழிகள் அடங்கிய 'Voice of Wisdom' என்னும் ஆங்கில நூல் வெளியீட்டு விழாவில் கேட்டது. திரு. எஸ். வி. எஸ். தயாரித்தளித்துள்ள அந்நூலின் விலை ரூ. 2. கிடைக்குமிடம்: காரியதரிசி ராஜாஜி நூற்றாண்டு விழா கமிட்டி, 18, முதல் கிராஸ் தெரு, சென்னை-35.]

தகவல்: சுந்தா

போதும் அவன் மௌனமாகவே அதைத் தாங்கிக் கொண்ட மன உறுதியை நினைத்துக் கொண்டாள்.

மேல் நாட்டுக்குப் போய்ப் படிப்புடன் சேர்த்து வேண்டாத விஷயங்களைக் கற்றுக் கொண்டு வந்து அதைத் தன்மீது திணிக்க நினைக்கிற அத்தானை விடத் தன் எண்ணங்களுக்கும், தனக்கும் பூரண சுதந்திரம் தந்து தன்னைக் கௌரவமான ஓர் இடத்தில் வைத்துப் பூஜிக்கிற அவனே மேல் என்று அவளுக்குத் தோன்றியது.

அவள் மீண்டும் ஆபீசுக்குப் போனாள். எல்லோரிடமும் கலகலப்பாகப் பேசினாள். அவள் கண்கள் அவனை ஆவலுடன் தேடின.

அவளுக்கு அவனை மிகவும் பிடித்தது.

அவன் அழைக்காமல் அவளே அவன் அறைக்குப் போனாள். பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று தயங்கினாள்.

அவன் பேசினான். ''உன் கல்யாணம் என்ன ஆச்சு? நிச்சயம் நீ சொன்னப்போல என் கல்யாணத்துக்குத் தம்பதி சமேதராய் வரணும். இதோ என் கல்யாணப் பத்திரிகை. முதல் பத்திரிகை உனக்குத்தான்.''

அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

மௌனமாக அவன் நீட்டிய பத்திரிகையை வாங்கிக் கொண்டாள்.

மௌனமாகவே வெளியே நடந்தாள்.

அவன் ஆசைப்பட்டபோது அவள் பேசவில்லை. அவள் நினைத்தபோதோ....

அவன் பேச்சு முடிந்திருந்ததே!

# ஐடிஐ-எல்லா வகையான டெலிகம்யூனிகேஷன் சாதனங்களையும் உருவாக்குகிறது

இந்நாட்டில் டெலிகம்யூனிகேஷன் உபகரணங்களை உருவாக்குபவர்களில் முன்னோடியாக இருப்பவர்கள் ஐடிஐ.

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட ஐடிஐ இன்று மகத்தானதோர் தொழிற்பேட்டையாக, 9 தொழிற்கூடங்களையும், 25,000 தொழிலாளர்களையும் கொண்ட மாபெரும் ஸ்தாபனமாக வளர்ச்சியடைந்துள்ளது.

டெலிபோன் சாதனங்கள், ஸ்ட்ரோகர், கிராஸ்பார் எக்ஸ்சேஞ்சுகள், எலக்ட்ரானிக் எக்ஸ்சேஞ்சுகள் மைக்ரோவேவ், யூஹெச் எஃப்-விஹெச் எஃப் சிஸ்டம்கள், காக்ஸியல் கேபிள் சிஸ்டம்கள், விஎஃப்டி, சாடலைட் எர்த் ஸ்டேஷன் கருவிகள், இன்னும் ஏராளமான டெலிமீட்ரி, டெலிகண்ட்ரோல் சிஸ்டம்கள் இத்தனையும் தயாரிக்கிறது ஐடிஐ.

உலகின் பல நாடுகளில் 'டர்ன்கீ' இன்ஸ்டலேஷன்களை அமைத்துக் கொடுக்கும் பணியை ஏற்று முடித்துக் கொடுத்தும், ஆலோசனைகளை வழங்கியுள்ளது ஐடிஐ. டெலிகாம் சாதனைகளை இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, கிழக்கு ஆப்பிரிக்கா, ஜோர்டான், சவூதி அரேபியா, ஓமன், நேபாளம், ஸ்ரீலங்கா, ஐக்கிய அரபு நாடுகள், சுரினேம் போன்ற நாற்பது நாடுகளுக்கு அளித்துள்ளது ஐடிஐ.

**செய்திப் போக்குவரத்து எங்கள் தொழில்**

**ஐடிஐ**

**இந்தியன் டெலிபோன் இண்டஸ்டிரீஸ் லிமிடெட்**

பெங்களூர் - நைனி - ஸ்ரீநகர் - பாலக்காடு - ரேபெரேலி



# அக்டோபர் 19 முதல் நவம்பர் 5 வரை

# வெகுமதி காலம்!

எங்கள் ஆண்டு விழாவை சிறப்பிக்க அளிக்கிறோம்.
எமது ஷோரூமிற்கு வாருங்கள்.
அழகிய அணி, மணி, ஆபரணங்களைக் காணுங்கள். ரூ. 1,500 அதற்கு மேற்பட்ட ரொக்க வியாபாரத்துக்கு அழகிய வெகுமதி அளிக்கிறோம். மேலும் அதிகமாக வாங்குபவர்களுக்கு அதிக அளவில் வெகுமதியுண்டு.

பொன்னான வாய்ப்பு இது.
வந்து, மகிழ்ந்து வெகுமதி
பெற்றுச் செல்லுங்கள்!



**உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்**

111, பாண்டி பஜார், மாம்பலம்,
சென்னை 600 017. போன்: 442500

ADWAVE/VSJ 930

மாயாவி

## 10. கலைஞன்! பல்லாவரம்! ராஜாமணி!

மோகனுக்கு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை!

அநாதையாக ரோட்டில் கிடந்த ஒரு பெண் மீது அவன் இரக்கம் காட்டப் போய், பால் வார்த்த கரத்தையே தீண்டிய பாம்புபோல் அவள், அவன்தான் தன்னைக் கெடுத்தான் என்று பழி சுமத்தி விட்டாள்!

சுதா ஏன் தன் மீது ஓர் அபாண்டத்தைச் சுமத்த வேண்டும் என்பதை அவன் சிந்தியாமல் இல்லை!

ராஜாமணியைத் தனக்குத் தெரியவே தெரியாது என்று சுதா ஒரு முட்டாக மறுத்தாலும், அது உண்மையல்ல. அவனுடன் போகப் பிரியப்படாமலோ, அல்லது வேறு ஏதேனும் காரணத்தை ஒட்டியோதான் அவள் அப்படிச் சொல்லியிருக்க வேண்டும். ராஜாமணியின் வீட்டிலிருந்து அவள் வெளியேறியதற்குக் காரணம், அவளுக்கும், அவன் மனைவிக்கும் ஏற்பட்ட சண்டையாக மட்டும் இருக்க வேண்டுமே ஒழிய, தான் கருவுற்றது தெரிந்ததாலும் அவள் வெளியேறியிருக்கலாம் என்று ராஜாமணி கூறியது சரியல்ல. அவன் கூறியது போல் அவளுக்கும் வேறு ஒரு பையனுக்கும் நட்பு ஏற்பட்டிருக்கலாம். ஆனால் உடல் தொடர்பு ஏற்பட்டிருக்க முடியாது. சுதா கருவுற்றதற்குக் காரணமான உடல் தொடர்பு அவள் ராஜாமணியின் வீட்டை விட்டு வெளியேறிய பிறகே ஏற்பட்டிருக்க வேண்டும். இரவு என்னைப் போலவே காரில் வந்த யாரோ ஒருவன் அவளைக் கெடுத்து விட்டுப் போயிருக்கிறான். சுதாவைக் கெடுப்பதற்கு முன் அவன் அவளுடன் பேச்சுக் கொடுத்திருக்க வேண்டும். தன்னுடைய போதாத காலம் தன் குரலைப் போலவே அவன் குரல் இருந்திருக்கிறது. அவளுக்கோ கண் தெரியாது; குரலைக் கொண்டுதானே ஆட்களை இனம் கண்டுகொள்ள முடியும்? எனவே நான்தான் அவளைக் கெடுத்தவன் என்று அவள் உறுதியாக நம்பி விட்டாள்!

இப்படி ஒரு விபரீதச் சூழ்நிலையில் சுதா தன்னை மாட்டி வைத்து விட்ட போதிலும், மோகனுக்கு அவள்மீது கோபமோ, வருத்தமோ ஏற்படவில்லை; பச்சாத்தாபந்தான் பிறந்தது! சுதாவைக் கெடுத்தவன் யார் என்பதைக் கண்டுபிடித்தே ஆகவேண்டும் என்று துணிந்தான்.

ஆயினும், துரும்பைப் பிடித்துக் கொண்டு ஒருவன் மலையேறிவிட முடியாதே! இவ்விஷயத்தில் மோகனுக்குக் கிடைத்திருந்த தடயங்கள் துரும்புக்குச் சமமானவைதாம். ஒன்று — அந்த நபரின் குரல் தன் குரலைப் போலவே இருக்க வேண்டும் என்பது. அடுத்தது — குரல் தன் குரலைப் போலவே இருக்க வேண்டுமென்றால் அவன் ஏறக்குறைய தன் வயதுடைய இளைஞனாகவே இருக்க வேண்டும் என்பது. மூன்றாவது — அவன் கார் வைத்திருப்பவனாகவோ, கார் ஓட்டத் தெரிந்தவனாகவோ இருக்க வேண்டும் என்பது.

இந்த மூன்றாவது விஷயத்தை அவன் ஒரு தடயமாகக் கருதியதற்கும் அன்று சுதா, "நன்றி சார்! அந்த மட்டும் நடுரோட்டிலே கவனிக்கறவங்க இல்லாதபடி கிடக்கவிடாமல் என்மேலே இரக்கம் காட்டி மாம்பலம் வரையிலே கொண்டு வந்து சேர்த்தீங்களே" என்று கூறினாளே, அதுதான் காரணம். அதாவது, "காரிலே வந்த நீங்க என்னைக் கெடுத்துப்புட்டு நான் மயக்கம் அடைஞ்சதும் எப்படியும் போகட்டும்ன்னு ரோட்டிலே நாதியற்றுக் கெடக்கும்படி விட்டிட்டுப் போகாமல் ஓங்க காரிலேயே தூக்கிப் போட்டுக்கிட்டு நகரத்திலே கொண்டு வந்து சேத்தீங்களே!" என்பதைத் தானே அவள் அப்படிக் கூறியிருக்க வேண்டும்?

சரி, இந்த மூன்று தடயங்களின் அடிப்படையில் அவன் குற்றவாளியைக் கண்டு பிடித்து விடுவது சுலபமா, என்ன?

ஒவ்வொரு நாளைக்கு ஒன்றிரண்டு தியேட்டர், சபாக் கொட்டகை அல்லது ஹோட்டல் என்று புரோகிராம் போட்டு வைத்துக் கொண்டு, தினசரி வேலை ஸ்தலத்திலிருந்து நேரே அந்த இடங்களுக்குச் சென்று சலித்து வந்தபோது, ஒருநாள் மயிலாப்பூரிலிருந்த ஒரு தியேட்டரில் தற்செயலாகக் கல்யாண சுந்தரத்தையும் ஜெயாவையும் கண்டான்.

அவர்களும் அவனைப் பார்த்துவிட்டார்கள். ஜெயா கழுத்தை ஒரு நொடிப்பு நொடித்துக் கொண்டு தியேட்டருக்குள்ளே சென்று விட்டாள். ஆனால் கல்யாணசுந்தரம் நின்றார்.

"வணக்கம் சார்!" என்று கூறியபடி மோகன் அவர் அருகே சென்றான்.

"வணக்கம், மிஸ்டர் மோகன்! எங்கே இப்படி? நீங்க சினிமாவுக்கெல்லாம் வரமாட்

டங்களே!'' என்ற அவர் கேள்வியில் விசாரணையைவிட ஏநயாண்டியே அதிகமாக மிதந்தது.

அவன் அழமாட்டாக் குறையாக நடந்ததையெல்லாம் அவரிடம் கூறத் தொடங்கினன்.

''இப்போ எதுக்கு அந்தக் கதையெல்லாம்?'' என்று கல்யாண சுந்தரம் அவன் பேச்சை இடை வெட்டினர். ''யார் செய்த புண்ணியமோ, அந்தப் பொண் அன்னைக்கு ஓங்க சயருபத்தைக் காட்டப் போய், நாங்க பிழைச்சோம். ஒங்களுக்குத் தெரியுமா, மிஸ்டர் மோகன்? ஒங்க கல்யாணத்துக்கே நான் அரை மனசோடுதான் சம்மதம் கொடுத்தேன். ஏன்னு, என் பொண் தன் ஆயுசு முழுக்கக் கலையையே ஆராதிக்கணுமின்னு, அவ வெறும் ரசிகனைவிட, கலையை அப்யசிச்ச ஒருவனை, ஏதாவது ஒருவகையிலே கலைஞன்னு சொல்லக் கூடிய ஒருத்தனைத்தான் கல்யாணம் செய்துக்கணும் என்கிறது என் எண்ணம். அதனுலே இந்தக் கல்யாண ஏற்பாட்டை நிறுத்த வேண்டிய சந்தர்ப்பம் வந்தபோது நான் அடைஞ்ச சந்தோஷத்துக்கு அளவே இல்லே. அந்த சந்தோஷத்தோடு சந்தோஷமா அவளுக்கு வேறே இடத்திலே ஒரு மாப்பிள்ளையும் ஃபிக்ஸ் பண்ணிட்டேன்.''

''அப்படியா சார்!'' என்று கூறியபோது மோகனின் குரலில் சுருதி இறங்கியிருந்தது. ''மிஸ் ஜெய குமாரியை மனைவியாக அடையப் போகிற அந்தப் பாக்கியசாலி யார்ன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''நல்லா தெரிஞ்சுக்கலாமே! மெட்ராஸ் காரர்தான். பல்லாவரத்திலே இருக்கார். பேர் ராஜாமணி!''

''அப்பா! மெயின் பிச்சர் ஆரம்பமாகப் போகுது; வர்றீங்களா?'' என்று டிரஸ் சர்க்கிள் என்ட்ரன்ஸ் வாசலருகே வந்து குரல் கொடுத்தாள் ஜெயா.

''ரைட்டோ! பார்ப்போம்'' என்று கூறி விட்டுக் கல்யாண சுந்தரம் நடந்தார்.

மோகன் அவருக்கு விடையளிக்கும் முகமாக ஏதும் கூறவில்லே. அவன் நினைவு எங்கோ சுழன்றது.

கலைஞன்! பல்லாவரம! ராஜாமணி!

இரண்டு விஷயங்கள் அவன் மனத்தை நெருடின. 'ஓஹோ!' என்று சொல்லத் தக்க விதத்தில் இல்லா விட்டாலும், கல்யாண சுந்தரம் ஓரளவு வசதியானவர். சுதாவின் மாமனே கல்யாண சுந்தரத்தின் அருகில் நிற்கக் கூடத் தகுதியற்றவன். என்ன தான் ஒரு கலைஞனே தனக்கு மருமகனுக வர வேண்டும் என்ற தீவிர எண்ணம் கொண்டிருந்தாலும், இப்படிப்பட்ட ஒருவனைக் கல்யாண சுந்தரம் தேர்ந்தெடுத்திருப்பாரா? இது ஒன்று.

இன்னென்று: அன்று ராஜாமணி தனக்குத் திருமணம் ஆகி மனைவி இருப்பதாகவும், அவளுக்கும் சுதாவுக்கும் ஒத்துக் கொள்ள வில்லே என்றும் சொன்னுனே! அது பொய்யா? அல்லது அது தெரியாமல் கல்யாணசுந்தரம் அவனை மருமகனுகத் தேர்ந்தெடுத்து விட்டாரா?

இந்த நினைவுகளின் ஊடே மோகனுக்கு இன்னெரு விஷயமும் திடீரென்று நினைவுக்கு வந்தது. 'ஆமாம்; ''வர்ற ஞாயிற்றுக்கிழமை சுதாவைக் கோயிலுக்குக் கூட்டிக் கிட்டுப் போறதாகப் பொய் சொல்லி, ஒங்க வீட்டிலே கொண்டு விட்டுடறேன்'' என்று அவன் அன்று ராஜாமணியிடம் சொல்லியிருந்தானே! குறிப்பிட்ட அந்த ஞாயிற்றுச்கிழமை போய் மேலும் இரண்டு ஞாயிற்றுக் கிழமைகள் சென்று விட்டனவே! ராஜாமணி ஏன் இன்று வரையில், ''என்ன சார் ஆச்சு?'' என்று ஒப்புக்கு ஒரு வார்த்தை கேட்கக்கூடத் தன்னைத் தேடி வரவில்லே?

எங்கேயோ ஏதோ சூது நிகழ்ந்திருக்கிறது என்று இப்பொழுது மோகனின் மனம் அடித்துச் சொல்லியது. அது சுதா விஷயமாக இருக்கலாம்; அல்லது ஜெயா விஷயமாக இருக்கலாம். நல்லவேளே! அன்று ராஜா



மணியின் விலாசத்தைக் குறித்து வாங்கிக் கொண்டது வீட்டில்தான் இருக்கிறது.

மோகன் புறப்பட்டு விட்டான்!

பல்லாவரம் ஊரிலிருந்து ஒரு மைல் தள்ளிப் புதிதாக உருவாகியிருந்த காலனியின் முகவரி அது. நான்கு ரோடுகள் சந்திக்கும் இடம் ஒன்றில், பெட்ரோமாக்ஸ் லைட் எரிந்து கொண்டிருந்த பெட்டிக் கடை முன் வண்டியைக் கொண்டு வந்து நிறுத்தினான். கடை வாசலில் போடப் பட்டிருந்த பெஞ்சில் நான்கு — ஐந்து பேர் அமர்ந்து அரசியலை அலசிக் கொண்டிருந்தனர்.

''ஏங்க, இங்கே 414—ஆம் நம்பர் வீடு எங்கங்கே இருக்கு? ராஜாமணின்னு ஒரு டான்ஸ் மாஸ்டர் வீடு அது.''

கடைக்காரர் உட்பட அங்கே இருந்தவர்கள் யாரும் மோகனின் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. ஒருவரையொருவர் பார்த்து அர்த்த புஷ்டியுடன் சிரித்துக் கொண்டனர்.

''என்னய்யா சிரிக்கிறீங்க?'' என்று அவன் கேட்டான்.

''ஒண்ணும் இல்லே, சார்!'' என்று மழுப்பினார் கடைக்காரர்.

''சும்மா சொல்லுங்க.''

''என்ன சார், ஒண்ணும் தெரியாதவங்க கணக்கிலே பேசறீங்க? டான்ஸ் காரர் வீட்டைத் தேடி இருட்டின பெறகு ஒருத்தர் வந்தார்னா, எதுக்காக, வந்திருப்பார் என்கிறது இந்தக் காலனி முழுக்கத் தெரியுமே சார்! இப்படி இந்த ரோட்டிலேயே போனிங் கன்னா, பிச்சக் கைப்பக்கம் தனியா மாடிவீடு ஒண்ணு வரும். அதான் சார், நீங்க தேடி வந்த வீடு. போய் ஜாலியாயிருந்திட்டு வாங்க.''

மோகனைத் திகிலில் ஆழ்த்தியது இந்தத் தகவல். 'அப்படியென்றால்...?' என்று ஓடத் தொடங்கிய தன் எண்ணக் குதிரையைக் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து நிறுத்திவிட்டு, காரிலிருந்து கீழே இறங்கி வந்தான்.

''காம்பா இருக்கா கடைக்காரரே?''

''இருக்கு சார்; ஒக்காருங்க'' என்ற கடைக்காரர், பெஞ்சில் உட்கார்ந்திருந்தவர்களை நோக்கி, ''டேய் சோமாறிகளா! எழுந்திரிச்சுப் போங்கடா! சார் ஒக்காரட்டும்'' என்று அதட்டினான்.

''அண்ணனும் கிராக்கி புடிக்கிறாரு; வாங்கடா போவோம்'' என்று அவர்கள் நகர்ந்ததும், கடைக்காரர் மெதுவான குரலில், ''சார்! காம்பா மட்டும் போதுமா? வேறே ஃபாரின் சரக்கு வேணும்னாலும் இருக்கு. டான்ஸ்காரர் வீட்டிலே ராவு தங்கறவங்களுக்கெல்லாம் வழக்கமா நம்ப கடையிலேயிருந்து தான் சரக்குப் போகும்!'' என்றார்.

மோகன் சிரித்து விட்டு, ''எனக்கு காம்பாவும் வேண்டாம்; நீங்க சொன்ன சரக்குகளும் வேண்டாம். ஒங்க டான்ஸ்காரரைப் பத்திச் சில தகவல்கள் சொன்னீங்கன்னா போதும். இந்தாங்க, இதை வைச்சுக்குங்க.'' அவன் பாண்ட் பாக்கெட்டில் கைவிட்டு பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து நீட்டினான்.

''சார்! நீங்க சி. ஐ. டியா?'' கடைக்காரரின் குரலில் கலவரம் தெறித்தது.



மானேஜர்: நம்ம ஆபீஸிலே நிறைய லெட்டர் எழுதிச் செலவு பண்ணுகிறோமாம், செலவைக் குறைக்கணுமாம்... லெட்டர் வந்திருக்கு.

டைப்பிஸ்ட்: நான்கூடச் சொல்லலாம்னு? இருந்தேன் ஸார். பேசாமல் தந்தி அடிக்கலாமே? எனக்கும் வேலை மிஞ்சும்!

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

''அதெல்லாம் ஒண்ணும் இல்லே; பயப்படாதீங்க. சும்மா வாங்கிக்குங்க'' என்று மோகன் அவர் கையை இழுத்து அதில் நோட்டைத் திணித்தான்.

கடைக்காரர் அரை மனத்துடன் பணத்தை வாங்கிக் கொண்டு. ''கேளுங்க சார்!'' என்றார்.

''ஒங்க பேச்சிலிருந்து ராஜாமணி என்ன தொழில் செய்துக்கிட்டிருக்கார் என்கிறதைப் புரிஞ்சுக்கிட்டேன். கடைக்காரரே! அப்படீன்னா அவர் டான்ஸ் ட்ரூப் ஒண்ணும் வச்சு நடத்திக்கிட்டிருக்கலேயா?''

''மொதல்லே டான்ஸ் ட்ரூப்தான் வைச்சு நடத்திக்கிட்டிருந்தாரு, சார். ரிக்கார்ட் டான்ஸ்! ஆனா இப்பத்தான் ரெண்டு மூணு வருஷமா, எக்சிபிஷன்கள்ளெ ரிக்கார்ட் டான்சையே நிறுத்திட்டாங்களே, அதனாலே அந்த ட்ரூப்பைச் சேர்ந்த பொண்ணுங்களோடு. இன்னும் சில பொண்களேயும் சேர்த்துக்கிட்டு. இந்தத் தொழில்லே எறங்கிட்டாரு.''

''ராஜாமணி கல்யாணம் ஆனவரா?''

''ஆங்... ஆங்... இப்பக்கூட பெண்டாட்டின்னு ஒருத்தி இருக்கா அவருக்கு. ஆனா இவ அவருக்கு எத்தனாவது சம்சாரமோ?''

''அப்படின்னா?''

''ஆளு, பெரிய மனுசங்க கணக்கிலே நல்லா டிரஸ் பண்ணிக்கிடுவாரு. ஊர் ஊராப் போவாரு. பெரிய ஹோட்டல்கள்ளெ ரூம் எடுத்துத் தங்குவாரு. டாக்சி அது இதுன்னு தடபுடல் படுத்துவாரு. அஞ்சு மில் இருக்கு! ஏழு எஸ்டேட் இருக்குன்னு அளப்பாரு. சோத்துக்கே லாட்டிரி அடிச்சுக்கிட்டிருக்கிற குடும்பத்தைச் சேர்ந்த அழகான பொண்ணு கண்ணிலே தட்டுப் பட்டா கல்யாணம்னு பண்ணிக்கிட்டோ, இல்லே, வேறே ஏதாவது தகிடுதத்தம் பண்ணியோ கூட்டிக்கிட்டு வந்திடுவாரு. கொஞ்ச நாளைக்குத் தனக்குன்னு வைச்சுக்கிட்டுப் பெறகு தொழில்லே ஈடுபடுத்திடுவாரு!''

மோகன் நினைத்தான்: 'அப்போ, கல்யாண சுந்தரத்தையும் அவன் அப்படி மயக்கி இருப்பதற்குச் சான்ஸ் இருக்கும்போலிருக்கே! சரி, ஜெயா விஷயம் ஒருவாறு தெளிவாகி விட்டது; அடுத்து சுதா விஷயத்தையும்

கொஞ்சம் தூண்டித் துளைத்துப் பார்க்கலாம்,

''அது சரி, கடைக்காரரே! இன்னும் ஒரே ஒரு விஷயம். ராஜாமணி கிட்டே வந்து மாட்டிக்கிட்ட பொண்கள்ளே, கண் தெரியாத பொண் யாராவது உண்டா?''

கடைக் காரர் அவனை ஆச்சரியத்துடன் பார்த்து, ''சார்! நீங்க நிச்சயமா சி. ஐ. டி. தான், சந்தேகமில்லே!'' என்றார். தொடர்ந்து கூறினார்: ''பரவாயில்லே. யாராயிருந்தா என்ன? நான் என்ன பொய்யா சொல்லிட்டேன்? ஆனா சார், இந்தத் தகவலையெல்லாம் நான் சொன்னதாக வெளியே தெரிவிக்க வேண்டாம்.''

கடைசியாக அவர் மோகனின் கேள்விக்கும் விடை பகர்ந்தார்:

''இருந்தா சார்! கண்ணுதான் இல்லையே தவிர, கிளியாயிருக்கும் பொண்ணு. 'டேய் கபாலி! இவளுக்குக் கண்ணு மட்டும் தெரிய வைச்சிட்டா, இவ ஒருத்தி மூலம் மட்டுமே தினம் ஐந்நூறு ரூவா சம்பாதிப்பேண்டா!'னு ராஜாமணி எங்கிட்டேகூட ஒரு வாட்டி சொல்லியிருக்காரு. ஆனா, இப்போ என்னவோ கொஞ்ச நாளா அந்தப் பொண்ணு கண்ணிலே தட்டுப் படலே. கண் சிகிச்சைக்காக எங்கேயாச்சும் கொண்டு போய் விட்டிருக்காரோ, என்னவோ?''

மோகன் எழுந்து விட்டான். அவன் தெரிந்து கொள்ள விரும்பிய விஷயங்கள் எல்லாவற்றையுமே தெரிந்து கொண்டு விட்டான்! (தொடரும்)

# தச்சோளி அம்பு

கேரள நாட்டு வரலாற்றிலே இணையற்ற வீரனாக வாழ்ந்தவன் தச்சோளி உதயணன். சொல்ல முடியாத வாள் வீரன் அவன். கொட்டும் மழையில் குடை பிடித்துப் போவார் மாந்தர். ஆனால் இம் மாவீரனோ தன் வசமுள்ள வாளினால் தன் தலையைச் சுற்றி வீசிக் கொண்டு போவான். துளி மழையும் தன்மீது விழாமல் தடுத்து விடுவான். அவனுடைய வாள் எப்படிப் பட்டது? சாட்டை போல் நீண்டது. சுருள்வாள் என்றும் அதற்குப் பெயர். துவளும் சாட்டை போன்ற அந்த வாளைச் சுழற்றிப் போரிடத் தனிப்பட்ட திறமை வேண்டும். அந்தத் திறமை தச்சோளி உதயணனிடம் இருந்தது. வீரத்தினால் வெல்ல முடியாத அவனை வஞ்சனையினால் கொன்று விடுகிறார்கள். மாவீரன் தச்சோளி உதயணனாக நடிகர் திலகம் சிவாஜி கணேசன் தோன்றுகிறார். அவர் மனைவியாகப் புன்னகை அரசி கே. ஆர். விஜயா வருகிறார்.

வஞ்சனையால் கொன்ற தன் மாமனின் மரணத்துக்குப் பழி வாங்கும் வீரனாக வருகிறார் பிரேம் நசீர். அவர் பெயர்தான் தச்சோளி அம்பு.

கேரள நாகரீகம், பண்பாடு, முடியலங்காரம், உடை, கோட்டை, நடனம், போர் முறை எல்லாம் தத்ரூபமாகக் கண்முன் நிறுத்துகிறார்கள், சினிமாஸ்கோப் வண்ணப்படமான தச்சோளி அம்புவில். நடிகர் திலகம் வருவது ஒருசில காட்சிகளானாலும் நினைவில் நிற்கும்படியாகச் செய்திருக்கிறார்.

கௌசௌ



# பனி நிலவு

## 11. அந்தக் குரல்!

**மாயாவி**

ஒரே கல்லில் இரண்டு கனிகளை வீழ்த்தியது போல், பல்லாவரத்து விசாரணை இரண்டு விஷயங்களை மோகனுக்குத் தெளிவு படுத்தி விட்டது. ஒன்று — ஜெயாவும் கல்யாண சுந்தரமும் ஏமாற்றப் பட்டு விட்டார்கள் என்பது! மற்றொன்று — சுதா ராஜாமணியால் வேசைத் தொழிலில் ஈடு படுத்துவதற்காக வஞ்சகமாக அழைத்து வரப் பட்டவளேயன்றி, அவனுடைய உறவினள் அல்ல என்பது!

ஜெயா விஷயத்தில் அவன் உடனே மேல் நடவடிக்கை எடுத்தே ஆக வேண்டும். தான் கேட்டறிந்த தகவல்களைக் கல்யாணசுந்தரத்திடம் தெரிவித்து 'ராஜா மணியைப் பற்றி நன்கு விசாரித்துக் கொண்டு திருமண முயற்சியில் இறங்குங்கள்' என்ற அளவுக்காவது அவரை எச்சரித்தே ஆக வேண்டும்!

மாம்பலத்தை நோக்கிக் காரை ஓட்டிக் கொண்டே மோகன் மேலும் சிந்திக்கலானான். அன்று தற்செயலாகத் திரைப்பட அரங்கில் கல்யாண சுந்தரத்தைச் சந்தித்திரா விட்டால் என்ன ஆகியிருக்கும் என்பது பற்றி அவன் சிந்தனை விரிந்தது.

ஆவது என்ன? அவன் பாட்டுக்குத் தன் பழியைத் துடைக்கும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டிருப்பான். அவனுக்குத் தெரியாமலேயே ஜெயாவுக்கும் ராஜாமணிக்கும் திருமணம் நடந்தேறியிருக்கும். அந்தப் பாடும் பைங்கிளி இந்த ருத்ராட்சப் பூனையின் மனைவியாகி அவன் வீட்டுக்குள் வருவாள். சில நாட்கள் அவன் மனைவியாக வாழ்வாள். பிறகு... பிறகு?

நினைத்துப் பார்க்கவே மோகனின் குடல் நடுங்கியது!

''ஐயோ! ஜெயா! ஒங்கப்பா ஒன்னை எப்படிப்பட்ட நரகத்திலே தள்ள இருக்கார் என்கிறது ஒனக்குக் கொஞ்சமாவது தெரியுமா?'' என்று வாய் விட்டே புலம்பி விட்டான் அவன்.

திருமணத்தைத் தடுப்பது அவ்வளவு சுலபமல்ல என்பதும் அவனுக்குத் தோன்றாமல் இல்லை. தம் மகளுக்கு நடக்க விருக்கும் கல்யாணத்தைத் தடுத்து நிறுத்த ஏதோ சூழ்ச்சி செய்கிறான் என்றுதான் எடுத்த எடுப்பில் கல்யாண சுந்தரம் நினைப்பார். ஜெயா தன் மீது கொண்ட வெறுப்பினால் அப்படி ஏதாவது சொல்லத்தான் செய்வாள்.

'சொல்லட்டும்; பரவாயில்லை. என்னைத் திட்டட்டும்; தூற்றட்டும்; நான் பொருட்படுத்தப் போவதில்லை. வலுக் கட்டாயமாகக் கல்யாணசுந்தரத்தைக் காரில் தூக்கிப் போட்டுக் கொண்டாவது, பல்லாவரத்துக்குப் போய், பெட்டிக் கடைக்காரர் கபாலியை விட்டே ராஜாமணியின் குட்டையெல்லாம் உடைக்கச் செய்வேன். தேவையானால் இரவு நேரத்தில் அவரை ராஜா மணியின் வீட்டுக்கே அழைத்துச் சென்று அங்கே நடைபெறும் அவலங்களைக் காட்டுவேன். அதன் பிறகுகூட ஒரு தந்தை தன் மகளைப் படுகுழியில் தள்ளுவாரா, என்ன? தள்ளுவாரானால், ஜெயாவை அவளைப் படைத்த ஆண்டவனாலும் காப்பாற்ற முடியாதுதான்.

இத்தகைய நினைவுகளைச் சுமந்தவாறு மோகன் பங்களாவுக்குத் திரும்பியபோது இரவு ஒன்பது மணிக்கு மேல் ஆகி விட்டது. இவ்வளவு நேரத்துக்கு மேல் அவன் மந்தைவெளிப் பாக்கம் செல்ல விரும்பவில்லை. அத்தை வேலவனூருக்குப் போனபிறகு செய்திருந்த ஏற்பாட்டின் படி வீட்டு வேலையாள் முருகேசன் ஹோட்டலிலிருந்து டிஃபன் காரியரில் இரவுச் சாப்பாடு எடுத்து வந்து அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தான். ஆனால் மோகனுக்குச் சாப்பாட்டில் நாட்டமில்லை. அதை முருகேசனையே கொண்டு போய்ச் சாப்பிடும்படி கூறி வீட்டுக்கு அனுப்பியபின் பங்களாக் கதவுகளை மூடித் தாழிட்டு விட்டு, படுக்கையை விரித்துப் படுத்தான்.

படுத்தானே தவிர, தூங்கி விடவில்லை. இரவு நெடுநேரம் வரையில் நினைவுச் சுமை அவனை அழுத்திக் கொண்டே இருந்தது; அலை அலையாக எழுப்பிச் சுருண்டு கொண்டே இருந்தது. கடைசியாக அவன் கண்ணயர்ந்த போது சுவர்க் கடிகாரம் பன்னிரண்டு முறை ஒலித்தது!

ஒரு புதுநாள் தொடங்கி விட்டது!

அன்று பார்த்து வேலை ஸ்தலத்தில் அவன் நேரடியாகக் கவனிக்க வேண்டிய முக்கியமான பணி ஒன்று இருந்தது. எப்படியும் காலை எட்டு மணிக்குள் அங்கே இருந்தாக வேண்டும். ஆதலால் ஐந்து மணிக்கே எழுந்து விட்டான். கல்யாணசுந்தரத்தைச் சந்தித்து விஷயத்தைச் சொல்லி விட்டு, மயிலாப்பூரிலேயே ஹோட்டல் ஒன்றில் டிஃபனை முடித்துக் கொண்டு வேலை ஸ்தலத்

துக்குப் போகலாமென்ற யோசனையில் காலைக் காரியங்களைக் கவனித்தான்.

குளித்துத் தயாராகி வெளியே வந்து பார்த்த போது, என்ன துரதிருஷ்டம்! காரின் முன் சக்கரம் ஒன்றின் டியூப் பஞ்சராகி யிருந்தது. முருகேசனை உதவிக்கு வைத்துக் கொண்டு பஞ்சரான முன் சக்கரத்தைக் கழற்றி விட்டு, ஸ்டெப்னியை மாட்டினான். இந்த வேலையில் ஈடுபட்டதால் பாண்டு, சட்டையெல்லாம் அழுக்காகி விட்டன. வீட்டுக்குள்ளே போய், கைகழுவி வேறு டிரஸ் மாட்டிக் கொண்டு வந்து காரில் ஏறி, கைக் கடிகாரத்தில் மணியைப் பார்த்தான். மணி சரியாக ஏழு! டிஃபனை வேலை ஸ்தலத்துக்கு வாங்கி வரச் செய்து சாப்பிட்டுக் கொள்வோம். கல்யாணசுந்தரத்தைச் சந்தித்து விடுவோம் என்ற முடிவுடன் காரை ஸ்டார்ட் செய்ய டாஷ் — போர்டில் சாவியைச் செருகினான். அப்பொழுது தற்செயலாகப் பார்வை ஃபியூயல் கேஜை நோக்கிச் செல்லவே அங்கே அவனை இன்னும் தாமதப்படுத்த வேறொன்று காத்திருந்தது.

டாங்கிலுள்ள பெட்ரோலின் அளவைக் காட்டும் ஃபியூயல் கேஜின் முள் ஜீரோவைத் தொட்டு நின்றது! பெட்ரோல் பங்குக்குக் காரை ஓட்டினான்.

அதிகாலை நேரமாதலால் அப்பொழுது பங்கில் ஒரே ஒரு பையன்தான் இருந்தான். அவனும் அப்பொழுது லாரி ஒன்றுக்கு டீஸல் போட்டுக் கொண்டிருந்தான். அப்பப்பா! அந்த லாரியின் டீஸல் டாங்க் வயிறுதான் எவ்வளவு பெரியது! பதினைந்து நிமிடங்கள் ஆகிவிட்டன. பங்க் பாய் அதன் வயிற்றை நிரப்பி, ரப்பர் குழலை வெளியே எடுக்க. பிறகு தான் அவன் மோகனின் காருக்குப் பெட்ரோல் போட வந்தான். காருக்குப் பெட்ரோல் நிரப்பவும், பில் போட்டுப் பணம் கொடுக்கவும் மேலும் ஐந்து நிமிடங்கள் ஆகி விட்டன. இனி கல்யாணசுந்தரத்தைப் பார்த்துச் சொல்ல வேண்டிய விவரங்களைச் சொல்லவும் முடியாது; டிஃபனும் சாப்பிட முடியாது. வேறு வழியில்லை; சாயங்காலம் வேலை ஸ்தலத்திலிருந்து திரும்பும் போதுதான் அவர்களைச் சந்திக்க முடியும். அதற்குள் தலை போகிற காரியம் ஏதும் நடைபெற்றுவிடாது என்ற எண்ணத்துடன் பெட்ரோல் பங்கிலிருந்து காரை நேரே வேலை ஸ்தலத்தை நோக்கிச் செலுத்தினான்.

வேலை ஸ்தலத்திலும், அபசகுனம் போல் ஒரு துயர நிகழ்ச்சி நடைபெற்றது. அன்று மாலை நான்கு மணியளவில் சிற்றாள் ஒருவன் தலையில் செங்கல் கூடையுடன் இருபது அடி உயரத்தில் இருந்த சாரத்திலிருந்து தவறி விழுந்து விட்டான். பலத்த காயம். அன்றாடக் கூலிகளாக வேலை பார்ப்போர், வேலையில் ஈடுபட்டிருக்கையில் சாதாரண விபத்துக் குள்ளானால் கூடக் கண்டிராக்டர்தான் அவர்களுக்கு இலவச மருத்துவ உதவி அளிக்க வேண்டும் என்று சட்டம் இருந்தது. அப்படி ஒரு சட்டம் இல்லாவிட்டால்கூட எங்கோ ரோட்டில் மயங்கிக் கிடந்த ஒரு பெண்ணைக்



காப்பாற்றப் போய் வீண் வம்பை விலைக்கு வாங்கிக்கொண்ட மோகன், தன்னிடம் வேலை பார்த்த ஒருவன் படுகாயமுற்றிருக்கையில் வாளாயிருந்து விடுவானா? அவனைத் தன் காரிலேயே தூக்கிப் போட்டுக் கொண்டு, ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து எமெர்ஜென்ஸி வார்டில் சேர்த்து, சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்தான். சிகிச்சைகள் முடிந்து காயமடைந்தவனுக்கு நினைவு திரும்பிய பிறகுதான் ஆஸ்பத்திரியை விட்டுப் புறப்பட்டான்.

அப்பொழுது இரவு மணி ஏழு. இனி அவன் வேலை ஸ்தலத்துக்குத் திரும்ப வேண்டியதில்லை. உடன் வந்த மேஸ்திரி முதலியோரை வீட்டுக்கு அனுப்பி விட்டு, மந்தைவெளிப்பாக்கத்துக்கு விரைந்தான் ஆனால் அங்கே..?

கல்யாணசுந்தரத்தின் வீடு பூட்டியிருந்தது!

எங்கே போய் விட்டார்கள் தந்தையும் மகளும்? வேறு எங்கே இந்த நேரத்தில் போயிருக்கப் போகிறார்கள்? அன்று சனிக் கிழமையோ, ஞாயிற்றுக் கிழமையோகூட இல்லை; எனவே சபாக் கச்சேரி இருக்க வாய்ப்பில்லை



இருந்தாலும் கல்யாண சீசன் இன்னும் முடிந்து விடவில்லையே! ரிசப்ஷன் கச்சேரி ஏதாவது உள்ளூரிலோ, வெளியூரிலோ இருக்கலாம்; அதற்காக அவர்கள் போயிருக்கலாம்.

'சரி, பூட்டியிருக்கும் வீட்டின் முன் எவ்வளவு நேரம் காத்திருக்க முடியும்? நாளைக் காலையில் மீண்டும் வருவோம்' என்று மோகன் காரை ஸ்டார்ட் செய்ய 'ஸ்விட்ச் கீ'யைத் திருப்பினானோ, இல்லையோ, 'சர்' ரென்று டாக்சி ஒன்று எதிரே வந்து நின்றது; கல்யாண சுந்தரமும், ஜெயாவும் வந்து விட்டனர். ஜெயா கையில் ஒரு காஸெட் டேப் ரிக்கார்டருடன் ஒரு பக்கம் இறங்கி வீட்டுக் கதவைத் திறக்கச் சென்றாள்; கல்யாண சுந்தரம் மற்றொரு பக்கமாக இறங்கி, டாக்சி டிரைவருக்கு மீட்டரைப் பார்த்துப் பணம் கொடுக்கச் சென்றார். மோகனின் அம்பாசடர் அவர்கள் வீட்டு வாயிலுக்கு நேரே மலைபோல் நின்று கொண்டிருந்தும், அது நிற்பதையோ, அதில் அவன் அமர்ந்திருப்பதையோ சட்டை செய்யாதவர்கள் போல் அவர்கள் நடந்து கொண்ட விதம் அவனைக் கிலேசமடையச் செய்தது.

## 160 ஆண்டு ரகசியம்!

பி.பி.ஸி. தகவல் ஒலிபரப்புத் துறை, இந்தியா பற்றி ஒரு நிகழ்ச்சி தயாரித்து அளிக்க விரும்பியது. பார்க்லே பாங்கில் கணக்கு வைத்திருந்த வாரன் ஹேஸ்டிங்ஸ் கணக்கு விவரங்களைத் தரும்படி பி.பி.ஸி. அந்தப் பாங்கைக் கேட்டது.

பாங்க் அதிகாரிகள் அளித்த பதில்: "எவ்வளவு வருடங்கள் ஆனாலும் இந்தப் பாங்கின் வாடிக்கையாளரின் கணக்கு வழக்குகளை நாங்கள் இரகசியமாகவே பாதுகாக்கிறோம். யாருக்கும் சொல்வதற்கில்லை"

வாரன் ஹேஸ்டிங்ஸ் இறந்த வருடம்: 1818

—தி கார்டியன் - சாமி

'அட பாவிகளா! துரும்பைவிடத் திரணமாக என்னை மதித்து இப்படி அலட்சியம் செய்கிறீர்களே! காலாந்த காலமும் கையெடுத்துக் கும்பிடும்படியான ஒரு நல்ல காரியத்தைச் செய்யவே நான் வந்து காத்திருக்கிறேன் என்பதை நீங்கள் அறிந்தால்...?' என்று எண்ணிய அவன், அவர்களுடைய அக்கறையின்மையைப் பொருட் படுத்தாமல் காரிலிருந்து இறங்கி, "வணக்கம் சார்!" என்று கூறியபடி கல்யாணசுந்தரத்தை நோக்கி நடந்தான்.

"ஓ! மோகனா? வணக்கம். எங்கே இந்தப் பக்கம்?" — கல்யாணசுந்தரம் அவனை நோக்கித் திரும்பாமல் வீட்டை நோக்கி நடந்தார். மோகனைத் தம்முடன் வருமாறு அழைக்கவில்லை.

அவர் அழைக்கா விட்டாலும், தழையைப் பின்பற்றி நடக்கும் ஆட்டுக் குட்டியைப் போல் அவன் அவரைப் பின்தொடர்ந்தான். தொடர்ந்து கொண்டே, "ஒங்க மகளை ஒரு பாழுங் கிணத்திலே தள்ள இருந்தீங்களே சார்!" என்ற விஷயத்துக்கு வந்தான்.

அவர் நிற்பார்; திடுக்கிட்டுத் திரும்புவார்; "என்ன மோகன் சொல்றீங்க?" என்று அலறுவார் என்றெல்லாம் எதிர்பார்த்த அவன் ஏமாற்றமே அடைந்தான். கல்யாண சுந்தரம் எந்தவித உணர்ச்சியையும் வெளிப்படுத்தாமல் வீட்டினுள்ளே சென்று இரண்டு பிரம்பு நாற்காலிகளைக் கொண்டு வந்து வராந்தாவில் போட்டார். ஒன்றில் தாம் அமர்ந்து, மற்றொன்றில் அமரும்படி மோகனுக்கு ஜாடை காட்டி விட்டு, "என்ன இது, புதுசா ஏதோ அதிர்வெடி போடறீங்க?" என்று அமைதியாகக் கேட்டார்.

"அதிர்வெடிதான் சார்! மிஸ் ஜெயகுமாரியின் வாழ்க்கைக்கே அதிர்வெடி! நீங்க ஒங்க டாட்டருக்குக் கணவனா தேர்ந்தெடுத்திருக்கீங்களே, பல்லாவரத்து ராஜாமணி என்கிற கலைஞன்! அவன் யார் தெரியுமா?.." மோகன் சரளைக் கற்களைக் கொட்டினாற் போல் தான் கண்டு, கேட்ட விவரங்களைப் பொல பொலவென உதிர்த்தான்.

குறுக்கீடு ஏதுமின்றி அவன் கூறியது அனைத்தையும் செவி மடுத்து விட்டுப் பெரிதாகச் சிரித்தார் கல்யாணசுந்தரம். "மிஸ்டர் மோகன்! அந்த மாதிரி ஓர் அயோக்கியனை நான் என் மகளுக்குக் கணவனாத் தேர்ந்தெடுத்திருப்பேன்னு நினைச்சீங்களே, ஒங்களுக்கு மூளை கலங்கிப்போச்சா?"

இந்த ஒரு வார்த்தையிலேயே வெள்ளம் வடிவதைப் போல் தன் மனத்திலிருந்த நினைவுச் சுமை குறைவதை உணர்ந்தான் மோகன். "அப்படின்னா, அந்தப் பல்லாவரத்துக் கலைஞன் ராஜாமணி...?" அவன் கேள்விக் கொக்கியுடன் அவர் முகத்தை நோக்கினான்.

"அவர் ஒரு டாக்டர்! கண் டாக்டர்!"

"கலைஞர்ன்னு சொன்னீங்களே?"

"கலைஞருந்தான்! நல்லா பாடக் கூடியவர்! முறையா சங்கீதம் கத்துண்டவர்! ஆனா அதைத் தொழிலா கொள்ளலை. வைத்தியத்தைத் தொழிலா நடத்திக்கிட்டிருக்கார். 'ஜி. எச்'சிலே ஆப்தல்மிக் டிப்பார்ட்மென்ட் ஹெட்டாயிருக்கிற இளைஞர்!"

கல்யாணசுந்தரம் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, வீட்டினுள்ளேயிருந்து, இனிமையான குரல் — ஆண் குரல் ஒன்று மோகன ராகத்தை ஆலாபனை செய்வது கேட்டது.

கல்யாணசுந்தரம் தொடர்ந்தார்: "பாடறது அவர்தான். இப்போ நாங்க பல்லாவரத்துக்குப் போய் அவரைப் பாடச் சொல்லிச் சில அபூர்வ கீர்த்தனங்களை ரிக்கார்டு பண்ணிக்கிட்டு வந்தோம்!"

மகுடி வாசிப்பில் கட்டுண்ட நாகம்போல் பாட்டு வந்த திசையில் செவிப் புலனைத் திருப்பிச் சிலையானான் மோகன்.

ஆனால், அப்பொழுது அவன் சிந்தையைக் கவர்ந்தது சங்கீதம் அல்ல; அந்தச் சங்கீதத்தைப் பொழிந்த குரல்!

ஆ! அது அவன் குரல் போலவே இருக்கிறதே!

(தொடரும்)

# பனி நிலவு

## 12. டாக்டர் ராஜாமணி

மாயாவி

அவன் குரலே அசலாக ஒரு குரல் பாடுகிறது. குரலின் ஏற்ற இறக்கம், உச்சரிப்புத் தன்மை, சொல் வேகம், பாவம், எல்லாமே அவனை ஒத்திருக்கின்றன. இந்த டேப்பை மோகனின் பங்களாவில் ஒலிக்கக் கேட்டால், அவனை அறிந்த யாருமே, அவன்தான் அந்தப் பாட்டைப் பாடுபவன் என்று சத்தியங்கூடச் செய்வார்கள்.

அப்படியானால் இந்தக்குரலுக்குரிய டாக்டர் ராஜாமணிதான் சுதாவைக் கெடுத்தவரா?

இருக்கலாம் என்று கருதச் செய்வதற்குச் சாதகமான நிலைகள் இரண்டு மோகனுக்கு அப்பொழுது நினைவுக்கு வந்தன. ஒன்று — இந்த டாக்டரும் பல்லாவரத்தில் வசிப்பவர் என்பது; மற்றொன்று — ராஜாமணி சுதாவைக் கண் சிகிச்சைக்காகக் கொண்டு போயிருக்கலாம் என்று பல்லாவரத்துப் பெட்டிக் கடைக்காரர் கபாலி கூறியதால், அந்தக் கண் டாக்டர் இவராகவே இருக்கலாம் என்பது.

டாக்டர் ராஜாமணி இளைஞர், திருமணம் ஆகாதவர் என்றால், ஏன் அவர் சுதாவின் அழகினால் மனச் சலனம் அடைந்து தம்மிடம் சிகிச்சைக்காக ஒப்படைக்கப்பட்ட அவளைக் கெடுத்திருக்கக் கூடாது? அதற்கு வாய்ப்பு இருக்கத்தான் இருக்கிறது.

அவர் ஒரு பெரிய கண் சர்ஜன்; அரசுப் பொது மருத்துவ மனைக் கண் சிகிச்சைப் பிரிவின் தலைவர். எனவே அவரிடம் கார் இருப்பதும் சாத்தியமே.

சாதகமான நிலைகளைப் போலவே பாதகமான நிலைகளும் இரண்டொன்று அவன் நினைவில் நெருடாமல் இல்லை.

ராஜாமணி சுதாவை இவரிடம் கண் சிகிச்சைக்காகக் கொண்டு வந்து விட்டிருந்தால், அவளுக்கு இவர் ஒரு கண் டாக்டர் என்பது கூடவா தெரியாமல் போயிருக்கும்? தெரிந்திருந்தால், தன்னுடன் இரண்டு மாதங்கள் தங்கி, தான் ஒரு கண்டிராக்டர், ஓர் ஆர்க்கிடெக்ட் என்பதை நன்கு உணர்ந்த சுதா, குரல் ஒற்றுமையைக் கொண்டு தான் அவனைக் கெடுத்து விட்டதாகப் பழி சுமத்தியிருக்க முடியாதே! — இது ஒரு நெருடல்.

இன்னொன்று — 'சரி. டாக்டர் ராஜாமணியே சுதாவைக் கெடுத்தார் என்று வைத்துக் கொண்டாலும், அவர் எதற்காக அதிகாலை நேரத்தில் தம்மிடம் சிகிச்சைக்காக ஒப்படைக்கப்பட்ட ஒருத்தியைத் தம் காரில் ஏற்றி வந்து மயக்கமடைந்த நிலையில் நடு ரோட்டில் விட்டுச் செல்ல வேண்டும்?'

இவ்வாறு அவனுடைய சந்தேகம் சாதக—பாதக நிலைகளுக்கிடையே சிக்கியிருந்த போதிலும், அதை அலசி ஆராயாமல் ஒதுக்கிவிட அவன் மனம் ஒப்பவில்லை.

ஒதுக்கி விடுவதா? கடலில் விழுந்து கரை சேர வழியின்றித் தத்தளித்தவனுக்கு, ஒரு மரத் துண்டு கிட்டியிருக்கிறது. அதைப் பற்றிக்கொண்டு கரை சேர முடியுமா என்று முயன்று பார்க்காமல், அற்ப மரக் கட்டைதானே என்று ஒதுக்கி விடுவதா?

''என்ன மிஸ்டர் மோகன், என்ன யோசிக்கிறீங்க?'' என்று கல்யாணசுந்தரம் அவன் சிந்தையைக் கலைத்தார்.

''ஒன்றும் இல்லை, சார்!'' என்று கூறி விட்டு அவன் நாற்காலியிலிருந்து எழுந்தான்.

''ஒக்காருங்க, மோகன்'' என்று அவர் அவனை அமர்த்தி விட்டுத் தொடர்ந்து சொல்வார்: ''மோகன்! ஒங்களோடு எனக்குச் சில காலத்துப் பழக்கந்தான். இருந்தாலும் ஒங்களைவிட வயசிலே பெரியவன் என்கிற உரிமையோடு சொல்றேன். நீங்க மனப் பூர்வமாகத்தான் ஜெயாவை விரும்பினீங்க. கல்யாணம் செய்துக்கவும் முயற்சி செய்தீங்க. ஆனா, எதிர் பாராதபடி ஒங்க வாழ்க்கையில் அந்தக் கண்ணில்லாத பொண் குறுக்கிட்டிட்டா. இளமை வேகத்திலே தவறும் நேர்ந்து போச்சு. இதே தவறு, நீங்க ஜெயாவைக் கல்யாணம் செய்துக்கிட்டப்புறம் நடந்திருந்தா, நானாகட்டும், ஜெயாதான் ஆகட்டும், அதை ஒதுக்கித்தான் இருப்போம். ஆனா, அதை ஒங்க துரதிர்ஷ்டம்னு சொன்னாலும் சரி; எங்க நல்ல அதிருஷ்டம்னு சொன்னாலும் சரி, கல்யாணத்துக்கு முன்னே அது நடந்தது மட்டுமில்லே; அதனாலே பாதிக்கப்பட்ட பொண்ணை ஜெயாவின் கையைப் புடிச்சுக்கிட்டு 'எனக்கு அவரை விட்டுத் தாங்க'ன்னு கெஞ்சியும் இருக்கா. விஷயம் இவ்வளவு தூரத்துக்கு வளர்ந்திட்டப்புறம் நீங்க ஜெயாவை அடைய ஆசைப் படறதோ, அதுக்காக, அவளுக்கு நான் தேர்ந்தெடுத்திருக்கிற மாப்பிள்ளை கிட்டே என்ன குற்றம்—குறை இருக்குன்னு தூண்டித் துளைச்சுப் பார்த்து இந்தக் கல்யாணத்தை நிறுத்திட முயற்சி செய்யறதோ நேர்மையும் இல்லை; கண்ணியமும் இல்லை. அதனாலே, ஒங்க பொன்னான நேரத்தைப் பிரயோஜனம் இல்லாத காரியங்களிலே செலவிடறதை விட்டிட்டு, பேசாம அந்தப் பொண்ணையே கல்யாணம் செய்துக்குங்க. சரி, நான்

வரேன்.'' மோகனை எழுந்து போகச் சொல்லும் முகமாகக் கல்யாணசுந்தரம் அவனிடம் விடை பெற்றுக் கொண்டு வீட்டுக்குள்ளே நடந்தார்.

மோகன் எழுந்தான். எழுந்தபடி மனத்தினுள் சொல்லிக் கொண்டான். 'கல்யாண சுந்தரம் அவர்களே! என் சந்தேகம் மட்டும் மெய்யானு, சுதாவை நான் கல்யாணம் செய்துக்க மாட்டேன், ஐயா! இப்போ நீங்க ஒங்க பொண்ணுக்கு மாப்பிள்ளையாக நிச்சயம் செய்திருக்கீங்களே, அந்த டாக்டர் ராஜா மணிதான் அவளைக் கல்யாணம் செய்துப்பார்; செய்துக்க வைப்பேன்!'

லாட்டிஸ்பிரிட்ஜில் அப்பொழுது கட்டிக் கொண்டிருந்த பங்களாவின் அருகே, மோகன் வேறு ஒருவருக்கு பங்களா கட்டிக் கொடுத்திருந்தான். அந்தப் பங்களாவில் டெலிஃபோன் இருந்தது. அங்கிருந்து மறு நாள் பகலில் அவன் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் ஃபோன் செய்து டாக்டர் ராஜா மணியுடன் பேசினுன்: ''மார்னிங், டாக்டர். என் பேர் மோகன். நான் ஒரு இன்ஜினியரிங் கண்டிராக்டர்; ஒரு ஆர்க்கிடெக்ட். டி. நகரிலே போக் ரோட்டிலே இருக்கேன். ஒங்களை நேரிலே பார்த்துக் கொஞ்சம் பேசணும்.''

''என்ன சமாசாரம், மிஸ்டர் மோகன்?'' என்று கேட்டார் டாக்டர் ராஜாமணி.

''ஒரு ஆப்தல்மிக் சர்ஜன் கிட்டே வேறே எதைப் பற்றிப் பேசப் போறேன்? ஒரு கேஸ் விஷயமாகத்தான்.''

''அப்படியா? அப்போ, ஈவ்னிங் ஃபோர்—ஓ— கிளாக் வரையிலே நான் இங்கேதான் இருப்பேன்; வாங்க. பேசலாம்.''

''ஆனு டாக்டர், நான் சாயங்காலம் அஞ்சு — அஞ்சரை வரையிலே ஓர்க்—ஸ்பாட்டை விட்டுப் புறப்பட முடியாது. அதுக்கப்புறம் ஒங்களை எங்கே சந்திக்கலாம்?''

''அப்படியானு, நீங்க என் ரெசிடென்சுக்குத்தான் வரணும். ஆனு, நான் இருக்கறது பல்லாவரமாச்சே!''

''பரவாயில்லே. எங்கிட்டே கார் இருக்கு பல்லாவரத்துக்கே வரேன். மே ஐ நோ யுவர் அட்ரஸ் ப்ளீஸ்?''

''குறிச்சுக்குங்க. நம்பர் ஃபார்ட்டி த்ரீ, சவுத் பஜார் ரோட், பல்லாவரம்.''

''தாங்க் யூ, டாக்டர். சாயங்காலம் சந்திக்கிறேன்.''

''யூ ஆர் வெல்கம்.''

ஃபோனில் குரலை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லைதான். எனினும், டாக்டர் ராஜாமணியின் பேச்சுப் பாணி, தன் பேச்சுப் பாணியை ஒத்திருந்ததைக் கண்டு மோகன் ஊக்கமடைந்தான்.

அன்று மாலை ஆறு மணி அளவில் மோகன் டாக்டர் ராஜாமணியின் வீட்டை அடைந்தபோது, தன்னுடையதைப்போலவே ஓர் அம்பாசடர் கார் வாசலில் நிற்பதைக் கண்டான். நிச்சயமாக அது டாக்டருடைய தாகத்தான் இருக்க வேண்டும். காரின் நம்பரைக் கவனித்துக் கொண்டிருக்கையில்,

''இஸிட் மிஸ்டர் மோகன்?'' என்று தன் குரலே எதிரொலிப்பது கேட்டுத் திரும்பினுன். தன் வயது, தன்னைப் போன்ற உடல் ஆகிருதி உள்ள ஒருவர், வீட்டிலிருந்து வந்து உரிமையுடன் அவன் கையைக் குலுக்கியபடி, ''டாக்டர் ராஜாமணி'' என்ருர்.

''மோகன், டாக்டர். கிளாட் டு மீட் யூ.''

''கிளாட் டு மீட் யூ. என்ன, என் காரின் நம்பரைப் பார்க்கிறீங்க?''

''ஒரு நாலு மாசத்துக்கு முன்னே ஒருநாள் ஏர்லி மார்னிங் ஃபோர் — ஃபோர் தர்ட்டிக்கு நீங்க இந்தக் காரிலே ஸிட்டிக்குப் போய்க்கிட்டிருந்தீங்களோ?''

''எஸ், ஐ ரிமெம்பர். அன்றைக்கு என் டாக்டர் ஃப்ரெண்ட் ஒருத்தர் பம்பாய் மெயில்லே வந்தார். அவரை ரிஸீவ் பண்றதுக்காக ஸென்டிரலுக்குப் போய்க்கிட்டிருந்தேன். அது என்ன, குறிப்பா அதைப் பத்திக் கேக்கறீங்க?''

''அன்றைக்கு நான் அதே நேரத்துக்கு எங்க ஊருக்குப் போய்க்கிட்டிருந்தேன். கிண்டி பக்கத்திலே ஒங்க காரைக் கிராஸ் பண்ணினேன். ஒங்க கார் நம்பர் ஆயிரம் இல்லையா? மனசிலே அழியாமப் பதிஞ்சிடுத்து!''

மோகன் இப்படி ஏதோ சொல்லி மழுப்பினுன். ஆனுல், அவனுக்கு இப்பொழுது ஐம்பது சதவிகிதம் நிச்சயமாகி விட்டது — இவர்தான் சுதாவைக் கெடுத்தவர்!

டாக்டர் ராஜாமணி அவனை உள்ளே அழைத்துச் சென்று உட்காரச் செய்தார். பிறகு, ''சரி மிஸ்டர் மோகன், இப்பொழுது விஷயத்துக்கு வருவோம். ஒங்க கேஸைப் பற்றிச் சொல்லுங்க'' என்ருர்.

மோகன் தான் செய்திருந்த முடிவுப்படி அவருக்குப் பதிலிறுத்தான்: ''டாக்டர்! எங்க அத்தைக்கு ஒரு டாட்டர் இருக்கா. அவளுக்கு ரெண்டு வயசிலேயே கண் பார்வை போயிட்டுது. இருந்தாலும், எனக்கு முறைப் பெண் ஆனதினுலே, அவளை நான்தான் கட்டிக்கணும்ன்னு என் பெற்ருேரும் அத்தையும் வற்புறுத்தருங்க. பார்வை இழந்த ஒருத்தியைக் கட்டிக்கிட்டு வாழ்நாள்



முழுக்கக் கஷ்டப்பட முடியுமா, டாக்டர்? அதனுலே, மொதல்லே அவளுக்குப் பார்வை கிடைக்கச் செய்ய வழியிருக்கான்னு பார்க்க விரும்பறேன்.''

டாக்டர் சொன்னுர்: ''மிஸ்டர் மோகன்! இப்பவெல்லாம் கண் சிகிச்சை ரொம்ப அட்வான்ஸ் ஆகியிருக்கு. பிறவியிலேயே பார்வை இழந்தவங்களுக்குங்கூட மாற்று விழி பொருத்திப் பார்வை பெறச் செய்யற அளவுக்கு ட்ரீட்மெண்ட் வளர்ச்சி அடைஞ்சிருக்கு. ஆனு, ஒரு பேஷண்ட்டுக்குப் பார்வை கிடைக்கச் செய்யறதும், செய்ய முடியாமப் போறதும் அந்த ஆளுடைய கண் உள்ளுறுப்புகள் எந்த அளவுக்கு டாமேஜ் ஆயிருக்கு என்கிறதைப் பொறுத்தது. ஆகையினுலே ஒங்க அத்தையின் டாட்டரை எக்ஸாமின் பண்றதுக்கு முன்னே நான் ஏதும் உறுதியா சொல்ல முடியாது. பேஷண்ட் எங்கே இருக்காங்க?''

''திண்டிவனத்துக்குப் பக்கத்திலே வேலவனூர் என்கிற கிராமந்தான் என் சொந்த ஊர். அங்கே இருக்கா.''

''அப்போ போய்ப் பேஷண்டைக் கூட்டிக்கிட்டு வாங்க. பார்த்து என்னுலே எது செய்ய முடியுமோ, செய்யறேன்.''

''எப்போ கூட்டிக்கிட்டு வரலாம், டாக்டர்?''

''எனி டே.''

''வர்ற ஸண்டே அழைச்சுக்கிட்டு வரட்டுமா?''

''எமர்ஜென்சி கேஸ் இருந்தாலன்றி ஸண்டே ஹாஸ்பிட்டலுக்குப் போகிறதில்லே. ஆல்ரைட். ஒங்க கேசை எமர்ஜென்சி கேசா எடுத்துக்கறேன். ஞாயிற்றுக் கிழமை பத்து மணி சுமாருக்கு பேஷண்டோடு ஜி.எச்.சுக்கு வாங்க.''

''தாங்க் யூ டாக்டர்.''

''யூ ஆர் வெல்கம்.''

அடுத்து வந்த சனிக் கிழமை இரவு எட்டு மணிக்கு மோகனின் கார் வேலவனூரில் நுழைந்து அவன் வீட்டு வாசலில் வந்து நின்றது. இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வெளித் திண்ணை விளக்கொளியில் ஜகதீசன் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். காரிலிருந்து இறங்கி வந்த மகனை அவர் வரவேற்கவில்லை. அவருக்கு அவன் மீது அவ்வளவு கோபம்.

மோகன், ''அப்பா!'' என்றபடி அவரை நெருங்கினுன்.

''எங்கடா வந்தே?''

அவன் அவருக்குப் பதில் கூறுவதற்குள், கார்ச் சத்தமும் மகனின் பேச்சுக் குரலும் கேட்டு, வீட்டுக்குள்ளேயிருந்து கனகமும், அவளைத் தொடர்ந்து பொன்னம்மாளும் திண்ணைக்கு விரைந்து வந்தனர்.

''மோகனு! என்னடா இப்படி எங்களையெல்லாம் அடியோடு மறந்திட்டே?'' என்று மகனின் கைகளைப் பிடித்துக் கொண்டு புலம்பினுள் கனகம்.

''மோகன்! ரெண்டு மாசத்திலே எளைச்சுத் துரும்பாப் போயிட்டியேடா!'' என்று நெஞ்சுருகினுள் பொன்னம்மாள்.

''சரி, சரி; ஒங்க அங்கலாய்ப்பெல்லாம் இருக்கட்டும். அவன் இங்கே ஏன் வந்தான்? எதுக்கு வந்தான்னு கேளுங்க



மொதல்லே!'' என்று ஜகதீசன் கடுமையுடன் கூறினர்.

''என்னங்க இது? ரெண்டு மாசத்துக்குப் பெறகு வீட்டுக்கு வந்திருக்கிற புள்ளேயைப் போய் இப்படியெல்லாம் விரட்டறீங்க?'' என்று கனகம் அவரைக் கடிந்தாள்.

''காரியமாகத் தான் வந்தேன், அப்பா'' என்று மோகன் சாந்தமாகப் பதிலளித்தான்.

''என்னடா காரியம்?''

''என்னேக்குச் சுதாவைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதிக்கிறியோ அன்னேக்கு ஊருக்கு வந்தாப் போதும்னு சொன்னீங்கில்லேயா? அவளேக் கட்டிக்கிற முடிவோடு இப்போ வந்திருக்கேன்.''

''மோகனு! ஒரு கண் தெரியாத பெண்ணேடு வாழ்ந்தாகும்படி ஆயிடிச்சேடா ஒன் தலேவிதி!'' என்று கனகம் புலம்பினள்.

அவளுடைய புலம்பலின் எதிரொலிபோல் திண்ணேயை அடுத்த அறையிலிருந்து விசும்பல் ஒன்று வெளிப்பட்டது. மோகன் பார்வையை அங்கே திருப்பினன். சுதாதான் தன் பிரார்த்தனே நிறைவேறி விட்டதுபோல் மேலே நோக்கிக் கைகூப்பிய படி விசித்துக் கொண்டிருந்தாள். கருவுற்றிருப்பதற்கான அடையாளங்கள் இப்பொழுது அவளிடம் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தன.

''இந்த நல்ல புத்தி ரெண்டு மாசத்துக்கு முன்னடியே வந்திருந்தா, காதும் காதும் வைச்சாப்பிலே கல்யாணத்தை முடிச்சிருக்கலாம் இல்லேயா? இப்போ...''

ஜகதீசன் சொல்ல வந்ததைப் பொன்னம்மாள் சொல்லி முடித்தாள்: ''ஆமாண்ணு, இப்போ அவ உண்டாயிருக்கிறது வெளிப் படையாத் தெரியத் தொடங்கிடிச்சு. இப்போ கல்யாணத்தை வைச்சுக்கிட்டா கேவலம்.''

கனகம் தேம்பிக் கொண்டே சொன்னள்: ''ஆமா, இந்த அழகான கல்யாணத்தை ஊரைக் கூட்டி, பந்தல் போட்டு, மேளம் கொட்டி வேறே பிரபலப் படுத்தணுமாக்கும். மயிலத்து ஆண்டவன் சந்நிதிக்கு ரெண்டு பேரையும் கூட்டிக்கிட்டுப் போயி ஒரு தாலியைக் கட்டச் செய்திட்டாப் போதும்.''

''அங்கே மட்டும் ஒன் மகன் ஒரு கர்ப்பிணிப் பொண்ணுக்குத் தாலி கட்டறதை நாலு பேர் பார்க்க மாட்டாங்களா, என்ன?'' என்ருர் ஜகதீசன்.

''அண்ணு! எனக்கு ஒண்ணு தோணுது'' என்று அவர்கள் பேச்சில் புகுந்தாள் பொன்னம்மாள்.

''என்ன?''

''மோகன் தான் அவளேக் கட்டிக்கறேன்னு சொல்லிட்டானே! கிணத்துத் தண்ணியை வெள்ளமா கொண்டு போயிடும்? கல்யாணத்தை சுதா பெத்துப் பொழைச்ச பெறகு எங்கேயாவது ரகசியமா நடத்திக்கிடலாம்.''

இந்த விவாதத்தையெல்லாம் கேட்டு மோகன் உள்ளூறச் சிரித்துக் கொண்டான். ஆனல், வெளிப் படையாக முகத்தில் விசனத்தைத் தேக்கிக் கொண்டு சொல்வான்: ''ஆமாம்ப்பா. அதுக்குள்ளே சுதாவுக்குப் பார்வை திரும்ப வழியிருக்கா என்கிறதையும் பார்த்திடலாம். மெட்ராஸ் ஜெனரல் ஆஸ்பத்திரியிலே ஒரு பெரிய கண் ஸர்ஜன் இருக்காங்க. அவங்ககிட்டே விசாரிச்சேன். பேஷண்ட்டைக் கூட்டிக்கிட்டு வாங்க, பார்க்கலாம்னு சொன்னுங்க. நாளேக்குக் காலேலே பத்து மணிக்கு அப்பாயிண்ட்மெண்ட் பிக்ஸ் பண்ணிட்டு வந்திருக்கேன்.''

''மயிலத்து ஆண்டவா! அப்படியாவது என் மோகனுவுக்கு ஒரு நல்ல வழி திறந்து விடப்பா!'' என்று கனகம் பிரார்த்தித்தாள்.

''அப்போ...?'' என்ருர் ஜகதீசன்.

''நாளேக்கு விடியக் காலம் நாம்ப எல்லாரும் சுதாவோடு மெட்ராஸுக்குப் போருேம்'' என்ருன் மோகன்.

**ம**றுநாள் காலே ஒன்பதரை மணிக்கெல்லாம் மோகன் தன் பெற்ருேர், அத்தை, சுதா ஆகியோருடன் சென்னே ஜெனரல் ஆஸ்பத்திரிக்குள் வந்து விட்டான். டாக்டர் ராஜாமணி வந்திருப்பாரோ என்னவோ என்ற சந்தேகத்துடன் என்கொய்ரியில் விசாரித்தான்.

''ஒங்க பேர் மோகனு?'' என்று கேட்டாள் என்கொய்ரிப் பெண்.

''ஆமா.''

''டாக்டர் ஒன்பது மணிக்கே வந்திட்டாங்க. நீங்க வந்தா அனுப்பச் சொன்னுங்க. போங்க. முதல் மாடியிலே ரூம் நம்பர் ஃபோர்ட்டீன்.''

மற்றவர்கள் பின் தொடர மோகன் டாக்டரின் அறையை அடைந்தான்.

''மார்னிங், டாக்டர்.''

''ஹலோ மோகன்! மார்னிங். பேஷண்டை அழைச்சுக்கிட்டு வந்திட்டீங்களா?''

''இதோ!'' தன் அத்தையின் கையைப் பிடித்துக் கொண்டு நின்ற சுதாவைச் சுட்டிக் காட்டினன் அவன்.

டாக்டரின் பார்வை அவள் பக்கம் திரும்பியதோ இல்லேயோ, ''குட் கிரேஷியஸ்! இவங்க...! இவங்க...!'' என்று பதறினர்.

அதே சமயம் அவருடைய உணர்ச்சிகளின் எதிரொலி போல், ''இவங்க...! இவங்க...!'' என்ற சொற்கள் சுதாவிடமிருந்தும் மென் குரலில் வெளிப் பட்டன! (தொடரும்)

மானேஜர்: ''உங்க மனேவி எங்க ஆபீஸில் வேலே செய்வது நான் செய்த பாக்கியம்.....''
''அப்படியா?''
''ஆமாம்! இல்லேன்ன நீங்க அவளுக்குத் தினமும் வாய்க்கு ருசியாகப் பண்ணிக்கொடுக்கிற டிபனில் எனக்குப் பங்கு கிடைக்காதே!''



# பனி நிலவு

மாயாவி

## 13. மங்களம்! சுப மங்களம்!

சுதாவின் உடலில் மெல்லிய நடுக்கம் ஏற்பட்டதை அவள் கையைப் பிடித்திருந்த பொன்னம்மாள் உணர்ந்தாள். அவள் அப் பெண்ணின் முகத்தைக் கூர்ந்து நோக்கியபடி அதே மென் குரலில், ''சுதா! என்னம்மா?'' என்று வினவினாள்.

டாக்டரின் பதற்றத்தைவிடச் சுதாவின் பதற்றந்தான், அவள் அருகே நின்ற ஜகதீசனையும் கனகத்தையும் கவர்ந்தது. அவர்களும் ஒருவிதப் பரபரப்புடன் அந்தப் பெண்ணையும் பொன்னம்மாளையும் நோக்கித் திரும்பினர்.

''அத்தை! இவங்க பேச்சுக் குரல்கூட ஓங்க மருமகன் பேச்சுக் குரல் போலவே இருக்குது, அத்தை!'' காற்றில் படபடக்கும் அரசமரத்து இலைகளைப் போல் சுதாவின் குரல் படபடத்தது.

விஷயம் புரியாத பொன்னம்மாள், ''ஆமா அதுக்கென்ன இப்போ? கொஞ்சம் பேசாம இரு. டாக்டரும் மோகனும் ஏதோ பேசிக் கிறுங்க; என்னன்னு கேப்போம்'' என்றாள்.

தன் கையைப் பற்றியிருந்த பொன்னம்மாளின் கரத்தை சுதா உலுக்கினாள். ''என்ன சுதா?'' என்று எரிச்சலுற்றாள் அவள்.

''அத்தை! ஒரு பெரிய தப்பு நடந்திடிச் சுன்னு நெனைக்கிறேன். கொஞ்சம் வெளியே வாங்களேன்.'' அவள் பொன்னம்மாளின் கையைப் பிடித்து இழுத்தாள்.

''ஒன்னோடு பெரிய தொல்லையாப் போச்சு, சுதா'' என்று சலித்தபடி பொன்னம்மாள் அவளை டாக்டரின் அறைக்கு வெளியே அழைத்துச் சென்றாள். அவர்கள் உரையாடலைச் செவி மடுத்த ஜகதீசனும் கனகமுங் கூட அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

அவர்களுடைய இந்த உரையாடலையோ, அவர்கள் நால்வரும் வெளியே சென்றதையோ கூடச் சட்டை செய்யாமல் மிகவும் சீரியஸ்ஸாகப் பேச்சில் ஈடுபட்டிருந்தனர் டாக்டர் ராஜாமணியும் மோகனும்.

கடைசியில் மோகனின் சந்தேகம் உறுதிப் பட்டு விட்டது. ஆயினும், டாக்டர் ராஜாமணி இவ்வளவு வெளிப்படையாகத் தம்மைக் காட்டிக் கொள்வார் என்று அவன் எதிர் பார்க்கவில்லை. அவராகத் தம்மை வெளிக் காட்டிக் கொண்டாரா, அல்லது தாம் குற்றமிழைத்த கன்னியைக் கண்டபோது ஏற்பட்ட அதிர்ச்சி அவரை அப்படிச் செய்யச் செய்து விட்டதா?

மோகன் இந்தக் கேள்வியை உள்ளடக்கிய படி, ஒன்றுமே அறியாதவன் போல், ''என்ன டாக்டர் இப்படி ஆச்சரியப் படறீங்க? இவ தான் என் அத்தையின் பெண் சுதா!'' என்றான் சாதாரணமாக.

''சுதா! பேர்கூட அதுதான்!'' என்று பழைய படபடப்பு அடங்காமல் மொழிந்தார் டாக்டர்.

எல்லாவற்றையும் அவர் வாய் வழியே வரவழைக்க விரும்பிய மோகன், ''இவளை முன்னேயே ஓங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''மிஸ்டர் மோகன், சுதா உண்மையிலேயே ஓங்க அத்தை மகள்தானா?''

''அதிலே என்ன சந்தேகம் டாக்டர்?''

''அப்படீன்னா, பல்லாவரத்திலே ராஜா மணி என்கிற என் பேரோடு டான்ஸ் மாஸ்டர் ஒருத்தர் இருக்காரே, அவர் ஓங்களுக்குச் சொந்தமா? நாலு மாசத்துக்கு முன்னே சுதா அவர்கிட்டே வந்து தங்கியிருந்தாங்களா?''

''ஏன்? அவளை நீங்க அங்கே சந்திச்சீங்களா?''

''ஆமா.'' — டாக்டரின் இந்தச் சொல்லில் ஒரு முடிவு தொனித்தது.

''அவளுக்குக் கண் பார்வை கிடைக்கச் செய்ய என்னைப் போலவே ராஜாமணியும் முயற்சி செய்தாரா?''

''இல்லே.''

''பின்னே?''

டாக்டர் இதற்குச் சட்டெனப் பதிலளித்து விடவில்லை. சற்று நேரம் மோகனின் முகத்தைத் தீட்சண்யமாகப் பார்த்தார். பிறகு மீண்டும் குரலில் முடிவு தொனிக்க, ''மிஸ்டர் மோகன்! உண்மையாகவே சுதா ஓங்களுக்கு உறவுக் காரின்னா, நான் ஓங்க கிட்டே மன்னிப்புக் கேட்டுக்கக் கடமைப்பட்டிருக்கேன்'' என்றார்.

முகத்தில் வியப்பைச் சிந்தியபடி மோகன், ''டாக்டர்! என்ன இது, மன்னிப்பு அது—இதுன்னு என்னென்னவோ சொல்றீங்க?'' என்று சொன்னான்.

டாக்டர் ராஜாமணி சட்டென்று அவன் கரங்கள் இரண்டையும் பற்றிக் கொண்டார். ''மோகன்! என்னை மன்னிச்சிடுங்க. நான் ஒரு குற்றவாளி. மனோ வேகத்துக்கு அடிமைப் பட்டுச் சுதாவைக் கெடுத்திட்ட மகா பாதகன்!'' அவருடைய குரல் கரகரத்தது. இமையோரங்களில் கண்ணீர் துளித்தது.

தன் நாடகத்தைத் தொடர்ந்து, ''டாக்டர்!'' என்று அலறினான் மோகன்.

ஆயினும் டாக்டரின் பரிதாபம் நிறைந்த முகத்தைப் பார்த்த போது அந்த நாடகத்தை அவனுல் நீடிக்க முடியவில்லே. தான் சுதாவைச் சந்தித்தது தொட்டு இன்று வரை நடந்த வற்றை — ஜெயாவுக்கும் தனக்கும் ஏற்பட்ட காதல்; அவளின் நிராகரிப்பு; இப்பொழுது அவள் தந்தை டாக்டரைத் தம் மருமக ஞக்கிக் கொள்ள நிச்சயித்திருப்பது உட்பட— சுருக்கமாகத் தெரிவித்தான். பிறகு, ''டாக்டர்! இப்போ நீங்க ஒங்க கதையைச் சொல்லுங்க'' என்ருன்.

டாக்டர் ராஜாமணி சொன்னர்: ''மிஸ்டர் மோகன்! மனுஷன் மனுஷனுக இருக்கத் தான் முயற்சி செய்யணுமே தவிர தேவனுக முயற்சி செய்யக் கூடாது. தேவனுக அவன் முயற்சி செய்தான்னு, தன் மனுஷத் தன் மையைக் கூட இழந்து மிருகமா மாறிடுவான். இது இப்போ எனக்குத் தெரியுது. ஆனு அப்போ?

''என்னுடை அந்த 'அப்போ' என் சிறு பிராயத்திலேயே தொடங்கிடிச்சு. அடங்காப் பிடாரியான எங்கம்மா கிட்டே எங்கப்பா பட்ட துன்பங்களும், அதன் காரணமா அவங்க தற்கொலேயை நாடினதும் சேர்ந்து, இந்த அனுபவம் நமக்கும் ஏற்பட்டிடக் கூடாது என்கிற வைராக்கியத்தை என் மனசிலே உருவாக்கிடிச்சு. அதனுலே என் வாழ்க் கையிலே தீவிர பிரம்மச்சரியத்தைக் கடைப் பிடிச்சுக்கிட்டு வந்தேன். காந்தி அடிகளேப் போலவே நாமும் வாழ்நாள் முழுக்க பிரம்மச் சரியத்தை அநுஷ்டிக்கணும் என்கிறது என் முடிவு.

''ஆனு, இங்கே நான் ஓர் அடிப்படையைச் சிந்திக்கத் தவறிட்டேன். காந்தி அடிகள் பல வருஷங்கள் இல்லறத்தை அநுபவிச்ச பெறகுதான் பிரம்மச் சரியத்தைக் கடைப் பிடிச்சார். ஆனு நானே, தொடக்கத்தி லிருந்தே தீவிர பிரம்மச்சாரியாக இருக்கத் தலேப் பட்டேன். அப்படி இருக்க முடியும்; பல முனிவர்கள் அப்படி பிரம்மச்சாரிகளாக இருந்திருக்காங்க. ஆனு எனக்கு அந்த அளவு மனேதிடம் இல்லே.

''பெருக்கெடுத்து ஓடற நதி நீரைத் தடுத்து அணேக் கட்டு பலமாக இல்லேன்னு, அது அந்த அணேயையும் உடைச்சுக்கிட்டுத் தானே பாயும்? அந்த நிலேக்கு நான் விரட்டப் பட்டேன். தொழில் முறையிலேயும், வாழ்க் கையிலேயும் சந்திக்க நேரிடுகிற பெண்களேக் காணும் போதெல்லாம் என் மனசிலே சபலம் தட்டத் தொடங்கிடிச்சு.

''இளமைக்கு அப்போ அப்போவாவது இரை போடலேன்னு என் வைராக்கியம் முழுக்கத் தகர்ந்திடும் என்கிறதை நான் சீக்கி ரமே உணர்ந்தேன். அதுக்கு ஏற்ற வடிகால் எங்கே கிடைக்கும்னு துழாவினேன். அப்பத் தான் என் பேருடையவன் ரகசியமா நடத்திக் கிட்டிருக்கிற விடுதியைப் பற்றித் தெரிய வந்திச்சு.

''ஒருநாள் ராத்திரி யாருக்கும் தெரியாம அங்கே போனேன். கை படாத புதுச் சரக் குன்னு சுதா எனக்காக ஒரு தனி அறைக்கு அனுப்பப் பட்டா. கதவை மூடிட்டு ஆசை யோடு அவளே நெருங்கினேன். அவ அழுதுக் கிட்டிருந்தா. தொழிலுக்குப் புதுசில்லே; அதனுலதான் இப்படி அழருள்னு நெனேச்சு அவளே வழிப்படுத்த சமாதானம் சொல்லத் தொடங்கினேன்.

''அவ அழுதுக்கிட்டே தன் கதையைச் சொன்னு. தனக்கு விருத்தாசலம் சொந்த ஊர்ன்னும், தான் பிறந்ததுமே தாயார் செத்துப் போயிட்டாள்ன்னும், தகப்பனுர் மறுமணம் செய்துக் கிட்டார்னும், தனக்கு ரெண்டு வயசாயிருந்த போது ஒரு மின் வெட்டைப் பார்த்ததினுலே கண் தெரியாமப் போயிட்டதாகத் தன் தகப்பனுர் சொல் வார்ன்னும், அந்தத் தகப்பனுரும் தன்னேடை எட்டாவது வயசிலே செத்துப் போயிட் டார்ன்னும், சித்தி தன்னேப் பல விதத்திலே கொடுமைப் படுத்திக் கடனேன்னு வளர்த்துக் கிட்டு வந்தாள்ன்னும், ஒரு வாரத்துக்கு முன்னே, 'பட்டணத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போயி ஒனக்குக் கண் பார்வை கிடைக்கச் செய்றேன்னு என் ஒண்ணு விட்ட தம்பி மகன் சொல்ருன்; அவன் கூடப் போ'ன்னு தன்னே இந்த வீட்டுக் காரரோடு — அதாவது என் பேருடையவனேடு — கட்டாயப் படுத்தி அனுப்பி வைச்சிட்டாள்ன்னும், இங்கே வந்து இங்கே இருக்கிற மற்ற பெண்களோடு பேசிப் பழகினப்பறந்தான் தன்னேக் கூட்டிக் கிட்டு வந்தவர் யார், எதுக்காகக் கூட்டிக் கிட்டு வந்திருக்கார் என்கிறது தெரிய வந்திச் சுன்னும், கண் தெரியாத நிலேயிலே தன்னுலே இங்கேயிருந்து தப்பிப் போக முடியலேன்னும் சொல்லிட்டு, 'ஐயா! நீங்க யாரோ, எனக்குத் தெரியாது. ஆனு ஒங்களே என் அப்பா மாதிரி, என் அண்ணன் மாதிரி நெனேச்சுக் கெஞ்சிக்



கேட்டுக்கறேன், தயவு செய்து என்னைக் கெடுத்திடாதீங்க'ன்னு என் காலிலே விழுந்து கதறின.

''நான் வெறியோடுதான் இருந்தேன். இருந்தாலும், அவ கண் தெரியாதவள் என்கிறது தெரிஞ்சதும், ஒரு கண் டாக்டர் என்கிறதினலேயோ என்னவோ, எனக்கு அவ மேலே இரக்கம் ஏற்பட்டுது. 'ஏம்மா, நான் வேணும்னு ஒன்மேலே இரக்கப் பட்டு ஒன்னை கெடுக்காமப் போயிடலாம். ஆனு ராஜாமணி ஒன்னை இந்தத் தொழிலிலே ஈடுபடுத்தறதுக் காகவே ஒங்க சித்தி கிட்டே பொய் சொல்லியோ, இல்லே அவங்க சம்மதத்தோடேயோ கூட்டிக்கிட்டு வந்திருக்கிறதுனலே எத்தனை நாளைக்கு நீ ஒன் மானத்தைக் காப்பாத்திக்க முடியும்?' ன்னு அவளைக் கேட்டேன்.

'' 'முடியற வரையிலுந்தான். இப்போ ஒங்க கிட்டே கெஞ்சினது போலே ஒவ்வொருத்தர் கிட்டேயும் கெஞ்சிப் பார்ப்பேன். அவங்க மனம் இளகின என் அதிர்ஷ்டம்; இல்லாட்டி என் துரதிர்ஷ்டம்ன்னு நினைச்சுக் கிட்டு அவங்களுக்கு உடன் பட்டுப் போறேன். வேறே நான் என்ன செய்ய முடியும்? உயிரை முடிச்சுப்போம்ன்ன ஒரு உயரமான இடத்தைத் தேடிப் போய் அங்கேயிருந்து குதிக்கவோ, கயிறை ஒரு இடத்திலே மாட்டிக் கழுத்திலே சுருக்குப் போட்டுக்கவோ, குளம்–குட்டை ஏதாவது இருக்கான்னு பார்த்து அதிலே விழவோகூட பார்வை வசதியில்லாத பாவியாப் போயிட்டேனே!'

''சுதா முகத்தை மூடிக்கிட்டுத் தேம்பித் தேம்பி அழுதா. என் மனம் கரைஞ்சிடுத்து. 'சரி அம்மா, என்னுலே ஒனக்கு ஒரு தீங்கும் ஏற்படாது; நான் இப்பவே வெளியே போயிட றேன்'னு கிளம்பிட்டேன்.

''நாலு எட்டு நடந்ததும், 'ஐயா!'ன்னு அவ என்னைக் கூப்பிட்டா.

'' 'என்னம்மா?' ''

''ஒரு உதவி செய்வீங்களா?''

''என்ன செய்யணும்?''

''போலீஸ் காரங்க திடீர்ன்னு வந்திட்டா, இங்கே வந்து போறவங்க தப்பிச்சுக்கறதுக் காக ஒவ்வொரு ரூமிலேயும் பின் வாசல் ஒண்ணு இருக்குன்னும், அது வழியாப் போன வீட்டுப் பின்பக்கமா அவங்க வெளியே போயிடலாம்ன்னும் இங்கே இருக்கிற மற்ற பொண்கள் பேசிக்கிறதைக் கேட்டிருக்கேன். அப்படி ஏதாவது பின் வாசல் இருக்கா ஐயா, இந்த ரூமுக்கு?'

''நான் ரூமின் பின்புறம் பார்த்து விட்டு 'ஆமா, இருக்கு'ன்னு சொன்னேன்.

'' 'அது வழியாகவே நீங்க போயிடுங்க. ஏன்னு, நீங்க ராத்திரி முழுக்கத் தங்கறதுக்குப் பணம் குடுத்திருக்கிறதாக எங்கிட்டே சொல்லி அனுப்பினுங்க. ஆனு, வந்து பத்து நிமிஷங்கூட ஆகல்லே, திரும்பிப் போறீங்க. முன் வாசல் வழியா போனிங்கன்னு ராஜா



— கிஷன்



மணி அண்ணு கண்ணிலே பட்டாலும் பட்டிடு வீங்க. அவன் கண்ணிலே பட்டீங்கன்னு என்ன—ஏது என்கிற கேள்வியெல்லாம் கிளம்பும். நான் வீணு அவதிக் குள்ளாக ணும்'ன்னு சுதா சொன்னு.

''அவ விருப்பப்படி நான் பின் வாசல் வழி யாகவே நழுவி வீட்டுக்கு வந்திட்டேன். வீடு திரும்பற வரையிலே ஏதோ ரொம்ப நல்ல காரியம் ஒண்ணைச் செய்து ஒரு கனனிப்பொண் ணின் கற்பைக் காப்பாத்திட்ட பெருமை யோடுதான் வந்தேன். ஆனு, வீட்டுக்கு வந்து படுக்கையை விரிச்சுப் படுத்தேனே இல்லேயோ, என் மனசின் இழிவான பகுதி பேயாட்டம் ஆடத் தொடங்கிடிச்சு.

''அது என்னை ஏமாளின்னு ஏசித்து! கோழைன்னு குற்றம் சாட்டித்து! கையா லாகாதவன்னு கை கொட்டிச் சிரிச்சுது! 'நீயும் ஒரு ஆம்பிள்ளையா? தூ! வெட்கம் கெட்டவனேன்னு என்மேலே காரி உமிழ்ந் தது. 'பணத்தையும் கொடுத்திட்டுப் பதறிக் கிட்டு ஓடி வந்திட்டியேடா பயந்தாங் கொள்ளி'ன்னு பரிகாசம் செய்தது. 'இவ்வள வுக்கும் அவ என்ன, தொட்டியானு செத்திடு வேன்னு நீ பதறும்படி ஏதாவது சொன் ளைா? நான் ஒன்னைத் தொடாமத் திரும்பிப் போயிட்டாலும், அடுத்தாப்பிலே வரப் போறவங்க ஒன்னைச் சும்மா விட மாட்டாங்க ளேம்மான்னு நீ சொன்ன போதுகூட, கெஞ்சிக் கேட்டுப்பேன்; அவங்க முரண்டினு விட்டுக் குடுக்கறதைத் தவிர வேறே என்ன செய்ய முடியும் என்கிற ரீதியிலேதானே பதில் சொன்னு. அப்போவாவது ஒன் ஆண்மை விழிச்சுக்கிட்டிருக்க வேண்டாமா? அப்ப டீன்னு நான்மட்டும் ஏன் ஏமாளியா திரும்பிப் போகணும்ன்னு...! அதுகூடத் தோணலே யேடா ஒனக்கு?'

''இப்படிப் பலவிதமா அது என்னை ராத்திரி முழுக்க வாங்கு—வாங்குன்னு வாங்கிடிச்சு. ஏமாந்துதான் போயிட்டோம்ன்னு அவ மானத்தோடு ஒப்புக் கொள்ற அளவுக்குக் கொண்டு வந்த பெறகுதான் அது என்னைத் தூங்க அனுமதிச்சது.

''மிஸ்டர் மோகன்! ஒங்க கிட்டே ஏற்கெ னவே சொன்னபடி, மறுநாள் காலையிலே தான் என் டாக்டர் ஃப்ரெண்ட் படேல் பம் பாயிலேருந்து வர இருந்தான். அவனும் நானும் வியன்னுவிலே ஒன்னு கண் வைத்தியம் படிச்சவங்க. மறுநாள், நான் முதல் முதலாக ஒரு பேஷண்டுக்கு மாற்று விழிகள் பொருத்த இருந்தேன். அப்படிப் பல பேருக்கு பம் பாயிலே மாற்று விழிகள் பொருத்தி அநுபவப் பட்டவன் என் ஃப்ரெண்ட் படேல். அதனுலே நாம்ப முதல் தடவை அந்த ஆபரேஷனைச் செய்யும் போது அவன் பக்கத்திலே இருக் கறது நல்லதுன்னு அவனுக்கு டெலிஃபோன் செய்து மெட்ராசுக்கு வரச் சொன்னேன்.

''டாக்டர் படேலை ரிஸீவ் பண்றதுக்காக அலாரம் வைச்சு எழுந்திருந்து அதிகாலை நாலு மணிக்கு என் காரிலே பல்லாவரத்தி லிருந்துப் புறப்பட்டேன். பஜாரைக் கடந்து, மெயின் ரோட்டுக்கு வந்து கொஞ்ச தூரந் தான் போயிருப்பேன், ரோட்டோரமா சுதா தட்டித் தடவி நடந்து போய்க்கிட்டிருந் ததைப் பார்த்தேன். அவளைக் கண்டதுமே என் மனசின் இழிவான பகுதி மறுபடியும் விசுவரூபம் எடுத்திடிச்சு. காரை அவ பக்கத் திலே கொண்டு போய் நிறுத்தி, 'எங்கேம்மா போறேன்'னு கேட்டேன். குரல்லேயிருந்து சுதா என்னைத் தெரிஞ்சிக்கிட்டா. இருந் தாலும் சரி, செத்தாலும் சரி, அந்த நகரத் திலிருந்து வெளியேறிடறது என்கிற முடிவோடு, நான் திறந்து போட்டிருந்த பின் வாசல் வழியாக வெளியே வந்து கால் போன போக்கிலே நடந்துக்கிட்டிருக்கிற தாகச் சொன்னு.

'' 'சரி, நான் ஸிட்டிக்குப் போறேன்; அங்கே எங்கயோவது கொண்டு விட்டிட றேன்'னு சொல்லி, அவளைக் காரிலே முன் சிட்டிலே என் பக்கத்திலே ஏற்றி உட்கார்த் திக்கிட்டுப் புறப்பட்டேன். பல்லாவரம் ஊரைத் தாண்டிக் கொஞ்ச தூரம் வந்ததும், காரை மெயின் ரோட்டிலிருந்து திருப்பிச் சாலைக்குப் பக்கத்திலேயே மறைவான இடம் ஒன்னிலே கொண்டு போய் நிறுத்தி... நான் மிருகமாயிட்டேன்!

'' 'ஆ! ஐயைய்யோ! என்னய்யா, நீங்க கூட இப்படி...?'ன்னு அவ அலறினு. ஆனு, அந்த அலறலுக்கப்பறம் சுத்தலே; திமிறலே!

''என் வெறி அடங்கினப்புறம் பார்த்தா அவ கட்டையா கிடந்தா. மூச்சு வந்துக்கிட் டிருந்ததினுலே, அதிர்ச்சியிலே மூர்ச்சையா யிட்டா என்கிறதைப் புரிஞ்சுக் கிட்டேன். அவளை என்ன செய்யறதுன்னு புரியலே, எனக்கோ ஸ்டேஷனுக்குப் போக டைம் ஆகிட்டிருந்தது. கடைசியிலே அலங்கோலமா யிருந்த அவளுடைய டிரஸ்ஸை ஒரு மாதிரிச் சரி செய்தேன். போற—வர வண்டிகள்ளே வரவங்க யாராவது பார்த்து அவளைக் காப் பாத்தட்டும்ன்னு காரிலிருந்து எடுத்து ரோட் டோரமா படுக்க வைச்சிட்டு நான் பாட் டுக்குப் போயிட்டேன்.

''அதுக்கப்புறம் நான் சுதாவை மறந்திட் டேன். ஆனு, அவளைத்தான் மறக்க முடிஞ் சுதே தவிர அன்னைக்கு ஏற்பட்ட அநுபவத்தை மறக்க முடியலே. வாழ்க்கையிலே முதல் தடவையா அடைஞ்ச அந்த இன்பம் என்னை ருசி கண்ட பூனையாக்கிடிச்சு. மறுபடியும் என் பார்வை பெண்கள் மேலே தாபத்தோடு பாயத் தொடங்கிடிச்சு. சே! இது நம்ப தொழிலுக்கும் கௌரவத்துக்கும் ஆபத்து. நம்ப வைராக்கியத்தையெல்லாம் மூட்டை கட்டி மூலையிலே வைச்சிட்டு ஒழுங்கா

ஒருத்தியைக் கல்யாணம் செய்துப்போம் என்கிற முடிவுக்கு வந்தேன்.

''பார்த்தீங்களா, ஒரு விஷயம் சொல்ல மறந்திட்டேன். நான் சங்கீத பரம்பரையிலே பிறந்தவன். முறையா சங்கீதம் கத்துண்டவன். ஆனா, அதைப் பிழைப்பாகக் கொள்ளாம, டாக்டருக்குப் படிச்சு வைத்தியத் தொழிலிலே ஈடுபட்டேன். மெட்ராஸ் ரேடியோ ஸ்டேஷனிலே உத்தியோகம் பார்க்கிற ஒருவர் என் நண்பர். என்னைப்பற்றி எல்லாம் நல்லாத் தெரிஞ்சவர். என் பிரம்மச் சரியத்தைப் பரிகாசம் செய்யற பல நண்பர்களிலே அவரும் ஒருத்தர். 'சாஸ்திரீய சங்கீத ஞானமும், தேவாமிருதமான குரலும், இனிமையா பாடக் கூடிய திறமையும் இருக்கிற நீங்க ஏன் ஒரு ஆடிஷனுக்கு வந்து பாசாகி ஒங்க இசையின்பத்தை உலகத்துக்கு வழங்கக் கூடாது?'ன்னு அவர் அடிக்கடி சொல்லுவார். ஆனா எனக்கு என்னவோ சங்கீதத்தை ஒரு உபதொழிலா கொள்றதிலே நாட்டமே இல்லை. ஆத்ம திருப்திக்காகவும், நண்பர்களின் வற்புறுத்தலுக்காகவும் அப்போ அப்போ தம்பூராவை மீட்டிக்கிட்டுப் பாடறதோடு திருப்தி அடைஞ்சுக்கிட்டிருந்தேன். 'சரி சார், ஒங்க சங்கீதத்தைத்தான் ரசிகர்களுக்கு வழங்க முடியலே; ஒங்க கண் மருத்துவத் தொழில் அநுபவத்தையாவது ஜனங்களுக்குப் பயன் படுத்துங்க'ன்னு அவர் என்னை வற்புறுத்தி, கண் நோய்கள், சிகிச்சை, பாதுகாப்பு, இந்த மாதிரி விஷயங்களைப் பற்றி ரேடியோவிலே வருஷத்துக்கு ஒரு தடவை ரெண்டு தடவை பேசச் செய்துக்கிட்டிருந்தார்.

''அப்படி ஒரு 'டாக்' ரிக்கார்டு பண்ண நான் ஒருநாள் ரேடியோ ஸ்டேஷனுக்குப் போயிருந்தேன். அப்பத்தான் மிஸ்டர் கல்யாண சுந்தரத்தையும் அவங்க டாட்டர் மிஸ் ஜெய குமாரியையும் சந்திச்சேன். நண்பர் கிட்டே என் மனமாற்றத்தையும், நான் கல்யாணம் செய்துக்க முடிவு செய்திருக்கிறதையும் ஏற்கெனவே சொல்லியிருந்ததினாலே, அந்தச் சந்திப்பின் போது, ஜெயா எனக்கு ஏற்ற மனைவியாகவும், நான் அவளுக்கு ஏற்ற கணவனாகவும் இருப்பேன்னு அவர் எங்க மாரியேஜ் புரொப்போசலை வெளியிட்டு, அங்கே அந்த முதல் சந்திப்பிலேயே எங்க ரெண்டு பேரையும் அதுக்கு சம்மதிக்கச் செய்திட்டார். வர்ற ஆவணியிலே கல்யாணத்தை வைச்சுக்கிறது என்கிறதாக நாங்க முடிவு செய்திருந்தோம். அதுக்கு இடையிலே தெய்வச் செயலாக...''

டாக்டர் ராஜாமணி முடிக்கு முன், ''டேய் மோகன்! என்னடா இது, இந்தப் பொண் ஏதேதோ சொல்லுது!'' என்று வேகமாக டாக்டரின் அறைக்கு வந்தார் ஜகதீசன். அவருக்குப் பின்னால் வரிசையாக, ''நான் சொல்லலியாங்க? என் மோகன் ஒருபோதும் தப்பு வழியிலே போக மாட்டான்'' என்றபடி கனகமும், ''மோகன்! என் வயிற்றிலே பாலை வார்த்திட்டேடா!'' என்று பொன்னம்மாளும், ''என்னை மன்னிச்சிடுங்க. குரல் ஒற்றுமையினாலே குழம்பிப் போன நான் ஒங்க மேலே சந்தேகப் பட்டிட்டேன்!'' என்று கூறியபடி சுதாவும் உள்ளே வந்தனர்.

> உள்ளத்தில் உண்மையுடையவர்கள்
> தோல்வி அறியமாட்டார்கள்.
> பிரார்த்தனை செய்தும் தோல்வி கண்டால்
> உண்மையுடன் பிரார்த்தனை செய்யவில்லை
> என்று உணர்ந்து கொள்.
> — ஷிண்டோ

— பி. வி. பா. ஜ

''ஆமா, கண்ணு கெட்ட பெறகு சூரிய நமஸ்காரம் பண்ணு. இன்னைக்குச் சொன்ன ஒன் கதையை அன்னைக்கே சொல்லியிருந்தேன்னா, தங்கமான எங்க வீட்டுப் புள்ளை மேலே நாங்களே பழி போட்டிருப்போமா?'' என்று பொன்னம்மாள் சுதாவைக் கோபித்துக் கொண்டாள்.

அவர்கள் உரையாடலிலிருந்து சுதா நடந்ததையெல்லாம் அவர்களிடம் கூறியிருக்கிறாள் என்பதை உணர்ந்த மோகன் டாக்டரை நோக்கி, ''மேலே?'' என்றான்.

''இதோ, இப்பவே மயிலாப்பூருக்கு ஆள் அனுப்பப் போறேனே!'' என்றார் அவர்.

''எதுக்கு, டாக்டர்?'' என்று ஜகதீசன் கேட்டார்.

''ஐயா! ஒங்க மகனுக்கும், மிஸ்டர் கல்யாண சுந்தரத்தின் மகள் ஜெயாவுக்கும் இடையிலே பால் நிலவு போலே களங்கமில்லாத காதல் ஏற்பட்டிருந்தது. நான் செய்த ஒரு அக்கிரமம் பனியாகப் படர்ந்து அந்தப் பால் நிலவை மங்கச் செய்திடிச்சு. அந்தப் பனி இப்போ விலகிடிச்சு என்கிறதை அவர்களுக்குத் தெளிவாக்க வேண்டாமா?''

''செய்யுங்க, டாக்டர். என் மோகனுக்கு அவன் மனம் விரும்பின படியே மணவ்னை கூடட்டும்'' என்றாள் கனகம்.

''சரி, சுதாவின் கதி?'' என்று பொன்னம்மாள் கவலை தெரிவித்தாள்.

''அவளுக்குத்தான் ஏற்கனவே கணவன் கிடைச்சிட்டானே, அம்மா!''

''யாரு?'' பொன்னம்மாளின் சந்தேகம் இன்னும் தீரவில்லை.

''வேறே யாரம்மா அவளுக்குக் கணவனாக வர முடியும்? நான்தான்'' என்றார் டாக்டர் ராஜாமணி.

''ஆனா பாவம், அதுக்குக் கண்தான் கிடைக்க வழியில்லை'' என்று அங்கலாய்த்தாள் கனகம்.

''கண்ணும் கிடைக்கும் அம்மா. மின்வெட்டின் அதீத வெளிச்சம் அவ பார்வையைப் பறிச்சிருக்கிறதினாலே உள் நரம்புகள் பாதிக்கப் பட்டிருக்காது. அடுத்து நான் செய்யப் போற மாற்று விழிச் சிகிச்சை என் மனைவிக்குத்தான்.''

''சுதா அதிருஷ்டக் காரிதான். அவளுக்குக் கணவர் கிடைச்சிட்டார். கண்ணும் கிடைக்கப் போகுது'' என்றான் மோகன்.

''இந்த ரெண்டு மட்டும் இல்லேடா. ஒரு குழந்தையும் கைமேலே கிடைக்கப் போகுது. இன்னம் சில மாசத்திலே!'' என்று கூறிச் சிரித்தார் ஜகதீசன்.

மற்றவர்களும் அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டனர்.

**(முற்றும்)**




டெலிபோன் கிணுகிணுத்தது—....! அதன் முதல் ஒலிக்கே பிரபாகர் விழித்துக்கொண்டு விட்டான். நள்ளிரவி லிருந்து டெலிபோன் மணியின் ஒலியை மானசிகமாகக் கற்பனை பண்ணிக் கொண்டு, எதிர்பார்த்து, எதிர்பார்த்து; தலைக்குள் அந்தக் கிணுகிணு ஒலி எதிரொலித்துக் கொண்டே இருக்கையில் எப்படி அவனுக்குத் தூக்கம் வரும்? தலையணை யிலிருந்து தலையை உயர்த்தித் திரும்பிக் கட்டிலருகே இருக்கும் கடிகாரத்தைப் பார்த்தான். அதிகாலை ஐந்துமணி.

டெலிபோனின் 'கிர்' என்ற இரண்டாவது அதிர்வு தேய்ந்து அடங்கிக் கொண்டிருந்தது. மூன்றாவது தடவை அது 'கிர்'ரிடு முன் ரிஸீவரைக் கையிலெடுத்தான் ப்ரபு.

''மிஸ்டர் ப்ரபு...!'' டெலிபோன் குழலில் குரல் கணீரிட்டது. டாக்டர் ரம்யாவின் ரம்யமான குரல்...!

''குட் மார்னிங்... கன் கிராட்ஸ். உங்களுக்கு ஒரு அழகான பெண் குழந்தை பிறந்திருக்கிறது. உங்கள் மனைவி சுகம்.''

''ஓ...!'' ப்ரபுவுக்கு வியப்பாக இருந்தது. பேச நினைத்தான் குரல் கோவையாக வெளிவரவில்லை. ஏனிப்படி மூச்சுவிட முடியாமல்... ''பெண் குழந்தையா?'' பிரயாசை யுடன் பேசினான் ப்ரபு. ''அவள், என் மனைவி... இஸ் ஷீ ஆல் ரைட்?'' என்று வினவினான்.

''இன்னும் மயக்கம் தெளியவில்லை. இன்னும் ஒரு மணி நேரத்தில் விழித்துக்கொண்டு விடுவாள். குழந்தை கொள்ளையழகு — பியூட்டிஃபுல் அண் பர்ஃபெக்ட்! நான் இன்னும் அதன் எடையைப் பார்க்கவில்லை. முதலில் உங்களுக்குச் செய்தியைச் சொல்ல வேண்டுமென்பதற்காக ஃபோன் பண்ணினேன்'' என்றார் டாக்டர் ரம்யா.

''தேங்க்யூ டாக்டர்!''

டெலிபோனை வைத்து விட்டுப் படுக்கை விளிம்பில் அமர்ந்தபடி கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டான். ஷீலாவின் மனநிலை இப்போது எப்படி இருக்கும்...? அவளுக்கு நினைவு திரும்பியதும் புதிய பிறவியைப் பற்றி அவள் என்ன எண்ணுவாள்? டெலிபோனுக்கு அருகிலே இரவு கழற்றி வைத்திருந்த ரிஸ்ட் வாட்சை எடுத்து அதற்குக் கீ கொடுத்துக் கொண்டே சிந்தனையை நீளவிட்டான் ப்ரபு.

முதல் டெலிபோன், ஷீலாவின் அம்மாவிற்குப் போட்டான்.

மாமியாரின் குரல் அவன் செவிப் பறையில். ''யார் அது?'' என்ற வார்த்தை, வினவாக அல்லாமல் அதிகாரத்தோடு அதட்டுவது போலக் கேட்டது.

''நான்தான் ப்ரபு. ஷீலாவுக்குப் பெண் குழந்தை பிறந் திருக்கிறது. தாயும் குழந்தையும் சௌக்கியமென்று டாக்டர் ஃபோன் பண்ணினார்...'' ப்ரபு சில விநாடிகள் நிதானித்தான் பேச்சை நிறுத்தி விட்டு - மறு பக்கத்தி லிருந்து ஏதாவது கேள்வி வருமோவென்று. ஆனால் ஷீலாவின் தாயிடமிருந்து எவ்விதப் பேச்சும் வராது போகவே ப்ரபுவே தொடர்ந்தான். ''டெலிவரி ஆனதும் நீங்கள் போன் பண்ணும்படி சொன்னீர்களே...''

''ஓ...!ஷீலாவுக்குப் பெண் பிறந்திருக்கா?''

''ஆமாம்! அழகான பெண் குழந்தையாம்.''

''குட்! குழந்தை எத்தனை பவுண்டு?''

''தெரியல்லே...'' அவனுக்கு என்னமாய்த் தெரியும்! இரவு முழுவதும் தூங்காமல் களைப்படைந்த டாக்டர் டெலிபோனில் அவனுக்குப் பிறந்துள்ள குழந்தை 'பர்ஃபெக்ட் அண் பியூட் டிஃபுல்' என்று கூறினார். அவ்வளவுதான் அவனுக்குத் தெரியும்.

''தெரியாதா? நீங்கள் எங்கேயிருந்து பேசறேள்?''

''வீட்டிலிருந்து - இரவு பதினொரு மணிக்கு ஷீலாவுக்கு அசௌகரியம் ஏற்பட்டுது. பதினொண்ணரைக்கு நர்ஸிங் ஹோமுக்குப் போனோம். அந்த அகால வேளையிலே உங்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம்னு போன் பண்ணல்லே. அவளை அங்கே அட்மிட் பண்ணிட்டு நான் வீட்டுக்கு வந்தேன். பக்கத்து வீட்டிலேயுள்ளவர்கள் குழந்தைகளைக் கவனித்துக் கொண்டார்கள்.''

''ரொம்ப சந்தோஷம்... ஷீலாவுக்கு இன்னொரு பெண்ணா?''

''ஆமாம்...''

அவன் மாமியார் ஏதோ கூறப் போகும் போது அவன் டெலிபோனை வைத்து விட்டான்.

அடுத்த அறையில் சத்தம் கேட்டது. படுக்கையிலிருந்து எழுந்து, குழந்தைகள் தூங்கிக் கொண்டிருக்கும் அறைக்குப் போனான்.

மூத்த பெண் ஸ்ரீவித்யாவுக்கு ஆறு வயது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்திருந்தாள். ''யாரோட பேசிண்டிருந்தேப்பா?'' என்று கேட்டாள் ப்ரபுவைப் பார்த்ததும்.

ப்ரபு படுக்கையில் அவள் அருகே உட்கார்ந்து கொண்டே ''உன் பாட்டியோட பேசினேன்'' என்றான்.

''இத்தனை காலங்காத்தாலயா? என்னவாம்..?''

''வித்யாக் கண்ணு, நீ ஸ்வீட்டி இல்லியா? உனக்கு ஒரு ஸ்வீட்டான செய்தி சொல்லப் போறேன்: அம்மாவுக்கு நேற்று உன்னைப் போல ஒரு அழகான குட்டிப் பாப்பா பொறந்திருக்கு!''

வித்யாவின் புருவங்கள் சுருங்கி உயர்ந்தன. முகத்தில் வியப்பும் மலர்ச்சியும் பரவிற்று. ''ஹையா..! அப்படின்னு எனக்கு இன்னொரு




தங்கைப் பாப்பா...! அவ பேரென்ன?''

''இன்னும் அவளுக்குப் பேர் வைக்கல்லே. உன் தங்கை ஸ்ரீப்ரியாவுக்குச் சாவித்திரின்னு பேர் வைச்சா உங்களுக்குத் தம்பிப் பாப்பா பொறப்பான்னு சொன்னு உங்கம்மா. ஆனு எனக்கு அந்தக் கர்நாடகப் பேர் புடிக்கல்லே. அதனுலே ஸ்ரீப்ரியான்னு பேர் வைச்சேன். இப்போ உங்கம்மா இவளுக்கு மங்களம்னு பேர் வைக்கச் சொல்லுவா — இனிமே குழந்தையே வேண்டாம்கறதுக்காக. இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. பொறந்திருக்கிற பாப்பாவுக்கு 'ப்ரீதா'ன்னு தான் பேர் வைக்கப் போறேன்—'' தன் மகள் வித்யாவுக்கு இதெல்லாம் எவ்வளவு தூரத்துக்கு விளங்கும் என்பதைப் பற்றி யோசிக்காமல் பேசிக்கொண்டே போனுன் ப்ரபு. அவள் மௌனமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்த பிறகுதான் தன் மனக் குழப்பத்தை யெல்லாம் குழந்தையிடம் கொட்டி விட்டோமே என்று வெட்கப் பட்டவனுக ''எங்கே அப்பாவுக்கு ஒரு முத்தாக் கொடு'' என்று அவள் முகத்துக்கு நேரே தன் முகத்தை நீட்டினுன். வித்யா எம்பி அப்பாவின் கன்னத்தில் முத்தமிட்டாள். ஆனல் பிரபு அதை ஏற்றுக் கொண்டு நிமிரவில்லே. அப்படியே காத்திருந்தான். குழந்தைக்குப் புரிந்து விட்டது — அப்பா எதற்காகக் காத்திருக்கிருர் என்று. தன் குஞ்சுக் கையால் அப்பாவின் கழுத்தை வளைத்துக் கன்னத்தோடு கன்னம் அழுந்தக் கட்டிக் கொண்டாள். தினமும் தூங்கி எழுந்ததும் இப்படி ஒரு வரவேற்புக் கொடுத்தாக வேண்டும் அப்பாவுக்கு. மெத்தென்ற அந்தப் பட்டுக் கைகளின் அணைப்பும் அழுத்தமும் பெறு விட்டால் அன்று முழுதும் ப்ரபுவுக்கு வேலையே ஓடாது.

''ஆல் ரைட், வித்யாக் குட்டி... இன்னும் கொஞ்ச நேரம் தூங்குவயாம்'' என்று எழுந்திருந்தான் ப்ரபு.

''நான்தான் முழிச்சுண்டுட்டேனே...! எனக்கு மம்மி வேணும்!''

''தூக்கம் வல்லேன்னு பேசாம முழிச்சுண்டே படுத்திண்டிரு... நீ சமத்துக் குட்டி இல்லியா? அம்மா சீக்கிரமே வந்துடுவா!'' என்று வித்யாவைப் படுக்கையில் தள்ளிப் போர்வையை அவள் பக்கங்களில் மூடிச் செருகி, அவள் கொழு கொழு கன்னத்தில் ஒரு குட்டி முத்தத்தையும் பதித்து விட்டு கட்டிலின் மறுபக்கத்துக்குப் போனுன். அங்கே மெத்தையில் குழி பறித்துக் கொண்டு குப்புறப் படுத்தபடி சற்றே திறந்த வாயுடன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள் ஸ்ரீப்ரியா - ஸ்ரீவித்யாவின் தங்கை. குனிந்து அவள் வெல்வெட் முடியில் தன் விரல்களை நுழைத்துக் கோதி விட்டான். அவள் இதழ்களில் இளநகை மலர்ந்தது. டெஹ்ரான் பூகம்பமும் இருபத்தியோரு பீரங்கிகளின் முழக்கமும் கூட அவள் உறக்கத்தை எட்டு மணிக்கு முன்னதாகக் கலைக்க முடியாது. ஸ்ரீப்ரியாவுக்கு மூன்றரை வயதுதானுகிறது. அவள் மயக்கும் திரைப்பட நட்சத்திரமாகப் போகிருள்; பரத நாட்டிய ராணியாகப் போகிருள் என்று அவள் அம்மா இப்போதே முடிவு கட்டி விட்டாள். ஆகவே அவள் பகல் ஒரு மணி வரையில் கூடத் தூங்கலாம். ஆட்சேபிக்க முடியாது!

இருள் மூடிய கூடத்தின் வழியாகச் சமையலறைக்குப் போனுன் ப்ரபு. ஸ்விட்சைத் தட்டினுன். ஒளி வீசிக் கண்களைச் சுருங்க வைத்தது. ஷீலா ஆட்சி புரியும் அந்த




"போன வருஷம் எலும்பு முறிவு ஸ்பெஷலிஸ்ட் டாக்டருக்காகச் சிலை வைத்தோமே, அதுதான் இது!"

சாம்ராஜ்யத்தைப் பார்த்தான். காஸ் அடுப்பை மூட்ட வேண்டும், பால் காய்ச்ச வேண்டும் டிகாக்‌ஷனுக்கு வெந்நீர் காய வைக்க வேண்டும். அப்புறம் இன்னும் என்னென்னவோ. ஆனால் எதுவும் செய்யத் தோன்றாத ஒரு அசட்டுத் தனம், சோம்பல் அவனைச் சூழ்ந்து கொண்டது. மௌனமாக ஒரு கிளாஸ் குளிர்ந்த நீரை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

''இதுவும் பெண்ணைகப்பிறந்தால் அதைக் குழந்தையில்லாதவர்கள் யாருக்காவது ஸ்வீகாரம் கொடுத்து விடலாம்'' என்று கூறிக் கொண்டிருந்தாள் ஷீலா. அவளுக்குப் பிள்ளைக் குழந்தை வேண்டுமென்று அப்படியொரு ஆசை. அவளுக்கு மட்டும் தானா? அவனுக்கு மட்டும் அந்த ஆசை இல்லையா என்ன? எல்லாம் நிராசையாகிப் போயிற்று.

கையிலிருந்த நீரை ஒருவாய் ஊற்றிக் கொண்டு கொப்பளித்து ஜன்னல் வழியாக உமிழ்ந்தான். காலையில் வந்த டெலிபோன் செய்தி வேறு விதமாக இருந்திருந்தால் எப்படி இருந்திருக்கும்?

பிள்ளை... பிள்ளை... ஆண் குழந்தை ஆண்... ஆண். ஆண்டவன் ஏனிப்படி ஏங்கப் பண்ணி விட்டான்? என்னை...?

எல்லாருக்குமே ஷீலாவுக்குப் பிள்ளைக் குழந்தை பிறக்கவில்லையே என்பதில் ஆதங்கந்தான். ஆனால் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் உற்சாகமாக இருப்பதாகப் போலியாக நடிக்கிறார்கள். அவனையும் போலியாக உற்சாகப் படுத்துகிறார்கள். அவனுக்கு எதுவுமே செய்யப் பிடிக்கவில்லை. அப்படியே செயலற்றுக் கிடக்க வேண்டும் போல ஓர் அசட்டு ஆத்திரம், கோபம்...

பளீரென்று ஜன்னல் வழியே காலை ஒளி ஊடுருவி உள்ளே பாய்ந்த போது அவன் மேலே என்ன என்ன செய்ய வேண்டுமென்பதைப்பற்றிப் பரபரப்புடன் நினைக்கலானான்.

வாசலில் பால் காரன் குரல் கொடுத்தான். துள்ளி எழுந்தான் ப்ரபு — ''ஓ... எவ்வளவு வேலை கிடக்கிறது? எப்படித்தான் சமாளிக்கப் போகிறேனோ!'' என்று வாய் விட்டுச் சொல்லிக் கொண்டே வாசலுக்குப் போனான் பால் வாங்க.

காலை ஆகாரம் பெரிய சுளேபரம்! அவன் பெரிய கவலை, குழந்தைகள் இருவரும் அம்மா இல்லாத குறையில் அவனைக் கொண்டா என்று அடம் பிடிக்காதிருக்க வேண்டுமே என்பதுதான். ஆனால் அவன் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அம்மாவின் அதட்டலும் கண்டிப்பும் இல்லாததை, வித்யாவும் ப்ரியாவும் வெகுவாக விரும்பித் தங்கள் இஷ்டப்படி கூத்தடித்துக் கொண்டிருந்தார்கள்.

வித்யாவின் உதவியுடன் இருவருக்கும் பல் துலக்கி விட்டான் ப்ரபு. உடை மாற்றும் போதுதான் தகராறு ஆரம்பமாயிற்று. ப்ரியா இரவு உடையான பைஜாமாவுடன் தான் இருப்பேன், குளிக்கப் போகும் வரை, என்று பிடிவாதம் பிடித்தாள் —

''கிடையாது அம்மா இரண்டு பேருக்கும் ஜட்டி மட்டுமே அணிவித்திருப்பாள் குளிக்கப் போகும் வரை'' — இது வித்யாவின் வாதம்.

''பொய் பொய்... அண்டப் புளுகு, ஆகாசப் புளுகு...!'' என்று ஆர்ப்பரித்தாள் ப்ரியா. ''ஜட்டி... குட்டி.. முட்டி!'' கோரஸ் பாடவும் செய்தாள் வீம்புடன். முடிவில் ப்ரபு தன் அதிகாரத்தைப் பிரயோகித்து ஒரு விதமாக இருவருக்கும் ஜட்டி அணிவித்து அமைதிப் படுத்தினான். குளிப்பாட்டிப் புத்துடை அணிவித்தான். பிறகு ஷீலா தயாரித்துக் கொடுத்திருந்த அட்டவணையை எடுத்தான். தான் நர்ஸிங் ஹோமில் இருக்கும் போது குழந்தைகள் இருவரையும் வீட்டுக் காரியங்களையும் எப்படிச் சமாளிப்பது என்பதற்குத் திட்டமிட்டுக் கொடுத்திருந்தாள் கெட்டிக்காரி ஷீலா; அவன் தவிக்காமல் இருக்க. அந்த 'ஷெட்யூல்' ரொம்ப உதவியாக இருக்குமென்று திருப்பித் திருப்பிச் சொல்லி விட்டுப் போயிருந்தாள் அவள். மேஜை டிராயரிலிருந்த அந்த ஷெட்யூலை எடுத்துப் பார்த்தான்.

'குழந்தைகள் எழுந்து பல் தேய்த்தானதும் முதல் காரியமாகச் சொட்டு மருந்துகளைத் தரவும். ப்ரியாவுக்கான சொட்டு மருந்துப் பாட்டிலில் 'பி' என்று சிவப்புப் பென்சிலால் குறித்திருக்கிறேன். வித்யாவின் பாட்டிலில் குறிகள் ஏதுமிருக்காது.

—இரண்டு பேருக்கும் ஆறு சொட்டுக்கள்.

—வித்யாவின் சிணுக்கிருமலைப் பற்றி இப்போது அலட்டிக் கொள்ள வேண்டாம். அது தன்னால் சரியாகி விடும்.

—இரவு உடையை மாற்று முன்னதாகச் சொட்டு மருந்துகளைக் கொடுத்து விடவும்.'

ப்ரபுவுக்குப் பெருமூச்சு வந்தது. இத்தனை நேரம் படாத பாடுபட்டு இருவருக்கும் உடை

   

— கிஷன்

மாற்றியாகி விட்டதே. இனி என்ன செய்வது... ம்... மூன்று வழிகள் உள்ளன. போட்ட உடைகளைக் களைந்து விட்டுச் சொட்டு மருந்து கொடுத்த பிறகு உடை அணிவிப்பது — அணிவித்த மாற்று உடையிலேயே சொட்டு மருந்தைத் தருவது அல்லது சொட்டு மருந்தைத் தராமலே இருந்து விடுவது!

'சொட்டு மருந்தில்லாமல் எவ்வளவு குழந்தைகள் வளரவில்லை. ஒருநாள் கொடுக்காவிட்டால் ஒன்றும் தப்பில்லை' என்று சமாதானப்படுத்திக் கொண்டான் ப்ரபு.

குழந்தைகளிருவரும் ஏதோ வம்படித்தபடியே காபி குடித்தார்கள். சிரித்தார்கள். சண்டை போட்டுக் கொண்டார்கள். ரகசியமாகப் பேசிக் 'களுக்' என்று ஒலி எழுப்பினர்கள். அம்மா இல்லாமையையோ அப்பாவே தங்களுடன் பாடுபடுவதையோ அவர்கள் உணர்ந்ததாகவே தெரியவில்லை.

இடை இடையே ப்ரபுவிடம் கேள்விகள் வீசப்பட்டன. அவற்றுக்கு அவனும் கூடுமான வரை பதிலளித்தான். சிலவேளைகளில் அவர்களின் கேள்விகளுக்குப் பதில் கூற முடியாமல் திணறினன். இரண்டொரு தடவைகளில் 'பாவண்டி அப்பா!' என்ற பரிவு வார்த்தைகள் வித்யாவிடமிருந்து வெளிப்பட்டபோது அவனுக்கு இதமாக இருந்தது. "குழந்தைகள் ஒரு மாதிரி புரிந்து கொண்டிருக்கிருர்கள்' என்று நிம்மதியடைந்தான்.

நர்ஸிங் ஹோமுக்குக் கிளம்பும் போது ஸ்ரீவித்யா நேரடியாகவே குழந்தையைப் பற்றிக் கேட்டாள் ''அப்பா புதுப் பாப்பா நிஜமாகவே தங்கைதாளு?'' அவளுக்குமே தனக்குத் தம்பிப் பாப்பா இல்லையே என்ற ஏக்கமிருப்பது அந்தக் கேள்வியில் மணத்தது.

''ஆமாண்டாக் கண்ணு... ஏன்?''

''நமக்கு ஆம்பிளைக் குழந்தையே பொறக்காதா அப்பா...?''

''ஏன் பொறக்குமே? வித்யாக் கண்ணு; கொஞ்ச நாள் போனு நீ பெரியவளாப் போவே. அப்போ உனக்கு அம்பிப் பாப்பா பொறக்கும். எனக்கும் பேரன் வருவான். அதுவரைக்கும் நம்ம வீட்டிலே இந்தக் குட்டிப் பாப்பா — உன் தங்கையா, தங்கக் கட்டியா விளையாடிண்டு இருக்கும். உனக்கு ஹாப்பிதானே?''

ஆனல் அவன் விளக்கத்துக்கு வித்யா பதில் சொல்லவில்லை. ப்ரியாதான் கூறினள். ''புது பாப்பா என்னோட உடைஞ்சு போன அழுக்காப் போன பொம்மைகளை வைச்சுண்டு விளையாடட்டும். எனக்குப் புதுப் பொம்மை வாங்கிக் கொடுத்துடு, என்ன?''

அவனல் சிரிக்காதிருக்க முடியவில்லை.

ஒன்பதாம் நம்பர் அறை சற்றே திறந்திருந்தது. மெதுவாக அதை அகலத் திறந்தபடி உள்ளே நுழைந்தான் ப்ரபு. ஷீலா கட்டிலில் ஜன்னலைப் பார்த்தபடி படுத்திருந்தாள். சலனம் கேட்டுத் திரும்பியவள் கணவனைக் கண்டு முறுவலித்தாள். அவள் பட்டுக் கேசம் சீர் படுத்தப் படாமல் தலையணையில் விரிந்து கிடந்தது. சோர்ந்து காணப்பட்டாள்.

அவள் புன் முறுவலுக்குப் பதிலாக ப்ரபுவின் இதழ்களிலும் புன்னகை படர்ந்தது. அருகே சென்று குனிந்து அலுங்காமல் அவள் கன்னத்தில் தன் இதழைப் பதித்தான். ஷீலா தன் தந்தக் கையைத் தூக்கி அவன் கழுத்தின் பின் பக்கத்தை வாஞ்சையோடு வருடினள் சில விநாடிகள்... அந்த மௌனம் எவ்வளவோ விஷயங்களைப் பரிமாறிக் கொண்டன. ப்ரபு நிமிர்ந்தான். ''ஸ்வீட்டி! என்னமா இருக்கே?''

ஷீலா படுக்கையின் ஒரு புறமாக நகர்ந்து கொண்டு தன் அருகில் அமரும்படி, படுக்கையில் தட்டிக் காட்டிக் கண்களினல் கூறினள். ப்ரபு அமர்ந்து கொண்டான்.

''ஐ யாம் ஓகே! நாளை மறுநாள் எல்லாமே சரியாப் போயிடும்... அது சரி நீங்க ஏன் இப்படி...? ராத்திரி தூங்கல்லியா?'' என்ருள் ஷீலா.

''ஓ! தூங்கினேனே...!'' ப்ரபுவின் குரலில் காரணமின்றிப் பரபரப்புக் கூடியது.

கணவனின் தவிப்பை — பரபரப்பைப் புரிந்து கொண்ட ஷீலா புன்னகையுடன் ''குழந்தைகள்...?'' என்ருள்.

''ரொம்பச் சமர்த்தா இருக்கிருர்கள். இந்நேரம் உன் அம்மாவும் அப்பாவும் அங்கு வந்திருப்பார்கள் — பேத்திகளைப் பார்த்துக் கொள்ள.''

''அவர்களுக்கு வைட்டமின் டிராப்ஸ் கொடுத்தீர்களா?''

ஒரு விநாடி நிதானித்தான் ப்ரபு. பிறகு ''இல்லை'' என்ருன். ''நாளைக்கு நிச்சயம் கொடுத்துடறேன். அவர்களுக்கு உடை மாற்றிய பிறகுதான் உன்னுடைய அட்டவணையைப் பார்த்தேன்.''

கணவனும் மனைவியும், மௌனமாக ஒருவரையொருவர் பார்வையால் சுவைத்துக் கொண்டிருந்தனர்.

''ரொம்ப வேதனைப் படறீங்களா?... உங்களுக்குப் பெருத்த ஏமாற்றம் தான், இல்லியா?'' என்ருள் ஷீலா.

''அப்படியெல்லாம் இல்லே... ஏன் உனக்கு மட்டுமில்லையா? எல்லாருக்குமேதான்... ஆனல்...''

''நீங்க குழந்தையைப் பார்த்தேள்ளு இப்படிப் பேசவே மாட்டேள். எவ்வளவு அழகாத் தெரியுமா இருக்கா? நம்ம வித்யாவைப் போலவேதான். குஞ்சு வாய் கிட்ட மட்டும் கொஞ்சம் மாறுதல். ப்ரியா போல, இதுக்கும் கன்னத்திலே குழி விழும் போலிருக்கு!''




மனைவியின் மகிழ்ச்சியைக் கண்ட ப்ரபுவின் முகத்தில் மகிழ்ச்சி பரவியது. ''ஸோ... புதுக் குழந்தையைப் புகழறதைப் பார்த்தா, உன் முந்தையத் திட்டத்தைக் கைவிட்டாச் சுன்னு தெரியறது.''

''நம்ம செல்வத்தைப் பிறத்தியாருக்குத் தானம் பண்ணுவானேன்? நானே தான் வளர்க்கப் போறேன்!'' ஷீலா வெளியே பார்த்துக் கொண்டு சொன்னாள்.

''பிரசவ வைராக்கியம்கிறது இதுதான் போலிருக்கு!''

''நீங்கள் இன்னும் அவளைப் பார்க்கல லியே... எவ்வளவு அழகாத் தெரியுமா இருக்கு'' கணவனின் உள்ளத்தில் பாசத்தை விதைக்கப் பார்த்தாள் ஷீலா.

''நீ எப்படி இருக்கே? உன் குழந்தை அழகா இல்லாம எப்படி இருக்கும்?'' என்றவனிட மிருந்து அவனையறியாமல் ஒரு பெருமூச்சு வெளிப் பட்டது.

தன் இனமாகத் தன் விருப்பப்படி வளர்த்துப் பெருமைப் பட்டு மகிழ ஆண் குழந்தை இல்லாத ஏக்கத்தைக் கணவனின் பேச்சில் புரிந்து கொண்டவளுக்கு நெஞ்சு கனக்கத்தான் செய்தது. ஆனாலும் அவனை உற்சாகப் படுத்தினாள். ''இரண்டு பேருக்குப் பதிலா மூணு பேர் உக்காந்துக்க இனிமே உங்க மடியை விஸ்தாரமாக்கிக்கோங்க!'' என்றாள் களுக்கென்று சிரித்துக் கொண்டே. கவலைகளை மறக்கடிக்கும் அந்தச் சிரிப்பில் இப்போது ப்ரபு, தன் தாபத்தையும் கரைத்தான்.

''குழந்தையை எங்கிட்டே மத்தியானம் தான் கொண்டு வந்து விடுவாளாம். நீங்க போய்ப் பாருங்க'' என்றாள் ஷீலா. புதிய பிறப்பைச் சந்திக்கக் கிளம்பினான் ப்ரபு.

**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை. ஷீலா நர்ஸிங் ஹோமிலிருந்து வந்து பத்து நாளா யிற்று. ஷாப்பிங் செய்து கொண்டு வீடு திரும்பினான் ப்ரபு. வித்யாவும் ப்ரியாவும் வெளியே விளையாடிக் கொண்டிருந்தார்கள். கைக்குழந்தை ப்ரீதா தூங்கிக் கொண்டிருப் பாள். ஷீலா சமையலறையிலிருப்பாள்... எண்ணமிட்டபடியே உள்ளே நுழைந்தான். 'குவா'க்குரல் வரவேற்றது. ''ஷீலா... ஹனி...!'' என்று குரல் கொடுத்தான்.

''கொஞ்சம் அவளைத் தூக்கிக் கொள் ளுங்கள், ரொம்ப நேரமாத் தூங்கறு... நான் இதோ ஃபீட் பண்ண வரேன்'' என்று பதில் குரல் கொடுத்தாள் ஷீலா.

ப்ரபு தொட்டிலருகே போனான்... தூய வெள்ளைத் துணியில் புஷ்பமாக நெளிந்து கொண்டிருந்தாள் குழந்தை ப்ரீதா. எத்தனை சின்னதாக...! வித்யாவும், ப்ரியாவும் இப் படியா இருந்தார்கள்?' நினைக்கவே விசித்தி மாக இருந்தது அவனுக்கு. குழந்தையின் மு கல் அதிகமாயிற்று. காலை உதைத்துக்கொண் சிணுங்கினாள். படுக்கையை ஈரமாக்கி கொண்டு விட்டாள். அதான் அழுகை! குழ தையை எடுத்து அணைத்து வைத்துக் கொ டான். மிகமிக அருகே அவளைப் பார்த்தான் கண் மூடிக் கிடந்தாள் ப்ரீதா. கண்ணை திறந்து தன்னைப் பார்க்க வேண்டும், தன்னை இனங்கண்டு கொள்ள வேண்டும் என்ற ஆ பிறந்தது அவனுள்ளே. தன்னைப் பார்த்து சிரிக்க வேண்டும் என்று விரும்பினான். அவ அணைப்பில் அவள் தன் அழுகையைத்தா நிறுத்தினாள். கண் திறக்கவில்லை. ஆனால் அ தப் பிஞ்சுக் கைகள் அவன் நெஞ்சைத் தொ டுத்துழாவியது. அந்தக் குஞ்சுக் கையின் விர களின் ஸ்பரிசம் அவன் உடலில் சிலிர்ப்ப உண்டாக்கியது. அவள் வளரப்போகு நாட்களை எண்ணிப் பார்க்கலானா ப்ரபு. 'தன் அழுகையினால் என் அயர்ந்த தூ கத்தை எத்தனை இரவுகள் கெடுக்கப் போகி ளோ! ஜலதோஷம், இருமல், காய்ச்ச என்று டாக்டர் வீட்டுக்கு எவ்வளவு நாட்கள் ஓட வேண்டி இருக்கப் போகிறதோ, ஆ பரின், அமிர்தாஞ்சனம், ஆண்டிபயாடிக் – என்றெல்லாம் ஓட வேண்டி இருக்கும்.

ஆனாலும் சிரிப்பும் இருக்குமே. அம்மா, அக்கா, அப்பாவைத் தெரிந்து கொண்டதும் மகிழ்ச்சியால் 'பொதுக் பொதுக்' என்று சிரித்துக் குதூகலமூட்டுவாளே! அவள் முதல் பேச்சு எவ்வளவு இனிமையாக இருக்கும். குப்புறப் புரண்டு, மார்பினால் தரையில் நீந்தும்போது, தவழ்ந்து, ஓடி வரும் போது, நிற்க முயன்று நிதானமிழந்து தள்ளாடியபடி தளர் நடை பயின்று தாவி வரும் போது, எவ்வளவு இன்பமாக இருக்கும்!'

அன்பை, பாசத்தை, நேசத்தை, நட்பைப் பெற்று — கொடுக்கும் நிலைக்கு வளர்ந்து பெரியவளாகும் போது... வித்யா, ப்ரியா, ப்ரீதா என்று ஒவ்வொருவரும் தனிப் பட்ட வர்களாக... அழகிகளாக, அன்பு கொண்ட வர்களாக... ப்ரீதாவாக...

ஆனால் இப்போது... அவன் அணைப்பில் இருப்பதோ பிரச்னைக்குரிய, குழப்பம் மிகுந்ததோர் ஜீவன் – மர்மங்கள் நிறைந்த புரியாததோர் புதிர்... குழந்தையை — ப்ரீதாவை இன்னும் இறுக அணைத்துக் கொண்டன அவன் கைகள். தூக்கிப்போட்டது போல உடலைச் சிலிர்த்துக் கொண்டு சிணுங் கினாள் குழந்தை ப்ரீதா. இதமாகத் தன் இதயத்தோடு இறுக்கமாக அழுத்தியபடி ஷீலாவைத் தேடிப் போனான் சமைய லறைக்கு.

ஃபீடிங் பாட்டிலை ஸ்டெரிலைஸ் பண்ணிக் கொண்டிருந்த ஷீலா ப்ரபுவின் வருகையைப் பார்த்துத் திரும்பினாள்.

''ப்ரீதாதான் எத்தனை அழகு ஷீலா! இவளை... இந்தக் குஞ்சுக் குட்டி ப்ரீதாவை நாம் யாருக்கும் கொடுக்க வேண்டிய தில்லை. நாமே வளர்க்கலாம். ப்ரீதா நம்முடையவள்! நம் குழந்தை!'' என்றான் ப்ரபு.

கணவனை வினோதமாகப் பார்த்து முறு வலித்தாள் ஷீலா. எல்லா அப்பாக்களுமே இப்படித்தானே ?

